# உள்ளுறை

# முன்னுரை

பதினாறாம் நூற்றாண்டில், இத்தாலிய மறுமலர்ச்சிக் காலத்தில், மனித மாண்பியல் கோட்பாடு (Humanism) பெரு ஏற்றம் பெற்று உயர்ந்தது. மனிதனையும் அவனுடைய விருப்பு வெறுப்புகளையும் மையமாகவும் முதன்மையாகவும் கொண்டே புற உலக இயல்புகளையும் அறிவுச் சாதனைகளையும் அளவிட வேண்டும் என்று கிரேக்க அறிஞர் பித்தகோரஸ் வலியுறுத்தி வந்தார். இக் கருத்து மறுமலர்ச்சிக் காலத்தில் மக்கள் வாழ்வின் பலதுறைகளிலும் வற்புறுத்தப்படலாயிற்று.

காலப்போக்கில் பற்பல துறைகளிலும் வெவ்வேறு பொருளுடையதாக மனித மாண்பியற் கோட்பாடு விளக்கத் தலைப்பட்டது. மனிதநல மாண்பு குறித்த பண்டைய இலக்கியங்களில் விழுமிய புலமை பெறுதல், பழைய இலக்கியங்களின் பெருமையைக் குறித்துக் கூறல், புதியன படைப்பிலும் பழைய இலக்கியங்களின் செழுமையை உணர்த்தும் வகையில்அவற்றினின்றும் தவறாது மேற்கோள் காட்டுதல், மன்பதை வளர்ச்சிப் போக்கில் கல்விக்கு முதலிடந்தருதல், அக்கல்வியிலும், காரணகாரிய உரிமைக்கும் உணர்வுக்கும் முதலிடந்தருதல், சமயம் தத்துவம் போன்ற துறைகளில், மனிதநலத்தை நெருக்கி ஒடுக்கி மனிதனை அடிமையாக்கி வரும் செயற்கைக் கூறுகளை அஞ்சாது எதிர்த்தல் எனப் பற்பல வகையில் அதன் ஆட்சி விரிந்து பரந்து நின்றது.

மனித மாண்பியற் கோட்பாடு இவ்வாறு பெருஞ் செல்வாக்குடையதாய்த் திகழ்ந்து வருதலைக் கண்ணுற்ற சமயச் சான்றோரும், தத்துவத்துறை அறிஞர்களும், அதனைப் பயன்படுத்திக் கொண்டு சமயக் கோட்பாடுகளையும் தத்துவக் கூறுகளையும் சமன்செய்து நிறுவத் தலைப்பட்டனர். அரசியல், சமுதாயம் போலும் துறைகளிலும் மனித மாண்பியற்கோட்பாடு செல்வாக்கெய்தவே, அத்துறைகளில், தனி மனிதர், அல்லது குழுவினர் வன்மையோடும், ஆள அதிகாரங்களோடும் பரவலாக மக்கள் நலத்தை நசுக்கி வந்த கொடுமைகளும் இழிவுகளும் ஒழிக்கப்படலாயின. அத்துறைக விடுதலை, உரிமை, சமன்பாடு ஆகியவை பற்றிய போராட்டங்கள் பரவலாக எழுந்தது போல், மனிதநல மாண்பியற் கோட்பாடு அத்துணை வேகம் உடையதாய்ப்

பரவனிலையாதும் அதனைச் சாதிப்பதற்கு மனித மாண்பியத் கோட்பாடு வேண்டப்படுவது என்பதை மனித மாண்பியலாளர் (Humanists) எடுத்துரைத்து வந்தனர்.

இவ்வாறு, பற்பல துறைகளில் பலவாறு வகைப்பட்டு விளங்கினும், மனித மாண்பியலின் அடிப்படையான - கருப் பொருள் - தத்துவம், மனிதனிடத்துள்ள இருமை நிலையைச் சுட்டி நிற்பதிலேயே அமைந்துள்ளது.

மனிதன் விருப்பு வெறுப்புகளிடையே போராடி வருகிறான். நன்மை தீமைகளுக் கிடையே சிக்குண்டு கிடக்கிறான். இன்பதுன்பங்கட்கு ஆட்பட்டு நிற்கிறான். தன்னுணர்வுகளைச் சமன் செய்தல், இயற்கையும் புற உலகும் நல்கும் அறைகூவல்களுக்கு ஈடுதருதல் என்னும் இருமை நிலைப் போராட்டமும் அவனிடம் உள்ளது.

சமுதாய வளர்ச்சிப் போக்கில், தன்னையும் இழவாது, சமுதாய வளர்ச்சியையும் பேணும் பொறுப்பு மனிதனுக்கு உள்ளது. அந்நிலையிலும் அவனிடம் இருமை நிலைப் போராட்டம் நிகழவே செய்கிறது. நாகரிக வளர்ச்சிப் போக்கில், இருவேறு நாகரிகமுடைய இரண்டு இனங்கள் கலக்கும் நிலையிலும் மனிதனிடம் போராட்டம் நிகழ்கிறது. தன்னினத்து நாகரிகக் கூறுகளையும், தான் எதிரிட்டு, ஏற்குமினத்து நாகரிகக் கூறுகளையும், மிகவும் பாடுபட்டுச் சமன் செய்து, அவற்றிற்கு ஈடுதந்து, பிறகு ஒரு நிலைக்கு - நிறைவான நிலைக்கு - வருகிறான்.

இருமை நிலைக்கு ஈடுதந்து, போராடிச் சமன் செய்து வாழும் வாழ்வு, பிறதுறைகளிற் போலவே இலக்கிய உலகிலும் நன்கு கடைப்பிடிக்கப்பட்டுள்ளது.

வடமொழியில் அமைந்துள்ள பாரதத்தை இயற்றிய வியாசர், ஆரியரும் ஆரியரல்லாதாரும் பிணக்கிப் பிணைந்து புதுஇனம் உருவாக்கிய கால எல்லையில் வாழ்ந்தவர். கலந்த நாகரிகக் கூறுகள், பல்வகை நீதிகள் அறங்கள் ஆகியவற்றைச் சமன் செய்வதில் இருமை நிலையுடையராய் நின்று போராடித்தம் நூலை உருவாக்கியவர் என்று அவர் நூலை ஆயும் அறிஞர்கள் எடுத்துரைக்கின்றனர்.

வியாசபாரதத்தை அடியொற்றித் தமிழில் பாரதம் தந்த வில்லியும் வியாசர் போல் இருமை நிலைப் போராட்டத்திற்கு உள்ளாகியிருக்கிறார். சுருக்கிய நூல் செய்ய விழைந்தமையால், மூலநூலின் பலகூறுகளை விலக்குகிறார். ஏற்றுக் கொண்டவற்றில், சிலவற்றை மிகைப்படுத்தியும் சிலவற்றைச் சாதாரணமாகக் குறிப்பிட்டும் செல்கிறார். வியாசர் காட்டிய நாகரிகக் கூறுகளை ஏற்றுத் தம் புலமைக்கேற்ப அவற்றை விளக்கும் முயற்சியிலும், தமது தமிழ் மரபுக்குரிய நாகரிகக் கூறுகளை - மூலநூலில் இல்லாத நாகரிகக் கூறுகளை-த் தம் விருப்பிற்கேற்பத்தம் காவியத்தில் அமைத்துக் காட்டும் முயற்சியிலும் வில்லி போராட்டம் நிகழ்த்தியுள்ளார்.

கூட்டலும், குறைத்தலும், மிகைப்படுத்தலும் எளியதாக்கலும் இலக்கியமியற்றும் புலவர் உரிமை; அவற்றை அவர் கடமையாகவும் கொள்ளுகின்றனர். அதற்குக் காரணம் அவர் பேணிக்காக்க விழையும் மனிதநல மாண்பு தான்; மக்களை அறம் பொருள் இன்பநிலைகளிற் சிறந்து மேம்பட வேண்டும் என்று விழையும் விழுமிய நோக்கந்தான்.

மனித மாண்பியலின் உயிர் நாடித் தத்துவமான இருமைநிலைக் கோட்பாட்டை உளத்திற் கொண்டு வில்லிபாரதத்தை, ஆறு இயல்களில், வகைப்படுத்தி ஆய்ந்துள்ளேன்.

முதல் இயலில், மனித மாண்பியல் பற்றி, மேல் நாட்டு அறிஞர்களும், நம் நாட்டு அறிஞர்களும் தந்துள்ள பல்வகை விளக்கங்களை முறைப்படுத்திக் காட்டியுள்ளேன். நூல் முழுதும் விரவிக் கிடக்கும் மனித மாண்பியற் கூறுகளைத் திரட்டுதற்கு உதவியாகவும், அவற்றை வகைப்படுத்துதற்கு வாய்ப்பாகவும் இவ்வியல் முழுதும், மனித மாண்பு பற்றிய விளக்கத்தினை எடுத்துரைப்பது இன்றியமையாததாயிற்று.

இரண்டாம் இயலில், வில்லியின் உள்ளத்தில் எழுந்த இருமை நிலைப் போராட்டத்தை விளக்கும் வகையில், தெய்வ-மானுட ஒருங்கிணைப்புத் தத்துவம், மனித மாண்பியல், இயற்கை இறப்பியல், புராணவியல் ஆகியவற்றிற்கிடையேயுள்ள தொடர்புகள், ஈரினத்து நாகரிகக் கூறுகளை உளத்திற் கொண்டு வில்லி காவியம் அமைக்கும் திறம் ஆகியவற்றை எடுத்துரைத்துள்ளேன்.

மூன்றாம் இயலில், இரு பெரு நாகரிகங்களின் சமுதாய நிலைகள் நீதிகள் அறங்கள் ஆகியவற்றை வில்லி சமன் செய்துள்ள பாங்கினை விளக்கியுள்ளேன்.

நான்காம் இயலில், காவிய மாந்தர்தம் கல்வி கலைத்திறன்கள் எவ்வாறு அவர்தம் இருமை நிலைப் பண்பினை எடுத்துக்காட்டுவனவாக அமைந்துள்ளன என்பதை முறைப்பட ஆய்ந்துள்ளேன்.

ஐந்தாம் இயலில், புலவர்தம் உணர்த்தும் திறத்தால், அணி முதலிய காவிய அழகுக் கூறுகளால், கதை மாந்தரிடத்து அமைந்து கிடக்கும் இருமை நிலைப் பண்புகளையும் அவற்றைத் தம் புலமைத் திறத்திற்கேற்ப நயமாக உரைக்கும் ஆற்றலையும் புலப்படுத்தியுள்ளேன்.

ஆறாம் இயலில், காவிய மாந்தரிடத்து, என்றும் மாறாததாம் பண்புநலனுக்கும் (Character) அவ்வப்போது நிகழும் நிகழ்ச்சிகள் சூழ்நிலைகள் ஆகியவற்றிற்கேற்ப நிகழும் மனநெகிழ்ச்சிகளுக்கும் (dispositional change) இடையே நடக்கும் உள்ளப் போராட்டத்தை வெளிப்படுத்தியுள்ளேன்.

மனிதன் தன் வளர்ச்சிப் போக்கில், மனித மாண்பியல் அளவில் - இருமை நிலைக் கோட்பாட்டில் நின்றுபோகும் அளவில் - அமைந்து கிடப்பவன் அல்லன். அவன் அதனினும் உயர்ந்து சென்று ஒருமை நிலைக்கோட்பாட்டை நோக்கி நடப்பவன்; அஃதாவது மனித மாண்பியல் நிலையினின்றும் மேம்பட்டுச் சென்று அதிமனித மாண்பியலை (Humanitarianism) அடைந்து அதனைக் கடைப்பிடித்து வாழத் தலைப்படுபவன்.

படைப்பில் நன்மை தீமை, இன்பம் துன்பம், உயர்வு தாழ்வு என இருமை நிலை உள்ளது என்று கூறுவது மனித மாண்பியல், படைப்பில் உள்ளன எல்லாம் நன்மையே; தீமையென ஒன்றில்லை என்ற உறுதியோடு எண்ணி நடப்பது அதிமனித மாண்பியல்.

இவ்வதிமனித மாண்பியற் கொள்கையில் ஈடுபட்டவராக, வீடுமன், துரோணன், கன்னன், தருமன், சகதேவன் ஆகியோர் விளங்குதலையும், அதனால் அவருடைய உள்ளத்தில் நிகழும் போராட்டங்களையும் ஆறாம் இயலிலேயே விளக்கியுள்ளேன்.

மனித மாண்பியல் அதிமனித மாண்பியல், தெய்வ மாண்பியல் ஆகியவை ஒன்றைக்கொன்று தொடர்புற்று நிற்றலையும், அவற்றின் தொடர்பால், நடப்பியல் அல்லது உண்மையியல் (Realism ) நடைமுறை இயல் (Pragmatism) ஆகியவை ஒருங்கிணைந்து நிற்க, அவையாவும் சேர்ந்து, பழங்கால இலக்கியங்கள் இன்றைய இலக்கியங்களின் வளர்ச்சிக்கு உதவ முந்துறும் பான்மையினையும் ஆய்வின் முடிவுகளாக எடுத்துரைத்துள்ளேன்.

இவ்வாய்வினை உருவாக்குதற்குப் பல்வேறு நிலைகளில் உதவிய அறிஞரும் நண்பரும் பலர். அவர்க்கெல்லாம் யான் வாழ்நாள் முழுதும் கடமைப்பட்டவன்.

ஆய்வுத் தலைப்பினைத் தந்து ஆய்வின் ஒவ்வொரு கட்டத்திலும், தம் நுண்ணறிவு தோன்றப் பற்பல விளக்கங்களை நல்கி, ஆய்வுக் கட்டுரைகளைக் கூர்ந்து பயின்று திருத்தங்கள் பல கூறிப் பரிவோடும் அன்போடும் இறுதிவரை நெறிப்படுத்திய பேராசிரியப் பெருந்தகை, டாக்டர் தி. முத்துக்கண்ணப்பர்.எம்.ஏ.,பி.எச்.டி., அவர்கட்கு யான் என்ன கைம்மாறு செய்யவல்லேன்! பயன்கருதாத அவர்தம் நல்லுள்ளத்தை நினைந்து தாழ்ந்து அடங்கி நிற்றல் என் கடன்.

ஆய்வு உருவாகி வருங்கால், பற்பல சான்றோரையும் அறிஞரையும் கண்டு உரையாடும் வாய்ப்பு எனக்குக் கிட்டிற்று. அவர்தந்த பலவகை விளக்கங்கள் ஆய்வினை நெஞ்சுரத்தோடும் நடுவுநிலையோடும் நடத்திச் செல்வதற்குப் பயன்பட்டன.

காஞ்சி பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரிய ஸ்வாமிகள், மனித முயற்சி, அதற்கப்பாற்பட்ட பேராற்றலின் அருள் ஆகிய இரண்டுக்குமிடையே உள்ள தொடர்புகளை விளக்கும் பாடல்களை வில்லியின் நூலிலிருந்து குறிப்பிட்டுக் காட்டினார்கள்.

கலைமகள் ஆசிரியர் பேராசிரியர் கி.வா. ஜகந்நாதன் அவர்கள், ஆய்வுக்குரிய பொருட் கூறுகள் பற்றித் தலைப்புக்கேற்பப் பற்பல செய்திகளை விளக்கியுரைத்தார்கள்.

சென்னை விவேகானந்தா கல்லூரியில் தமிழ்த்துறைத் தலைவராய்த் திகழ்ந்து ஓய்வு பெற்றுள்ள திரு. ஜகன்னாதாச்சாரியார் அவர்கள் ஆய்வுக்குத் துணையாகப் பயிலவேண்டிய நூல்கள், பத்திரிகைகள், கட்டுரைகள் ஆகியவற்றைக் குறிப்பிட்டுக்

கூறினார்கள்.

சென்னை இராமகிருஷ்ணமடத்தில் துறவுள்ளத்தோடு தொண்டு புரிந்து வரும் அன்பு சுப்பிரமணியன் அவர்கள் மனிதநல மாண்புகட்கும் சமயத்துறைக்குமிடையேயுள்ள தொடர்புகளைக் குறிப்பிட்டு விளக்கினார்கள்; விவிலிய நூலிலிருந்து சான்றுகளும் எடுத்துக்காட்டினார்கள். இப்பெரியோர்கட்கு என் உளங்கனிந்த நன்றி உரியது.

திருச்சி தேசியக் கல்லூரியில் வரலாறு பொருளாதாரம் ஆகிய இருதுறை-களுக்கும் பொறுப்பேற்றுப் புகழ் வாய்ந்த நல்லாசிரியராகத் திகழ்ந்து அண்மையில் ஓய்வு பெற்ற பேராசிரியர் பி. இராசகோபாலன்.எம்.ஏ., அவர்கள் அவ்வப்போது, நூலகத்தில் பற்பல நூல்களைச் சுட்டி உதவினார்கள். அவர்கள் உதவி மறக்க ஒண்ணாதது.

சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் பேராசிரியராய்த் திகழ்ந்து, திருக்குறளில் மனித மாண்பியற்கோட்பாடு என்னுந் தலைப்பில் ஆய்வு செய்து பி.எச்.டி பட்டம் பெற்றுள்ள டாக்டர் கோ. இராமச்சந்திரன் அவர்கள் பற்பல குறிப்புகளைத் தந்து ஊக்கப்படுத்தி உதவினார்கள். அவர்கட்குப் பெரு நன்றி உடையேன்.

பேராசிரியர் முத்துக்கண்ணப்பர் அவர்களிடம் என்னை அறிமுகம் செய்து, ஆய்வு மாணவனாக அவர்கள் என்னை ஏற்றுக் கொள்ளுமாறு பரிந்துரை செய்து, எனது நலனிலும் ஆய்வு முயற்சியிலும் பேரார்வம் காட்டிய பேராசிரியப் பெருந்தகை டாக்டர் ரா. சீனிவாசன்.எம்.ஏ.,எம்.லிட்.,பி.எச்.டி., அவர்கள், எனக்குப் பச்சையப்பன் கல்லூரியில் ஐந்தாண்டுகள் பேராசிரியராகத் திகழ்ந்தவர்கள். அவர்களுடைய தொடர்ந்த இடையறாத உதவிகட்கு யான் பெரிதும் கடமைப்பட்டவன். இவ்விரு பேராசிரியர்களோடும் கூட, ஆய்வுத் தகுதித் தேர்வுக் குழுவில் மூவருள் ஒருவராய் இருந்து எனது முயற்சிகளையும் திறன்களையும் நடுவுநிலைமையோடு சீர்தூக்கி என்னை ஊக்கப்படுத்திய, மதுரைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் தலைவர், டாக்டர் (தமிழண்ணல்) இராம பெரியகருப்பன்.எம்.ஏ.,பி.எச்.டி., அவர்கட்குப் பெரு நன்றி உடையேன்.

திருச்சி தேசியக் கல்லூரி நூலகர் திரு. கே.ஆர். சௌந்தரராஜன் அவர்கள் செய்த உதவிகள் பல. ஆய்வுக் கட்டுரைகளை உருவாக்கி வருங்கால்,

வேண்டிய நூல்களை அவ்வப்போது எடுத்துத் தந்தும் குறிப்புகளைத் திரட்டுதற்குத் தக்க யோசனைகள் சொல்லியும் இடையறாது ஊக்கி வந்த அவர்களின் பெருந்தகைமை போற்றற்குரியது. அவ்வாறே அவர்தம் துணை ஊழியர்களான திரு. மீனாட்சிசுந்தரம், திரு. வெங்கடராமன் ஆகியோர்தம் உதவிகள் என்றென்றும் என் நினைவை விட்டு நீங்காதனவாகும்.

திருச்சியில் அமைந்துள்ள சென்னைப் பல்கலைக் கழகமையத்தின் (University Centre, Trichy) நூலகர் திரு. ஏ. சுந்தரராஜன் அவர்கள், வேண்டிய நூல்களையெல்லாம் வழங்கியதோடு, ஆய்வேடு பற்றிய நூற்பட்டியல் அமைத்தல் முதலிய முறைமைகளையும் மிக்க ஆர்வத்தோடு எடுத்துரைத்தார்கள். அன்னார்தம் அன்பிற்குப் பெரிதுங்கடப்பாடுடையேன்.

ஆய்வுக்குரிய குறிப்புகளைத் திரட்ட முற்பட்டு, சென்னைப் பல்கலைக் கழக நூலகத்திலும், அரசாங்கக் கீழ்த்திசைச் சுவடியியல் நூலகத்திலும் (Government Oriental Manuscript Library) கன்னிமரா நூலகத்திலும், யான் உழைத்த நாட்களில் அவ்வந் நூலகத் தலைவர்களும் உதவியாளர்களும் செய்த எண்ணற்ற உதவிகளை மிக்க நன்றியுடன் போற்றுகின்றேன்.

ஆய்வேட்டிற்கு இறுதி வடிவம் தரும் முயற்சியில், தட்டெழுத்துப் பணியை மேற்கொண்டு, கடும் உழைப்புடனும், மிகுந்த பொறுப்புணர்ச்சியுடனும், யான் விரும்பியவாறு நன்முறையில் தட்டெழுத்துச் செய்து உதவிய திரு. கே.பிரேம்நாத் அவர்கட்கு மிகுந்த கடமைப்பட்டுள்ளேன். ஆங்கிலத்திலும் தமிழிலும் திறம்படத் தட்டெழுத்துச் செய்யும் அவர்தம் வல்லமை மிகப் பெரிதும் பாராட்டற்குரியது. அவர்க்கு என் அன்பும் வாழ்த்தும் உரியவை. ஆய்வேட்டுப் படிகளை வகைப்படுத்திக் கட்டு (bind)ச் செய்து இறுதி வடிவம் நல்கமையும் வரை உடனிருந்து உதவிய அவர்தம் பெருந்தன்மை மறக்கற்பாலதன்று.

இன்னும் பல ஆசிரிய நண்பர்களும் அன்பர்களும் இவ்வாய்வு முயற்சியில் நல்லன்பும் நல்லிழைவுங் காட்டினர். அவரனைவர்க்கும் ஒரு சேர நன்றி புலப்படுத்துகின்றேன்.

இவ்வாய்வு, மனிதநல மாண்பியற் கோட்பாட்டினை மையமாகக் கொண்டதெனினும், அறவியல், வரலாறு, சமூகம் முதலிய துறைகளைச் சார்ந்த கோட்பாடுகளையும் கருத்துகளையும் உட்கொண்டு நிகழ்த்தப் பெற்றது. ஆதலின், ஆய்வுத்துறைக்குரிய பொதுவான முறைகளுடன், அறிவாராய்ச்சி விளக்கம் (Epistimology), அமைப்பு முறை (Systems Method) வரலாற்று ஆய்வுமுறை (Historical Method), பிறப்பு மரபு முறை (Genetic Method) ஆகியவற்றை உளத்திற்கொண்டு ஆய்வுக் கூறுகளை விளக்கியுள்ளேன். அளவாய்வு முறை (Survey Method) யின் சில உட்கூறுகளும், இவ்வாய்வுக்குத் துணை புரிந்தன.

இவ்வாய்வேட்டினை இரு பெரும் பகுதிகளாகப் பகுத்துள்ளேன். பகுதி I ல் ஆய்வுக்குரிய இயல்கள் ஆறும் அமைந்துள்ளன. பகுதி II ல் அவ்வியல்களுக்குரிய குறிப்புகளை அவற்றின் தலைப்புகளோடு தனித்தனியாக அமைத்து வரிசைப் படுத்தியுள்ளேன். எனினும் ஒவ்வொரு பக்கத்திலும், குறிப்புகட்குரிய நூலாசிரியர் பெயர், நூற்பெயர், பக்கம், நூல் வெளியான ஆண்டு ஆகியவற்றைக் குறித்துள்ளேன். ஆய்வுக்கெனப் பயன்படுத்திய தமிழ், ஆங்கில நூல்களின் பட்டியலை, ஆய்வேட்டின் இறுதியில் அமைத்துள்ளேன்.

தேசியக் கல்லூரி,
திருச்சிராப்பள்ளி.
8-8-1981.

நா. இராசகோபாலன்.

# இயல் - 1

## மனித மாண்பியல் விளக்கம்

மனிதன் குற்றமே உடையவன் அல்லன்; குணமே நிரம்பியவனும் அல்லன். குற்றமும் குணமும் கலந்து அமைந்தவன். குற்றம் மிகுதியாயின் தீயவன் என்று தூற்றப்படுகிறான். குணம் மிகுதியாயின் நல்லவன் என்று போற்றப்படுகிறான். மனிதனின் மாண்பு அவனிடத்துள்ள தீமை நன்மைகளுக்கிடையே பரிணமிப்பது; ஊடாடுவது; விளங்குவது; தீமை நன்மைப் பண்புகளுக்கிடையே உருவாகும் தாக்க உணர்வுகளே மனித மாண்பியலின் இலக்கணத்திற்கு வழிகோலுவனவாகும்.

படைப்பிலேயே ( Creation ) இருமை நிலை உள்ளது. படைப்பு, அல்லது படைப்பாற்றலின் நண்ணிய ஆதாரமாக உள்ள கடவுள், நன்மை தீமை ஆகிய இரண்டாலும் விளங்குகின்றது என்பதைச் சான்றோர் எடுத்துக் காட்டியுள்ளனர்.

"தீமை நன்மை முழுதும் நீ"[1]

என்று மாணிக்கவாசகர் இறைவனைக் குறிப்பிடுகின்றார்.

"குற்றம் நீ குணங்கள் நீ"[2]

என்று திருஞானசம்பந்தர் இருமை நிலையினை இறைவன் மீது ஏற்றிக் கூறுகிறார். இவ்வாறே திருநாவுக்கரசரும்,

"நன்மையும் தீமையும் ஆனார் போலும்"[3]

என்று கூறி இறைவன், உடன்பாடு எதிர்மறை என்னும் இருவகை நிலைக்கு உட்பட்டவன் என்பதை எடுத்துரைக்கிறார். பிற்காலத்தில் வந்த தாயுமானவரும்

1. திருவாசகம்: குழைத்த பத்து-5.
2. திருஞானசம்பந்தர் தேவாரம்: "வீடலால"-3.
3. திருநாவுக்கரசர் தேவாரம்: பதிகம் 295-1.

தாம் போற்றும் சமயச் சான்றோர் கூறுவதைப் போலவே,

"நன்மை தீமையுமாகி"[4]

என்று குறிப்பிட்டுச் சொல்கின்றார்.

உடன்பாட்டு எதிர்மறைப்பண்புகள் படைப்பில் உள்ளமையைத் திருவள்ளுவர் "இருமை வகை"[5] என்ற சொற்களால் சுருக்கமாகக் குறிப்பிடுகிறார்.

படைப்பில் உள்ள இவ்விருமை நிலை, படைக்கப்பட்டுள்ள மக்களிடத்தும் காணப்படுகின்றது. பொதுப்பொறுப்பிற்குரியவர்களை ஆராயுங்கால், அவர்களுடைய குணங்களை ஆராய்வதோடு, குற்றங்களையும் ஆராய வேண்டும் என்று திருவள்ளுவர் வேண்டுகிறார். "குணம் நாடிக் குற்றமும் நாடி"[6] என்னும் திருவள்ளுவரின் சொற்கள், மனிதன் இரண்டும் கலந்து அமைந்தவன் என்பதைத் தெளிவு படுத்துகின்றன. கல்வியால் தம்மை எத்துணைப் பண்படுத்திக் கொண்டிருப்பினும், அவரிடத்தும், குற்றத்திற்குக் காரணமாகிய அறியாமை முற்றிலும் நீங்கி விடுவதில்லை என்பதைத் திருவள்ளுவர்,

"அரிய கற்று ஆசற்றார் கண்ணும் தெரியுங்கால்
இன்மை அரிதே வெளிறு"[7]

என்னும் குறளின் வாயிலாகப் புலப்படுத்துகிறார். மனித இயல்பினை ஆராயுங்கால் கடைப்பிடிக்க வேண்டிய கடமைகள் நான்கு எனத் திருவள்ளுவர் வரையறுத்துள்ளமை என்றும் போற்றற்குரியது; அந்நான்கு கடமைகளாவன:-

1. குணம் நாடுதல்
2. குற்றம் நாடுதல்
3. அவற்றுள் மிகைநாடுதல்
4. அவற்றுள் மிக்கவற்றைக் கொண்டு இத்தகையர் என்று தெளிதல்.

---

4. தாயுமானவர் பாடல்: ஆனந்தமானபரம்: 2
5. திருக்குறள்: அறத்துப்பால்: நீத்தார் பெருமை-3
6. திருக்குறள்: பொருட்பால்: தெரிந்து தெளிதல்-4
7. திருக்குறள்: பொருட்பால்: தெரிந்து தெளிதல்-3

மனிதனின் மாண்பு இத்தகைய ஆய்வின் விளைவிலேயே புலப்படுவது என்ற திருவள்ளுவரின் முடிபு மறக்க ஒண்ணாதது. உரையாசிரியர் பரிமேலழகரும் "குற்றமிலாதார் உலகத்து இன்மையின்"[8] "ஞானமே உடையார் உலகத்து அரியராகலின்"[9] என்னும் தொடர்களால் மக்களியல்பு இரண்டும் கலந்தது என்பதைத் தெளிவாக எடுத்துரைக்கிறார்.

எல்லாவற்றையும் அறிந்த மனிதன் இவ்வுலகில் இல்லை. எதுவும் தெரியாத ஒரு மனிதனும் இவ்வுலகில் இல்லை. குணங்கள் யாவும் ஒரு சேரத் தொக்கு அமைந்த மனிதன் இவ்வுலகில் இல்லை. குற்றம் எதுவுமே இல்லாத மனிதனும் இவ்வுலகில் இல்லை என்று புலவர் காரியாசான் எடுத்துரைக்கிறார்.

"ஒருவன் அறிவானும் எல்லாம், யாதொன்றும்
ஒருவன் அறியாதவனும், ஒருவன்
குணம் அடங்க, குற்றம் இலானும் ...... இல்"[10]

உலகியல் நிலையில், மக்களியல்பு, அறிவு, அறியாமை இரண்டும் கலந்தது என்னும் கருத்தை

"எல்லாம் அறிந்தவரும் ஏதுமறியாதவரும் இல்லையெனுமிவ்வுலகம்"[11]

என்று தாயுமானவரும் எடுத்துரைக்கிறார்.

தம்முடைய சிந்தையில் அறியாமை, அறிவு ஆகிய இரண்டின் பகுதியும் உண்டு என்று ஒப்புக் கொள்வதன் வாயிலாக மனிதனின் இருமை நிலையைத் தாயுமானவர் விளக்குகிறார்.

"கருத்தில் எழுகின்றவெல்லாம்
என்னதறியாமை யறிவென்னுமிரு
பகுதியால் ஈட்டுதமிழ் என்தமிழ்[12]....

8. திருக்குறள்: பொருட்பால்: நட்பாராய்தல்-4. பரிமேலழகர் உரை.
9. திருக்குறள்: பொருட்பால்: தெரிந்து தெளிதல்-4 பரிமேலழகர் உரை
10. சிறுபஞ்சமூலம்: (பதினெண்கீழ்க்கணக்கு)-29.
11. தாயுமானவர் பாடல்: தேசோமயானந்தம்-9
12. தாயுமானவர் பாடல்: சித்தர்கணம்-9.

மக்களியல்பு நன்மை தீமை கலந்த இருமை இயல்பு உடையது என்பதை இக்காலத்து அறிஞரும் எடுத்துக்காட்டுகின்றனர்.

"உலகத்தில் நன்மை தீமைகளைப் பிரிக்க முடியாதது போல் காதலையும் காமத்தையும் பிரிப்பதும் அருமையே. நன்மையான செயலில் சிறு தீமையும் கலந்திருக்கிறது. தீமையில் சிறு நன்மையும் கலந்திருக்கிறது."[13]

மனித இயல்பு இருமை நிலை உடையது என்பதை வேறொரு வகையில் அரவிந்தர் எடுத்துக் காட்டுகிறார்.

படைப்பு இருமை நிலை உடையது. தெய்விகத் தன்மையும் மன்பதை இயல்பும் உடையது. தெய்வம் மனிதனை விருப்பம் பெறச் செய்வதற்காக அவனிடம் இரக்கம் கொண்டு அவனை நோக்கி இறங்கி வருகிறது. மனிதன் தனக்குள்ள வரம்புகளைக் கடந்து தெய்விக விருப்பம் பெறுதற்காகத் தெய்வத்தை நோக்கி உயர்ந்து செல்கிறான். பந்தம் நீங்கிய நிலை, ஆணவம் நீங்கிய நிலை, விருப்பு வெறுப்பற்ற தன்மை, தற்சார்பின்மை, அனைத்துமாய்த் தன்னைக்காணல், ஆகியவை தெய்விக இயல்புகள். யானென்னும் செருக்கு, வரம்புக்குட்பட்ட நிலை, ஆகியவை மனித இயல்புகள். தெய்வத்தின் துணையாலேயே மனிதன் தன்னிடமுள்ள இருமை நிலை நீங்கப் பெற்றுத் தெய்விக இயல்புகளைப் பெறுகிறான்.[14]

வரம்புக்கு உட்பட்டு நிகழும் மனித இயல்பினை அரவிந்தர் இவ்வாறு விளக்குகிறார்.

பொருள்களின் மீது நாட்டம், அதனால் விளையும் ஆசை, அதனால் விளையும் சினம், அதனால் விளையும் மனக்குழப்பம், அதனால் விளையும் நினைவின்மை, அதனால் விளையும் அறிவின் அழிவு அதனால் மனிதன் அழிதல் என்று இவ்வாறு மனிதனை நிலை கலங்கச் செய்யும் இயல்புகள் கீதையில் சொல்லப்படுகின்றன.[15]

13. மு.வரதராசன்: திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம் பக்.52(1955)
14. C.S.Nayar:Commentary on Aurobindo's Gita. Indian Express, dated July 29, 1979.
15. சுவாமி சித்பவானந்தா: ஸ்ரீமத் பகவத்கீதை; ஸாங்கியயோகம்-62,63 பக். 89-90 (1951).

நன்மை தீமை இரண்டும் மனிதனிடம் உள்ளன. மனநடுவு பெற்றவன் இவ்விரண்டிலிருந்தும் விடுபடுகிறான். அவ்வாறு விடுபடுவதற்குத் திறமையுடன் செயல் புரிதல் வேண்டும் என்று கீதை எடுத்தியம்புகிறது.[16]

கடமை உணர்வைப் போலவே மனிதனிடம் மோக உணர்வும் உள்ளது. "மோகத்தை அகற்றிக் கடமை உணர்வை உறுதிப்படுத்துவதற்காகவே கீதையும் அதனை உள்ளிட்ட மகாபாரதமும் தோன்றின" என்று விநோபா எடுத்துரைக்கிறார்.[17]

மாயை என்னும் பெண்மைமோகத்துக்கு ஆட்பட்டது மனிதனின் மனம். அதனால் தூய நல்லறிவு மறைக்கப்படுகிறது. ஐம்பொறிகளை நிலைக் களங்களாகக் கொண்டு, ஐம்புல உணர்வுகளைத் துய்த்து உரம் பெற்று, முக்குணங்களையும் அறுவகைக் குற்றங்களையும் நண்பர்களாகக் கொண்டு, மனம் தூய அறிவுக்குப் பகையாகி முரண் நிற்கிறது. அதன் செருக்குத் தளருகின்றபோது தான் மறைந்து நிற்கும் அறிவு தலையெடுக்கிறது. அந்த நல்லறிவை உணர்வோரே அறிஞர் ஆவர் என்று மனிதனிடம் இருமை நிலை இருப்பதை வில்லிபுத்தூராரும்[18] எடுத்துரைக்கிறார்.

மனித வாழ்வு வரம்புக்கு உட்பட்டது என்று தெரிந்தும், மனிதன் தன்னுடைய ஆற்றலையும் பெருமையையும் மிகைப்படுத்தி நினைக்கிறான். மனிதனுக்கு நேரும் மரணத்தால் இவையெல்லாம் ஒன்றுமில்லாமல் போகின்றன. எல்லா வகையான ஆற்றலுக்கும் பெருமைக்கும் உரிய ஒன்றை உணரும் போதுதான் மனிதன் அச்சத்திலிருந்து விடுதலையடைகிறான். அழிவுக்கு உட்பட்ட அற்ப வாழ்வு, அழியாமைக்குரிய அறிவைப் பெறும்போதுதான் விழுமியதாகிறது என்று உபநிடதங்கள் விளக்குகின்றன.[19] குற்றத்திலிருந்தும் நீங்கி உண்மையை நோக்கி மனிதன் போகிறான் என்பதிலும், அடுத்தடுத்த உண்மைகளை நோக்கி—எளிய உண்மைகளிலிருந்து உயரிய உண்மைகளை நோக்கி—முன்னேறுகிறான் என்று கூறவே

16. சுவாமி சித்பவானந்தா: ஸ்ரீமத் பகவத்கீதை: ஸாங்கியயோகம் 50: பக்.76 (1951)
17. ஆச்சாரிய விநோபாபாவே: கீதைப்பேருரைகள்: பக்.10-11 (1970)
18. வில்லிபாரதம்: முதற்போர்ச் சருக்கம்-2,3,4 பக்.386 மர்ரே பதிப்பு (1959)
19. Swami Renganathanantha: The Message of the Upanisads: Page:253 (1968).

அவனுக்குப் பெருமை என்று விவேகானந்தர் விளக்குகிறார்.[20]

ஒவ்வொரு மனிதனின் வாழ்வும் ஒரு போர்க்களம். நன்மை தீமை, அறிவு அறியாமை ஆகியவற்றின் போராட்டங்கள் தொடர்ந்து மனித வாழ்வில் நிகழ்பவை. உடன்பாட்டுப் பண்புகள், மனிதன் விடுதலை பெற உதவுவன; எதிர்மறைப் பண்புகள் அவனைப் பந்தத்தில் சிக்கவைப்பன.[21] வாழ்வு என்பது என்ன என்னும் வினாவுக்கு விடையறுக்க வந்த விவேகானந்தர், தன்னைத் தாழ்வுறுத்தும் சூழ்நிலைகளிலிருந்து விரிந்து அகன்று தன்னை மேம்படுத்திக் கொள்வதே வாழ்வு என்று விடையிறுத்துள்ளார்.[22]

மனிதனின் பண்பு நலனை ( Character ) உருவாக்குவதில் நன்மையும் தீமையும் சம பங்கு வகிக்கின்றன. இன்பத்தைவிட துன்பங்களும், செல்வத்தைவிட வறுமையும் மனிதனைச் செம்மைப்படுத்துகின்றன. புகழால் வரும் பெருமையினும் இகழ்வால் பெறும் அனுபவம் மனிதனின் உள்ளத்தில் தெளிவை உண்டாக்குகிறது. துன்பப்புயல் வீசி உறுதியும் உரமும் குன்றிய வேளையில், உள்ளத்தில் முகிழ்த்தெழும் அன்பு, நல்லொளி பிறக்கச் செய்கிறது. எனினும் மனிதன் நன்மை தீமைப் போராட்டத்தால் தன்னை நிறுவிக் கொள்ள வேண்டியுள்ளது என்பது மட்டும் உண்மை.[23]

அகமுகமாகத் துருவி ஆய்ந்து மனிதனின் மாண்பினைக் கீழைநாட்டார் நிறுவியது போல், புறமுகமாக ஆய்ந்து அணுகி மனிதனின் மாண்பினை மேலை நாட்டார் நிறுவியுள்ளனர்.

மனிதனைப் பண்படுத்தி அவனிடத்துள்ள நல்லவற்றை வெளிக் கொணர்ந்து, வாழ்வில் விழுமிய நலன்கண்டு இன்புறுதற்குத் தகுதியுடையவனாக அவனை ஆக்குவது

---

20. Swami Renganathanantha: The Message of the Upanisads: Page: 344 (1971)
21. Swami Renganathanantha: The Message of the Upanisads: Page: 258 (1968)
22. Swami Renganathanantha: The Message of the Upanisads: Page: 252 (1968)
23. T.S.Avinashilingam Chettiar (Editor) Education Swami Vivekananda Page 15-16 (1964).

கல்வியே என்று மேலை நாட்டவர் நம்பினர். மனித நல மாண்பு பற்றிய கருத்தும் கடைப்பிடியும் கல்வியின் செழுமையைப் பொறுத்தவை என்று நம்பியதால் கல்வி மனித நல மாண்பியலில் முக்கியதொரு கூறாகக் கருதப்பட்டது.[24]

எனினும் காலப்போக்கில் ஒருதவறு விளைந்தது. மனிதனைப் பண்படுத்தித் திருத்தும் முயற்சியில் தலைப்பட்ட சமயச் சான்றோர் கடுமையான நெறிகளையும் கட்டுப்பாடுகளையும் விதிக்கத் தலைப்பட்டனர். கற்றுத்துறை போகிய சமயச் சான்றோர்க்கும், கல்வியால் பண்படுதற்கெனத் தவக்கியநிலையில் இருந்த எளிய மக்கட்கும் இடையே முரண் தோன்றி முதிரலாயிற்று.[25] ஆதலால், சமயச் சான்றோர்தம் கடுநெறி, கட்டுப்பாடு, திருக்கோயில் நெறி முறைகள் ஆகியவற்றைக் கண்டித்துப் புறக்கணிக்கும் மனப்பான்மை வளர்ந்தது. தொன்று-தொட்ட பழைய சமயமும் அவ்வப்போது தோன்றிய சமயச் சீர்திருத்தங்களும்-கூட மனிதனின் கட்டற்ற (சுதந்திர) சிந்தனைக்குத் தடைகள் என்ற நிலை வந்தது.[26]

பல்வகைக் கலைகள் பல்கிப்பலரும் பயின்று சிறக்கும் வாய்ப்பு வளர்ந்த பின்னர், மேலும் ஒருசிக்கல் உண்டாயிற்று. மனித நல இயல்பு பற்றிய கல்வி ( humanist education ) பயின்றோரும், பயிலுதற்கென ஒவ்வொரு துறையிற் புகுந்தோரும், தத்தமக்கென வாழ்வில் ஓர் உயர்நிலை (தகுதி) உண்டு என்று கருதிச் செருக்கு மனப்பான்மை உடையவராயினர்.[27] ஒருபுறம் அறிவுக் கூர்மையும் இன்னொரு புறம் செருக்கும் மிகுந்த முரணி, மனித இயல்பில் உள்ள இருமை நிலையை இவை புலப்படுத்தலாயின.[28]

மனித நல மாண்பு பற்றிய கருத்துகள் மேலும் தெளிவு படுத்தப்படலாயின. மறம், கொடுமை, தேவையற்ற துன்பம், அநீதி ஆகியவற்றை எதிர்த்துப் புரட்சி செய்தலே மனித நல மாண்பின் குறியாகக் கருதப்படும் நிலை வந்தது.

24. Encyclopaedia of Social Sciences:Vol.IV Page:539 (1937)
25. Encyclopaedia of Social Sciences:Vol.IV Page:538 (1937)
    Lothrop stoddard:Scientific Humanism;Page:164 (1926)
26. Encyclopaedia of Social Sciences; Vol.IV Page:538 1937
27. Encyclopaedia of Social Sciences; Vol.IV Page:539 1937
28. Encyclopaedia of Social Sciences; Vol.IV page:541 1937
    Whit Burnett:This is my Philosophy; Page:246 (1958

இத்தகைய மனப்பான்மை கொண்டோர் பரிவு மிக்கவராயும் விளங்கினர்.[29]

மனித உள்ளத்திற்கும், அதன் திறமை அறிவு, இயல்பு, வேட்கை, ஆகியவற்றிற்கும் அடிப்படையான முக்கியத்துவம் தருதல் என்ற நிலை வளரத் தலைப்பட்டது. மனிதனையும் அவனுடைய தொகுதியாகிய மன்பதையையும் விளக்கும் "உறியுமன்ஸ்" ( humanus ) என்னுஞ்சொல் பொருளுடையதாக அமையலாயிற்று.[30]

எதனையும், மனிதனை மையமாகவும், ஆதாரமாகவும் கொண்டு அளவிட வேண்டும் என்ற கோட்பாட்டைப் பிந்தகோரஸ் என்ற அறிஞர் வற்புறுத்தினர்.[31] பண்டைய கிரேக்க ரோம நூலாசிரியர் மனித மாண்பினையும், இயற்கையை இறந்த தெய்வ மாண்பினையும் வகைப்படுத்திக் காட்டுவதில் கண்ணும் கருத்துமாயிருந்தனர். நிலையாமை ( mortality ) நிறை இன்மை ( fallability ) ஆகிய மனித இயல்புகளைப் பரிவோடு அணுகும் பண்பு ஏற்றம் பெற்றது.[32] அரசியலில் தனி ஆதிக்கத்தையும் (எதேச்சாதிகாரத்தையும்) கட்டுப்பாடுகளையும் களைந்து, நிறைவு மிக்க, விடுதலை உணர்வோடு கூடிய, வாழ்வு வாழும் முயற்சி ஓங்கலாயிற்று.[33]

இயற்கை இறப்பியலுக்கும் ( Supernaturalism ) இயற்கையியலுக்கும் ( Naturalism ) கட்டுப்படாதது மனித மாண்பியல். மனிதனுக்குரிய முழுநிறைவை நல்கி அவனை விழுமிய நிலைக்குக் கொண்டு செல்வது அது.[34]

29. Encyclopaedia of Social Sciences; Vol.IV. P-541 (1958)
30. Encyclopaedia of Britanica; Vol.II. P-825 (1967)
31. Encyclopaedia of Britanica; Vol.II. P-826 (1967)
32. Encyclopaedia of Britanica; Vol.II. P-825-26. (1967)
33. Encyclopaedia of Britanica; Vol.II. P-826.
Enclopaeida of Social Sciences; Vol.IV. P-541 (1937).
34. Encyclopaedia of Social Sciences; Vol.IV. P-541 (1937).

ஒருபுறம் மனிதனைவிடத் தான் வல்லமை உடையது என்பதை இயற்கை புலப்படுத்தி வந்தது. பிறிதொருபுறம், அண்டத்தின் பெருமை பற்றிய கருத்துகள், அவற்றைப் போற்றும் அமைப்புகள், ஆகியவை வளர்ந்து வந்தமையால், மனித மாண்பியல், இயற்கை இறப்பியலின் ( Supernaturalism ) அறைகூவலையும் ஏற்க வேண்டியிருந்தது.[35]

மனிதனையும் உள்ளிட்ட அண்டம் கடவுளாணைக்கு உட்பட்டதா? தன்னுணர்வின்றித் தான் தோன்றியாய் உள்ள ஒன்றில் தன்னுணர்வுடைய மனிதன் தற்செயலாகத் தோன்றியவனா? இவ்விருவகை நிலைக்கு உட்பட்ட ஆய்வுக்கிடையே, மனிதனை மையமாகக் கொண்டு எதனையும் அளவிட வேண்டும் என்னும் கருத்தும், தன் வாழ்வு நலன்களை உருவாக்குவோன் மனிதனே என்னும் கருத்தும் உரம் பெற்று வளர்ந்தன. அதனால் மனித மாண்பு தன்னைத் தக்கவாறு நிறுவிக் கொண்டு விளக்கமுறத் தலைப்பட்டது.[36]

மனித மாண்பியல் உரம் பெற்று வளர வளரக் கல்வியின் அருமையை, மனித மாண்பியலாளர் வற்புறுத்தி வரலாயினர். மனிதன் ஒரு குறிக்கோளை நோக்கித் தன்னை வளர்த்துக் கொண்டேயிருக்கிறான். அவ்வளர்ச்சிக்குரிய நெறியாகக் கல்வி பயன்படுகிறது. அந்நெறியே, தான் விரும்பும் குறிக்கோளை அடைவிக்கிறது. ஆதலின், கல்விக்கு அரியதொரு இடம் நல்கப் பெறல் வேண்டும் என்பது மனிதமாண்பியலாளரின் கோட்பாடு ஆகின்றது.[37]

மனிதனின் மாண்புகளைச் செறிவுற வளர்த்தற்கு, செம்மொழி இலக்கியப் பயிற்சி இன்றியமையாதது என மனித மாண்பியலாளர் நம்பினர்.

35. Encyclopaedia of Social Sciences; Vol.IV. Pages 541-42(1937)
36. Encyclopaedia of Social Sciences; Vol.IV. Page 542 (1937)
37. J.S.Mackenzie: Lectures on Humanism; Pages 131-32 (1907).

இலக்கியங்களிற் காணும் பல்திறக் கருத்துகள், நயங்கள் பற்றியும் அவற்றில் மிக்க ஆர்வத்தோடு ஈடுபடலாயினர். அவற்றைப் படைத்த பழைய ஆசிரியன்மார்களைத் தம்மொடு தொடர்புடைய உறவினர்போல் போற்றினர். ஆசிரியர், மாணவர், எழுத்தாளர், இன்னும் பல்துறையிலும் பணிபுரிவோர், எனப்பலரும் அவற்றைப் பயில்வதில் ஆழ்ந்து நின்றனர். கிரேக்க, இலத்தீன் மொழி இலக்கியங்களில் பெருவல்லுநராகிக் கேட்போர் உருகிக் கண்ணீர் மல்குமாறு அவரைத் தம் நாநலத்தால் பிணித்தனர்.[38]

மொழியியல், வரலாறு, கவிதை முதலிய துறைகளில் பெருவன்மை பெருகித் தம் நாத்திறத்தாலும் எழுத்துத்திறத்தாலும், அரசியல் முதலிய பொதுவாழ்வுத் துறைகளிலும் பலரைக் கவர்ந்தனர். மனித மாண்பியலாளரின் சொல்வன்மையால், சமயாசிரியர், தத்துவஞானிகள், பத்திரிகையாளர், இன்னும் பல்துறை அறிஞர் ஆகியோர்தம் செல்வாக்குக் குறையலாயிற்று. சமயம், அரசியல், வணிகம், கல்வி போன்ற துறைகளில் வல்லவர் எனப் பெயர் பெற்றோர் மதிப்பிழந்து போயினர்.[39]

மனித மாண்பியலாளரின் பெருந் திறமையால் உயர்தனிச் செம்மொழிப் புலமையும், அவ்வாறே, மானுடவியல் பற்றிய பிற துறைப் புலமையும் பல்கப் பல்க, சமய, அரசியல் ஆதிக்கங்கள் குன்றி, மனிதனை மையமாகவும் ஆதாரமாகவும் வைத்துத் தனக்கென ஒரு வாழ்வியல் தத்துவத்தையும் சமயத்தையும் வகுத்துக் கொள்ளும் உரிமை மனிதனுக்குக் கிடைத்தது.[40]

மனித மாண்பியல் இவ்வாறு வளர்ச்சி பெற்று மேம்பாடு அடைய அடைய, மனிதன் பெற்று வந்த அறிவு நலம் நன்கு எடுத்துக்காட்டப்படலாயிற்று.

---

38. Encyclopaedia of Social Sciences; Vol.IV. Pages 537-38 (1937

39. Charless Trinkaus: In our Image and likeness Humanity and Divinity in Italian Humanist thought. Vol.I Forward Page XVI (1970).

40. Encyclopaedia of Social Sciences; Vol.IV page 540 (1937).

அதனும் மனிதமாண்பியல் மேலும் சிறக்கவே செய்தது. மனிதனின் சாதனையும் மனிதனின் நிலையும் பாராட்டத் தக்கனவாக உயர்ந்தன.[41]

எங்கும் நிறைந்த உண்மையை உயிர் நாடியாகக் கொண்ட தெய்விக இயல்பும் அதன் ஆற்றலும் ஒருபுறம்; மனிதனின் ஆற்றலுக்குக் கட்டுப்பட்டு வராத புற உலக இயற்கையின் எதிர்ப்பு ஒருபுறம் - இவ்விரண்டிற்குமிடையே தம் அறிவாற்றலைச் செலுத்திச் சிக்கலை விடுவிக்க முயன்ற டெகார்டே, லயபினிட்ஸ் என்னும் அறிஞர்கள் சிறந்த மனிதமாண்பியலாளராக விளங்கி மனித ஆற்றலில் நம்பிக்கை உடையவராக இருந்தனர்.[42]

உயர்வற உயர்ந்த உண்மையைக் காண்பது பற்றிய சிக்கல்களை ஒருபுறம் ஒதுக்கிவைத்து, மனித ஆற்றலைக் கொண்டே அதனைப் பெறும் எண்ணத்தோடு, மனித சக்தியைச் சோதிக்கத் தலைப்பட்ட அறிஞர் லாக், மனித உள்ளத்தின் இயல்பைக் கண்டறிவதில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டார். மனிதனுடைய இயல்பில் (சுபாவத்தில்) அவர் வைத்திருந்த நம்பிக்கை, பொறுமை, ஒருசார்பற்ற அறம் ஆகியவை பற்றிய அவருடைய கட்டுரைகள், பிரான்ஸ் நாட்டுச் சிந்தனையாளர்களைச் சிறந்த மனிதமாண்பியலாளராக ஆக்கின. அமெரிக்க, பிரெஞ்சுப் புரட்சிகட்கு அறிவுத்துறை வாயிலாகப் பெருந்துணை புரிந்த வால்டேர், டிடராட், மான்டெஸ்க், போன்ற அறிஞர்கள் அவருடைய சிந்தனைகளுக்குப் பெரிதும் கடப்பாடு உடையவர்கள் ஆயினர்.[43]

இயற்கையின் ஆணை, மனித இயல்பின் விதிகள் என இரண்டாகப் பிரிக்க வேண்டுவதில்லை. மனிதனுடைய நிலைமைகளைக் கூர்ந்து நோக்கினால் இரண்டும் ஒன்றே என்று கூறலாம். மனித முயற்சியினாலேயே என்றும் நன்னிலையில்

---

41. Encyclopaedia of Social Sciences; Vol.IV. Pages 539-40 (1937)

42. Encyclopaedia of Social Sciences; Vol.IV. Pages 541 (1937)

43. Encyclopaedia of Social Sciences; Vol.IV. Pages 541 (1937).

இருந்தவையாகச் சொல்லப் பெறும் மனித நிலைமைகளை - இழந்து போன மனித நிலைமைகளைத் திரும்பப் பெற முடியும் என்று அறிஞர் ரூஸோ விளக்கினார்.[44]

மனிதனிடமுள்ள புரிந்து கொள்ளும் இயல்பையும், மனிதனுக்கு நேரும் அனுபவங்களையும் சீர்தூக்கி ஆராய்ந்தார் அறிஞர் காண்ட் என்பார். புரிந்து கொள்ளும் தன்மைக் கேற்ப அனுபவம் விளங்கலும், அனுபவம் விளங்குதற்கேற்ப இந்த உலகம் அவனுக்குப் பயனுதலும் என அவ்விருமை நிலைகளுக்கிடையேயுள்ள தொடர்பைச் சுட்டி மனித நலமாண்பை விளக்கினார் அவர்.[45]

மனிதன் இயற்கைக்குத் தொண்டனாக இருந்து தன்னைப் பேணி வந்த நிலை ஒன்று. இயற்கையினின்றும் தன்னை விடுவித்துக் கொண்டு தனக்குத் தானே தலைவனாக விளங்க முற்பட்ட நிலை ஒன்று. அந்நிலையிலும் அவனிடம் குறைபாடுகள் விளங்கின. எனினும் இயற்கைக்குக் கட்டுப்பட்டுக் கிடப்பதைவிடத் தன்னிடத்துள்ள நலன்களைக் கண்டறிந்து அவற்றை மதிக்கும் வகையில் மனிதனின் புதிய நோக்கு விழிப்புற்று எழ வேண்டியிருந்தது என அறிஞர் ரஸ்ஸல் எடுத்துக் காட்டினார்.[46]

மனிதனிடமுள்ள திறமைக்கும் அவனிடத்துள்ள குறைபாட்டிற்குமிடையே போட்டி நிகழ்ந்து வருகிறது. குறைபாட்டிற்கு இடங்கொடுத்தால், திறமையால் தீமையே விளையும். அறியாமை, திறப்பாடின்மை ஆகியவற்றோடு காலந் தள்ளிய நிலை வேறு. அறிவுடனும் திறப்பாட்டுடனும் [illegible] வளருமானால் உயிர் வாழ்வு நிலைப்பது அரிது. அறிவு, தீமை நன்மை இரண்டுக்கும் துணைபோவது. ஆதலின், அறிவு ஞானமாக முதிர வேண்டும்; அன்றேல் அதன்

---

44. Encyclopaedia of Social Sciences; Vol.IV. Page 541 (1937)
45. Encyclopaedia of Social Sciences; Vol.IV. Page 541 (1937)
46. Bertrand Russel: The Scientific Out-Look. Pages 278-89(1962).

பெருக்கம் துன்பத்திலேயே முடியும் என்று அறிஞர் ரஸ்ஸல் மனிதனிடத்து இருந்துவந்த - இருந்துவரும் - இருமை நிலையைப் புலப்படுத்தினார்.[47]

மனித உள்ளம், வேறுபாடு ஒருமைப்பாடு என்னும் இரண்டு நெறிகளுக்கிடையே தன்னைச் செம்மைப்படுத்தி வளர்த்துக் கொண்டு முழுமையை ( Perfection ) நோக்கி நடக்கிறது; ஒவ்வொரு கட்டத்திலும், அகமுகமாக இருந்த திறன் ஒன்று புறமுகமாக வந்து விளங்குகிறது; உள்ளத்திற்புதைந்து கிடக்கும் செல்வம் இவ்வாறு, வெளிப்போந்து விளங்கிச் சிறப்புறுகிறது என்று அறிஞர் பிராட்லி எடுத்துக் காட்டுகிறார்.[48]

உயிரியல், உளவியல் இரண்டும் மனிதனின் கூர்தலற வரலாற்றை விளக்குபவை. எனினும், பண்பாட்டு மரபு என்னும் பயின்று வழக்கு வகிக்கும் பெரும் பங்கை நோக்க, உயிரியலை விட உளவியலே உயர்ந்ததாகத் தோன்றுகிறது. உள்ளத்தின் செயல்களாலும், விளைவுகளாலும், தன்னைச் சீர் செய்தல், தன்னை வகைப்படுத்துதல் ஆகிய முறைமைகள் அமைந்து, பண்பாட்டு மரபு ஓங்கி வருகிறது. அவ்வப்போது மேற்கொள்ளும் வழிவகை, அறிவாக்கம், கருத்து, நம்பிக்கை, கோட்பாடு ஆகியவற்றில் மாற்றம் நிகழ்த்தி, மனித உள்ளம் உருப்பெறுவதால், உடற் கூற்றியல், உயிரியல் ஆகியவற்றை விட, உளவியலே மனிதனின் கூர்தலற வளர்ச்சியில் பெரும் பங்கு வகிக்கிறது என்று எடுத்துரைக்கிறார் ஜூலியன் ஹக்ஸ்லி.[49]

47. Bertrand Russel: The impact of Science in Society; Pages 120-21. Quoted by Swami Renganathanantha in his "The Message of Upanisads" Page 239 (1968).

48. M.K.Bradly:The Logic of the Unconscious Mind. Introduction Pages X-XI. Quoted by Swami Renganathanantha in his "The Message of the Upanisads" Page 335 (1968)

49. Julian Huxley: The Evolutionary vision, Evolution after Darwin, Vol.III. Page 251. Quoted by Swami Renganathanantha in his "The Message of the Upanisads" Page 377 (1968).

மனிதனின் ஆன்மாவில் வேட்கைக் கூறு, காரணகாரியக் கூறு என்னும் இருவகைக் கூறுகள் உண்டு. வேட்கைக் கூறு காரணகாரியக் கூற்றினுக்கு அடங்கியே நிற்க வேண்டும். வேட்கைக்கும் உணர்ச்சிக்கும் முதலிடம் தருவது உயர்ந்த வாழ்க்கை ஆகிவிடாது. மனிதன் உணர்ந்து தெளியும் பல்வகை இன்பங்களை முறைப்பட ஆய்ந்து பயன் காண வேண்டுமாயின், வேட்கைக் கூறு காரணகாரியக் கூற்றினுக்கு அடங்கி நிற்றலே பொருத்தமாகும். அவ்வாறு அடங்கி நிற்றலினாலேயே உணர்ச்சியும் வேட்கையும் முழு நிறைவு பெறுகின்றன என்பது அறிஞர் பிளேட்டோவின் விளக்கமாகும்.[50] கலப்பு-மிகு மகிழ்ச்சியினும், கலப்பற்ற தூய மகிழ்ச்சி சிறிதேயாயினும் அதுவே கொள்ளத்தக்கது என்பது அவரது துணிபாகும்.[51]

இதுவரை எடுத்துக்காட்டிய அறிஞர் தம் கருத்துகள், மனிதனின் இயல்பில் இருமை நிலை எவ்வாறு அமைந்து கிடக்கின்றது என்பதையும் அவ்விருமை நிலைக்கு இடையே மனித மாண்பு எவ்வாறு பரிணமித்து மேம் பட்டு வருகிறது என்பதையும் நன்கு விளக்குகின்றன.

இனி மனித மாண்பியக் கோட்பாடு, பிற கோட்பாடுகளுடன் ஒப்பிடுங்கால், எவ்வாறு தனியியல்பை விளக்கிக் காட்டுகிறது என்பதையும் காணுதல் வேண்டும்.

கீழை நாட்டு அறிஞர்கள் எடுத்துக் காட்டுவது போல், படைப்பின் நன்மை தீமைக் கூறுகள் உண்டு என்பதை அறிஞர் பெர்னார்டுஷா எடுத்துரைத் துள்ளார். படைப்பு, குறைபாடெல்லாம் நீங்கியது என்பது பொருந்தாது. படைப்பாற்றல், முயலல் பிழைத்தல் ( Trial and Error ) என்னும் நெறியிலேயே இயங்குகின்றது. படைப்பில் உள்ள பிழைகளே தீமையாக

50. Dr.C.E.M.Joad. Guide to the Philosophy of Morals and Politics. Page 64 (1948)

51. Dr.C.E.M.Joad. Guide to the Philosophy of Morals and Politics. Page 410 (1948).

உருக்கொண்டு சிக்கல் விளைவிக்கின்றன. படைப்பில் உள்ள இவ்விருமை நிலை படைக்கப்பட்ட உயிர்களிடத்தும் - குறிப்பாக மக்களிடத்தும் - காணப்படுகின்றது. மனிதனின் முன்னி உணரும் இயல்பால் ( guessing ) நன்மையைப் போலவே தீமையும் விளையலாம். மனித இயல்பில், ஆற்றல், அறிவு, உண்மை காணும் வேட்கை ஆகியவற்றைத் தொடர்ந்து பெருக்கும் உந்துதல் உள்ளது. மனித இயல்பில் அழகுணர்வு, அறப்பண்பு, இரக்கம் முதலிய உடன்பாட்டு உணர்வுகள் இருத்தல் போலவே, செருக்கு, காமம், சினம், அழுக்காறு முதலிய எதிர்மறை உணர்வுகளும் உள்ளன என்பதை மறக்கியலாது. இவற்றோடு பழிபாவம் நிறைந்த பலர், மாசுமறுவற்ற சிலரைப் பலவகையாகத் துன்புறுத்தும் கொடுமைகளும் உள்ளன. இவ்வாறு, படைப்பு, அதன் இலக்குகளாகிய உயிர்கள் - குறிப்பாக மக்கள் - ஆகிய இருதிறத்தும் இருமை நிலை உள்ளதை பெர்னர்டுஷா விளக்கமாக எடுத்துரைத்துள்ளார்.[52]

பெர்னர்டுஷாவின் கருத்தை உள்ளத்தில் கொண்டு, மனித மாண்பியலை, இயற்கையியல் ( Naturalism ) முழுமையியல் ( Absolutism ) இயற்கை இறப்பியல் ( Supernaturalism ) ஆகியவற்றோடு ஒப்பிட்டால் மனித மாண்பியலின் உண்மை இலக்கணம் நன்கு புலப்படும்.

மனித மாண்பியலைப் பொதுவான வாழ்க்கைக் கோட்பாடு என்று கொண்டால் அஃது இயற்கையியலுக்கும் ( Naturalism ) முழுமையியலுக்கும் ( Absolutism ) இடைப்பட்டது என்பது போல் தோன்றும், எனினும் அது பொருந்தாது.

இயற்கையியல் மனித முயற்சியைப் புறக்கணிப்பது; முழுமையியலோ, உண்மை என்னும் நீக்கமற நிறைந்து நிற்பது என்னும் அளவில் மேற்கொண்டு வளர்ச்சிக்கு இடந்தராமல் அமைந்து கிடப்பது.

52. Bernard Shaw: Every-body's political what is what Pages 232-33 (1950)
Bernard Shaw: Back to Methuselah : Page 44 (1954).

இயற்கையிலிருந்து தோன்றிய மனிதன் இயற்கையோடு போராடிக் கொண்டே, இயற்கையை இறந்த நிலைகளையும் எதிர்த்துப் போராடி வருகிறான். எனவே, இயற்கையியலுக்கும் இயற்கை இறப்பியலுக்கும் இடையே மனித மாண்பியல் ஊற்றம் பெற்று வருகிறது என்பதே பொருந்துவதாகும்.[53]

படைப்பிலும், படைக்கப்பட்ட தன்னிடத்தும் இருமைநிலை இருப்பதைக் கண்டு மனித நல இயலை வளர்த்த மனிதன் மேலும் ஒரு படி உயர்ந்து அதி மனித நல இயலை ( Humanitarianism ) வளர்க்கத் தலைப்பட்டான். அதிமனித நல இயலைப் பெறும் நிலையில் மனிதன், அறிஞனாக இருந்து அறவோனாக உயர்கிறான்.

நன்மை தீமை இரண்டையும் ஆராய்ந்து நல்லவற்றை ஏற்றுக்கொண்டு, தீயவற்றை விலக்க வேண்டும் என்பது அறிவு நிலை. நல்லவற்றை மட்டும் நினைந்து தீயவற்றை நினைக்கவும் மறந்து வாழும் நிலை அறநிலை. படைப்பில் இருமை உண்டென்பது அறிஞர் கொள்கை. படைப்பில் ஒருமையே காண்பது அறவோர் கொள்கை.

> "நன்மை தீமை இரண்டையும் ஆராய வேண்டும், ஆராய்ந்து நல்லவை கொண்டு தீயவை தள்ள வேண்டும் என்பது ஆராய்ச்சியாளர் கொள்கை. ஆனால் அறவோர் இதற்கு உடன்படுவதில்லை. நன்மை தீமை என்ற பகுத்தறிவே போதும், நன்மையை மட்டும் போற்றிப் பாராட்டித் தீமையைத் திரும்பப் பேசாமல் விட வேண்டும் என்பதே அறவோர் கொள்கை. தீமையைக் காண்பது, கேட்பது, ஆராய்வது இவற்றை அறிவு வளர்ச்சிக்காகவும் மேற்கொள்ளக்கூடாது என்று அறவோர் கடிவது வழக்கம்"
>
> – மு.வரதராசன்: திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம்: பக்.66.

53. Encyclopaedia of Social Sciences; Vol.IV. Pages 542-43 (1937).

என்று ஆய்வாளர் அறிஞர்க்கும் அறவோர்க்கும் வேறுபாடு காட்டி விளக்கும் விளக்கத்தில் அறிவமைந்த நலவியல் ( Humanitarianism ) விளங்குவதைக் காணலாம்.

தீமையை விளைவித்த அதனைப் பிறர்க்கு இழைப்பாரிடத்தும் தீமைக்கு இடந்தராமல் – அதாவது தீமை செய்யாமல் – நன்மையையே செய்யவேண்டும் என்று திருவள்ளுவர் எடுத்துரைக்கிறார்.

திறனல்ல தற்பிறர் செய்யினும் நோநொந்து
அறனல்ல செய்யாமை நன்று. (குறள் 157)

மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாம்தம்
தகுதியான் வென்று விடல். (குறள் 158)

அறிவினுள் எல்லாம் தலை என்ப தீய
செறுவார்க்கும் செய்யா விடல். (குறள் 203)

கறுத்து இன்னா செய்தஅக் கண்ணும் மறுத்துஇன்னா
செய்யாமை மாசற்றார் கோள். (குறள் 312)

இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயம் செய்து விடல். (குறள் 314)

நன்பு ஆற்றாராகி நயமில செய்வார்க்கும்
பண்பு ஆற்றாராதல் கடை. (குறள் 398)

இன்னாசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு. (குறள் 987)

வேண்டும் என்ற அவர் உணரும் உணர்வுதான்.

> தீப்பாலதான் பிறர்கண் செய்யற்க; நோய்ப்பால
> தன்னை அடல்வேண்டா தான். (குறள் 206)
>
> தன்னைத்தான் காதலனாயின் எனைத்தொன்றும்
> துன்னற்க தீவினைப் பால். (குறள் 209)
>
> அறிவினான் ஆகுவது உண்டோ பிறிதின்நோய்
> தன்நோய் போல் போற்றாக்கடை. (குறள் 315)
>
> இன்னா எனத்தான் உணர்ந்தவை துன்னாமை
> வேண்டும் பிறன்கட் செயல். (குறள் 316)
>
> நோய்எல்லாம் நோய்செய்தார் மேலவாம்; நோய்செய்யார்
> நோயின்மை வேண்டு பவர். (குறள் 320)
>
> கொல்லாமை மேற்கொண்டு ஒழுகுவான் வாழ்நாள்மேல்
> செல்லாது உயிர்உண்ணும் கூற்று. (குறள் 326)

இக்குறள்களில், தாம் பிறர் என்ற வேறுபாடு அற்றவராய்த் தமக்கு நலங்கருதிப் பிறர்க்குத் தீமை நேராமல் சாத்தும், தமக்குத் துன்பம் நிகழவேண்டாமை கருதிப் பிறர்க்கு நலம்செய்து போற்றியும் வாழும் அறவோர் இயல்பை - அதிமனிதநல மாண்புடையார் இயல்பைத் திருவள்ளுவர் விளக்கியுள்ளார்.

தாம் பிறர் என்ற வேறுபாடு அற்ற நிலையில் அறவோர் - அதிமனிதநல மாண்பியலார் - அடையும் இன்னொரு மேல்நிலை உண்டு. தம்மில் பிறரையும், பிறரில் தம்மையும் காணும் மனநிலை வாய்க்கப் பெறுவதால், உலகில் விளையும் தீமையும் நன்மையும் - அவற்றால் விளையும் துன்பமும் இன்பமும் - பிறர் விளைப்பன அல்ல; யாவும் தாம் விளைப்பனவே என்ற உணரும் உணர்வே அ

அந்நிலையைக் கணியன் பூங்குன்றனார்,

"தீதும் நன்றும் பிறர்தர வாரா
நோதலும் தணிதலும் அவற்றோரன்ன" (புறநானூறு: 192)

என்ற தொடர்களில் விளக்குகிறார்.

தாம் பிறர் என்ற வேறுபாடு அற்று, நோக்குமிடமெல்லாம் தம்மையே காணும் பெருநிலை உற்ற அதிமனித மாண்பியலாளர், உலகியல் நிலையில் சோதனைக்குட்படுகின்றபோது, தம் நிலையில் தாழ்தல் இல்லை; வாழ்வின் இறுதியாகிய சாவு நேரினும், அல்லது வாழ்வின் சீர்குன்றுவதற்குரியதாகிய பொருட்கேடு நிகழினும், தமது பெருமைக்குரியனவாக அவற்றை ஏற்றுக் கொள்வார்கள்.

நத்தம்போல் கேடும் உளதாகும்; சாக்காடும்
வித்தகர்க் கல்லால் அரிது" (குறள்: 235)

ஒப்புரவி னால்வரும் கேடெனின் அஃதொருவன்
விற்றுக்கோள் தக்க துடைத்து. (குறள் 220)

நோற்றோர் மன்ற தாமே கூற்றம்
கோளுறவிளியார் பிறர்கொள விளிந்தோர். (அகநானூறு 61)

என்னும் பாடல்கள் உலகியலில் அதிமனித மாண்பியலாளர் தம் நிலை குன்றாது ஒழுகுவர் என்பதை எடுத்துரைக்கின்றன.

தமக்கென வாழா, பிறர்க்கென (தமக்கென வாழ்வது போலவே) வாழ்வதோடு, பிறர்க்கென (அவரைத் தம்போல் கருதி)த் தமது உயிரையும் ஈயும் இவ்வியல்பில் வரும் இன்பம் மிக உயர்ந்தது என்றும் அதனின் மிக்கது ஒன்று இல்லை என்றும் மேற்கு நாட்டாரும் எடுத்துரைக்கின்றனர்.

மனிதன் எச்செயலையும் மகிழ்ச்சி பெறுதற் பொருட்டுச் செய்கிறான். அதிலும் தன்னை முற்றிலும் இழந்து எதனையும் செய்கிறான். மனிதன் தன்னலமிழந்து வாழ்வதற்குரிய காரணத்தை ஆராய்ந்தால், தன்னைத் தான் மகிழ்வுறுத்திக் கொள்வதிலும், பிறரை மகிழ்வுறுத்துவதில் அதிக மகிழ்ச்சி கொள்கிறான் என்பதுவே அதற்கு உரிய காரணம் என்பது நன்கு விளங்கும். தன்னை மறந்து பிறர் பொருட்டுச் செய்யும் தியாகத்தால் மனிதன் அளவிறந்த மகிழ்ச்சி அடைகிறான். தனக்குச் சரி என்றுபட்டதைச் செய்ததாகவும், பிறர் தன்பால் உதவி எதிர்பார்த்ததால் தான் அவ்வாறு செய்ததாகவும் உணர்ந்து பெருமிதம் கொள்கிறான். காமவிழைவால் வேண்டியவாறு இன்பந்துய்த்து நிறைவுகொள்வார் போன்ற இன்பத்தையும் பெறுகிறான். தனக்குத் தானே தேந்து கொள்ளும் நலம், வேட்கை, ஈடுபாடு ஆகியவற்றுற் பெறும் எவ்வின்பமும் தன்னைப் பிறர் பொருட்டு ஈந்து கொள்ளும் இன்பத்திற்கு இணையாகாது என்று கருதுகிறான். இவ்வாறு தியாகத்தால் பிறரை மகிழ்ச்சியுறச் செய்யும் அதிமனிதநல மாண்பினை ஒருதத்துவமாகவே கிரேக்கர்கள் போற்றிவந்தார்கள்.[54]

பிறர் நமக்கொன்றைச் செய்யும் பொழுது, நாம் அவரை நமக்கெனப் படைக்கப்பட்ட கருவி எனக்கருதுதல் ஆகாது. அவரை, நம்மை நாம் பேணுதல் போல் பேண வேண்டும் என்று அறிஞர் கான்ட், அதிமனிதநல மாண்பு பற்றிய கருத்தினை நுட்பமாக வெளியிட்டுள்ளார்.[55]

கால, இடவேறுபாடு கடந்த அகிலமனைத்திற்கும் உரிய பெருங் கோட்பாடு, கால இடவேறுபாடு கடந்து அகிலமனைத்திற்கும் உரியவனுய் வளர்ந்த மனிதனிடமிருந்தே முகிழ்க்கும் எனப்பவித்ரான் என்னும் அறிஞர் எடுத்துரைக்கிறார்.[56]

54. Dr.C.E.M.Joad: Guide to the Philosophy of Morals and Politics. Pages 46-47 (1948)

55. Kant: Ethics : Translated by A.C.Ewing. Page 62 (1969)

56. A.K.Pavithran. The Beacon of one world. Page 146 (1973).

மன்பதை முன்னேற, முன்னேற ஒவ்வொரு காலத்திலும் ஒவ்வொரு பிரச்சினை தோன்றவே செய்யும். அதற்குத் தீர்வு காணும் நோக்கமே ஒவ்வொரு மனிதனின் நோக்கமாக இருத்தல் வேண்டும். அவ்வப்போது தோன்றும் சமுதாய, விஞ்ஞான, தொழில் நுட்ப, ஆன்மிக, ஒழுக்கியல் நெறிகள் அனைத்தும் அந்நோக்கம் கருதியே தோன்றியன என்று உணர்தல் வேண்டும். அமைதி, சமுதாய உணர்வு ஆகியவற்றை மேம்படுத்துதற்காகப் பாடுபடும் மக்களோடு தன்னை ஈடுபடுத்திக் கொண்டு, தன் ஆற்றல் திறமை ஆகியவற்றைச் சமர்ப்பணம் செய்தால்தான், மன்பதையின் வரலாற்றில், அதிமனிதநலக் குறிக்கோள்கள் ( humanitarian ideals ) தொடர்ந்து வளர்ந்து கருதிய வெற்றியையும் நல்கும் என்று பெட்ரோசியன் என்னும் அறிஞர் எடுத்துக் காட்டுகிறார்.[57]

ஒவ்வொரு தனி மனிதனின் வாழ்வும் மன்பதையின் வரலாற்றோடு பிரிக்க முடியாதபடி பின்னிப்பிணைந்ததாகும். மன்பதை அவ்வக் காலங்களில் எதிர்கொள்ளும் எந்தச் சிக்கலையும் தீர்த்து வைப்பதில் முழுதும் ஆழ்ந்து நிற்கும்போது தான் தனி மனித வாழ்வு நிறைவுடையதாய், பொருள் பொருந்தியதாய்த் திகழும் என அறிஞர் பாண்ட்ஸ்காவா விளக்குகிறார்.[58]

தான் வாழும் உலகம் மக்கள் வாழும் உலகம் என்று உணர்தல் வேண்டும். சமுதாய வாழ்வு பற்றிய உண்மையே உண்மை என்று தெளிதல் வேண்டும். மனிதன் அவ்வுண்மையைக் கடைப்பிடித்தே வாழ்கிறான்; அதுமேம் படவே வாழ்கிறான்; அவ்வுண்மையிற் பங்கு கொண்டு அதனை மாண்புறுத்தி அதற்குத் தலைவனாகவும் அதற்குச் கருவியாகவும் அமைந்து அதில் தலைப்பட்டு நிற்கிறான் என்று அறிஞர் பெட்ரோசியன் தொடர்ந்து விளக்குகிறார்.[59]

57. M. Petrosyan. Humanism, Its Philosophical, Ethical and Sociological aspects. Pages 163-64 (1972)

58. M. Petrosyan. Humanism, Its Philosophical, Ehical and Sociological aspects. Page 159 (1972)

59. M. Petrosyan. Humanism, Its Philosophical, Ethical and Sociological aspects. Page 232 (1972).

அதிமனிதநல மாண்பின் அருமை, அண்மைக் காலம் வரை அறியப்படாத ஒன்று. மனிதனை நாகரிகப்படுத்தும் செவ்விய கருவி அது என்று பத்தொன்பதாம் நூற்றாண்டிலேதான் உணரப்பட்டது. இன்றுங்கூட அதன் அருமை அறியாது அதனைக் குறைத்து மதிப்பிடுகிறோம். தத்துவஞானிகள் பலருங்கூட, அது பலவீனமான, நெகிழ்ந்த, தன்னை இழக்கும் நிலை என இகழ்வாராயினர்; கொடுமை, வன்கண்மை ஆகியவற்றினும் இழிந்தது எனக்கருதினர். கதை, நாடகம் இயற்றுவோரும், நடிகர்களும் கூட, இக்கருத்தையே வலியுறுத்தினர். வீர உணர்வும் தன்னம்பிக்கைத் திண்மையும் உடையது அது என உணர்வார் அரியராக இருந்தனர் என்று அதன் அருமை குறித்து விளக்கம் செய்கிறார் அறிஞர் கென்னெத்கிளார்க் என்பவர்.[60]

அரவிந்தரும் அதிமனிதநல மாண்பின் அருமையை நன்கு விளக்கியுள்ளார். தனி மனித வாழ்வு பந்தபாசத் தொடர்பற்றது; ஆயினும் மன்பதை, அமைதி அன்பு இவற்றைப் பாடுபட்டு வளர்க்கிறது. அவ்வளர்ச்சியின் சாரமே அதிமனிதமாண்பியல் என்பது. மன்பதை, தற்காலத்தில், வேத நெறியாய்க் கொண்டொழுக வேண்டிய அன்புநெறி என்று அதன் அருமையைப் புலப்படுத்துகிறார் அவர்.[61]

அதிமனித மாண்பியல் என்பது தற்கால முன்னேற்றத்தில் தோன்றி வளர்ந்த புதிய தத்துவம். சமய உணர்வு பெறல், தருணைகாட்டுதல், மனிதனை மனிதன் விரும்புதல் ஆகியவை மூலம் அது நம் இயல்பிலேயே உள்ளது என்று நன்கு எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. இன்று அது வளர்ந்து பரவியுள்ளதெனில், அதற்குரிய வித்து நெடுங்காலத்திற்கு முன்னமேயே விதைக்கப்பட்டது. புத்தம், கிறித்துவம் ஆகிய இரு சமயங்களும் அதை உணர்ந்து போற்றி உரம் பெற வைத்தன என்று மேலும் விளக்குகிறார் அரவிந்தர்.[62]

---

60. Kenneth Clark: Civilization. Pages 329-30. (1974)

61. Sri Aurobindo: The Life Divine. Vol.II. Page 84 (1972)

62. Sri Aurobindo: The Life Divine. Vol.II. Page 249 (1972).

இதுவரை ஆய்ந்த கருத்துகளால் பின்வரும் முடிவுகள் கொள்ளக் கிடக்கின்றன.

1. மனிதனிடம் குற்றம், குணம் அறியாமை, அறிவு என்னும் இருமை நிலை உள்ளது. குணம், அறிவு முதலிய உடன்பாடான பண்புகள், குற்றம் அறியாமை முதலிய எதிர்மறைப் பண்புகளோடு போராடி அவற்றைவெல்ல முற்படுகின்றன. அத்தகைய வெற்றியே மனித மாண்பியலாகும். குணம் நிறைந்தவரிடத்துக் குற்றம் இருத்தலும் இயல்பு; குற்றமே நிரம்பியவரிடத்துச் சில குணங்கள் இருத்தலும் இயல்பு; இத்தகைய நிலையும் மனித மாண்பியலுள் அடங்கும்.

2. கல்வி, கலை, உயர்தனிச் செம்மொழி இலக்கியப் பயிற்சி முதலியன மனித மாண்பியலை வளர்ப்பன. அவ்வப்போது நேரும் இடையூறுகளைத் தகர்ப்பதற்கும் தொடர்ந்து மனித மாண்பியல் ஏற்றம் பெறுவதற்கும் இவை அருந்துணை புரிவன.

3. தாம் பிறர் என்ற வேறுபாடு அற்ற நிலையை - அதிமனித மாண்பியலை - நோக்கி மனித மாண்பியல் மனிதனை நடத்திச் செல்கிறது. தீமை, குற்றம் முதலியன படைப்பில் இல்லை என்ற உணர்வோடு, பகைவர், நண்பர், நொதுமலர் என்று வகைப்படுத்தாது, அனைவரையும் ஒப்பக் கண்டு அவர் நலத்திற்காகத் தம் நலத்தையும் உயிரையுங் கூடப் பணயம் வைப்பது அதிமனித மாண்பியலின் உயிர்நாடியான கோட்பாடு.

## இயல் - 2

## வில்லிபுத்தூரார் காட்டும் மனித மாண்பியல்

வில்லிபுத்தூரார் பாரத வரலாற்றைப் பாட எடுத்துக் கொண்டதற் குரிய காரணங்கள் இரண்டு. ஒன்று, வியாசர் வடமொழியில் படைத்த பாரதத்தைத்தாம் அறிந்து அதனைத் தமிழில் படைத்துத்தர வேண்டும் என்ற பேராவல்; இன்னொன்று கண்ணன் மீது கொண்ட ஈடுபாடு.

"மன்னில் ஆரணம் நிகர் என வியாதனுர் வகுத்த
எண் இலா நெடுங்கதையை யான் அறிந்து இயம்பல்"

"முன் சொலாகிய சொல் எல்லாம் முழுது உணர்முனிவன்
தன் சொலாகிய மாப் பெருங்காப்பியம் தன்னைத்
தென் சொலால் உரை செய்தல்"

"மன்னும் மாதவன் சரிதமும் இடையிடை வழங்கும்
என்னும் ஆசையால் யானும் ஈது இயம்புதற்கு இசைந்தேன்"

- வில்லிபாரதம்: ஒருலை: 4, 5, 6.

கீழை நாட்டுத் தத்துவ மரபின்படி, மனிதனும் அவனுடைய மாண்புகளும் சிறப்புறுவது தெய்வத்தின் தொடர்பினால் தான்; தெய்வத்தின் இயல்பு புலப்படுவதும், பரிணமிப்பதும் மனிதநல மாண்புகளின் வாயிலாகத்தான்.[1] இந்நுட்பத்தினை உணர்ந்து கடைப்பிடிக்க வேண்டியமை பற்றியே, வில்லிபுத்தூரார், பாரத வரலாற்றில் காணும் பாத்திரங்களின் மாண்புகளை எடுத்தியம்புதல், அவற்றை மேலும் மாண்புறச் செய்யும் தெய்வ இயல்பினை விளக்குதல் என்னும் இருமை நிலையைத் தொடக்கத்திலேயே புலப்படுத்துகிறார்.

---

1. S.Radhakrishnan, Indian Philosophy; Vol.I. Page 545 (1966).

சக்கரம் சுழலச் சுழல மேல் கீழ் ஆவதும் கீழ் மேல் ஆவதும் போல், உண்மை, நேர்மை முதலிய பண்புகள் நிலை தடுமாறுங்கால் அவதார தத்துவம் உருவெடுக்கிறது. மனிதனைத் தெளிவுறுத்தி மேம்படுத்துவதற்காகத் தெய்வம் மனிதனை நோக்கி வருகிறது. அறியாமை இருள் நீங்கித் தன்னுட்டுள்ள பேருண்மையை ( Self ) உணரும் போது மனிதனும் தெய்வமாகிறான். சமுதாய வரலாற்றில் நிகழும் மேல் கீழ் நிலையைப் போன்றதாகும், இது என்று சான்றோர் எடுத்துக் காட்டுகின்றனர்.[2] மனித, தெய்வ இயல்புகளின் இணைப்பையும் அதனால் மாண்புறும் மனித, தெய்வ மேம்பாடுகளின் சிறப்பையும் விளக்குதற்காகவே வியாசரின் பெருமையையும், கண்ணனின் பெருமையையும் வில்லிபுத்தூரார் ஒரு சேர எடுத்துக் காட்டுகிறார். மானட மாண்புகள் கூறும் பாரத வரலாறும், தெய்வ மாண்புகள் கூறும் கண்ணன் சரிதையும் ஒருங்கிணைய வேண்டும் என்று அவர் உள்ளம் விழைகிறது.

மனிதனிடம் மிக விழுமிய பண்புகளைக் காணுமிடத்து அவனைத் தெய்வமாகக் கொள்ளல் வேண்டும் என்னும் கோட்பாட்டினைச் சில பாத்திரங்கள் வாயிலாகவும் வில்லிபுத்தூரார் புலப்படுத்தியுள்ளார்.

'பாண்டு ஈன்ற தருமதேவதை' - வி.பா.சம்பவ: 113

என்று தருமனையும்,

'நல் அறக் கடவுள்' - வி:பா.வாரணா: 53

என்று விதுரனையும்,

'மதியுடைக் கடவுள் வீடுமன்' - வி:பா:இராயசூய 141

என்று வீடுமனையும்,

'விகருணன் ஆம் வாய்மைக் கடவுள்' - வி:பா:சூதுபோர் 236

என்று விகருணனையும்,

2. Swami Prabvananda: The spiritual heritage of India; Page 118-(1977).

'தெய்வமன்னுள்' - வி.பா. கிருட்டிணன் தூது. 30.

என்று சகதேவனையும் குறிப்பிடுவதை நோக்க, மனித மாண்பு, தெய்வ மாண்பை எய்திச் சிறப்புறல் வேண்டும் என்று வில்லி கருதுகிறார் என்பது உறுதியாகிறது.

புலன்களை ஒருமைப்படுத்தித் தூய வாழ்வு வாழும் சான்றோரையும் முனிவரையும் கடவுள் என்ற பெயரால் குறித்தல் தமிழ் மரபில் காணப்படுகின்றது. மனிதன் பண்பால் உயர்ந்து உயர்ந்து தெய்வ எல்லையைத் தீண்டித் தெய்வப் பண்புகள் அமையப் பெற்று முழுமை எய்தல் வேண்டும் என்னும் நோக்கம் பற்றியே தமிழ்ச் சான்றோர், உயர்ந்த மானுடரைத் தெய்வத்தோடு ஒப்பக் கூறினர் என்பது மறுத்தற்கியலாத கருத்தாகும்.

வில்லிபுத்தூரார் தம் நூலுள்ளேயே "அம்முனிப்பெருங்கடவுளும்" (சம்பவ. 29) என்று துருவாச முனிவரைக் குறிப்பிடுவது, மானுட தெய்வ மாண்புகளை ஒருங்கிணைக்க விரும்பும் அவர்தம் கோட்பாட்டிற்குத் தக்க அகச் சான்றாகும்.[3]

வேதம் நல்கிய இறைவனைப் போல பாரதம் நல்கிய வியாதனும் இறைமைத் தன்மை எய்தியவன். நான்கு வேதங்களை இறைவன் நல்கினன் எனின், பாரதத்தை ஐந்தாம் வேதமாக வியாதன் நல்கினன் என்று கூறி இறைவனையும் வியாதனையும் (தெய்வத்தையும் மனிதனையும்) ஒப்ப வைத்துக் காட்டுகிறார் வில்லிபுத்தூரார்.

"சதுர் வேதங்கள் பாரதம் தன்னொரு
ஐந்தாம் படியினில் பகர்ந்த மூர்த்தி"

- வி.பா. திரௌபதி மாலையிட்ட சருக்கம்-5

---

3. வில்லிபாரதம். ஆதிபருவம். அருச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கம் 22. பக். 376. வை.மு.கோ. பதிப்பு (1963)
வில்லிபாரதம். ஆதிபருவம். வேத்திரகீயச் சருக்கம் 36. பக். 239. வை.மு.கோ. பதிப்பு (1963).

என்னும் தொடர்களின் வாயிலாக, தெய்வ மாண்போடு மனித மாண்பை இணைத்துக் காட்டுகிறார். நான்கு வேதங்களை – இறைவன் நல்கியவற்றை – வியாசன் வகுத்தான் என்பதும், அவ்வேதங்களை ஒப்ப ஐந்தாவதாக ஒரு வேதத்தை – பாரத 'வரலாற்றை – வியாசன் (மனிதன்) செய்தான் என்பதும் மனித மாண்பு மேம்பட்டு நின்ற தெய்வ மாண்பை எட்டி நின்ற நுட்பத்தைப் புலப்படுத்துவனவாகும்.

அனைத்துமாய் உள்ள படைப்பின் முழுமைத் தன்மையில், இயற்கை, இயற்கை இறந்த நிலை ஆகியவற்றுள் மனிதனுக்குரிய நிலையை அவன் உணருமாறு புலப்படுத்தி, தெய்வ இயல்பு மனிதனை நோக்கி வருதற்கு எந்த முன்வரம்பும் விதிக்காமல் செய்து விட்டால், மனித மாண்பியலும் அவதார தத்துவமும் ஒன்றாகி விடுகின்றன என்பது மேல் நாட்டார்க்கும் உடன்பாடாகின்றது.[4]

விலங்கு நிலையினின்று உயர்ந்து மனித நிலைக்கு வந்து அதனின்றும் உயர்ந்து தெய்வ நிலையைப் நோக்கிப் பயணம் செய்கிறான் மனிதன்.[5] அத்தகைய பெரும் பயணத்திற்கு உறுதுணையாக இருந்து அவனை மேல் நோக்கிச் செலுத்துவது கல்வியாகும். மனிதன் மனிதனாக வாழ்வதற்குரிய காரணம் கல்வியே. மனிதனாகப் பிறக்கவில்லை; விந்தையான அருவருக்கத்தக்க விலங்காய்ப் பிறந்துள்ளான் அவன். பலகாலம், பல்வகை நெறிகளால், ஈட்டிப் பாதுகாத்துப் பேணிய பண்பாட்டுச் செல்வத்தால், மனிதன் மனிதனாக உயர்ந்தான்; மன்பதை உருவாயிற்று; எவருங்காணாத உயர்நிலையை மனித சமுதாயம் அடைந்தது என்று அறிஞர் வில்டுராண்ட் எடுத்துரைக்கிறார்.[6]

உயர்ந்த கல்வியாலேயே உயிர் பண்பட்டுப் பயன் பெறுகிறது; உயர்ந்த கல்வியாலேயே மனம் பண்பட்டுத் தூய்மை அடைகிறது. உயிர்

---

4. Whit Burnett (Editor); This is my philosophy; page 255 (1958)

5. Swami Renganathananda: The Message of the Upanishads; pages 238-39 (1968)

6. Wil Durant: The mansion of philosophy; page 256 (1952).

மாசற்று மேம்பட்டு விளங்கும், மனம் தூய்மை மிகுந்து உயர்தலுமே மனிதன் பெறும் விழுமிய செல்வங்களாகும். இத்தகைய பெருநிலையை துரோணர் - அருச்சுனன் தொடர்பில் வைத்து விளக்குகிறார் வில்லிபுத்தூரார். துரோணன் அருச்சுனனுக்கு உயிர் ஆகுவன்; அருச்சுனன் துரோணனுக்கு மனம் ஆகுவன். துரோணன் அருச்சுனன் பால் காட்டிய அருளால் உயிர் நலம் பெற்றான். அருச்சுனன் துரோணன் பால் காட்டிய விநயத்தால் (வணக்கத்தால்) மனநலம் பெற்றான்.[6அ]

> "இருவரும் நயந்த அருளும் விநயமும் மிகுந்தனர்கள்,
> இன் உயிரும் மனமும் என" - வி:பா:வாரணை:52

மனம் விளங்கும் வகையில் அறிவு பலபடியாய் உயர்ந்து நிற்றல் வேண்டும் என்னும் கருத்துப்பட,

> "ஆறறிவதுவே அவற்றொடு மனனே" -தொல்:பொருள்:மரபு:26

என்று தொல்காப்பியர் உணர்த்துவது இங்குக் கருதத்தக்கது.

ஆசிரியன் மாணவனுக்குக் கற்பித்து உதவுதல் பெரியோர் சிறியோர் பால் காட்டும் அருள் நிலை. கற்ற மாணவன் கற்பித்த ஆசிரியனுக்கு உதவும் நிலை சிறியோர் பெரியோர் நிலைக்கு உயரும் வளர்ச்சி நிலை. அவ்வளர்ச்சி நிலையை அருச்சுனன் எய்தி நிற்கிறான்; தெய்வமெனத் தான் போற்றிய துரோணனை, முதலையால் நேர்ந்த துன்பத்தினின்றும் காப்பாற்றி, ஆசிரியன் மதிக்கும் உயர்நிலை பெறுகிறான். இவ்வுயர்நிலையை மிக நுட்பமாக - உவமை ஒன்றின் மூலம் - எடுத்துக் காட்டுகிறார் வில்லிபுத்தூரார்.

> 'முத்தி முனிநாள் இளையை, நீர் படி நடத்துறையில்
> முதலை கவர்வுற்றது எனவும்

---

6அ. வில்லிபாரதம்:வாரணைதச் சருக்கம்:32. பக்.45.
வில்லிபாரதம்:சம்பவச் சருக்கம்:89. பக்.37 மர்றே பதிப்பு(1959).

சித்திர வில் வீரர் பலரும் தம் வெறுங்கையோடு
சென்று அருகு நின்று விடவே
பத்தியின் விரைந்து பொதுவே இபம் ன அழைக்க ஒரு
பறவை மிசை வந்த நெடுமால்
கைத்திகிரி போல் கணையின், விசயன், அதனைப் பழைய
சுரர் முதலையின் துணி செய்தான்'
- வி:பா:வாரணவதம்-51.பக்.48.

யானையை முதலை வாயினின்று திருமால் விடுவித்தது போல், ஆசிரியனை அருச்சுனன் முதலை வாயினின்று விடுவித்தான் எனவும், நெடுமால் முதலையைக் கைத்திகிரியால் துணித்தது போல், அருச்சுனன் முதலையைக் கைக்கணையால் துணித்ததாள் எனவும் கூறும் உவமைப் பகுதிகள், அருச்சுனன் உயர்ந்து மேம்பட்டு நின்ற - தன்னைப் பேணி வளர்த்த ஆசிரியன் நிலைக்கு உயர்ந்து நின்ற - நட்பத்தைப் புலப்படுத்துவனவாகும்.

காவிய வளர்ச்சிப் போக்கில் தான் போற்றும் அரிய பாத்திரங்களுள் ஒன்று உயர்ந்து மேம்பட்டு வருதலைப் புலப்படுத்தும் வில்லிபுத்தூராரின் மாண்பு இங்கு மிகவும் குறிப்பிடத்தக்கதாகும். மனித மாண்பு உயர்ந்து ஓங்கித் தெய்வ மாண்பினை எட்டி நிற்கும் என்னும் கோட்பாட்டினை நிறுவுதற்கு, துரோண - அருச்சுன உறவு பற்றிய விளக்கம் தக்கதொரு சான்றாகும்.

இவ்வுலக வாழ்வை விட்டு நீங்கிச் சென்ற இறைவனை எய்துதற்காகப் பெருமுயற்சி செய்கிறான் மனிதன். அம்முயற்சிக் கேற்ப இறைவன் மனிதனை நோக்கி வருகிறான். மனிதன் கடவுளின் அருளாட்சியில் கலந்து நிற்பதும், கடவுள், மனித உள்ளத்தில் கலந்து நின்ற தன் அருளாட்சியை மனிதன் உணரும் வகையில் இயைந்து நிற்பதும் ஆகிய இவ்விரு கூறுகளும் அடங்கியதே வீடு பேறு என்பதாகும். இவை ஒன்றை ஒன்று முரணுவன அல்ல; உண்மையில், இவை

ஒன்றால் ஒன்று தெளிவு பெறுமாறு அமைந்தவை. மனிதன் செய்யும் மிகக்கடிய முயற்சியெல்லாம் வீடுபேறு பெறுதற்பொருட்டேயாகும். தன்னை இறைவனுக்கு முற்றிலும் நல்கிக் கொள்ளும் பெரும்பேறு பெற்றவன் மனிதன்; கடவுளின் அருளாட்சியைப் பேணிப் பயன்படுத்திக் கொள்ளுதற் பொருட்டு மனிதன் தன்னை இழந்து முழுச் சரணகதி ( total submission ) யில் தலைப்படுகிறான். மனிதனிடத்துள்ள குற்றம் பொறுக்கும் இயல்பு (மன்னிக்கும் மனப்பான்மை) முதலியவை யாவும் அவனைத் தூய்மைப் படுத்திக் கடவுளின் அருளாணையைப் பேணிக்காப்பதற்காகவே அவனிடம் அமைந்தவை[7] என்ற டர்வெல் என்னும் அறிஞர் எடுத்துக் காட்டுவது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.

தெய்வ-மானுட ஒருங்கிணைப்புத் தத்துவத்தின் உயிர் நாடியான இ இலக்கணத்தை அறிஞர் டர்வெல் மிக நுட்பமாக எடுத்துரைக்கிறார். இந்நுட்பத்தைக் கொண்டு அருச்சுன-துரோணர், உறவினை நோக்கி, அவ்வுறவினை நன்கு புலப்படுத்துதற்கு வில்லிபுத்தூரார் எடுத்துரைக்கும் உவமைகளைத் தொடர்ந்து நோக்கினால் தெய்வ-மானுட மாண்பினை உணர்ந்து போற்றுதற்கு வில்லிபுத்தூரார் செய்துள்ள அரிய முயற்சி எளிதில் புலனாகும்.

தெய்வ மானுட ஒருங்கிணைப்புத் தத்துவத்தை, கல்வித்துறையில் - ஆசிரிய மாணவ உறவில் - புலப்படுத்தியுள்ளது போல், அரசியல் துறையில் - சகோதர உறவில் - மிக நுட்பமாக விளக்கியுள்ளார் வில்லிபுத்தூரார். வரம்புகட்கு ( limitations ) உட்பட்ட மனித இயல்பு வரம்புகளெல்லாம் கடந்த பேராற்றலின் (தெய்வத்தின்) ஆதரவினால் தான் தன் உண்மை இயல்பு விளங்கப் பெற்றுத்தன் தோற்றத்தின் பயனையும் எய்துகிறது என்னும் கருத்தை, அரசியல் துறையில் உவமையாக வைத்து விளக்கியுள்ளார்.

7. F.A.Durwell: In the Redeeming Christ P-34 (Quoted by S.W.Savarimuthu: Divine Justice according to Kamban and Luthur; Page (1978).

ஆன்று, அறிவு, அனுபவம் ஆகியவற்றால் முதிர்ந்து நின்ற வீடுமன், தன் தம்பி விசித்திர வீரியனுக்கு அரசியல் துறையில் மிக உதவியுரிந்து அவனை நெறிப்படுத்துகிறான். விசித்திர வீரியனும் வீடுமனுடைய மொழிக்கு இணங்கி அரசியலை நடத்துகிறான். அவன் அவ்வாறு அடங்கி அரசியல் நடத்திப் பயன் காண்பது, "சித்தாயிருக்கின்ற ஆன்மா, பரம் பொருளுக்கு எதிரிலே தோன்றுகின்ற தன்மைபோல" உள்ளது.

"சிற்பொருள் பரமான பொருட் கெதிர்
உற்பவிக்கும் உபாயம் தென்னவே
விற்படைத் திறல் வீடுமன் வாய்மையால்
பொற்புறப் புவி புபதியாளும்"

– வி:பா:ஆதிபருவம்:குருகுல:47.

வரம்புக்கு உட்பட்ட மனிதன் வரம்புகள்யாவும் கடந்த ஆற்றலால் உயர்வு பெறுகிறான் என்ற கருத்தை அரசியல் சூழ்நிலையில் வைத்து வில்லிபுத்தூரார் கூறுவது, பொது வாழ்வு சீர்மையும் தூய்மையும் பெற வேண்டும் என்ற அவர் தம் உள்ளக்கிடக்கையைப் புலப்படுத்தும். அதிலும் குறிப்பாக, மூத்த சகோதரனைத் தெய்வ நிலையிலும், அவன் வழி நடக்கும் இளைய சகோதரனை மனித நிலையிலும் வைத்து ஒப்புமை காட்டுவதன் வாயிலாகத் தன் வாழ்வில் மனிதன் விழுமிய பண்பு நலம் பெற வேண்டும் என்பதை நறுக்கமாக எடுத்துரைக்கிறார். தனி வாழ்வுச் சிறப்பு, பொது வாழ்க்கைச் சீர்மை ஆகிய இரண்டும் ஒருங்கிணைந்து மனித நலமாண்பு உயர்வு பெற வேண்டும் என்ற விழைந்த விழைவும் அந்நுட்பத்தில் ஊடாடுவது குறிப்பிடத்தக்கது.

ஆன்மா பரம்பொருளின் அருளால் உயர்வு பெறுகிறது என்னும் கருத்தை வலியுறுத்த வந்த மெய்கண்ட தேவர், ஆசிரிய மாணா உறவு பற்றிய

உவமையையும்,[8] அரசு அமைச்சு பற்றிய உவமையையும்[9] சிவஞான போதத்துள் குறித்துள்ளார். இவ்வுவமைகளைக் கூர்ந்து ஆய்ந்து, வில்லிபுத்தூராரின் உவமையோடு ஒப்பிட்டுக் காணின், மனிதநல மாண்பு, தெய்வநல மாண்பு ஆகிய இரண்டும் ஒருங்கிணைவதால் விளையும் மேன்மை புலப்படும். காவிய நெறி கொண்டு உணர்வுத்துறையிலும், தத்துவ நெறி கொண்டு அறிவுத்துறையிலும், புலவரும் மெய்யுணர்வாளரும், மனிதநல மாண்பை உயர்த்தி நிறுத்தும் திறமும் புலப்படும்.

அறிவுறுத்தும் ஆசிரியனாகவும் அறிவுபெறும் மாணவனாகவும் அமைந்து அறிவைப் பெருக்கி வாழும் வாழ்வு மனித மாண்பியல் வரலாற்றில் குறிப்பிடத்தக்கது; இன்றியமையாதது. ஆசிரிய-மாணவத் தத்துவம் மன்பதையின் அறிவு வளர்ச்சி வரலாற்றில் மிக மிக இன்றியமையாதது. இத்தத்துவத்தை உட்கொண்டே, வில்லிபுத்தூரார் கண்ணனையும் அருச்சுனனையும், ஆசிரிய மாணவராக (குரு-சிஷ்ய உறவினராக) இணைத்துக் காட்டுகிறார்.

"நாரணற்கு நண்பான நரனார்" - வசந்தகால:10.
"நரனும் நாரணனும் ஆனோம்" - முதற்போர்:7.

என்று வரும் கவிக் கூற்றிலும், கண்ணன் கூற்றிலும், ஆசிரிய மாணவ உறவின் தத்துவத்தை உலகிற்கு உணர்த்துவது, அதற்கு ஆதாரமாக உள்ள தெய்வத்தின் நோக்கம் என்பதை வில்லிபுத்தூரார் புலப்படுத்துகிறார்.[10]

தெய்வமே உண்மை (தத்துவம்) உணர்த்தும் ஆசிரியனாகவும், உண்மை உணரும் மானுடனாகவும் இரு மூர்த்திகளாகத் தோற்றமெடுத்தது என்னும் கருத்து, தெய்வ-மனித ஒருங்கிணைப்புத் தத்துவத்தில் உயிர்போல் அமைந்த உயர்ந்த கருத்தாகும்; தெய்வ மாண்பும், மனிதமாண்பும் ஒன்றை ஒன்று நாடி நின்று, முறையே விளக்கமும் மேம்பாடும் பெறும் உண்மையை எடுத்துரைக்கும் விழுமிய கருத்தாகும்.

---

8. ஔவை: சு. துரைசாமிப்பிள்ளை (பதிப்பாசிரியர்) சிவஞானபோதமும் சிவஞானசுவாமிகள் அருளிய சிற்றுரையும்: சூத்திரம்-8 பக். 226 (1968)
9. ஔவை: சு. துரைசாமிப்பிள்ளை (பதிப்பாசிரியர்) சிவஞானபோதமும் சிவஞானசுவாமிகள் அருளிய சிற்றுரையும்: சூத்திரம்-4 பக். 112 (1968)
10. வில்லிபாரதம்: ஆதிபருவம்: காண்டவதகனச்சருக்கம்: 10. பக். 429. (1963).

ஆசிரிய மாணவ உறவுமுறை போன்றே மூத்த-இளைய சகோதர உறவும் மனிதநல மேம்பாட்டில் இன்றியமையாது வேண்டப்படுவதாகும். நரனும் நாரணனுமாகத் தோற்றம் செய்த தெய்வமே, மூத்த இளைய சகோதரர்களாகத் தோற்றம் செய்தது என்று கண்ணன் வாயிலாகவே வில்லிபுத்தூரார் எடுத்துரைக்கிறார்.

"பின்னொரு பிறப்பின் யாமே இராம லக்குமப் பேர் பெற்றோம்"

- வி.பா.முதற்போர்.6. பக்.387(மர்ரே பதிப்பு)

மூத்தவன் ஆசிரியன் போலும், இளையவன் மாணவன் போலும் ஒழுகும் ஒழுகலாறு இந்திய நாட்டுக் குடும்ப மரபில் காணப்படும் பண்பாடு ஆகும். இந்திய நாட்டுக் காவியங்களிலும் உயிர்போல் போற்றப் பெறும் விழுமிய நாகரிகக் கூறு ஆகும். உலகியலில் மூத்த மைந்தன் தந்தை நிலை வகித்தலையும், இராமாயணம், பாரதம் முதலிய இதிகாசங்களில் மூத்த சகோதரன், ஆசிரிய அமைச்சு நிலையிலிருந்து பிறரை நடத்துதலையும் நன்கு காணலாம்.[11]

ஆசிரிய-மாணவ உறவு முறை (குரு சிஷ்ய பாவனை)

அரச-அமைச்சு உறவுமுறை

மூத்த-இளைய சகோதர உறவுமுறை

ஆகிய மூன்றும், உணர்வு வகையால், ஒன்றோடொன்று, மிக நெருக்கமான தொடர்புடையவை. இம்முறைகளைக் கண்ணன், வீடுமன், துரோணன் முதலிய பாத்திரங்களின் வாயிலாக நன்கு எடுத்துக் காட்டுகிறார் வில்லிபுத்தூரார். இவ்வுறவுமுறைகளால், தெய்வ மனிதநல ஒருங்கிணைப்பை நெருக்கத்திலும் நெருக்கமாக எடுத்துக் காட்டி, மனித நல மாண்பினை நிறுவுகிறார் அவர்.

தன் ஆணை அதிகாரங்கட்கு அடங்கி நடக்க மறுக்கும் குடிமகனை வேந்தன் ஒறுத்துத் தண்டிக்கிறான். அவ்வாறே இறைவனின் ஆணையைப் புறக்கணிக்கும் மனிதன் இறைவனுடைய ஒறுப்புக்கு ஆளாகிறான். குற்றம் புரிந்தவனை வேந்தனின் ஒறுப்பினின்று காத்தற்கும் தெய்வ ஆணை பிழைத்தவனைத் தெய்வத்தின் ஒறுப்பினின்று காத்தற்கும் பேரருளாளர் முன்வரவேண்டும். அத்தகைய பேரருளாளர் உதவி கருதாது, இறைவனே முன்வந்து, மனிதனின் குற்றங்குறைகளைப் பொறுத்து,

அவனுடைய முயற்சிகட்கு ஊக்கந்தந்து, அவனுடைய ஆளுமையையும், பொறப்புணர்ச்சியையும் வளர்த்து நெறிப்படுத்துவதாகக் கொள்வது, சமயத்துறையில் மனிதநல மாண்பு மேன்மை பெறுதற்குச் செய்யும் வழிவகையாகும் என்றும், ஏசுநாதரை, மன்பதையைக் காக்கவந்த பேரருளாளர் என்று கருதுவதைவிட, மக்களைத் திருத்தி நல்வழிகாட்ட வந்த நல்லாசிரியராகக் கொள்வது மனிதநல நோக்காக அமையும்[12] என்றும் ஜான் புருபேசர் என்னும் அறிஞர் கருதுவது இங்குக் குறிப்பிடத்தக்கது. சமயத்துறையை அறசியல் கண்கொண்டு பாராது மனிதநல நோக்கோடு உயிரியற்கண் கொண்டு பார்ப்பது பயனுடையது என்பது அவருடைய கருத்து.

மனிதநலம் மேம்படுவதற்குத் தெய்வ மாண்பின் தொடர்பு வேண்டும் என்பதனையும் மனிதநலத்தை மேம்படுத்தி உதவுதற் பொருட்டுத் தெய்வமாண்பு முந்துற்று நிற்கிறது என்பதனையும், சல்லியன் என்னும் பாத்திரத்தின் வாயிலாக நன்கெடுத்துக் காட்டுகிறார் வில்லிபுத்தூரார்.

பாண்டவர்களைக் கண்ணன் காத்தல் போல் நீ எங்களைக் காக்கவேண்டும் என்று துரியோதனன் சல்லியனிடம் வேண்டுகிறான்.

"மருவலாரைக்
கருத்தமழை முகில் வெருக்கக் கருகு மேனிக்
கண்ணனைப் போல் எங்களை நீ காத்தி"
- வில்லிபாரதம்: பதினேழாம் போர்: 23

என்று வேண்டிச் சல்லியனைக் கண்ணனோடு ஒப்பிடுகிறான் துரியோதனன். சல்லியனோ தான் கண்ணனோடு, எவ்வகையிலும் ஒவ்வான் என்றும், கண்ணன், தேவருகவும், மானுடருகவும் படைப்பில் உள்ள நெகிழ்பொருள் நெகிழாப் பொருள் (சராசரங்கள்)கள் ஆகிய யாவுமாகவும் விளங்குகிறான் என்றும், தான் அவனுக்கு இணையாக முடியாது என்றும் எடுத்துரைக்கிறான்.

---

12. John S.Brubacher: Modern Philosophies of Education; page 194 (1974).

"தேவுமாய் மானுடமாய் மற்றும் முற்றும்
செப்புகின்ற பலகோடி சராசரங்கள்
யாவுமாய் விளையாடும் ஆதி மூர்த்தி
யாதவனுக்கு யாள் எதிரோ?" – வி:பா:17ம்போர்:24.

மனிதநல மாண்பை மேம்படுத்துவதற்கு மானுடமாகத் தெய்வம் வடிவெடுக்கிறது, மானுட முயற்சியில் உதவுகிறது, தன்நிலையில் தாழாமல், மானுட நிலைக்கேற்ப, மானுடமாய் நிற்கவும் முற்படுகிறது என்னும் இக்கருத்தை ஆழ்ந்து நோக்கினால், மனித குல வரலாற்றில் மனிதனுக்குள்ள பங்கைப் போலவே, மனிதனுக்கு அப்பாற்பட்ட பேராற்றலுக்கும் அதில் பெரும்பங்கு உள்ளது என்னும் உண்மை புலனாகும்.

மனிதன், முழுக்க முழுக்கத் தன்னுறுதியோடும், உடல்-உள்ள நலன்களோடும், தானே முன்வந்து, தன்பொருட்டும் தன்னை ஒத்த மாந்தர் பொருட்டும் தன்னைக் கடவுளிடத்து அடைக்கலப்படுத்திக் கொள்கிறான். சினம் முதலிய எதிர்மறைப் பண்புகள் மனித உயிரின்கண் (ஆன்மாவின்கண்) உள்ள அறியாமை இருளோடு தொடர்புள்ளடையன; மனித உயிரின் விருப்பத்தைப் புதைத்து நிற்பன; படைப்பில் உள்ள முழுமை நிலையை ஆதாரமாகக் கொண்டு, என்றும் அழியாத அமைதி (சாந்தியை)யைக் கருதி, மனிதன் இடையறாது போராடி அடச்சம் முதலிய நற்பண்புகளைப் பெறுகிறான். இம்மண்ணுலக வாழ்விலேயே மனிதன் ஆசையையும் சினத்தையும் வெல்ல முடியும். இறைவனிடத்துத் தன்னை ஆட்படுத்திக் கொள்வதென்பது, என்றுமழியாத பாதுகாவலை-எல்லாத் தொல்லைகளினின்றும் விடுபடுவதற்கான பாதுகாவலைத்-தேடிக் கொள்ளும் நெறியாகும். கடவுளன்பு என்பது கடமையினின்றும் நெகிழ்வதாகாது. படைப்பில் உள்ள ஒழுங்கு தெளிவாகப் புலப்படுவது என்பது, கடவுள், மனிதன், உலகநிலை ஆகியவற்றை வகையுறத் தெளிந்து கடவுளின் விருப்பத்தை ஓர்ந்து கொள்வதாகும், என்று சமயச் சான்றோர் மனிதநலப் பண்பாட்டு வளர்ச்சியையும், படைப்பில் உள்ள பேராற்றலின் இயல்பினையும் இயைத்துக் காட்டுவது இங்குக் குறிப்பிடத்தக்கது.[13]

---

13. Shri Vishvesha Teertha Swamiji: Oral Review of 'Krishnamirtam' (a book by Smt. Prema Pandurangan) Indian Express, dated August 20, 1979.

மனிதன் தன் உயிரையும் பொருட்படுத்தாது, பிறர் நலங்கருதிப் பெருந்தியாகம் செய்ய முற்படும்போது அவன் தெய்வ நிலைக்கு உயர்ந்து தெய்வமே போற்றும் பெருநிலை அடைகிறான் என்னும் கருத்தை வில்லிபுத்தூரார் மிகத் திறம்படக் கூறுகிறார்.

பாரதப் போர் துவங்கவிருந்த வேளையில், போர்த்துவக்க மரபுக்கேற்ப, வீரர் ஒருவரைப் பலியிடவேண்டிய கட்டப்பாடு இரு திறத்தார்க்கும் நேரிடுகிறது. தன்னையே பலியிட்டுப் பயன் கொள்ளுமாறு கண்ணன் பாண்டவர்களை வேண்டுகிறான். பாண்டவர் அஞ்சி நடுங்கி அவன் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, "வாழ்வும் பொருளும் வயமும் வேண்டேம் பொன்றுதல் அமையும்" (- வில்லிபாரதம்: படையெழுச்சி: 31 -) என்று கூறி, தமக்கு உயிராயுள்ள கண்ணனை இழத்தலினும் தம் உயிரை இழத்தல் நிறைவு தரும் என்று சொல்லி மறுக்கின்றனர். அந்நிலையில் இராவான் முன்வந்து, "எனைப் பலி இடுமின்" என்று கூறித் தன்னை ஈந்து கொள்கிறான். இராவானின் அஞ்சாமையையும் தியாக உணர்வையும் கண்ட கண்ணன், 'நின்னை அல்லது மண்ணில் என்னை ஒப்பவர் இல்லை; நம்மில் ஒருவரே வேண்டும்' என்று பாராட்டுகிறான் (5:7:5).

இராவானைக் கண்ணன் மதித்த மதிப்பில் மானுடமும் தெய்வ இயல்பும் சமன் செய்து சீர்தூக்கும் துலாக்கோல் தட்டுகள் போல் ஒன்றற்கொன்று சமமாய்ப் பொருந்தி நிற்கின்றன. மானுடத்தைத் தெய்வம் போற்றிய விழுமிய மதிப்பு மிகத் தெளிவாக விளங்குகிறது. பிறர் உயிரைப் பேணத் தன்னுயிரை ஈய முற்படும் தியாகப் பண்பு மானுடத்தைத் தெய்வமாக மாற்றி அமைக்க வல்லது என்ற உண்மை விளங்குகிறது.

உலக மேம்பாட்டின் போக்கில், ஆற்றல் நிரம்பிய மாந்தர் நிலையும், படைப்பில் உள்ள பல்வகைப் பொருள்களின் அமைவும் குறிப்பிடத்தக்க சிறப்புடையவை; மதிக்கத்தக்க இயல்புடையவை. ஒன்றை நோக்கி ஒன்று செயற்படும் வகையில், இரண்டும் ஒன்றுபட்டு அமைந்து நிற்கும் வகையில், மாந்தர் தம் வாழ்வைச் செம்மைப் படுத்த வேண்டும். மாந்தர் வரலாற்றில் புகுந்து நின்று கடவுள் தம் கடமை புரிந்து, தம்மைப் புலப்படுத்துகிறார். உயர்ந்தோங்கி வளர்ந்து செல்லும் படைப்பு ஒழுங்கு

விழுமிய வாழ்வின் செழுமையைப் புலப்படுத்துகிறது. அத்தகைய உயர்நிலைக்குரிய நெறி திடீரென்று தாவிப் பறந்து எட்டும் நெறி அன்று; படிப்படியாக மேலேறிச் செல்லும் முறையான நெறி அது. அதனை மேற்கொள்ளும் வகையில், மனித வாழ்வும், மனிதனின் அருமையும் மனித வரலாறும் ஈச்சியத்துவம் பெறுகின்றன. அத்தகைய நெறி நல்கும் பயனை, மனிதனும் தெய்வமும் இயைந்து நிற்கும் பயனை, ஆன்மிக-மனிதநல மாண்பியல் ( spiritual humanism) என்று கொள்ளுவது தத்துவ அறிஞர் கருத்தாகும் என, அத்துறைப் பேராசிரியர் விளக்குகின்றனர்.[13அ]

இவ்விளக்கத்தினைக் கருத்தில் கொண்டு, "நின்னை அல்லது மண்ணில் என்னை ஒப்பவர் இல்லை; நம்மில் ஒருவரே வேண்டும்" (5:7:5) என்று கண்ணன் தனக்கிணையாக இராவணனைப் போற்றும் சொற்களையும் அச்சொற்களுக்குள் பொதிந்து நிற்கும் இராவணனின் பண்பு நலனையும் நோக்குங்கால் வில்லிபுத்தூராரின் தெய்வ மானுட இணைப்புக் கோட்பாடு மிக நன்கு விளங்குவதாகும்.

பாரதப் போர்க்குரிய அடிப்படையை விளக்குமிடத்தும், மானுட-தெய்வ ஒருங்கிணைப்பை மிகத் தெளிவாகப் புலப்படுத்துகிறார் வில்லிபுத்தூரார். பாண்டவர் தமக்குரிய உரிமையையும் உடைமையையும் திரும்பப் பெறுதற் பொருட்டுப் போர் புரிய முற்படுகின்றனர். ஆயினும் அவர்க்குத் துணையாக நிற்கும் கண்ணனின் நோக்கம் வேறு. படைப்பில் உள்ள தீமையை ( Problem of evil )க் களைந்து அதனை முற்றிலும் ஒழிக்க வேண்டும் என்பதுவே கண்ணனின் நோக்கம். உரிமை உடைமை என்ற அளவில் போராடுவது மானுட நிலை. உரிமை உடைமை எவையும் கருதாது, தீமை கண்டவிடத்து அதனைத் தீர்த்தொழிக்கப் பயன் கருதாது, போராடுவது மானுட நிலைக்கு அப்பாற் பட்ட பேராற்றலின் (கடவுளின்) நிலை.

உலகைப் பற்றிய தீமையை - நோயை - ஒழிப்பது தன் கருத்து என்பதைக் கண்ணன் தருமனிடம் எடுத்துரைக்கிறான்.

> "பாண்டு ஈன்ற தரும தேவதையை நோக்கி, ... அவனிக்கள் அனைத்தும்
> நாமே இம்பர் நோய் அகற்றி எல்லா எண்ணமும் முடித்தும்" (1:2:14)

---

13அ. P.Nagaraja Rao: Contemporary Indian Philosophy; pages 123-27 (1970).

என்பன கண்ணனுடைய சொற்கள். "எல்லா", "எண்ணும்" என்னும் இரு சொற்களில் பாண்டவர்தம் உரிமை உடைமைகளைப் பெற்றுத்தரும் பொறுப்பும் அடங்கியுள்ளது.[14]

தருமன் கண்ணனின் உட்கிடக்கையை உள்ளவாறு உணர்ந்து கொள்ளவில்லை. அறத்தின் பால் கொண்ட ஆழ்ந்த நம்பிக்கையால், போரைத் தவிர்க்க வேண்டுமென்று அவன் கருதுகிறான். போர் இன்றியே தானும் பகைவரும் நலம் பெறவேண்டும் என்று விழைகிறான். தீமை நிகழாமல் தடுத்தற்குப் போர் புரிந்தேயாக வேண்டும் என்பதில் அவனுக்கு நம்பிக்கை வரவேயில்லை. வேறு வழியில்லாமல் இறுதியாகப் போர்க்கு உடன் படுகிறான்; போரின் விளைவுகளையும் நொந்த உள்ளத்தோடு ஏற்றுக் கொள்கிறான்.[15]

போர் வேண்டாத தருமன் தன் உள்ளக் கிடக்கையைக் கண்ணனிடம் தெளிவாக எடுத்துரைக்கிறான்.

"அருஞ்சமரம் புரியும் வகை அவர் உரைத்தார் ஆலும் அறம் ஒன்றின்றிப்
பெருஞ்சமரம் விளைக்குமது கடன் அன்று என்று
அருள் வெள்ளம் பெருகச் கூறும்" - உத்தியோகபருவம்: கிருட்டினன்தூது-4.

கண்ணனும் தருமனின் கருத்தை உள்ளவாறு உணர்ந்து தன் சொற்களில் கொண்டு கூறுகிறான்.

"தருமனுக்கும் கருத்திதுவே தமருடன் போர் புரியாமல்
இருநிலத்தில் உடன் வாழ்தல்" - உத்தியோகபருவம்: கிருட்டினன்தூது: 42.

அறத்தில் நம்பிக்கை வைத்துப்போரைத் தவிர்க்கவேண்டும் என்று தருமன் விழைந்தது போல, மறத்தில் (வீரத்தில்) உறுதி வைத்துப் போரை நிகழ்த்தியாக வேண்டுமென்று வீமன், அருச்சுனன், நகுலன் ஆகிய மூவரும் தம் கருத்தை வெளியிடுகின்றனர்.[16]

14. வில்லிபாரதம் ஆதிபருவம்: பக்.142 (வை.மு.கோ.பதிப்பு) (1963)
வில்லிபாரதம் உத்தியோகபருவம்: பக்.131.வை.மு.கோ.பதிப்பு(1966)
15. R.C.Zaehner: Hinduism; Page 172 (1966).
16. வில்லிபாரதம்: உத்தியோகபருவம்: கிருட்டினன்தூது: 12-29 பக்.88-109. வை.மு.கோ.பதிப்பு (1966).

சகதேவன் ஒருவனே பிற நால்வரும் வேறுபட்டு நிற்கிறான். போர் பற்றிய தன் கருத்தைக் கூறுமாறு சகதேவனைக் கண்ணன் கேட்க, அவன், தன் கருத்து, கண்ணன் கருத்து என்னும் வேறுபாடு இல்லை; கண்ணன் உள்ளம் எதுவோ அதுவே தன் உள்ளமும் என்கிறான். அத்தகைய தெளிவு பிறர்க்கு இல்லை என்பதையும் குறிப்பிடுகிறான். பாரதப்போர் நிகழ்ந்தே தீர வேண்டும் என்பதற்குரிய சடப்பாடாகிய கண்ணனின் மாயையைத் தான் ஒருவனே அறிவதாகக் குறிப்பிடுகிறான்.

"ஒருவருக்குந் தெரியாது இங்கு உன்மாயையானறிவேன் உண்மையாக;
திருவுளத்துக் கருத்தெதுவோ அதுவெனக்கும் கருத்து"
— வில்லிபாரதம்: கிருட்டிணன் தூது: 32.

படைப்பில் உள்ள தீமையை ஒழிப்பதற்கெனப் போர் நிகழ்த்த வேண்டும் என்ற கண்ணனின் தத்துவம் சகதேவனுக்கும் தத்துவமாகின்றது. போரின் நோக்கங்களாகிய அறத்தைப் பேணுதல் மறத்தை ஒழித்தல் ஆகிய இரண்டும் சகதேவனுக்கும் உடன்பாடாகின்றன.

தெய்வம் கொண்டிருந்த பேருண்மையை மனிதன் உள்ளவாறே உணர்ந்து கொண்ட மானுடத்திறன் கண்ணன்-சகதேவன் உணர்வு ஒற்றுமையில் நன்கு புலப்படுகிறது. மனித மாண்பியல் தெய்வ நலஇயல்பை எட்டி நின்ற பெருவளர்ச்சியை இவ்விருவர் உரையாடல் புலப்படுத்துகிறது.[17] 'தெய்வமன்னன்' என்ற கவிக்கூற்றின் வாயிலாக, மானுட-தெய்வ ஒருங்கிணைப்புத் தத்துவத்தைப் புலவர் விளக்கும் திறமும் புலப்படுகின்றது.[18]

மனிதனின் பொருட்டு இவ்வுலகில் கடவுள் செய்யும் செயல்களைப் புரிந்து கொள்ளும் திறன் மனிதனுக்கு உள்ளது. கடவுளருளைப் பெறும் நெறியறிந்து, அதனைத் துணையாகக் கொண்டு கடவுளோடு இணங்கி நின்று உய்யும் திறமும் அவனுக்கு உள்ளது என்பது மேற்கத்திய நாகரிகம் உணர்ந்த தெளிந்ததாகும் என்று டாக்டர் செர்கியஸ் பல்காகோ, மானுட-தெய்வ ஒருங்கிணைப்புத் தத்துவத்தைப் பற்றி விளக்கியுள்ளது, இங்குக் கருதத்தக்கது.[19]

---

17. வில்லிபாரதம்: உத்தியோகபருவம்: கிருட்டிணன்தூது: 30. பக். 111. வை.மு.கோ. பதிப்பு (1966)
18. திருக்குறள்: 702: பரிமேலழகர் உரை: சைவசித்தாந்தக்கழகப்பதிப்பு. பக். 266 (1953)
19. Dr. Sergious Bulgakoff: Times Literary Supplement; page 345 May 14, 1954.

மனித மாண்பு தெய்வ மாண்பினை எட்டி அதற்கு இணையென நின்ற, தெய்வமும் போற்றும் பெருநிலை எய்தினும், மனிதன் தனக்குரிய வரம்பு நிலையினின்று நெகிழ்ந்து செருக்கு முதலிய பண்புகளால் இழிந்து போகாமல் தன்னைப் பேணி மனித மாண்பியலின் பெருமையைக் காத்துக் கொள்ளுகிறான் என்னும் கருத்தை வில்லிப்புத்தூரார் நன்கு எடுத்துக் காட்டுகிறார்.

"பாரதப் போரில் தீயவர் யாவரையும் அழித்துப் பூமியின் சுமையைத் தீர்க்க விரும்புயுள்ளாய். உன்னையன்றி, பாரதப் பெரும் போரை அகற்ற வல்லார் யார்? உன் ஆணையால் நிகழப் போகும் பாரதப் போரில் தொடக்குண்ட, எங்கள் ஐவரையும் உன் அருட்பார்வையால் காக்க வேண்டும்" என்று கண்ணனின் திருவடிகளில் வீழ்ந்து இறைஞ்சி வேண்டுகிறான் சகதேவன்.

> "நீ பாரத அமரில் யாவரையும் நீக்கிப் பு பாரந் தீர்க்கப்
> புரிந்தாய் புயல் வண்ணா... நீயன்றி மாபாரத மகற்ற மற்றார் கொல் வல்லாரே
> "வன்பாரதப் போரில் வந்தடைந்தேமைவரையும் நின் பார்வை யாற்காக்க
> வேண்டும் நெடுமாலே" - வில்லிபாரதம்: கிருட்டினன்தூது: 34, 39.

தருமனின் அறத்திறனையும், வீமன், அருச்சுனன், நகுலன் ஆகியோர்தம் போர்த் திறமையையும் கடந்து சகதேவனின் உள்ளம் கடவுளின் அருளில் (படைப்பில் உள்ள பேராற்றலின் நற்றிறத்தில்) ஈடுபடுகிறது. தன் முனைப்பாலும், தன்னம்பிக்கை யாலும் நிறைவு பெறுதல் மட்டும் போதாது. தன்னையும் உள்ளிட்டு அனைத்தையும் படைத்து நடத்தும் பேராற்றலின் திறத்தில் தோய்தலே மனிதநல மாண்பு தன்னைப் பேணிக் கொள்வதற்குரிய முறையான நெறி என்று சகதேவன் உணர்ந்த உணர்வு இங்குக் கருதத்தக்கது. மானுட-தெய்வ ஒருங்கிணைப்பில் மானுட-தெய்வ வரம்புகளை வகை செய்து காட்டும் வில்லிபுத்தூராரின் திறமும் இங்கு நோக்கத்தக்கது.

இஸ்ரேலிய மக்கள், இறைவனின் வல்லமையைப் பொருட்படுத்தாமல், மனித வல்லமையில் மயங்கிச் செருக்குற்றுத் தவறு செய்தனர் என்றும், தம் வல்லமையில் அவர்கள் கொண்டிருந்த நம்பிக்கையையும் இறைவன் முற்றிலும் ஒழித்தான் என்றும் விவிலிய நூலின் பழைய ஏற்பாடு கூறுவதை டாக்டர் கிரெய்கி

எடுத்துரைக்கிறார்.[20]

"மனிதன் உய்தி பெறுதற்குரிய தகுதி உடையவன் அல்லன்; கடவுளருள் கொண்டே அவனை உய்வித்தல் இயலும்; எத்தகுதி கொண்டும் கடவுளை வற்புறுத்துதல் இயலாது. நம்முடைய பக்தியின் ஆழத்திற்கேற்பவே கடவுளருள் நமக்குக் கிட்டும். யாரும் தோற்றுவித்தற்கியலாத இறைவனை மனித முயற்சி கொண்டு தோற்றுவித்தல் இயலாது. நம்முடைய பக்தியை உணர்ந்து மகிழ்ந்து, கடவுள் தன்னைப் புலப்படுத்துகிறார். தன்னை வணங்கும் மனிதனுடைய நம்பிக்கையின் பொருட்டே, கடவுள் தன் அருளை நல்குகிறார்"[21] என்று டாக்டர் ராதாகிருஷ்ணன் கூறும் கருத்துகள், மாறட வரம்பையும், தெய்வ மேன்மையையும் நன்கெடுத்துக்காட்டுகின்றன.

சமய, ஆன்மிகத்தத்துவ அடிப்படை கொண்டு மனித மாண்பியலை நோக்குவோர் யாவரும், தெய்வ மாண்பால் மனித மாண்பு மேம்படுவதையே விளக்கமாக எடுத்துரைத்தனர். அவ்வகையில், கண்ணன், தெய்வ தத்துவத்தின் வடிவமாக நின்று, பாண்டவர் முதலிய மாறடர்களை நடத்திச் செல்லும் வகைகளை-யும் அவன் துணையால், அவனடுத்து நலம் பெறும் யாவரும் உயர்ந்து மேம்படும் முறைகளையும் வில்லிபுத்தூரார் திறம்பட விளக்கியுள்ளமையை இதுவரை கண்டோம்.

சமய, ஆன்மிகத் தத்துவ அடிப்படை கருதாது, மனிதனை மையமாக வைத்து மனிதநல மாண்புகளை ஆய்ந்து நிறுவ வேண்டும் என ஒருசார் மனித மாண்பியலாளர் (humanists ) வேண்டுவர். அவ்வாறு வேண்டுவோர் பெரும்-பாலும் மேலை நாட்டவரே. மனிதனை மையமாக வைத்து, மனித விருப்பு வெறுப்புகள் முயற்சிகளுக்கேற்பப் படைப்பில் உள்ள எதனையும் அளவிட வேண்டும் என்று அவர் கருதுவர்.[22]

உண்மை என்பது மனித வாழ்வொடு பொருந்திய உண்மையே; மனிதன் பொறுப்பேற்று முயன்று அமைத்தால் அல்லது அஃது அமைவதில்லை; உளவியற்கண் கொண்டு நோக்கின், மனிதனின் செயல் ஒருவகைச் சட்டுப்பாட்டுக்கு உட்பட்டே

---

20. Dr.P.C.Craigie: The Book of Deuteronomy; page 387 (1976)
21. S.Radhakrishnan: Indian Philosophy; Vol.II. Pages 747-48(1966)
திருவாசகம்: சிவபுராணம்: வரி 18, 21.
திருவாசகம்: திருவண்டப்பகுதி: வரி 179-80.
22. Bertrand Russel: History of Western Philosophy; page 179(1954)

நிகழ்வதாகும். மனிதனுடைய விருப்பம், ஆசை, உணர்ச்சி, உள்ள நிறைவு, செயல், நம்பிக்கை, (hope) அச்சம் ஆகிய இவையெல்லாம் மனித அறிவுக்குப் பொருந்தியனவாய் அவனுக்கு முழுதும் எட்டும் வகையில் பருமை நிலையினவாய் அமைதல் வேண்டுமேயல்லாது அவனுக்கு எட்டாத நுண்மை நிலையினவாய் இருத்தல் ஆகாது என்பர்.[23]

எந்தக் குறிக்கோளும் மனித நிலையிலிருந்து கிளர்ந்தெழும் சிந்தனையிலே எய்தக் கூடியதாய் இருத்தல் வேண்டும்; அக்குறிக்கோளை உருவாக்கின் அது மனித வாழ்வுக்கு ஏற்றதா என்பதைக் கருதியே உருவாக்க வேண்டும். மனித வாழ்வு மேம்பட மேம்பட அக்குறிக்கோள் மனிதன் உணர்ந்து கடைப்பிடிக்கத்தக்கதாயிருத்தல் வேண்டும். ஆயினும், மனிதனின் பொருட்டு உருவாகிய தெனினும், மனிதன் மீது ஆணை கொண்டு நடத்திச் செல்லும் வகையில் தனித்தன்மையும் உடையதாயிருத்தல் வேண்டும் என்பர்.[24]

எதிர்காலம் பற்றிய நல்விழைவுகளைப் பொறுத்தே மனிதனின் பகுத்தறிவு அமைகிறது. எதிர்கால நல்விழைவுகளோ, இன்னவை என்று நிறுவுதற்கியலாமல் ஐயத்திற்கிடமாக உள்ளன; எனினும் அவற்றைப் பேணி வாழ வேண்டும் என்ற நம் மனப்பான்மையே அவற்றின் மீது நம்பிக்கை கொள்ளச் செய்கிறது. அவற்றின் மீது பிடிப்பு வைத்து அவை உண்மையா என்று ஆய்ந்து காணவும் முற்படுகிறோம். எனவே, நம்பிக்கை தானே பகுத்தறிவுக்கும் ஆதாரமாக உள்ளது எனவினவத் தோன்றுகிறது[25] என்று மனித நல மாண்பு உருவாகும் படிநிலைகளை எடுத்துரைப்பர். நம்பிக்கை, வாழ்வதற்கு வழி செய்வது போல் அறிவு வளர்ச்சிக்கும் பயன்படுகிறது என்பர்.[26]

மனித உள்ளம் முதலில் வகை தொகையில்லாத குழப்பமான நிலையிலிருந்தே, தன் பயணத்தைத் துவங்குகிறது. தகுதியுடையவை, தகுதியற்றவை, கனவுகளாய், மாயங்களாய், வேடிக்கை விநோதங்களாய் உள்ளவை, அறிவு தருவனவாய், பொருந்தி அமையாதனவாய், நிலையற்றவையாய், உள்ளவை ஆகிய அனைத்தையும்

---

23. F.C.S.Schiller: Studies in Humanism; page 162 (1907)
24. F.C.S.Schiller: Studies in Humanism; page 163-64 (1907)
25. Reuban Abel (Editor): Humanistic Pragmatism; page 263 (1966)
26. F.C.S.Schiller: Studies in Humanism; page 263 (1907).

அது காண்கிறது; அடுத்தாற்போல் உண்மையானவைகளாகக் கருதப்படினும், எல்லாம் ஒன்றோடொன்று பின்னிப்பிணைந்தே கிடக்கின்றன. சீரான வாழ்வைச் செப்பனிட வேண்டின், உரியனவற்றைப் பெருவாரியாகத் தேர்ந்து கொள்ளவேண்டியுள்ளது. அழிவு தருவனவற்றைக் கழித்தெடுத்து அவற்றை ஒழித்தல் வேண்டும். தகுதியும் பயனுமற்றவைகளை விட்டுவிட வேண்டும். குழம்பிக்கிடப்பனவற்றை ஒழுங்கு படுத்திக் கொள்ள வேண்டும். போற்றத்தக்கனவற்றைத் தேர்ந்து பேணிக்கொள்வதன் வாயிலாகவும் பயன்படாதவை என்று நம் அனுபவத்தில் காண்பவற்றைப் பொருட்படுத்தாமல் விலக்குதலின் வாயிலாகவும் இவற்றை நாம் வகைசெய்கிறோம் என்று மக்களியல்பையும், மனித உள்ளத்தையும், இவற்றோடு படைப்பில் உள்ள பொருள்களுக்குரிய தொடர்பையும் விளக்குவர்.[27]

மனிதநல மாண்பு ( Humanism) என்பது, யாவர்க்குமுரிய ஒருமுறை எனினும், அது உயரோட்டமுடையதாயிருத்தல் வேண்டும். மனிதநல மாண்பு நிரம்பும் வகையில், உலகனைத்தையும் திருத்துதற்கு உரிய முயற்சி செய்தற்கேற்ற வாய்ப்பாக அஃது அமைய வேண்டும்; அம்முயற்சிக்குரிய அடிப்படைகளின் போக்கில் ஒருமைப்பாடு காணவேண்டும்; படைப்பில் உள்ள அனைத்திலும் மனித நல உண்மையை உருவாக்குதற்கு, ஒத்தியல்வனவற்றைத் தெரிந்து தெளிதலின் வாயிலாக அதனைச் செய்தல் இயலும் என்று மனிதநல மாண்பு தனக்குரிய இலக்கணத்துடன் வாழ்வில் பொருந்தி அமைய வேண்டிய வழிமுறையை விளக்குவர்.[28]

இக்கருத்துகளை உட்கொண்டு நோக்கின் மனிதநல மாண்பியலுக்குப் ( Humanism ) பல்வகை விளக்கங்கள் தர வேண்டியுள்ளது. அதன் அடிப்படைக் கருத்தே பல்வேறு பொருள்களைத் தரும் வகையில் அமைந்து கிடக்கிறது. இப்பொழுதுள்ள விளக்கங்கள் யாவும், தத்துவ, சமுதாய அரசியல் துறைகள் பற்றி அவரவர் கொண்டுள்ள மனப்பான்மைக்கேற்ப வேறுபடுகின்றன. மனிதநல மாண்பு பற்றிய முறைமையான ஒரு குறிக்கோளை உருவாக்குதற்கென, சமுதாயப் பிரிவுகள், குழுக்கள் பற்றி அவ்வப்போது கூறத் தெரிவிப்பார் தம் நெறிகளை, ஏற்றனம்

---

27. F.C.S.Schiller: Studies in Humanism; page 233 (1907)

28. Reuban Abel (Editor): Pragmatic Humanism; page 138 (1966).

விலக்கலும் செய்யும் வகையில் ஒன்றுக்கொன்று வேறுபடும் இவ்விளக்கங்கள், அந்நெறிகளைத் தழுவிக்கிடக்கின்றன.[29]

மனித மாண்பியலின் பல்வேறு வகைகள் பற்றி மக்கள் உள்ளத்தில், தற்போது பரவலாகக் குழப்பமே நிலவுகிறது. காலப்போக்கில் இது குறையலாம். ஆயின், தத்துவத்துறை, இக்கவர்ச்சி மிக்க சொல்லைப் பயன்படுத்தாது விட்டுவிடும் என்றோ, அல்லது, இன்று வழங்கி வரும் பல்வகைத் தத்துவக் கூறுகளை வரம்புக்குட் படுத்திவிடும் வகையில் அதனை வரையறுத்து விடமுடியும் என்றோ கருதுதற்கில்லை.[30]

பல்வேறு ஆய்வாளர்களின் கருத்துகளை உளத்திற் கொண்டு இதிகாச புராண, காவியங்களில் வரும், மனித நிலைக்கு அப்பாற்பட்ட அதீத நிகழ்ச்சிகளையும், பாத்திரங்களையும் கூர்ந்து நோக்கின், அவற்றுள்ளும் மனிதநல மாண்புகள் பற்றிய விழைவுகள், அவற்றைப் பெற வேண்டும் என்ற எண்ணங்கட்குரிய முயற்சிகள் ( efforts) ஊடாடுவதைக் காணலாம். பாரதத்துள் வரும் கண்ணனை மனிதநல மேம்பாட்டு நோக்கில் காணின், தெய்வமாக மட்டும் கருதாது மனிதனுக - இன்னும் ஒருபடி மேற்சென்று உரிமை கொண்டு - மனிதனாகவே கருதுவதில் பிழையில்லை. விழுமிய கொள்கைகளை விளக்குமுற்படுங்கால், தத்தம் நோக்கிற்கு ஏற்ப உயர்ந்த நூல்களுக்குத் தாம் தாம் கருதும் விளக்கம் நல்குதல் அறிஞர் உலகில் உள்ளது.

> "உலகத்தில் சிறந்த சான்றோர் எழுதிய நூல்களை இவ்வாறு பயன்படுத்தும் முறை புதுமை அன்று. பகவத்கீதைக்கு இவ்வாறு அறிஞர் பலர் பொருள் கண்ட முயற்சியே எடுத்துக்காட்டாகும். நாட்டுப் பற்றோடு நல்லுணர்வையும் ஊட்ட விரும்பிய திலகர் கீதைக்கு விளக்கம் கண்ட போது, இந்திய நாட்டு விடுதலைக்கும் வீர வாழ்வுக்கும் உரிய நூலாகப் பயன்படுமாறு முயன்றார். அற நெறியே உயிராகப் போற்றிய காந்தியடிகள் கீதைக்கு விளக்கம் கண்டபோது பற்றற்ற தொண்டு வாழ்க்கையே அடிப்படையாக விளங்குமாறு எழுதினார். பற்றின்றி வாழும் நெறி என்ற பொருள்படும்

29. M.Pertrosyan: Humanism, its philosophical Ethical and Sociological aspects; page 8 (1972)
30. Encyclopaedia of Social Sciences; Vol.IV. page 543 (1937).

அருசக்தி யோகம் என்னும் தொடரையே தம் விளக்கத்திற்குப் பெயராகவும் அமைத்தார். அருச்சுனன் கண்ணன் எனவரும் பெயர்களை வரலாற்றுப் பெயர்களாகக் கொள்ளாமல் கற்பனையாகக் கொண்டார், அறத்திற்கும் அறமல்லாததற்கும் நடக்கும் வாழ்க்கைப் போரையே அந்த நூலில் விளக்குகிறார். போர்ச் செயல் மலிந்த பின்னணி உடைய அந்த நூலைக் கொண்டே இன்னா செய்யாமை (அஹிம்சை) என்னும் அறத்தைத் தெளிவாக்கினார்".

– மு.வரதராசன்: திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம்: பக்.115-16.

மேற்குறித்த விளக்கத்தை உள்ளத்தில் கொண்டு பாரதத்துள் வரும் கண்ணனை மனிதனாகக் கருதுவதில் பிழை எதும் இல்லை; மனிதநல மாண்பு தருந்த வகையில் புலப்படுமாறு கண்ணன் மனிதனாக எடுத்துக் காட்டப்படுகிறான் என்பதில் பெரும் பிழை எதுவும் இல்லை.

காண்டவதகனச் சருக்கத்தில் கண்ணனை அருச்சுனனோடு ஒப்பவைத்து மனிதனாகவே கூறுகிறார் வில்லிபுத்தூரார்.

"மேவரும் மனிதர் இருவரோடு அநேக விபுதரும் வெருண்டு
போர் விளைத்தார்"[31]

– வில்லிபாரதம்: காண்டவதகனச் சருக்கம்: 45. பக். 122.

அறத்தின் விருப்பத்திற்கேற்ப, சமுதாய வாழ்வைப் பேணும் பொருட்டு, முக்கிய சமுதாயக் கடமையாக, வீரச்செயல்புரிதல் வீரமரபினர்க்கு அமைந்த பண்பாகும். வீர இயல்பு, மனிதனின் வாழ்க்கைத் தத்துவமாய் உருவாகும் வகையில் தலையாய விளக்கம் பெறும் நிலை அமைதல் உண்டு. ஆழ்ந்த இக்கருத்தைக் கண்ணனின் வாயிலாக வியாசர் முயன்று விளக்குகிறார். இருவகை நிலையிற் செயல்புரிகிறான் கண்ணன். ஒன்று சபையில் வரும் பிற முக்கிய பாத்திரங்களைப் போல; ஒன்று வாழ்க்கைச் சிக்கலில் மனிதனுக்கு வழிகாட்டும்

31. வில்லிபாரதம்: காண்டவதகனச் சருக்கம்: 43, பக். 122, 53, பக். 124 மர்ரே பதிப்பு (1959).

அவதார தத்துவமாக. மனித நிலையில், மனித இயல்புகளின் கூறுகளாலோ சமுதாயச் சூழலாலோ மறைக்கப்படாத சிறந்த இராச தந்திரியாகத் தோன்றுகிறான்[32] என்றும், கண்ணன் வரலாற்றில் வாழ்ந்த மனிதனாகத் தோன்றுகிறான்[33] என்றும் ஆய்வாளர்கள் எடுத்துக் காட்டுகின்றனர்.

தத்தம் திறமைக்கு ஏற்பவும், மனவளர்ச்சிக்கேற்பவும் கடவுளுக்கு வடிவம் தரும் வழக்கு, பெருமக்களிடையேயும், பொது மக்களிடேயேயும் உள்ளது. பிளேட்டோ, சர்ஜேம்ஸ் ஜீன்ஸ் ஆகியோர், கணக்கில் தமக்கிருந்த ஈடுபாடு காரணமாகக் கடவுளைக் கணக்கில் வல்லவராகக் காட்டினர்.[34] உணர்வுப் பண்பாட்டிற்கேற்ப, மிகச் சாதாரண உருவ வழிபாட்டாளரும் மிக உயர்ந்த நிலை எய்தி நின்ற அருவ வழிபாட்டாளரும் கடவுட்குப் பல்வேறு வடிவம் தந்தனர்.[35] இந்து சமயத்தில் பல்வேறு கடவுளர்கள் தோற்றுவிக்கப் பட்டுள்ளமைக்குரிய காரணம் அவரவர் மனப்பக்குவமே என்பதை மேனாட்டாரும் எடுத்துக்காட்டியுள்ளனர்.[36]

தத்தம் விழைவுகள், குறிக்கோள்களுக்கேற்பப் பொதுமக்களும் பெரு மக்களும் கடவுளைத் தாம் வேண்டியவாறு கொண்டது போல் கலைஞரும், புலவரும், தத்தம் நோக்குப் பற்றிக் கடவுளை மனிதனாகக் காட்ட முற்பட்டனர் என்பது பொருந்துவதே ஆகும். மனிதநல மாண்பு பற்றிய, சமயச் சார்பற்ற குறிக்கோள்கள், மனிதநல மாண்பொடு பொருந்திய சமயச் சார்புடைய குறிக்கோள்கள் ஆகியவற்றிற்குக் கலைவடிவம் தரும்போது, சமயச் சார்பு

32. Krishna Chaitanya: A New History of Sanskrit Literature; Page 217; (1962)
33. S. Radhakrishnan: Indian Philosophy. Vol.I. Page 480 (1966)
34. Bertrand Russel: History of Western Philosophy. Page 55(1954)
Bertrand Russel: The Scientific Outlook: Page 115 (1962).

35. பரிமேலழகர்: திருக்குறள்: 3. உரை. சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகப் பதிப்பு: பக்.4. (1959).
36. Bernard Shaw: Everbody's Political What is What? Page 227(1950
Edward Washburn Hopkins. Religion of India. Page 297. Quoted by Swami Prabhavananda in his "Spiritual Heritage of India" (1977).

சமயச் சார்பின்மை என்ற வேறுபாடு கருதாது, தாம் விரும்பியவாறு கலைவடிவம் தந்தனர். பழங்காலத்திய மாய வித்தைக்காரர் போலும், பழங்காலத்திய சமயச் சார்புடைய கலைஞர் போலும், தாம் விரும்பிய குறிக்கோளை விளக்குதற்குக் கலையை அடிப்படுத்தினர்.[37] விஷ்ணு புராணத்தில் கண்ணன் கதைத்தலைவனும், போர் வீரனும், அரசியல் அறம் உணர்த்தும் சான்றோனும் விளங்குகிறான் என்று ஆய்வாளர் எடுத்துரைக்கின்றனர்.[38]

இக்கருத்துகளைக் கொண்டு நோக்கின், வில்லிபுத்தூரார், கண்ணனை மனிதனைக்காட்டியதன் நோக்கம் தெளிவாகப் புலப்படுகிறது. மனிதநல மாண்பு, சிறப்புடைதற் பொருட்டு, தெய்வத்தை மனிதனைச்சித்தரிக்கும் உரிமை புலவர்க்கு உண்டு என்ற உண்மை விளங்குகிறது. தாம் செய்யும் வினைகளின் பயனைத் தாம் துய்த்து உய்யும் மாந்தரைப் போல், கடவுள் தம் [illegible] இயைந்து நடக்கும் மாயைக்குத் தாம் இலக்காகின்றார் என்று தத்துவ ஞானிகள்[39] கூறுவதையும், விலங்காயினும் தெய்வமாயினும் தாம் வழிபடு கடவுள் மனித வடிவில் இருந்தாலேயே அடியார்க்கு நிறைவுண்டாகிறது என்னும் சமயச் சான்றோர் கருத்தை ஆய்வாளர் தெரிந்தெடுத்துக் கூறுவதையும்[40] நோக்கினால், தாம் விரும்பியவாறு, ஓர் உயரிய நோக்கினை விளக்குதற்கு – மனிதநல மாண்பு போலும் உயரிய மாண்பினை விளக்குதற்கு – வில்லிபுத்தூரார் போன்ற காவியப் புலவர் கடவுளை மனிதனாகக் கண்டனர் என்பது மிகவும் பொருந்துவதேயாகும்.

கம்பர், தம் காவிய நாயகனாகிய இராமனை, ஆங்காங்குத் தெய்வமாகக் காட்டினும், அவன் பெற்ற பெருவெற்றியை, மானுடனாக நின்று பெற்ற வெற்றி என்று கூறி, மனிதனைக் காட்டுவதில் பெருமிதம் கொள்கிறார்.

---

37. Herbert Reed: The meaning of Art; page 84 (1974)

38. C.C.Dutt: The Culture of India as envisaged by Aurobindo; page 154 (1964).

39. S.Radhakrishnan: Indian Philosophy; Vol.I. Page 540 (1966)

40. Edmund Davison Soper: The Religion of mankind; page 57 (1966).

"இப்பிறப்பில் வந்தார் மானுடராகி மன்றோ
ஆறுகொள் சடிலத்தானும், அயனும் என்ற இவர்கள் ஆதி
வேறு உள குழுவை எல்லாம் மானுடம் வென்ற தன்றே"

– கம்ப:கிட்கிந்தா:நட்புக்கோள்:19.

"மானுடவன் ஆற்றம் ஈதோ?"
"வலியான் ஓர் மானுடவன் உளன் என்றுக் கருதினேனோ?"
"மனித்தரூர் அழிந்தனரே"

– கம்ப:யுத்த:4:மண்டோதரி புலம்புறு:
24,26,28.

மனிதநல மாண்பின் விழுப்பம் புலப்படுதற்பொருட்டு, கடவுள் தத்துவத்தை மானுடமாக்கியது போலவே, இயற்கையை இறந்த நிகழ்ச்சிகள் பலவற்றனுள்ளும் மானுட மாண்பை உள்ளடக்கிக் காட்டுவர் புலவர் என்பதற்கு வில்லிபாரதத்துள் சான்றுகள் உள்ளன.

1. கங்கை வருணன் சாப வரலாறு (1:1:56-73)
2. வசுக்களின் சாப வரலாறு (1:1:62-68)
3. யோஜன கந்தி வரலாறு (1:1:103-06)
4. அம்பை சிகண்டியான வரலாறு (1:1:103-06)
5. கர்ணன் பிறப்பு வரலாறு (1:1:31-38)
6. கிந்தம முனிவன் இன்பந்துய்த்த வரலாறு.
7. பாண்டு சாபம் பெற்ற வரலாறு (1:2:49-52)
8. பாண்டவர் பிறப்பு வரலாறு (1:2:67,68,75,76,82,83,85,86)
9. துரியோதனாதியர் பிறப்பு வரலாறு (1:2:70-74, 78-81)
10. துரியோதனன் அமைத்த கழுவிலிருந்து வீமன் தப்பிய வரலாறு (1:3:10)
11. வீமன் விடமுண்டு நாகலோகஞ் சென்று மீண்ட வரலாறு (1:3:10,12,13)
12. துரோணன் பிறப்பு வரலாறு (1:3:32-33)
13. ஏகலைவன் விற்கலை பயின்ற வரலாறு (1:3:50)
14. அரி (திருமால்) தாளில் பிறந்த வரலாறு, அரன் குங்கிலில் பிறந்த வரலாறு, அகத்திய முனிவன் கும்பத்தில் (குடத்தில்) பிறந்த வரலாறு, முருகன், நாணலில் பிறந்த வரலாறு, கிருபன் நாணலில் பிறந்த வரலாறு (1:3:69).

15. திருட்டத்துய்ம்மன் பிறந்த வரலாறு (1:3:87); திரௌபதி பிறந்த வரலாறு (1:3:90)

16. திரௌபதி பிறப்பின்போது அசரீரி கூறிய வரலாறு (1:3:91)

17. பலராமன் யமுனையைப் பிடித்த வரலாறு (1:5:40)

யமுனையைப் பிடித்தமை போன்றே, அவன் காளிந்தி நதியைப் பிடித்ததையும் அறிஞர் எடுத்துக் கூறுகின்றனர். இவ்வரலாற்றின் கருத்து, கலப்பை கைக்கொண்டு உழவர்க்கும் கடவுளாக விளங்கியமையின் அவ்வாற்றினைத் தான் கருதியவாறு திருப்பி அதன் நீரை விளைபுலத்திற்குப் பயன்படுத்தினன் என்பதாகும் என்று ஆய்வாளர் விளக்குகின்றனர். இவ்வாய்வாளர்தம் விளக்கவுரையை அடியொற்றியே, பிற புராண வரலாறுகட்கும் ஏற்ற விளக்கங்கள் காணப்பட்டன.*

18. திரௌபதி முற்பிறப்பு வரலாறு (1:5:73-87)

19. விச்சுவகன்மா காண்டவப் பிரத்தத்தை, இந்திரப்பிரத்தமாக (புதிய நகரமாக) ஆக்கித் தந்த வரலாறு (1:6:10-37)

20. அருச்சுனன், தீர்த்த யாத்திரையின் போது, ஐந்து தேவமாதரின் சாபந் தீர்த்த வரலாறு (1:7:48)

21. அருச்சுனன் காண்டவதகனம் செய்த வரலாறு (1:8:1-70)

22. அசரீரி, அருச்சுனன்–இந்திரன் போர் தவிர்த்த வரலாறு (1:8:71)

23. மயன் பாண்டவர்க்கு மண்டபம் கட்டித் தந்த வரலாறு (2:1:2-10)

24. சராசந்தன் பிறப்பு, வதை வரலாறு (1:14-36)

25. சிசுபாலன் பிறப்பு, வதை வரலாறு (2:1:114-48)

26. பூமிதேவியின் சுமை மிகுந்த வரலாறு, கண்ணன் அதைத் தீர்த்த வரலாறு (2:2:203-07)

27. திரௌபதி துகிலுரியப்பட்ட வேளையில் நன்னிமித்தங்கள் நிகழ்ந்த வரலாறு (2:2:228, 259)

---

* It seems very possible that Balarama may be older than either tradition. Before he became a hero in epic poetry, he was a deity of the peasant-tiller. His weapons are the plough and the pestle. His rape of Kalindi seems to refer to the training of the wayward river to do some useful work in irrigating the fields. The Vishnudharmottara prescribes worship of this plough-bearer before the start of cultivation.

- Krishna Chaitanya: His commentary entitled, "A Versatile deity" on Iconography of Balarama by N.P.Joshi. Indian Express, dt. Margh 9, 1980.

28. தேவமாதர், மன்மதன் ஆகியோர் அருச்சுனனைச் சோதித்த வரலாறு (3:1:50-68)

29. சிவபிரான் வேடனாகி அருச்சுனனுடன் இகலிப்பொருத வரலாறு (3:1:91-113)

30. அருச்சுனன், ஊர்வசியால் பேடியாகும் சாபம் பெற்ற வரலாறு (3:2:161-64)

31. அருச்சுனன், நிவாதகவசர் ஏவிய மாயையை வென்ற வரலாறு (3:2:82-88)

32. நிவாதகவசரை வெல்லுதற்குரிய நெறியை அசரீரி உரைத்த வரலாறு (3:2:92-93)

33. காலகேயர் விளைத்த மாயையை அருச்சுனன் வென்ற வரலாறு (3:2:127-30)

34. புண்டரீக அரக்கனுடைய உயிரைக் கொல்லும் முறைபற்றி அசரீரி கூறிய வரலாறு (3:3:78-79)

35. வீமன், புட்பயாத்திரையின் பொருட்டு அளகாபுரி சென்று மீண்ட வரலாறு (3:3:3-5)

36. பாண்டவர் துருவாச முனிவரின் பசியைத் தீர்த்த வரலாறு (3:6)

37. அமித்திர முனிவர்க்கென்று அமைந்த நெல்லிக் கனியைப் பறித்த குற்றத்தினின்று அருச்சுனனும் பிறரும் உய்ந்த வரலாறு (3:7)

38. துரியோதனன், செய்த அபிசார ஓமத்தின் விளைவாக, உயிர்ச்சேதம் நேர, அதினின்றும் பாண்டவர் தப்பிய வரலாறு (3:8)

39. கீசகனுடைய பிடியினின்று, திரௌபதி, சூரியனுதவி பெற்றுத் தப்பிய வரலாறு (4:3:32)

40. கர்ணனின் தாயார் என்று பல மகளிர் பொய் சொல்லித் தேவ ஆடை தரித்து இறந்த வரலாறு (5:4:250)

41. குந்தி அவ்வாடை தரித்து உயிருடனாக நின்ற வரலாறு (5:4:251)

42. கண்ணன் சதுர்த்தசியை அமாவாசையாக மாற்றிய வரலாறு (5:7:2)

43. பகதத்தன் அருச்சுனன் மார்பு குறித்து எறிந்த வேல், கண்ணனின் மார்பில் மாலையாக விழுந்த வரலாறு (6:2:63-64)

44. சுதாயுவின் கதையைக் கண்ணன் மார்பில் தாங்கிய வரலாறு (7:4:31-36)

45. துரியோதனனுக்கு, துரோணன் கவசம் நல்கிய வரலாறு (7:4:66,79)

46. துரோணன் நல்கிய கவசத்தைப் பிளக்கக் கண்ணன் அருச்சுனனுக்கு வேல் நல்கிய வரலாறு (7:4:89)

47. கண்ணன் தன் கை ஆழியால் கதிரவனை மறைத்த வரலாறு (7:4:164)

48. பதினெட்டாம் போர் முடிந்த நாள் இரவில், பாண்டவர்களைக் கொல்ல முயன்ற அசுவத்தாமன் முதலியரை, பாடி வீடு காத்த பூதம் அச்சுறுத்தித் துரத்திய வரலாறு (10:1:2)

49. அசுவத்தாமன் சிவபிரானிடம் பெற்ற வரத்தின் வல்லமையால் பூதத்தை வென்ற வரலாறு (10:1:8)

50. பாண்டவராலும் வெல்லமுடியாத, அபாண்டவியம் என்னும் அத்திரத்தின் (அம்பின்) வரலாறு (10:1:43) ஆகிய நிகழ்ச்சிகள் ஆசிரியர் எடுத்துரைக்க விரும்பிய மனித நல மாண்புகளையும் அவற்றின் உள்ளீடுகளாக உள்ள அவர்தம் எண்ணங்களையும் விழைவுகளையும் புலப்படுத்துவனவாக உள்ளன.

வரலாறுகளின் உட்கிடக்கையாக உள்ள மனித நல மாண்புகளும், ஆசிரியரின் எண்ணங்கள் விழைவுகள் ஆகியவையும் வருமாறு:-

1-2 காதல் உணர்வும் காமவேட்கையும், நறுமுக்சமும், வன்மையும் கொண்டு எவரையும் (தெய்வங்களையும்) பற்றி நிற்பன.

3. எளிய குடியில் தோன்றிய பெண், தன் பண்புகளால் தான் புகுந்த உயர்குடியைப் பேணிக்காக்கும் இயல்புடையவள்.

4. காதல் வேட்கை நிறைவுறுதாயின், பழிதீர்க்கும் உணர்வு மிகுந்து காணும்.

5. பிறப்பால் அமைந்த இயற்கை வல்லமை எளிதெனக் கருதப்படல் ஆகாது.

6-7 பிறர் இன்பத்திற்கு இடையூறு செய்யின் அதுபோலவும் இடையூற்றைத் தாமும் உற்றாக வேண்டும் என்பது இயற்கையின் நியதி.

8-9 உடன்பாட்டுப் பண்புகளும் எதிர்மறைப் பண்புகளும் படைப்பில் ஒன்றை ஒன்று எதிரேற்று (தழுவி) நடக்கின்றன.

10-11 நல்லார்க்கு விளையும் இடையூறுகளை நீக்குதற்கு இயற்கை துணைபுரிகிறது.

12,14 செயற்கரிய செய்யும் பெரியார் [illegible].

15.

13. ஆசிரியன் உதவி இல்லை எனினும் அவன் மீது காட்டும் ஈடுபாடு அவன் கற்பிப்பது போலவும் திறமையை நல்கும்.

16. தீமை ஒழிவது உறுதி என்பதை இயற்கை முன்வந்து முன்னறிவிப்புச் செய்கிறது.

17. இயற்கையின் மீது ஆணை செலுத்த வேண்டும் என்பது மனிதனின் தீராத அவாக்களுள் ஒன்று.

18. மக்கட் பிறப்பு சாவு முதலிய வரம்புகட்கு உட்படினும், மக்களன்பு (காதல்) வரம்புகட்கு அப்பாற்பட்டுப் பெருகி நிற்பது.

19. தம்மைத் தாம் ஆக்கிக் கொள்ள முயல்வார்க்கு அவர் விரும்புவன எளிதில் அமைவதற்கு இயற்கையும் துணை புரிகிறது.

20. நன்மை பெருக்கி உலக நலம் காக்கும் நல்லோர்க்குப் பிறர் துன்பந் தீர்க்கும் வல்லமை இயற்கையிலேயே அமைகிறது.

21. தீ, தான் பற்றியதை அழித்தல் போலத் தீமையினையும் தீயின் திறம் கொண்டு அழித்தல் வேண்டும் என்பது மனிதனின் வேட்கை.

22. மகன் தந்தைக்கிடையே நிகழும் போரும் பூசலும் விரும்பத்தக்கன அல்ல என்பதை இயற்கை முன்வந்து எடுத்துக்காட்டுகிறது.

23. உயிர்க்கு ஊறு வருங்காலத்தில் காத்து உதவியவர்க்குத் தம் வல்லமை எல்லாம் காட்டிப் பெரும் பயன் விளைத்துத் தருவர் செய்ந்நன்றி அறிவார்.

4-25 உடல் வல்லமையும் செருக்கும் மிகுந்து, அவை கொண்டு தீமை விளைக்க முற்படுவோர், நல்லோரால் அழிவது உறுதி.

6-27 நற்பண்புடைய மகளிர்க்கு வரும் ஊறுகளைத் தீர்க்க இயற்கையும் பரிந்து உதவுகிறது.

8-29 விழுமிய குறிக்கோளில் தலைப்பட்டவர், புலன்களின் நெகிழ்ச்சிக்கு அடிமையாவ
0. தில்லை. கடும் சோதனையை எதிர் நோக்கி நிற்றல் வேண்டும்.

1-32 விழுமிய குறிக்கோளில் தலைப்பட்டவர் தம்திறமையாலும் இயற்கை
3, 34
5. நல்கும் வாய்ப்புகளாலும் தாம் கருதியதனை முடித்து நிற்பர்.

36. நல்லோர்க்கு வரும் இடர்கள் எளிதில் நீங்கி விடும்.

37. நல்லோர் அறியாமையாற் செய்யும் பிழையினின்று தப்பிப்பிழைப்பர்.

8-39 தீயோரின் தீமைக்கு முரணியும், நல்லோரின் நற்பண்புக்கு அரண்செய்தும் அறம் தன் திறம் புலப்படுத்தும்.

0-41 அவாவும் அன்பும் தத்தம் இயல்புகளை மாந்தர்க்கு உணர்த்திவிடும்.

2, 43
4, 46, நல்லோர்க்குத் தக்கோர் உதவிபெருக, அவர் எடுத்த கடமையில் நலமும்
7. வெற்றியும் பெறுவர்.

45. தீயோர்க்குத் தக்கோர் உதவி அமையினும் அவர் பயன் பெறுவதில்லை;
தீப்பண்புகாரணமாக வீழ்ச்சியே பெறுவர்.

-49 ஆற்றலின் மிகுதிக்கு ஏற்பவே, அருஞ்செயல் புரிதல் இயலும்.

கலை நூல்களிலும் காவியங்களிலும் வரும் இயற்கையை இறந்த நிகழ்ச்சிகள் வெறும் கற்பனைகளோ வேடிக்கைச் செய்திகளோ அல்ல. மனிதன் விழையும் விழைவுகளையும், தன் ஆற்றலுக்குப் பொருந்திய ஆசை அவாக்களையும் உள்ளடக்கி நிற்பன அவை. மேலெழுந்த வாரியாக அவற்றைக் காணாது, கூர்ந்து ஆராயின், மனிதன் விரும்பி அடைய முயலும், எண்ணங்களை உள்ளீடுகளாகக் கொண்டு அவை அமைந்து கிடத்தலைக் காணலாம். ஆதலின், காவிய மாந்தர்களின் பண்பு நலன்களை நன்கு விளக்கிக் காட்டுதற்கும், ஆசிரியர் தாம் வலியுறுத்த விழையும் குறிக்கோள்களை எடுத்துக் காட்டுதற்கும் இயற்கையை இறந்த நிகழ்ச்சிகளை[41] அவர்கள் கையாண்டுள்ளனர் என்பது ஏற்புடையதேயாகும்.

"இயற்கையை இறந்த ஒன்று என்பது, உண்மையில், புலன்களுக்கெட்டும் பருமை உலகத்தில் உறுபயன் விளைத்தற் பொருட்டு, அப்பருமை உலகத்திற்கு அப்பாலாய் நின்று, அவ்வப்போது அதற்கு (பருமை உலகிற்கு) வேண்டியன நல்கும் அறிவு, ஆற்றல், திறன் முதலியவற்றைத் தனக்குடைமையாகக் கொண்டு இலங்கும் படைப்பாற்றலின் வியத்தகு பண்பாகும். இயற்கையின் தற்போதைய நியதிகட்குட்பட்ட மனம், வாழ்திறன் (life force) வாழ்வுச் சடமன் (matter) ஆகியவற்றிற்கு அப்பாற்பட்டு நின்று, அவை உரம் பெறுதற்குரிய வலிமையையும் நெறி முறைகளையும் தனக்கியல்பாகக் கொண்டு நிற்பது; நம்முடைய உள்ளத்தையும் உடலையும் செம்மைப்படுத்துதற்கும், மற்றவர்களுடைய உள்ளம் உடல் வாழ்வு ஆகியவற்றைத் தூண்டி நடத்துதற்கும், முன்வந்து செயற்பட்டுப் படைப்பாற்றலின் திறங்களையும் இயக்கிச் செல்வதாகும் என்று அரவிந்தர் விளக்குவது இங்குக் கருதத்தக்கது.[42]

---

41 [illegible]ளக்கம்: அருள்நெறி 54: 41. பக். 21

42. Sri Aurobindo. The Life Divine. Vol.19. Pages 874-75. (1972).

மனித நாகரிக வரலாற்றில், இயற்கை இறப்பியல் (Supernaturalism) மனிதநல மாண்பியல் (humanism ) இயற்கையியல் ( naturalism ) ஆகிய மூன்றும் மிக முக்கியமான பங்கு வகித்துள்ளன என்றும், சமயத் தலைவர் இயற்கையின் ஆற்றல்கள் மீது ஆணை செலுத்தி, ஆன்மா வீடு பேறெய்துவதே வாழ்வின் விழுமிய நோக்கம் என்று வலியுறுத்தி வந்தமையின் அம்மூன்றனுள்ளும் இயற்கையை இறந்த நிலை பற்றிய கருத்துகளை கற்றோர், கல்லார் அனைவரும் பெரிதும் போற்றி வந்தனர் என்றும், வரலாற்றாசிரியர் எடுத்தியம்புகின்றனர்.[43]

இயற்கையை இறந்த நிலைகளைப் போலவே புராண வரலாறுகளையும், புராண நிகழ்ச்சிகளையும் மனித மாண்பியலை விளக்குதற்குப் புலவர் பயன்படுத்தி யுள்ளார். புராணச்சடங்கு பற்றிய பாடல்கள் நாடகங்கள் ஆகியவற்றுள், மனிதனின் இயல்பு, வேட்கைகள் பற்றிய உண்மைகளும், சமுதாய நிலை பற்றிய உண்மைகளும் அடங்கியுள்ளன. அவை தனி மனித நிலையிலும் உடற்கூற்று வகையிலும் தெளிந்த அனுபவமா கப் புலப்படாமல் இருக்கலாம். எனினும் ஒன்றுக்கொன்று இயைந்து செல்லும் பற்பல அனுபவங்களில் அவை நன்கு புலப்படுகின்றன. உணர்ச்சிகளை விளக்கிக் கூறும் சொற்களிலும் சொற்றொடர்களிலும் அவை தக்கவாறு புலப்படுவன என்று புராண நிகழ்ச்சிகளின் பயன்பாடுகளை[44] ஆய்வாளர் விளக்குகின்றனர்.

வில்லிபுத்தூரார், தம் காவியத்துள் வரும் நிகழ்ச்சிகளை விளக்குதற்கு, புராண நிகழ்ச்சிகளை ஆங்காங்கு உவமைகளாகப் பயன்படுத்திக் காட்டுகிறார்.

1. கொடிகளால் கட்டுண்டு கங்கையில் வீழ்த்தப்பட்ட வீமன் கரையேறியது, நாகபாசத்தால் கட்டுண்ட இலக்குவன், அதனின்றும் தப்பியது போல் உள்ளது.
2. பாம்புகளால் கடியுண்ட வீமன், அவற்றைப் பிசைந்து கொன்றொழித்த நிகழ்ச்சி இராகு, கேது என்னும் கிரகங்களின் வாய்ப்பட்ட கதிரவன், அவற்றைத் தன் கிரணங்களால் வலியொழித்து வெளிப்பட்டது போல் உள்ளது.
3. பகனைக் கொன்றொழித்த வீமன், அவதாரமெடுத்து அரக்கரைக் கொன்றொழித்த திருமாலாய் விளங்குகிறான்.

---

43. James Edgar Swain. A History of World Civilization. Page 445. (1976)
44. Christopher Caudwell. Illusion and Reality. Page 22 (1955)

4. சடாசுரன் திரௌபதியைக் கவர்ந்து வானின் வழியாகச் சென்றது, இராவணன் சீதையைக் கவர்ந்து வானின் வழியாகச் சென்றதை ஒத்துள்ளது.

5. சடாசுரனின் தோள்களையும் தாள்களையும் வீமன் நெரித்து அரைத்தது, இராவணனின் கைகளை சிவபிரான், வெள்ளிமால் வரையை அழுத்தி, நெரித்தது போல் உள்ளது.

6. சடாசுரனின் மார்பினை அழுத்தி அவன் வாயிற் பற்களை வீமன் பிடுங்கியது கம்சன் ஏவிய யானையை மிதித்து அதன் தந்தங்களைக் கண்ணன் பிடுங்கியதை ஒத்துள்ளது.

7. சடாசுரனின் அவயங்களைச் சிதைத்து அவற்றை வீமன் ஒவ்வொன்றாகச் சிதறி வீசியது, இராமன், துந்துபியின் எலும்புக்கூடுகளைக் கால் விரலினால் இடறிச் சிதறி வீசியது போல் உள்ளது.

8. நிவாத கவசர் காலகேயர் முதலிய அரக்கரை வெல்ல வந்த அருச்சுனன், தேவர்களின் துன்பத்தையும், பூதலமடந்தையின் துன்பத்தையும் தீர்த்து, அரக்கரை வெல்ல வந்த திருமாலை ஒத்துள்ளான்.

9. அருச்சுனன் தன் அம்பின் ஆற்றலால் அரக்கரை மடியச் செய்த திறம், இராமன் தன் அம்பின் ஆற்றலால் தனக்கு இடையூறாக நின்ற கடலை வற்றச் செய்த முயற்சியின் திறம் போல் உள்ளது.

10. அருச்சுனன் காண்டவவனத்தை எரித்தது, முப்புரம் எரித்த சிவபிரான் மீண்டும் ஒருமுறை அம்முப்புரத்தை எரிக்க முற்பட்டு எரித்ததை ஒத்தது.

11. அருச்சுனனை எதிர்த்த ஆயிரம்வாகு கண்ணனை எதிர்த்த வாணனை ஒத்துள்ளான்.

12. அருச்சுனன் அறுத்து வீழ்த்திய வாணனின் கைகள் இந்திரன் சிறகரிந்து வீழ்த்திய மலைகள் போல் உள்ளன.

13. ஆயிரம் வாகுவை அருச்சுனன் கொன்றது, கார்த்தவீரியார்ச்சுனனைப் பரசுராமன் கொன்றதை ஒத்துள்ளது.

14. அருச்சுனன் கணையால் பகைவேந்தர் பட்டபாடு, இராமன் இலங்கை சென்ற போது அவனுக்கு அடங்கியொழுகாத கடல் பட்ட பாட்டை ஒத்துள்ளது.

இவ்வாறு, ஒரு புராண நிகழ்ச்சி இன்னொரு புராண நிகழ்ச்சியை விளக்குதற்கு உவமையாய் அமைய, அவற்றின் உட்கிடக்கை எளிதில் புலப்படுமாறு அவை இரண்டு வலுப்பெற்று நிற்கின்றன. ஒன்றுக்கொன்று தொடர்பு படுவதன் வாயிலாக மனிதனின் இயல்பு வேட்கைகளும் சமுதாய உண்மைகளும் திறம் பெற விளங்குகின்றன என்னும் மேற்கூறிய கருத்து இப்புராண ஒப்புமைக் கூறுகளால் தெளிவாகின்றது. மனித மாண்பியல்களை விளக்குதற்குப் புராண நிகழ்ச்சிகளைத் தக்க கருவிகளாகப் பயன்படுகின்றன என்பதும் மனித மாண்பியலும் தெய்வ மாண்பியலும் ஒன்றை ஒன்று விளக்கி, அணியுறுத்தி மேம்பட்டு அமைகின்றன என்பதும் நன்கு புலனாகின்றன.

புராணக் கூறுகள் (கொள்ளத்தக்கன அல்லவென்று) எளிதில் புறக்கணிக்கத் தக்கன அல்ல. சமுதாய ஒற்றுமை கருதி, மனிதனின் உணர்ச்சிகளைப் பயன்படுத்திக் கொள்ளும் வகையில், புராண மரபுகளும், சடங்குகளும் கலைகளும் உதவுகின்றன. மனிதனின் உணர்ச்சிகளும், சமுதாய ஒற்றுமையும், இணைந்து அமைவதில் தெளிவின்மை காணக்கிடப்பினும், சமுதாயத்தின் திட்டமான உணர்வினை அவை புலப்படுத்துகின்றன என்றும்[45] சமுதாயத்தின் பழக்க வழக்கங்கள், நோக்கங்கள், உரிமைகள் ஆகியவற்றையும் அவை பற்றி மனிதன் கடைப்பிடிக்கும் வாழ்வியல் நெறியமைந்த விதிகளையும் உணர்த்தும் முறைகளாக அவை உள்ளன என்றும், புலவர்களும் தத்துவ ஞானிகளும் அவற்றின் வாயிலாக உண்மைகளையும் அறிவுக் கூறுகளையும் விளக்குகின்றனர் என்றும், இன்றும் பேரிலக்கியம் படைக்க வேண்டின், பழங்காலப்புராண மரபுகளோடு, இன்றுள்ள தத்துவ விஞ்ஞானப் புதுமைகளை இணைத்துக் காணவேண்டும் என்றும்[46] ஆய்வாளர்கள் எடுத்துக்காட்டுகின்றனர்.

பெருங்காவியங்கள், நாடகங்கள் ஆகியவற்றின் கதைக்கரு பற்பல சிக்கல்களுக்கு உட்படுங்கால், அவற்றை மனித நிலைக்கு எட்டிய வகையில் விளக்க இயலாவிடின் கடவுளர் முன்வந்து, சிக்கல்களைத் தீர்ப்பதாகவும், அதன் வாயிலாக நீதியையும் தெய்வீக இயல்பையும் புலப்படுத்துவதாகவும் காட்டிக் கலை நூல் இயற்றும் பாங்கு கிரேக்க இலக்கிய மரபில் உள்ளது.[47]

---

45. Christopher Caudwell. Illusion and Reality. Page 26 (1955)
46. M.H.Abrams A. Glossory of literary terms. Page 102 (1978)
47. Stephen L.Haris. The humanist tradition in world literature Page 155 (1970).

உளவியல் கண்கொண்டு நோக்கினால், மனித உள்ளத்தின் தொன்றுதொட்டு வரும் முயற்சியின் தன்மையைப் புராண நிகழ்ச்சிகளால் அறியக்கூடும் எனவும், மனிதன், தொடக்ககாலந்தொட்டுத் தன் அறிவார்ந்த வாழ்வை அமைக்க முயன்ற வரலாறும் அதன் காரணமாக இயற்கை அவன் வேண்டியாங்கு செயற்பட்ட முறைகளும், அவற்றால் விளங்கும் என்றும், இயற்கையின் ஆற்றல்கள் இன்னவை என்று உணர இயலாத பழங்கால மனிதன், தான் தெளிய உணர்ந்த தன்னுறுதி கொண்டு தனக்குத் தெரிந்த வகையில் அவற்றை விளக்கி வந்தான் என்றும்[48], ஆய்வாளர் விளக்குகின்றனர்.

மேல் காட்டிய புராண வரலாறுகளையும், காவியத்துள் வரும் பிற வரலாறுகளையும், இக்கருத்துகளை உளங்கொண்டு ஆராயின் காவியத்துள், அருள்செயல் புரிந்து தம் நிலையையும் தாம் போற்றும் விழுமிய அறங்களின் சிறப்பையும் பெறுதற்பொருட்டுப் போராடும், தருமன், வீமன், அருச்சுனன், ஆகியோர் தம் பண்பு நலன்களும் அவர்களுக்குத் துணையாக நின்று அவரை இயக்கிச் செயற்படுத்தும் கண்ணனின், மானுட-தெய்வ இயல்புகளும் நன்கு விளங்குவனவாகும். அவ்வகையில், வில்லிபுத்தூரார், புராண நிகழ்ச்சிகளைக் காவியத்தின் நோக்கம் திட்பமாய் அமையும் முறையில் பயன்படுத்தியுள்ள திறமும் விளங்கும். புராண மரபுகளைப் பயில்வது, புதிராய் அருமையாய்த் தோன்றினும், தக்க வகையில் கவனம் செலுத்திப் பயின்றால், மன்பதை, தொன்றுதொட்டுப் பேணிவந்த விழைவுகள் நம்பிக்கைகள் ஒவ்வொரு கால கட்டத்திலும் அடைந்த அறநிலை, அறிவுமேம்பாட்டு நிலை ஆகியவை பற்றிய எண்ணற்ற சான்றுகள் அவற்றுள் ஏராளமாகக் கிடைக்கும் என்றும் ஆய்வாளர் தம் கூற்றின் மெய்ம்மையும் நன்கு விளங்கும்.[49]

இனி, காப்பியத்தின் நெடிய வரலாற்றை அணி செய்தற்கும், காப்பிய மாந்தரின் பண்பு நலன்களை நன்கு புலப்படுத்துதற்கும், ஆங்காங்குச் சிறுசிறு கிளைக் கதைகளை வில்லிபுத்தூரார் பயன்படுத்தியுள்ளமை குறிப்பிடத்தக்கது. அக்கதைகளின் வாயிலாக அவற்றில் வரும் மாந்தரின் பண்பு நலன்களைப்

---

48. G.N.Banerjee. Hellenism in Ancient India. Pages 270-71(1961)
49. Encyclopaedia of Religion and Ethics. Vol.9 (1917)
(Ed) James Hastings.

புலப்படுத்துவதோடு அவற்றைத் தாங்கிய அக்கதைகளைக் கொண்டு காப்பிய மாந்தர்தம் மனித மாண்புகளை நன்கெடுத்துக் காட்டுவதில் வில்லிபுத்தூரார் பெரு வெற்றி பெற்றுள்ளார்.

ஏறத்தாழ, எண்பத்தாறாயிரம் சுலோகங்கள் உள்ள வியாச பாரதத்துள் ஏராளமான கிளைக்கதைகள் உள்ளன.[50] அக்கதைகள் யாவும் மூலக்கதையை அணி செய்வன; மூலக்கதையின் உட்கிடக்கையை வலியுறுத்துவதற்கு உதவுவன.

வியாசரைப் போற்றி அவர் நூலுக்கு, வில்லிபுத்தூரார் வழிநூல் செய்தாரேனும், மிகச் சுருங்கிய நூலாகத்தம் நூலை அவர் யாக்க நேர்ந்தமையின், அத்துணைக் கிளைக்கதைகளையும் அவர் எடுத்துக்கொள்ளவில்லை. பற்பல கதைகளை ஒதுக்கிவிட்டார்.[51] எனினும் மூலக்கதையுள் வரும் பாத்திரங்களின் பண்பு நலனை விளக்குதற்குத் துணைக் கதை இன்றியமையாதது என்னும் வியாசரின் நோக்கத்தினின்று அவர் நெகிழ்ந்து விடவில்லை.



பாண்டவர் ஐவரும் ஒருத்தியை மணந்து கொள்ள நேர்ந்தமையின், அவளொருத்தி காரணமாகத் தமக்குள் மனவேற்றுமை வரலாகாது என்று வலியுறுத்த வேண்டிச் சுந்தோப சுந்தர் வரலாற்றை நாரதர்[52] எடுத்துரைக்கிறார். அக்கதையின் உட்கிடக்கையை நன்குணர்ந்த வில்லிபுத்தூரார் அதை மிகச் சுருங்கிய வடிவில்தம் காவியத்துள் தவறாது எடுத்துரைக்கிறார். சூதினில் வாழ்வும், வளமும் இழந்த பாண்டவர், காடு செல்ல வேண்டிய நிலை வந்தபோது, காடு செல்லும் முறை முன்னும் நிகழ்ந்தது என்று கூறி, துரோணர், இராமன் காடு சென்றதை எடுத்துரைத்துப் பாண்டவர், இராமன் போல் மீண்டும் திரும்ப நாடு வருதல் உறுதி என்பதைப் புலப்படுத்துகிறார். தமக்குக் கல்வி பயிற்றிய ஆசிரியரே தமக்கு உறுதி கூறும் தகுதி உடையவர் என்று பாண்டவர் நம்பி மனந்தெளிந்தார் என்பதை உணர்த்துவதற்காக அக்கதையை மிகச் சுருக்கமாக ஒரே வரியில்[53] அமைத்துப் பயன்படுத்திக் கொண்டார் வில்லிபுத்தூரார்.

---

50. அ.லெ.நடராஜன்: வியாசர் அருளிய மகாபாரதம் நான்காம் பகுதி: முன்னுரை பக்.3. முதல்பாகம்: முன்னுரை.பக்.7. இரண்டாம்பாகம்: முன்னுரை பக்.4. மூன்றும் பகுதி. முன்னுரை.பக்.4.(1977)
51. தா.வே.வீராசாமி: தமிழ் இலக்கியக் கொள்கை-3. வில்லிபாரதம் பக்.101,96
52. வில்லிபாரதம்: இந்திரப் பிரத்தச் சருக்கம் 42-45. பக்.97 (1978) மர்ரே பதிப்பு (1959)
53. வில்லிபாரதம்: சூதுபோர்ச் சருக்கம்: 274. பக்.185. மர்ரேபதிப்பு (1959).

சூதினால் நாடிழந்து துன்புறுதல் பாண்டவர் வாழ்வில் மட்டும் நிகழ்ந்த முதல் நிகழ்ச்சி அன்று; அது முன்னும் நிகழ்ந்தது; நளன் என்னும் மன்னன் சூதினால் நாடிழந்து, காடு சென்று மனைவியைப் பிரிந்து துன்புற்றான். பல இடர்களையும் தாங்கி இறுதியில் சூதினாலேயே இழந்த நாட்டையும் வாழ்வையும், பிரிந்த மனைவியையும் பெற்று இன்புற்றான். இக்கதையைப் பாண்டவர்க்கு, பிருகதஸ்வர்[54] என்னும் முனிவர் கூறியதாக வியாசர் குறிப்பிடுகிறார். ஆயின் அக்கதையை, வியாசரே—பாண்டவர்க்கு, இடையூறு வரும்பொழுதெல்லாம் வந்து உதவும் கண்ணனைப்போல வந்து உதவும் வியாசரே— அவர்க்கு எடுத்துக் கூறுவதாக வில்லிபுத்தூரார், கூறி, (பாண்டவர்க்கு மனஉறுதி பெறுதலின் இன்றியமையாமையை வலியுறுத்துதற்காக) அதைத்திறம்படக் கையாளுகிறார்.[55]

இம்மூன்று கதைகளைத் தவிர, மூலக்கதைகளாக வில்லி வேறு கதைகளைக் கையாளவில்லை. பாரதத்தின் முக்கிய பாத்திரங்களோடு, ஒப்பிட்டும், உறழ்ந்தும், பற்பல புராண வரலாறுகள் பற்றிய கதைக் கூறுகளை வில்லிபுத்தூரார் பயன்படுத்தியுள்ளார் என்பது உண்மையே. அவையும் காவியமாந்தர்தம் பண்பு நலன்களையும், மனித மாண்பியல்களையும் விளக்குதற்கு எவ்வாறு பயன்படுத்தப்பட்டுள்ள என்பது முன்னர் எடுத்துக்காட்டப்பட்டது. தொகுத்துக் கூறல் என்னும் உத்தி கொண்டு சுருங்கச் சொல்லல் என்னும் அழகு அமைய, நெடுங்கதையின் திறமும் அது தாங்கிச் செல்லும் பாத்திரங்களின் மனித மாண்பியல்களும் மறைக்கப்படாமலும், சுமையாக்கப் படாமலும் காக்க வேண்டி, வில்லிபுத்தூரார், கிளைக்கதைகளையும், புராண மரபு நிகழ்ச்சிகளையும் கையாண்டுள்ளார் என்று கூறுவதே முறையாகும்.[56]

கிரேக்க, லத்தீன் மொழிகளில் அமைந்த மிகப் பழைய இலக்கியங்களின் பல திறச்சுவை மிக்க இலக்கியக் கூறுகளிலும் அவற்றின் விழுமிய வடிவங்களிலும்

54. ஸ்ரீ மகாபாரதம்: வனபர்வம்: முதற்பாகம்: பக்.189. இராமாநுஜாசாரியார் பதிப்பு (1930)

55. வில்லிபாரதம்: அருச்சுனன் தவநிலைச்சருக்கம்: 24, பக்.190 மர்ரேபதிப்பு (1959)
வில்லிபாரதம்: அருச்சுனன் தவநிலைச் சருக்கம்: 25, பக்.190 மர்ரேபதிப்பு (1959)
சிலப்பதிகாரம்: மதுரைக்காண்டம்: ஊர்காண்காதை வரி 46-47.

56. தா.வே. வீராசாமி. தமிழ் இலக்கியக்கொள்கை வில்லிபாரதம்: பக்.101. (1978).

பெரிதும் ஈடுபட்டுப் பயின்ற மெளட்டார், அவற்றிலிருந்து மேற்கோள் காட்டுவதைப் பெருவழக்கமாகக் கொண்டிருந்தனர். இலக்கிய அழகு, வகை, கருத்து, வாழ்க்கையின் நோக்கம் ஆகியவை கருதிப் பழங்கால இலக்கியங்களை நுகர்ந்த சுவைத்தோர் தாம் விரும்பிய இனிய கதைகளை, உலகியல் செய்திகள், வேடிக்கை விநோதப் பேச்சுகள், நகைச் சுவைக்கூறுகள், ஆகியவற்றை விளக்குதற்குத் தக்கவாறு பயன்படுத்திப் போற்றி வந்தனர்.[57] இக் கண்ணோட்டத்துடன் ஆராய்ந்தாலும், வில்லிபுத்தூரார், இலக்கியச் சுவை முதலிய கலை உணர்வுகட்கு அப்பாற்பட்டுக் காவிய மாந்தர்தம் மனித நல மாண்புகளைப் புலப்படுத்துதல் என்னும் விழுமிய நோக்கத்திற்காகத் திறம்பட்ட கதைகளைத் தேர்ந்தெடுத்துள்ளமை தெளிவாகப் புலப்படும். காமநெறியால், சகோதரர் ஒற்றுமை குறையலாகாது, சூழ்ச்சியால் தமது உடைமையைப் பிறர் பறிப்பினும் அதனைத் திரும்பப்பெறல் உறுதி, இழந்த உடைமையைப் பெறுவதில், காட்டேகுதல் முதலிய துன்பங்கள் நிகழினும் அவற்றைத் தாங்கும் மனவன்மை இன்றியமையாதது ஆகிய தத்துவங்கள் பாரதத்தில் மிக முக்கியமான உயிர்த் தத்துவங்கள். அத்தத்துவங்களை உணர்த்துதற்கென வில்லி தேர்ந்தெடுத்த கதைகள் அவர்தம் மனிதநல மாண்புஉணர்வுத் திட்பத்தினை நன்கு புலப்படுத்துவனவாகும்.

நள தமயந்திக்கதைபோலும் சிறந்த கதைகளை வியாசர் தம் இளமையில் இயற்றியிருக்கக்கூடும் என்றும் பின்னால் பெருங்காவியம் இயற்றியபோது அவற்றை அக்காவியத்தில் இடைமடுத்திருக்கக்கூடும் என்றும் அரவிந்தர் கருதுவதாக ஆய்வாளர் எடுத்துக்காட்டுகின்றனர்.[58] நளதமயந்தி, சத்தியவான் சாவித்திரி போலும் கதைகள், இடர் மிக்க வேளையிலும் அன்புடைமை, ஒருவரை ஒருவர் வஞ்சியாது வாழ்தல், என்னும் விழுமிய கொள்கைகளைப் புலப்படுத்துவதால் அவை பாரதத்தில் சிறப்பிடம் பெற்று வாழ்கின்றன என்று விளக்கி, பாரதத்தில் கிளைக் கதைகளின் இன்றியமையாமையை ஆய்வாளர் எடுத்துக்காட்டுகின்றனர்.[59] அவ்வகையில் பாரதம் முழுவதையும், ஒருவகையில், ஒரு கதைக் களஞ்சியமாகவும் இன்னொரு வகையில் ஒருமித்த முழு நூலாகவும் கருதுவதன் முக்கியத்துவத்தையும் அறிஞர் எடுத்துக்

57. Encyclopaedia of Social Sciences. Vol.IV. Pages 537-38 (1937)
58. Krishna Chaitanya: A new History of Sanskrit Literature. Page 202 (1962)
59. Prof. V.Sitaramiah: Five worthy couples in the Mahabharatha. TRIVENI Vol.46. No.4. Jan: March:1978. Page 172.

காட்டுகின்றனர்.[60] கிறிஸ்துவர்களின் பைபிளைப் போல இவ்விருவகை நோக்கிற்கும் இடந்தந்து, இந்திய மக்களின் சமய, பண்பாட்டு உணர்வுகளைப் புலப்படுத்தி நிற்கிறது என்று விளக்குகின்றனர்.[61]

மகாபாரதத்தை ஆங்கிலத்தில் சுருங்கிய வடிவில் மொழி பெயர்த்த ராஜாஜி தமது கதை கூறுந்திறத்தால், இளைஞர் உலகத்தைக் கவர்ந்தார் என்றும் தமக்கே உரிய நெறியால், கோடிக்கணக்கான கல்வி அறிவற்ற மக்களையும், இளைஞர்களையும் பழங்கால இலக்கியங்களில் ஈடுபட வைத்து அவ்விலக்கிய மாந்தர் அவர்களுடைய உள்ளங்களில் இடங்கொண்டு மதிப்புப் பெறுமாறு செய்தார் என்றும் ஆய்வாளர் எடுத்துக்காட்டுகின்றனர்.[62] ராஜாஜியே, தம்முடைய மகாபாரத மொழி பெயர்ப்பு நூலின் முன்னுரையில், தாம் சிசுபாலன் வரலாற்றை முதன் முதல் ஒரு பத்திரிகையில் கதையாய் வரைந்ததாகவும் அவர்தம் கதை கூறுந்திறனைப் பாராட்டிய ஆசிரியர் தொடர்ந்து மகாபாரதத்தைச் சிறுசிறு கதைகள் வடிவில் தர வேண்டியமையின் தாம் அந்நூலை யாக்கப் புகுந்ததாகவும் குறித்துள்ளனர்.[63]

இத்தகைய கருத்துகளைக் கூர்ந்து நோக்கின், வில்லிபுத்தூரார், தம் சுருங்கிய காவியத்துள், சிறந்த கதைகளை, இன்றியமையாத தத்துவங்களை விளக்குமிடத்து அரியவையாய் அமைத்துள்ள திறமும், இயற்கையை இறந்த, புராண (Supernatural and Mythological) மரபுகளை உவமை உருவகங்களாகச் செறித்து அடக்கிப் பயன்படுத்திய திறமும், அவற்றால், காவிய மாந்தர்தம் மனித மாண்பியல்களை வெற்றியுற எடுத்துக்காட்டும் திறமும் நன்கு விளங்கும்.

வில்லிபுத்தூரார், தாம் விரும்பியவாறு காவியத்தை மிகச் சுருக்கினபோதும், தாம் வேண்டிய விகற்பத்தை, தமிழரின் நாகரிக-இலக்கிய-மரபுகளின் ஆங்காங்கு

---

60. Edward C.Dimock: The Literatures of India: An Introduction. Page 42 (1978)

61. Edward C.Dimock: The Literatures of India. An Introduction. Page 35 (1978)

62. S.Narayanasamy: Rajaji: The Humanist with a difference. Page 27: TRIVENI.Vol.147.No.4. dated Jan.March.1979.

63. C.Rajagopalachari:Mahabharata:Preface to First Edition. Page viii (1979).

அணியுறப்பெய்து தம் காவியத்தைக் கவினுற அமைத்துள்ள பாங்கும் இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.

முதல் நூலோடு வில்லிபுத்தூரார் வேறுபடும் இடங்கள் பல.[64] அவ்விடங்களிலெல்லாம் அவர் தாம் வேண்டிய சுவை மிக்க கூறுகளைப்பெய்து காவியத்தை அணி செய்கிறார்.

தொன்றுதொட்டு வரும் தமிழ் இலக்கிய மரபின் சீர்மையைத் தம் காவியத்துள் அமைத்துக் காட்ட வேண்டும் என்னும் ஆவாக்கொண்டு திகழ்கிறார் வில்லிபுத்தூரார். முதலில் நூலின் துவக்கத்திலேயே (தற்சிறப்புப்பாயிரத்துள்) 'வண்டமிழ் ஒங்குக, தேங்குக சுருதி' - (தற்சிறப்பு-4) என்று பாடித் தமிழ் நாகரிகமும் வடமொழி நாகரிகமும் ஒருங்கிணைய வேண்டும் என்று விழைகிறார். தொடர்ந்து, நூலின் பலவிடங்களிலும், தமிழின் சிறப்பினை ஓங்காரப் போற்றுகிறார். "இவன் தண்டமிழ் தேர் கூடல் வழுதி"[65] (1:5:45) என்று பாண்டியர் தமிழ்காக்கும் திறத்தைப் பாடுகிறார். "இளவண்டமிழ் எழுது ஏடு" (1:7:20) என்று திருஞானசம்பந்தர் தேவாரத்தைப் போற்றுகிறார். "நன்றறிவார் வீற்றிருக்கும் நான்மாடக் கூடல் வளநகர்"[66] (1:7:21) என்று மதுரையில் தமிழ் வளர்க்கும் புலவர் பெருமக்களைப் போற்றுகிறார். "தமிழ்கள் மூன்றும் கொண்டாடி இளம் பூவைக் குழாம் தலை சாய்த்து உளம் உருகும்" (1:7:28) என்று, முத்தமிழ் அஃறிணை உயிர்க்கு நலன் செய்வதை எடுத்தியம்புகிறார்.[67] "தங்கள் தமிழ்க்குழல் இசை" (1:7:32) என்று இசைத்தமிழைப் போற்றுகிறார். "செந்தமிழ் வரை" (2:1:53) என்று பொதிய மலையைத் தமிழ் வழங்கும் மலை

64. வில்லிபாரதம்: குருகுலச் சருக்கம்: 25. பா. 4; 124-6, பக். 20.
வில்லிபாரதம்: திரௌபதி மாலையிட்ட சருக்கம்: 34 பக். 77.
வில்லிபாரதம்: அருச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கம்: 82 பக். 110.
மர்ரே பதிப்பு (1959).
வில்லிபாரதம்: ஆதிபருவம். பக். 18, 74, 279, 416, 335, வை.மு.கோ. பதிப்பு (1963), மர்ரே பதிப்பு பக். 90-91 (1959).
65. வில்லிபாரதம்: ஆதிபருவம்: பக். 289 வை.மு.கோ. பதிப்பு (1963).
66. கலித்தொகை: பாலைக்கலி: 35 வரி 17-18 திருக்குறள்: 1072.
67. பெரும்பாணாற்றுப்படை வரி: 300, அகநானூறு: 34, வரி 14-18.

எனப்பாராட்டுகின்றார். "தென்னவன் உறை செந்தமிழ்க்கன்னி நாடு" (2:1:59) என்று பாண்டியர்க்கும் தமிழுக்கும் உள்ள தொன்மை மரபினைப் போற்றுகிறார். "மும்மை வண்டமிழும் பழுதறம்படி தெளிஞர்" (8:1:41) என்று சங்கப் புலவர் முத்தமிழையும் பேணிய முறைமையினை எடுத்தியம்புகிறார். "மூவகைத் தமிழும் போலச் சிந்தையில் குளிக்குமாறு" (8:2:110) என்று உவமை கூறுமுகத்தால், தமிழ் உள்ளத்தின் மாண்பினைப் புலப்படுத்துகிறார்.

இவ்வாறே தமிழ் நாட்டு ஊர்களான காஞ்சி, அண்ணாமலை, கோவலூர், வெண்ணெய்நல்லூர், சிதம்பரம், திருவரங்கம், மதுரை ஆகியவற்றின் சிறப்பையும் காவிரி,[68] வையை, பொருநை, பெண்ணை என்னும் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த யாறுகளையும், மிகப் புகழ்வாய்ந்த கன்னித்துறையினையும் பாராட்டிக் கூறித் தமிழகத்தின் மீது தாம் கொண்டுள்ள பற்றினைப் புலப்படுத்துகிறார்.

இவை யாவற்றிற்கும் மேலாக, தம் தனி வாழ்வில் தாம் நன்றிக்கடன் பட்டுள்ள வரபதி ஆட்கொண்டான் என்னும் வள்ளலைத் தாம் காவியத்துள் புகுத்திக் காட்டுவது குறிப்பிடத்தக்கது.[68அ] பாரத நிகழ்ச்சிக்குரிய காலம் வேறு; அதனை வியாசர் பாடிய காலமும் வேறு; இவ்விரண்டிற்கும் மிகமிகப் பின்னர் நிகழ்ந்தது வில்லியின் காலம். அக்காலத்து வாழ்ந்த வள்ளலைத்-தம் தனி வாழ்வில் தாம் கடப்பாடு கொண்டிருந்த வள்ளலை-த்தாம் பாடிய காவிய நிகழ்ச்சியோடு பொருந்த வைத்தல் வரலாற்றைத் திரித்துக் கூறியதாக ஆகும்.

வரலாற்று நிகழ்ச்சிகளைத் திரித்தலும், கூட்டலும், குறைத்தலும், நிகழாதவற்றை நிகழ்ந்தன வாக்கலும், வேறொரு மரபுக்குரியவற்றைப் புகுத்தலும் ஆகிய செய்கைகள் புலவர் உலகில் காணப்பெறுகின்றன.

புலவர் மேற்கொள்ளும் மிகை நெறிக்குரிய காரணம் கண்டு தெளிதல் இன்றியமையாதது.

---

68. வில்லிபாரதம்: ஆதிபருவம்: பக். 364-375; வை.மு.கோ.பதிப்பு (1963)

68அ. வில்லிபாரதம்: ஆதிபருவம்: பக்.471. விராட பருவம்: பக்.177. கன்னபருவம்: பக்.49,50,70. வை.மு.கோ.பதிப்பு (1963).
S.Radhakrishnan: Indian Philosophy. Vol.I. Page 481 (1966).

அரசியல் துறையிலும், சமுதாயத் துறையிலும் தாம் வேண்டும் மாற்றத்தை நிகழ்த்தும் வல்லமையும் உரிமையும் அத்துறையினர்க்கு அமைதல் போல், கலைத் துறையில் மனிதநல மாண்பினை எடுத்துரைத்தற் பொருட்டுத் தாம் வேண்டும் மாற்றத்தை நிகழ்த்தும் வல்லமையும் உரிமையும் புலவர்க்கு அமைதல் பொருந்தியதே என ஆய்வாளர் குறிப்பிடுகின்றனர்.[69]

இழிந்த பொழுது போக்கு, சோம்பேறித்தனமாகக் காலத்தை வீணாக்கல் ஆகியவற்றைக் கண்டிக்கும் அறவோர் கருத்துக்களை இலக்கியத்திற் புகுத்தி மனித மாண்பியலார் தொண்டு செய்கின்றனர்.[70] சாட்டுமிராண்டித்தனத்தின் கடும் பிடியின்று, மரபினைப் பேணி மக்கள் சுவைநலத்தையும் அவர்தம் நாகரிக இயல்பையும் வளர்த்தற்பொருட்டு அவர் தொண்டு செய்து வெற்றியும் பெறுகின்றனர்.[71] பழமையில் ஊறித்திளைத்து, அதனூற் பெறும் அறிவு கொண்டு புதுமை படைத்தற்கு முனைகின்றனர்.[72] உயர்ந்த கவிதை பற்றியும் விழுமிய புலவர் பற்றியும் ஆய்ந்து அதன் விளைவாகப் பண்டைப் புலவர்தம் நல்லுணர்வுகளைப் பெற்றுப் போற்றுகின்றனர்.[73] இத்தகைய முயற்சியின் மூலம் பழங்கால நூல்களை மூலங்களிலேயே பயின்று தெளியும் வாய்ப்பும் பெருகுகிறது.[74] அதனால் மூல நூலாரைப் பின்பற்றும் திறமும் பெருகுகின்றது.[75] பழைய மரபின் செல்வாக்கிற்கும் திட்பத்திற்குமிடையே புதிய ஒன்று தக்க வேளையில் அமைதற்கும் அவர் பாடுபட்டு வெற்றி எய்துகின்றனர்.[76]

அறிவு நலம் பெருகிய பிறநாட்டு மொழிகளை நோக்கித் தம் நாட்டு வசதிகளைக் கொண்டே தம் தாய் மொழியை அவை போலும் சிறப்புப் பெறச் செய்தற்கு ஆவன செய்கின்றனர்.[77]

69. Bertrand Russel: History of Western Philosophy. Page 530 (1954)
70. Boris Ford (Editor) The Age of Shakespeare. Vol.2. Page 62(1961)
71. Boris Ford (Editor) The Age of Shakespeare. Vol.2.Page 62(1961)
72. Bertrand Russel: History of Western Philosophy. Page 521 (1954)
73. Boris Ford (Editor) The Age of Shakespeare.Vol.2.Page 72 (1961)
74. Bertrand Russel: Hisotory of Western Philosophy. Page 509(1954)
75. Bertrand Russel: History of Western Philosophy. Page 460 (1954)
76. Boris Ford (Editor) The Age of Shakespeare.Vol.2.Pages 61,37. (1961)
77. Boris Ford (Editor) The Age of Shakespeare. Vol.2. Page 63 (1961

நாடகம் போன்ற துறைகளில் பொதுமக்களின் சுவைத் திறன் தெரிந்து நாடகங்கட்கு ஏற்ற வடிவம் தருகின்றனர்.[78] எளிய ஏடுகளிற் கிடந்து மக்களிடையே கதை பொதி பாட்டாகப் புழங்கும் இலக்கியக் கூறுகளைக் கண்டறிந்து இயற்கை, மனிதத் தொடர்பு, நன்மை தீமைப் போராட்டம், முதலியவற்றை வருணனைகள் அணி நலம் ஆகியவைகள் தோன்ற எடுத்துக் காட்டித் தனிமனித அல்லல் எத்துணைக் கொடியது என்பதைத் தெளியச் செய்து, உயர்ந்த துன்பியல் நாடகம் படைத்துத் தருகின்றனர்.[79] அறிஞர்க்கேயன்றிப் பொது மக்கட்கும் கலை நலம் வேண்டும் என்னும் நோக்கத்தோடு, கவிதைத்துறையிலும் நாடகத்துறையிலும் பழையன கழித்துப் புதியன புகுத்தித் தொண்டு செய்கின்றனர்.[80] கலைத்துறை, யாரும் பயன்படுத்தும் பொதுத் துறை ஆதலின், பழமைக்கும் புதுமைக்கும் முரண் நிகழாமல் காத்து யாவரையும் நிறைவு சமயச் சார்புடைய கருத்துக்கட்கும், சமயச் சார்பிலாக் கருத்துக்கட்கும் முரண் நிகழாமல் காத்து யாவரையும் நிறைவு செய்து வெற்றி பெறுகின்றனர்.[81] இத்தகைய திறமையால், நற்பண்புடைய காவிய மாந்தர் எவ்வாறு பழி உணர்ச்சி மிக்கவராய்த் திரும்புகின்றனர் என்பதையும் அவர் காட்டவல்லவராகின்றனர்.[82]

இத்தகு செயல்கள் பற்றித் தாம் நிகழ்த்தும் போராட்டங்கள் மக்களியக்கங்களைப் போல அத்துணைப் பரவலற்றனவாக இருப்பினும், தம்மைப் புரிந்து கொண்டு துணை புரியும் வள்ளல்களையும், சான்றோரையும் புலவர் நன்றிக் கடனோடு பெறுகின்றனர்.[83]

78. Boris Ford (Editor) The Age of Shakespeare. Vol.2 Page 49 (1961)
79. Boris Ford (Editor) The Age of Shakespeare. Vol.2 Page 49 (1961)
80. Boris Ford (Editor) The Age of Shakespeare. Vol.2 Page 37 (1961)
81. Boris Ford (Editor) TheAge of Shakespeare. Vol.2 Page 224 (1961)
82. Boris Ford (Editor) The Age of Shakespeare. Vol.2 Page 80 (1961)
83. Bertrand Russel: History of Western Philosophy. Page 521 (1954).

இக்கருத்துக்களை உளங்கொண்டு வில்லியின் காவியத்தை நோக்கின் அவர் வடமொழியில் விரிந்து கிடக்கும் காதையை மிகச் சுருங்கியதாகத் தமிழில் தந்த திறம் புலப்படுகிறது. பாரதக் கதை நவவவதோடு தாம் போற்றும் கண்ணனின் சரிதம் "இடை இடை வழங்க வேண்டும் (1:1:8 தற்சிறப்பு) என்ற அவர்தம் விழைவின் அடிப்படை புரிகின்றது. "தென் சொலால் உரை செய்தல்" (1:1:7 தற்சிறப்பு) "யான் அறி அளவையின் சமைக்கேன்" (1:1:1 சருக்கம்) என்ற பாரதத்தைத் தமிழிற்பாட வரும் ஆர்வமும், புலமை அளவும் புலப்படுகின்றன. "மன்னில் ஆரணம் நிகர் என வியாதனா ர் வகுத்த எண்ணிலா நெடுங்கதை" (1:1:6 தற்சிறப்பு) எனத்தாம் போற்றும் நூலாசிரியர் பெருமையும் நூலின் மேன்மையும் விரியும், "நாகையாப்புகழான், பெண்ணை நதி வளஞ்சுரக்கு நாடன், வாகையாற் பொலி திண்டோளான் மாசறச் கொங்கர் கோமான் பாகையாட் கொண்டான்" (8:1:90) எனவும், "கோவல் சூழ் பெண்ணை நாடன் கொங்கர் கோன் பாகை வேந்தன், பாவலர் மானங்காத்தான்" (8:2:33) எனவும் தாம் போற்றும் வள்ளலின் பெருமையும் அவன் பண்பின் தன்மையும் குறித்துப் புலவர் பாடிய புலமைக்கடன் பற்றிய தெளிவும் புலனாகின்றது.

இத்தகைய, திறம், விழைவு, புலமை வரம்பு (அடக்கம் பற்றியது) மூந்து நூலாசிரியரை வழிபடல், ஆக்கி உயர்த்திய வள்ளலுக்கு நன்றிக்கடன் செலுத்தல் ஆகிய பண்புகள் கருதி, வில்லியை, மனித மாண்பியல் விளக்கும் கவிஞர் எனக் கூறலோடு அமையாது அவரே ஒரு மனித மாண்பியலாளராய் விளங்குகின்றனர் எனக் கூறலும் வேண்டும் என்பது பொருந்துவதாகும்.

இருவேறு மரபுகளைத் தழுவிப் புதியன படைக்கும் போது, படைக்கும் ஆசிரியரின் நல்நோக்கங்கள் புலப்படும். தனி மனித நலனைப் பேணி மேம்படுத்துதல், அவனைப் போலும் பலரை, ஆளை அதிகாரங்களைப் பிழைபடக் கையாளும் தவற்றினின்றும் காத்தல், காலத்திற்கேற்ப ஒற்றுமைக் கூறுகளை வளர்க்கும் மனப்பான்மை கொள்ளல், மனிதன் தன் இயல்பை உணர்தலோடு, தான் படைப் பாற்றலில் கொள்ளல், மனிதன் ஒரு கூறு என உணர்தல், உடன்பாடு எதிர்மறைப்

பண்புகள் யாவற்றிற்கும் உள்ள, தன்பம், அல்லல், அழிவு, வருத்தம் ஆகியவற்றை அவ்வடிப்படையின் விளைவுகள் எனக் காணல் ஆகியவையெல்லாம் புலவரால் எடுத்தியம்பப் படும் என்று ஆய்வாளர், உயர்ந்த இலக்கிய ஆசிரியன்மார் திறம் பற்றி ஆய்ந்துரைத்து விளக்குகின்றனர்.[84] அவ்வகையில் வில்லியும் தாம் படைத்த காவியத்தின் வாயிலாக அரிய மனித நல மாண்புகளை (குறை நிறை, நன்மை தீமைப் போராட்டங்கள், மனித – கடவுள் தொடர்பு நிலைகள்) அவர்தம் புலமைத் திறம் விளங்க எடுத்துரைத்துள்ளார். அவற்றை அடுத்து வரும் இயல்களில் தொடர்ந்து காணலாம்.

84. Bonald Watt (Editor) : Aldous Huxley : The Critical Heritage
Page 467-68 (1975).

# இயல் - 3

## வில்லிபுத்தூரார் காட்டும் சமுதாய நிலைகள், நீதிகள் அறங்கள் முதலியன

காவியத்தில் வரும் மாந்தர்தம் மனிதநல மாண்புகளை ஆராய்தற்கு முன், காவியத்தின் பின்னணியாக உள்ள - காவியவரம்புக்கு உட்பட்ட - சமுதாய நிலைகளை ஆராய்ந்து தெளிதல் இன்றியமையாதது. இவ்வாராய்ச்சியால், காவியமாந்தர்தம் மனிதநல இயல்புகளையும் மாண்புகளையும் நன்கு அறிதல் எளிதாகும். எனவே, தனித்தனிக் காவிய மாந்தர் பற்றிய தனித்தனி ஆராய்ச்சியைப் போலவே, காவியத்தின் மொத்தமான சமுதாய நிலைகள், நீதிகள், அறங்கள் பற்றிய ஆராய்ச்சியும் மிக இன்றியமையாததாகும்.

வரலாறும் (குறிப்பாக சமுதாய வரலாறு) இலக்கியமும் ஒன்றுக்கொன்று தொடர்புடையவை. இலக்கியத்தை நன்கு புரிந்து கொள்வதற்கு வரலாற்றறிவு இன்றியமையாது வேண்டப்படுவது. இலக்கியத்தை நன்கு உணர்ந்து தெளிதற்கு இன்றியமையாது வேண்டப்படும் வரலாற்றின் சிறப்பினை உளத்திற் கொண்டு, 'இலக்கியமும் வரலாறும் உடன் பிறந்த இரட்டைச் சகோதரிகள்; அவர்களைப் பிரித்தல் இயலாது' என்று வரலாற்றறிஞர் எடுத்துக் காட்டியுள்ளனர்.[1]

மகாபாரதம், தன்னேர் இலாத ஒரு தலைவனையும் அவன் பெருமை கூறும், அளவான, பிற (காப்பிய) மாந்தரையும் உடைய தனித்ததோர் ஒருமைக் காப்பியம் அன்று. தம் நேர் இலாத பல தலைவர்களைக் கொண்டது.[2] காவிய நெடுங்கதையை அணி செய்யும் வகையில், அதனிடம் கலை மிக்க,

1. G.M.Trevelyan: History and the Reader: Page 14 (1945)

2. C.Rajagopalachari. Mahabharata: Preface to Second Edition. Page X (1955)
அ.லெ.நடராஜன்: வியாசர் அருளிய மகாபாரதம்: முதற்பாகம்: முன்னுரை. பக்.8 (1977)
தா.வே.வீராசாமி: தமிழ் இலக்கியக் கொள்கை: வில்லிபாரதம்: பக்.100 (1978).

உயர்வு மிக்க, பல்வேறு கிளைக் கதைகளை உடையது.[3] அளவிலும் தனக்கிணையாக எதுவும் ஒப்பாகாத பேரளவினது.[4] அறம் இன்னது என்று ஒன்றைத் தெளியின் அறம் அல்லாதது இது என ஒன்றைத் தெளிதற்கியலாத வகையில் பல்வேறு அறங்களைக் கொண்டது.[5] இவ்வாறு ஒன்றற்கொன்று முரண் கொள்ளும் வகையில், ஆயின் அனைத்தையும் ஒருங்கிணைத்துக் கொண்டு ஒன்றெனத் திகழும் பெருநூல் அது.[6] ஒருமைக்கு ஒருமையாய்ப் பன்மைக்குப் பன்மையாய் இரண்டனுக்கும் இலக்கியமாய்த் திகழும் அந்நூலின்[7] சமுதாய வரலாற்றுப் பின்னணியைத் தெரிந்து கொள்வது, அதனை ஆய்வார்க்கும் ஆழ்ந்து உணர்ந்து பயன் காண்பார்க்கும்[8] உரிய கடப்பாடாகும்

பல்வேறு அரச மரபினர், தனித்தனிக் குழுக்களாக இருந்து, தாம் தாம் விரும்பியவாறு, பேரரசு ஒன்றை நிறுவதற்பொருட்டுப் போராடிக் கொண்டிருந்த காலத்தில் - கொந்தளிப்பும் குழப்பமும் மிகுந்து கிடந்த காலத்தில் - வியாசர் வாழ்ந்தவராதல் வேண்டும். அரச மரபினரின் குழுப் பூசல்கள் பற்றிய குறிப்புகள் வேத (காலத்து) நூல்களிலேயே உள்ளன. ஒருவர்க்கொருவர் அருகருகே வாழ்ந்த குருகுலத்தவர்க்கும் பாஞ்சாலர்களுக்குமிடையே கடும் பூசல்கள் இருந்திருத்தல் கூடும்.

---

3. N.P.Unni: Nala Episode in Sanskrit Literature. Page 18&43 (1977)
   Prema Nandakumar: A study of Savitri. Page 281 (1962)
   Krishna Chaitanya: A New History of Sanskrit Literature. Page 203 (1962)
   Edward C.Dimock, Jr. The Literatures of India. An Introduction Page 53.(1978)
   C. Rajagopalachari. Mahabharata: Preface to Second Edition, P-IX. (1955)
4. Krishna Chaitanya: A New History of Sanskrit Literature. Page 200 (1962)
5. M.N. Roy. Radhakrishnan in "The Perspective of Indian Philosophy in "The Philosophy of Radhakrishnan. Page 549. (Ed) Paul Arther Schillip (1952)
   Sushil Kumar Maitra: The Ethics of the Hindus Page 219 (1929)
6. Pratima Bowes: The Hindu Religious Tradition: A Philosophical approach. Page 312 (1962)
   C.Rajagppalachari:Mahabharata:Preface to Second Edition. Page IX. 195
   S.N.Das Gupta (Ed):A History of Sanskrit Literature: Classical Period Vol.I. Introduction Page 1 (1962)
7. அ.வெ.நடராஜன்:வியாசர் அருளிய மகாபாரதம்:முதற்பாகம்:முன்னுரை.பக்.5. (1977)
8. அ.வெ.நடராஜன்:வியாசர் அருளிய மகாபாரதம்:முதற்பாகம்:முன்னுரை:பக்.7,8. (1977).

இவ்விருமரபினரும் ஒற்றுமையாய் வாழ்ந்தமை பற்றிய செய்தி அவற்றில் காணக் கிடக்கிறது. கதக சம்கிதை என்னும் நூலில், திருதராட்டிரன் விசித்திர வீரியன் என்னும் ஒருபெயர் குறிப்பிட்டுக் கூறப்பட்டுள்ளது. இருவேறு குழுக்களிடையே இருந்த போட்டி பூசல்களைப் போன்று ஒரு குடியினராய பாண்டவர்க்கும், கௌரவர்க்குமிடையே பூசல் விளைந்து போக, அதனைத்தம் காவிய வளர்ச்சிக்குப் பயன்படுத்தி பாரதப் பெரும்போர் பற்றி விரித்துப் பாடி வியாசர் பெருநூல் செய்தாராதல் வேண்டும். அரசியல் உலகில் கண்ட பல்வகைச் சிக்கல்களை நுணுகி ஆராய வேண்டிய கடப்பாடு நேர்ந்தமையின், கவிதையின் இனிய உணர்வுக்கு இடந்தருதலோடு அமையாது, அறிவு, அறம், தத்துவம், ஆகியவற்றை அறிவு நிலையின்று விளக்குவதோடு, சமுதாய அரசியல் சிக்கல்களை நடைமுறைக் கண்ணோட்டமுடைய அரசியல் தலைவர் நிலையின்று யாக்குகிறார் வியாசர். அதனால், காவியத்தின் வளர்ச்சிப் போக்கிலும் - காவிய முறையிலும் - வியாசரின் வரலாற்று உணர்வும், அறிவு ஆராய்ச்சியிற் படிந்த சிந்தனை மணமும் தெளியக் கிடக்கின்றன.[9]

வியாசர் வழிநின்று வில்லி நூல் செய்தவர்; வியாசர் காட்டும் சமுதாய அரசியல் வரலாற்று மரபுகளைக் கொணர்ந்து காட்டுவது வில்லியின் கடன். அதனிற் பிழையாது முதல் நூலில் உள்ள மரபுகளைப் பேணி எடுத்துக் கூறுதல் போல், தாம் தோன்றிய தமிழ் மரபின், சமுதாய வரலாற்று நிகழ்ச்சிகளையும் பண்புகளையும் எடுத்துக்காட்டுவதில் வில்லி ஆர்வமுற்றவராய்க் காண்கின்றார்.[10] தொகுத்தல், விரித்தல், தொகுத்து விரித்தல், மொழி பெயர்த்தல் என்னும் தமிழ் நூல்யாப்பு முறைகளில், மொழி பெயர்த்தல் என்னும் முறையைக் கையாண்டு நூல்யாத்த தமிழ்ப்புலவர்கள், முந்து நூலின் கண்ட மரபு முறைகளை முறைப்பட எடுத்துரைப்பதோடு, தாம் சார்ந்த மரபு பற்றிய பெருமைகளைப் புகுத்திக் கூறும் கடப்பாட்டினையும் தவறாது மேற்கொண்டிருந்திருக்கின்றனர்.

இப்பொழுதுள்ள மொழி பெயர்ப்புக் காவியங்களுள் முதன்மையானதெனப் பெறும், பெருங்கதையாயினும், பத்தாம் நூற்றாண்டினதான, சீவக சிந்தாமணி

---

9. Krishna Chaitanya: A New History of Sanskrit Literature. Pages 201-02 (1962).
10. வில்லி வியாசரோடு வேறுபடும் இடங்களும், தமிழ் மரபுகள் பற்றிய செய்திகளை அவர் புகுத்தியுள்ள இடங்களும் இவ்வாய்வின் இரண்டாம் இயலில் காட்டப்பட்டன.

யாயினும் அதற்குப் பின்னர் வந்த இதிகாச காப்பியமாகிய இராமவதாரம் (கம்பராமாயணம்) ஆயினும், அவற்றை இயற்றிய புலவர் தமிழ் மரபில் தோன்றி அதனைப் பயின்று அதனில் ஆழ்ந்து திளைத்தவராதலின், தம் பெருங்காவியங்களுள் தமது மரபினை எடுத்தியம்பிப் பெருமை செய்வாராயினர்.[11] வில்லியும் அப் புலவர் பெருமக்கள் மரபில் வருகின்றாராதலின் அவர் அப்புலவர்கள் பேணிய முறையைத் தவறாது போற்றிக் கடைப்பிடிக்கின்றார்.

தமிழர் சமுதாய நிலைகள், நீதிகள், அறங்கள், இன்னின்ன எனத் தெள்ளத் தெளிய மிக எளிய வகையில் எடுத்துக் காட்டுமாறு, தமிழர் பண்பாட்டு நாகரிக வரலாற்றினைப் பண்டைத் தமிழர் விரிவுபட எழுதி வைக்காதது பெரிதும் வருந்தத் தக்கது. கிரேக்க, ரோம, பண்பாட்டு நாகரிக வரலாறுகள் விரிவுபட எழுதிவைக்கப் பெற்றுள்ளன. ஆதலின் அவ்வினத்தவர், தம் சமுதாய நிலைகள், நீதிகள், அறங்கள் என (ஆகியவற்றை) நன்கெடுத்துக் காட்டுதல் எளிதாயுள்ளது. பிற இலக்கிய நாகரிகக் கூறுகள் வந்து கலப்பினும், அவற்றிடை அமைந்த தமது சமுதாய நிலைகள் இன்னவென அவற்றைத் தெளிவாக எடுத்துக்காட்டுகின்றனர்.

வேறு மரபுக்குரிய நிகழ்ச்சிகளையும் கருத்துகளையும் தம்மவை போல ஆக்கி இலக்கியம் படைக்கும் திறம் வாய்ந்த தமிழ்ப்புலவர் (பழங்காலத்திலும், பிற்காலத்திலும்) தமது மரபுக்கே உரிய நாகரிகக் கூறுகளைத் தாம் தாம் பாடும் பாடல்களிலும் இலக்கண விதிகளிலும் அமைத்துக்காட்டும் அளவில் நின்றனர். எனவே அப்பாடல்கள், இலக்கணக் கூறுகள் ஆகியவை கொண்டே, தமிழர் சமுதாய நிலைகள், பண்பாடுகள் ஆகியவற்றைப் அரிதின் முயன்று எடுத்துக்காட்ட வேண்டியுள்ளது. கிரேக்க ரோம நாகரிகக் கூறுகளைப் போல எளிதில் எடுத்துக் காட்டுதல் அரிதாக உள்ளது.

வில்லி பாரதத்துள்ளும் அத்தகைய முறை கொண்டே அவற்றை எடுத்தியம்ப வேண்டியுள்ளது. தமிழ் மரபு, வடமொழி மரபு என்று வகைப்படுத்துதல் மிக எளிதன்று. வியாசர் காலத்திலேயே, ஆரிய-திராவிட நாகரிகக் கூறுகள்

11. ஆய்வாளரின் விளக்கம்: குறிப்புகள்: குறிப்பு-11. பக்.35
பெருங்கதை: டாக்டர்: உ.வே.சாமிநாதய்யர் பதிப்பு பக்.XXXI (1968)
கலைக்களஞ்சியம்: தொகுதி-7. பக்.603 (1960).

ஒருங்கிணைந்து வழங்கலாயின. வியாச பாரதத்திலேயே இரண்டின் கூறுகளும் கலந்த நிலையை ஆய்வாளர்கள் எடுத்துக்காட்டுகின்றனர். ஆரியர், தமது இனத்தார் அல்லாத பிற இனத்தவரின் பழக்க வழக்கங்களையும் மெல்ல மெல்ல ஏற்றுக் கொண்டு தமது வேத நாகரிகப் பண்பாட்டை உயர்த்த வேண்டியிருந்தது. வீமனுடைய போர்த்திறன், திரௌபதியின் திருமணம் (ஒருவர்க்கு மேற்பட்டவரை மணத்தல்) ஆகியவைகளைக் கூர்ந்து காணின் அவை எல்லாம், காலப்போக்கில் ஆரியர்க்குரியன போல மாற்றி அமைக்கப்பட்டன என்றும், ஆரியர் தமக்கு முன்னமே வாழ்ந்திருந்த பழைய மரபினரின் பழக்க வழக்கங்களையெல்லாம் ஏற்று இணைத்து அவை பற்றிய, பொது மக்களிடை வழங்கிய, கதைகள் முதலியவற்றையெல்லாம் கொண்டு, தம்முடைய, பிறருடையவை என்று பாராது இருவகைப் பண்பாடுகளையும் இணைத்து மருவ வைத்ததன் நோக்கம், பல்வேறு மக்களிடையே ஒற்றுமை வழங்க வேண்டும் என்று அவர் கருதியதே என்றும், பற்பல நாகரிகங்களின் ஒருங்கிணைப்பின் விளைவே மகாபாரதம் என்றும் ஆய்வாளர் எடுத்துக்காட்டுகின்றனர்.[12]

ஆரியரோடு கலந்த உறவாடி ஆரிய மொழி பேசிய பிற இனத்தவர்தம் சமய, சடங்குகள் பற்றிய இலக்கியங்களை வியாசர் தொகுத்தார். வியாசரே ஆரியர்-ஆரியரல்லாதார் கலந்த கலப்பினத்தில் தோன்றியவராவர். அவருடைய தாய் சத்தியவதி மீனவர் குலத்தைச் சார்ந்தவள். அவருடைய பாட்டியோ ஆரியரோடு தொடர்பில்லாத சண்டாளர் இனத்தைச் சார்ந்தவள். ஆரியரல்லாத பிற இனத்தொடு பிறப்பு வகையால் தாம் கொண்டிருந்த உறவு பற்றி அவர்தம் எழுத்துக்களை மேற்கொண்டு, வியாசர் ஆரிய மொழியை ஓதத் தலைப்பட்டார். வரலாற்றிற்குப் பொருந்தாதவை, உண்மைக்கு மாறானவை, ஆரிய நாகரிகத்திற்கு ஏலாதவை என்று கருதி விலக்காது, கலப்பினத்தின், இதிகாச, வரலாற்றுச் செய்திகளையும் தொகுப்பதில் அவர் ஆர்வமிக்கவராயிருந்தார்.[13] ஆதலின் மூல நூலிலேயே ஆரியர்-ஆரியரல்லாதார் ஆகிய இனத்தவர்தம் கலப்பு நாகரிக, சமுதாய நிலைகள் காணப்படும் என்பது பொருந்துவதாகும்.

12. S. Radhakrishnan: Indian Philosophy. Vol. I. Pages 478-79 (1966)

13. Sunit Kumar Chatterji: Dynamic Hinduism and Radhakrishnan in "The Philosophy of Radhakrishnan" Pages 494-95. (1952)

முதல் நூலின் நிலை இதுவெனின், பல நூற்றாண்டுகட்குப் பின்னர் வரும் வழிநூலின் நிலையும் அத்தகையதே ஆகும். வில்லிபாரதத்துள் வரும் நாகரிக சமுதாய நிலைகள், நீதிகள், அறங்கள், யாவும் கலப்பினத்த நாகரிகக் கூறுகள் என்றே கொள்ளவேண்டும்.

எனினும், புலவர், தமது மரபு பற்றிய செய்திகளை ஏற்றிக் கூறவேண்டும் என்னும் கருத்தொடு நூல் செய்தமையின் ஆங்காங்குத் தமிழ் மரபின் நாகரிகக் கூறுகளை அவை இன்னவெனத் தெளிய எடுத்துரைக்குமாறு அவற்றை அமைத்துள்ளார் என்பதும் உண்மையே.

கலப்பினத்த நாகரிகக் கூறுகள் என முதல் நூலிற் கண்டாங்குத் தம் நூலில் வில்லி கொண்டு கூறுவனவற்றையும் தமது மரபிற்குரியனவெனத் தாமே புகுத்திக் கூறுவனவற்றையும் பின்வருமாறு வகைப்படுத்தலாம்.

1. தமிழ் மரபுக்கே உரியவை.
2. ஆரிய மரபுக்கே உரியவை.
3. கலப்பினத்த மரபுக்குரிய வகையில் இரண்டனுக்கும் பொதுவானவை.

இம்முவகைப் பாகுபாடுகளையும் கொண்டு, வில்லி கூறும் சமுதாய நிலை, நீதி, அறம், முதலியவற்றைக் காணலாம்.

பழங்காலம் முடியாட்சி வலுப்பெற்றிருந்த காலம். தனி மனித உரிமை, நலம், சிந்தனை முதலியன ஏற்றம் பெறாத காலம். இக்காலம் குடியாட்சி வலுப்பெற்று வருங்காலம். தனிமனித உரிமை, நலம், சிந்தனை, முதலியன மிக்க ஏற்றம் பெற்று அமைந்து வருங்காலம். பழங்காலச் சமுதாயத்தின் நிலை, நீதி, அறம் முதலியன, தனியொரு வேந்தனின் முழு ஆணைக்கு உட்பட்டு இயன்று வந்தன. இக்காலச் சமுதாயத்தில் அவை அமைந்து வரும் முறையே வேறு. பெருவாரியான மக்களின் எண்ணங்கள், வாழ்வு, வளம், ஆகியவற்றை மையமாகக் கொண்டு இயல்வன அவை.

இவ்வேறுபாடுகளை உளத்திற் கொண்டால், பழங்காலச் சமுதாய நிலைகள், நீதிகள், அறங்கள் ஆகியவற்றை, வேந்தர், அவரைச் சார்ந்த அவருடைய அரசியல்

சுற்றத்தவர் ஆகிய செல்வாக்கு மிக்க மாந்தர் தம் மனதிலே, ஒருகலாம, வாழ்வியல் கூறுகள், நிகழ்ச்சிகள் ஆகியவை கொண்டே ஆறாய வேண்டிய, மரபும் இன்றியமையாமையும் புலனாகும்.[14]

ஆளும் குடும்பமும், ஆளப்படும் பொது மக்களின் குடும்பமும் தந்தைக்குப் பிறகு மகன், அவனை அடுத்து அவன் மகன் என்று வரும் முறைமை பற்றி வளர்ந்து ஒங்கி வந்தன. அவ்வாறு மேம்பட்டு வரும் முறைமை இடுக்கணுக்கு ஆளாதல் உண்டு. மகப்பேறு இல்லாமல் போகும் பொழுதும், போர்க்களத்தில் தந்தை மகன் இருவரும் மாய நேரும் போதும் ஒரு மரபு மாய, அடுத்தடுத்துப் புதிய மரபைத் தோற்றுவித்தலோ, அல்லது, அம்மரபிலேயே, அதனொடு தொடர்புடைய யாரோனும் முன்வந்து அதனைத் தொடரச் செய்தலோ நிகழ்தல் உண்டு.

மரபினைத் தொடரச் செய்யும் முறைகளில் ஒன்று பற்றி வில்லி பாரதம் குறிப்பிடுகிறது. கணவர் மாய்ந்து போக, கர்ணவர்க்கு உடன்பிறந்தார், செம்மையுற்ற மகளிரைக் கூடி மகப்பேறளிக்கலாம் என்ற முறைமை குறிப்பிடப் படுகிறது. அதற்குத் தேவர நீதி என்ற பெயரும் நல்கப்படுகிறது.

"ஈண்டு தேவர நீதியிற் கொழுந்தியர் எழில் மகப் பெற நல்கல்
வேண்டுமால்" - வில்லி பாரதம்: ஆதி: குருகுல - 4.

என்று சந்தனுவின் மனைவி சத்தியவதி, வீடுமனிடம் வேண்டுகி ன். சந்தனுவின் மைந்தனை விசித்திர வீரியன் மாய்ந்தமையின், அவனுடைய மனைவியரான, அம்பிகை, அம்பாலிகை ஆகிய இருவரையும் கூடி மகப்பேறு தோற்றுவிக்க வேண்டும் என்றும், அது தேவர நீதி என்றும் எடுத்துரைக்கிறாள்.

வீடுமன் தன் விரதம் பாழ்படுமென்று அஞ்சி அதனை ஏற்க மறுக்கின்றான்.[15] (விரதம் இன்றேல், அந்நீதி அவனுக்கு ஏற்புடையது என்பது உய்த்துணரக் கிடக்கின்றது).

---

14. Pratima Bowes "The Hindu Religious Tradition: A philosophical approach- Page 10 (1976 ).
15. வில்லிபாரதம்: சம்பவச் சருக்கம்:4:பச்.88. வை.மு.கோ.பதிப்பு (1963).

ஆயின், அவன் வேறொரு நியதியை எடுத்தியம்புகிறான். ஆளும் குலம் மடிந்து போய், அடுத்து ஆளும் ஆள் இல்லாத போது, அக்குலத்தினைக் காத்தற் பொருட்டுக் கைம்மையுற்ற மகளிர், முனிவரைக் கொண்டு மகப்பேறு எய்தலாம் என்பதைக் கூறுகிறான். மனுகுலம் பரசுராமனால் மடிந்த போது, அக்குலத்து மகளிர் முனிவரைக் கூடி மகப்பேறெய்திக் குலம் வளர்த்ததையும் சான்றாக எடுத்துரைக்கிறான்.[16] அது நால்முறைமை என்றும், அம்முறை போற்றி மகப்பேறு எய்துதல் இயற்கை என்றும் எடுத்துரைக்கிறான். மகப்பேறு காரணமாக மகளிர் முனிவரைக் கூடுவரேல் அது கற்புக்கு இழுக்கன்று என்பதையும் குறிப்பிடுகிறான்.

மழுவெனும்படை யிராமனால் மனுகுல மடிந்துழியவர் தத்தம்
பழுதில் மங்கையர் முனிவரருளினால் பயந்தனர் மகவென்பர்
ஏது நன்னெறி முறைமையின் விளைப்பதே இயற்கை"
- 1:2:5: வில்லிபாரதம்: ~~குருகுல~~ சம்பவ: 5.

இவ்வரலாற்றையும், அது நால்முறையாகி உலகியற்கையும் ஆயிற்று என்பதனையும், வீடுமன் வாயாற் கேட்ட சத்தியவதி, தன் வாழ்வில் அது வாய்த்ததை நினைவு கூர்ந்து, பராசரமுனிவன் மக்கட்பேறெய்தும் நோக்கத்துடன் தன்னைக் கூடி வியாதனைப் பெற்ற வரலாற்றை அவனுக்கு எடுத்துரைக்கிறாள். தான் மகப்பேறு எய்தியது போலவே, தன் மருமகளிராய அம்பிகையும் அம்பாலிகையும் வியாத முனிவனைக் கூடி மகப்பேறெய்தலாம் என்று கூறி அது வீடுமனுக்கு இசைவாகுமோ வென்று வினவுகிறாள். வீடுமன் அதற்கு இசைகிறான்.

"எனக்கு மைந்தனே யினியிது ... உனக்கு
நெஞ்சுற வருங்கொலோவறிகிலேனென்ன
நீயுரையென்ன மனக்கிசைந்ததென்றவன்
வியந்தேகனும்" - வில்லி பாரதம்: ~~குருகுல~~ சம்பவ: 9.

விசித்திர வீரியனுக்கு வியாதன் சகோதர முறையாதலால், அவனுடைய மகளிரை வியாதன் கூடுவது தேவர நீதியைக் கடைப்பிடித்தது ஆயிற்று; அவன்

---

16, ஸ்ரீ மகாபாரதம்: ஆதிபருவம் - பக். 231 (1923 ).

முனிவருகையால், நான்முறைப்படியும், உலகியற்கையின்படியும், மகப்பேறு கருதி மகளிர் முனிவரர் அருள் பெற்றமையும் ஆயிற்று.

பாண்டு மன்னன் தேவர நீதியை எடுத்துக்காட்டாது தேவர் குலமும் மன்னர் குலமும் மகப்பேறு எய்தலாம் என்று குந்திக்கு அறிவுரை கூறுகிறான்.

"தொல்வானவரின் மறையோரிற் றுறக்க பூமி
செல்வார் பெறும் பேறிவைநீயருள் செய்தி" – வில்லிபாரதம்: சம்பவ: 62.

தேவர், வானவர் குலம் மகப்பேறு எய்தும் முறைமை முன்னும் இருந்தது என்பதை,

"பின்னும் பலகால் வருட்டிப் பிறர்பெற்றி காட்டி
மன்னன் புகல" – வில்லிபாரதம்: சம்பவ: 64

என்னும் சொற்களில் மீண்டும் எடுத்துரைக்கிறான்.

தேவர நீதியையும், முனிவரோடு கூடி மகப்பேறு எய்தும் முறைமையையும் கடைப்பிடிக்கலாம் என ஆடவர் கருதினும் மகளிர் அதை விரும்பவில்லை. விசித்திர வீரியனின் மனைவியராகிய அம்பிகையும் அம்பாலிகையும், கணவன் இறந்த பின்னும், "கணவனை மறவாத நினைவு நெஞ்சினர்" (1:2:12) ஆக வாழ்கின்றனர்.

வியாதன், தாய் சொற்படி அவர்களைக் கூட வந்தபோது அவர்கள் அதனை மனதார விரும்பவில்லை. மாமியார் சொற்கு இணங்க வேண்டுமே என வேண்டா வெறுப்பாக ஏற்கின்றனர்.

"புரிதவன் போதலும் மிக அஞ்சி
அனைய காலையிலம்பிகை மலர்த்திலள்
அம்பகம் ஒருக்காலும்" – 1:2:12

"இவனைக் கண்டு
உளைத்திருள் கருத்துடன் வெரீஇ
வருபயனென்றையு நினையாது,
விளைத்திருங்கரு விளையுமன் மடவரல்
மெய்யெலாம் விளர்த்திட்டாள்" – 1:2:15

வியாதன் தன் தாயிடம் இருவர் மனநிலை பற்றி விளக்கி இருவரிடத்தும் முறையே விழிப்புலன் இல்லாத மகனும், வெளிர்ப்பு நிறம் உடைய மகனும் பிறப்பர் எனக் கூறுகின்றான். வியாதன் கூறியது கேட்ட சத்தியவதி, குறை எதுவுமில்லாத ஒரு மகப்பேறு வேண்டி, மீண்டும் அம்பிகையைக் கூடுமாறு சொல, அம்பிகை வியாதனைக் கூடுவதற்கு அஞ்சி, அவளுடைய தோழி ஒருத்தியை அனுப்புகின்றாள்.

"நாணலந்திகழம்பிகை ..... தோழி மற்றொருத்தியைப்
பூவணை யணைவித்தாள்" - 1:2:18.

எனவே, தேவர நீதி, முனிவரால் மகப்பேறெய்தும் முறைமை, ஆகிய இவற்றினும், தம் கணவர்பால் கொண்டிருந்த கற்பெனும் அறத்தை மகளிர் பெரிதாகப் போற்றியமை தெளிவாகின்றது.

இத்தகைய மனப்பான்மையைக் குந்தியிடத்தும் காண்கின்றோம். தேவர நீதி பற்றியும், முனிவர், தேவர் முதலியோர் உறவால் அமையும் முறைமை பற்றியும், பாண்டு, மகப்பேறு குறித்து விளக்கியபொழுது, குந்தி (பின்னர் அவனுடைய வற்புறுத்தலுக்கு இசையினும்) அவன் சொற்களை மறுத்துரைக்கிறாள். அவன் சொற்களைப் பழி மிகுந்த சொற்கள் என்று கூறுகிறாள். மலையில் தோன்றிப் பெருகிவரும் ஆறுகள் சிறிய புல்லிய குழிகளில் தேங்கி நிற்றல் அரிது. அதுபோல் கற்பெனும் உயர்நெறி போற்றி வாழும் மகளிர், தலைவரல்லாத பிற ஆடவர் மேல் மனம் வைத்தல் என்னும் இழிந்த நிலை பற்றி நினைத்தல் அரிது. ஆறுகள் கடலையே நோக்குதல் போல், மகளிர் தாம் கொண்ட கணவரையே நோக்கி வாழ்வர் என்று எடுத்துரைக்கிறாள்.[17]

ஒருமை வாழ்வின் விழுப்பத்தைத் திரௌபதி திருமண வரலாற்றிலும், அவள் ஐவரை மணக்க நேர்ந்தமைக்குரியதாகிய முற்பிறப்பு வரலாறு பற்றிய கதையிலும் காணலாம்.

பாண்டவர், ஐயம் பெற்றதைத் தம் தாயிடம் கூற, அவள் அதனை ஐவரும் பகுத்துண்க எனக் கூறிப் பின்னர்த் திரௌபதியைக் கண்டதும், "என் நினைந்த

---

17. வில்லிபாரதம்: சம்பவச் சருக்கம்-62 பக்.62. மர்ரே பதிப்பு (1959)
ஸ்ரீ மகாபாரதம்: ஆதிபருவம்: பக்.462-70 (1923).

என் சொல்வேன் மற்ற என் செய்தேன்" என்ற சோர்ந்த சோர்வில் அவள் ஒருமையை விரும்பிய விருப்பம் புலப்படுகிறது. இன், இதற்கு மன்னர், தருமன், அருச்சுனருக்கே உரிய ஒரு மனைவி திரௌபதி என்ற வேண்டிய விருப்பத்திலும் ஒருமை வாழ்வின் பெருமை புலப்படுத்தப்பட்டுள்ளது. நளாயனி (திரௌபதியின் முற்பிறப்புப் பெயர்) யின் வரலாற்றிலும் ஒருவன் ஒருத்தி என வாழ்ந்த வரலாறே பெருமையாக எடுத்தியம்பப் பெற்றுள்ளது.

"நின்நேயம் என்றும் பிரியாத நலன் நேர்க" - 1:5:77

"தன்றும் துணையாய்ப் பலயோனிகள் தோறும் எய்தி
என்றும் பிரியாது இருவோரும் இதயம் ஒத்தே" - 1:5:78

"இந்தப் பிறப்பில் நலம் எய்தி இறந்த பின்னும்
சிந்தித்த வண்ணம் இவள் இந்திரசேனை ஆகி
அந்தப் பதியை அடைந்தாள்" - 1:5:79

என்னும் தொடர்கள் ஒருவன் ஒருத்தி வாழ்வு, பிறவிகள்தோறும் தொடர்வது, பிறவிகளையுங் கடந்த மாட்சிமை பெறுவது என்னுங் கோட்பாட்டினை வலியுறுத்துவன.

கணவனைத் தருக என்று ஐந்து முறை திரௌபதி வேண்டியதாக வரும் செய்தியையும் ஒரு கணவனை வேண்டி ஆர்வத்தால் பன்முறை கூறியதாகவே கொள்ள வேண்டியுள்ளது.[17அ]

ஐவரை (பலரை) மணப்பது பற்றிய கதைப் பகுதியும் (சிவபிரான் அருளியதாக வருவது) அக்கருத்தினை வலியுறுத்தும் வேறு செய்திகளும், பலரை மணக்கும் முறையும் சமுதாயத்தில் இருந்தது என்பதைச் சுட்ட வந்தனவேயாகும். பல ஆடவர் மணம் குற்றமுடையதன்று எனவும், அம்முறை முன்னும் பலரால் பேணப்பட்டது என்றும், அம்முறை பற்றித் திரௌபதியைத் தான் மணப்பதில் தன் நெஞ்சு குற்றப்படாது என்றும் தருமன் எடுத்துரைப்பதாக முதனூலில் உள்ளது.[18]

பல ஆடவரை மணக்கும் முறை, ஆரியருடையதன்று என்னும் கருத்தப்படப்

---

17அ. ஸ்ரீ மகாபாரதம்: ஆதிபருவம்: பக். 764 (1923)

18. ஸ்ரீ மகாபாரதம்: ஆதிபருவம்: பக். 759 (1923)

பேராசிரியர் ராதாகிருஷ்ணன் எழுதிச் செல்வதனால்,[19] இம்முறை, தமிழருடையது எனக் கொள்ளல் ஆகாது. தமிழர் நாகரிக வரலாற்றில் எக் காலத்திலும் எந்நிலையிலும் அது காணப்படவில்லை. ஆரியர் செல்வாக்குற்றுப் பிறர் பண்பாடுகளை மெல்ல மெல்ல ஆரிய மயமாக்குதலை மேற்கொண்டபோது, தமிழரல்லாத, வேறொரு குழுவினரின் பண்பாடாக விளங்கிய ஒன்றினை அவர்கள் மேற்கொண்டிருத்தல் கூடும் என்றே கருத வேண்டியுள்ளது. எனினும், இருவேறு முறைமைகள் பற்றிய இருவகைக் கதைப் பகுதிகளும் உரைபெற்று நிற்றலை நோக்குமிடத்து, இருவேறு நாகரிகங்கள் கலப்புற்று விளங்க முற்பட்டன என்பதையும், பாரதம் அக்கலப்பு நாகரிகம் பற்றிய கூறுகளை எடுத்துரைத்தற்கு இத்தகைய கதைகளை இணைத்துக் கூறுகிறது என்பதையும் மறத்தல் இயலாது.[20]

சுருங்கிய நூல் செய்தல் வேண்டும் என்னும் கட்டுப்பாடு கொண்ட வில்லி, பலரை மணக்கும் முறைமை பற்றிய கதைகளை எடுத்துரைத்து விரிவுபடுத்த விரும்பவில்லை. அதனினும் மேலாக, ஒருமை வாழ்வை விழுமிதெனப் போற்றும் தமிழ் நாகரிகத்தில்[21] திளைத்து அதனைப் போற்றும் இயல்பினர் ஆதலின், அவ்வியல்பு கொண்டு, ஒருமை மணமுறைமையை (திரௌபதி வாயிலாக) எடுத்துரைத்துப் பலரை மணக்கும் முறை பற்றிய விரிவை விடுத்தார் எனல் மிகப்பொருந்துவதாகும்.[21அ]

அழியும் மரபைக் காத்தற் பொருட்டு, ஆகாத ஒன்றை (பல ஆடவரை மணக்கும் முறைமையை) ஆகும் என்று கொண்டு, அதனால், வயிற்றிற் பிறந்த மக்களிடத்தே ஒற்றுமை வளர்தற்கு வழியும் உண்டு என்று, அதனை ஏற்பார் உண்டு.[22]

19. S.Radhakrishnan: Indian philosophy Vol.I. Pages 478-79 (1966). Also Foot Note No.12.

20. ஸ்ரீ மகாபாரதம்: ஆதிபருவம்: பக்.773 (1923)

21. தொல்காப்பியம்: பொருளதிகாரம்: கற்பியல்-31 அகநானூறு 66.

21அ தி.முத்துக்கண்ணப்பர்: வாய்மொழி உரையாடல்: 25.7.79:- பழம் பொருந்து சருக்கத்தில் வரும் திரௌபதியின் மனநிலை குறித்து அறிஞர் பலவாறு விளக்கம் செய்வர். ஐவரையும் கடந்து, தன் மனம் பிறரை நாடியது என்னும் திரௌபதியின் கூற்றுக்கு, அவள் மனம், பாண்டவர்க்கு மூத்தவனான கர்ணனை நாடியிருத்தல் வேண்டும் என்று பேராசிரியர் முத்துக்கண்ணப்பர் குறிப்பிட்டார். (வாய்மொழி உரையாடல்) ஒரு வயிற்றிற் பிறந்தார் அனைவரையும் ஒருமை உள்ளத்தோடு நோக்கினர் என்பது அவர்தம் கருத்தாகும் இந்தத் தொடர்பு ஆராயத்தக்கது.

22. Encyclopaedia Britanica. Vol. 18 Page 194 (1967)

வில்லியின் உள்ளம் அதனை ஏற்க மறுத்தமையின் அவர் அதனை எடுத்தியம்பி விரிவு படுத்தவில்லை என்பது பொருந்துவதேயாகும்.[23]

மரபு காத்தற்பொருட்டு, பலரை மணத்தல் முதலிய மணமுறைகளைக் குறிப்பிடுவது போல், இம்மை, மறுமை நலன்கள் கருதி எய்தப் பெறும் மக்கட் பேறு பற்றிய வெவ்வேறு நோக்கங்களையும் பாரதம் குறிப்பிடுகிறது.

மக்கட்பேற்றிற்குரிய தலையாய நோக்கங்கள் இரண்டு. அவை இம்மை நலம், மறுமை நலம் என்பன. இவ்விரு நலன்கள் பற்றியும் பழந்தமிழ் நூல்கள் சிறப்புறப் பேசுகின்றன.[24]

இம்மை மறுமை நலன்கள் அமைதற்குரிய மக்கட்பேறு பற்றிய பழந்தமிழ் மரபினை நன்கறிந்தவர் வில்லி. அம்மரபினைப் பாண்டுவின் வாயிலாகப் போற்றி யுரைக்கிறார் அவர். மக்கட்பேறு பற்றி இம்மை மறுமை நலன்கள் குறித்த கருத்துகளைப் பழந்தமிழ்ப்புலவர் வழிநின்று விளக்குகிறார்.

"கல்லா மழலைக் கனி ஊறல் கலந்து சொல்லும்
சொல்லால் உருக்கி, அழுது ஓடி, தொடர்ந்து பற்றி,
மல்லூர் புயத்தில் விளையாடும் மகிழ்ச்சி மைந்தர்
இல்லாதவர்க்கு, மனை வாழ்வின் இனிமை என் ஆம்?"

"மெய், தானம், வன்மை, விரதம், தழல் வேள்வி நாளும்
செய்தாலும், ஞாலத்தவர் நற்கதி சென்று சேரார்;
மை தாழ் தடங்கண் மகவின் முகம் மன்னு பார்வை
எய்தாத ஒழியின் பெறும் இன்பம் இவனும் இல்லை"
"மென் பாலகரைப் பயவாதவர், மெய்ம்மையாகத்
தென்பாலவர்தம் பசித்தீ நனி தீர்க்க மாட்டார்"

(1:2:58, 59, 60)

---

23. சீவக சிந்தாமணி: 211. பக்.113. டாக்டர்.உ.வே.சா.பதிப்பு (1949)
24. புறநானூறு 222, 118, 9, அகநானூறு 66.

இம்மை நலம் பெருக்கும் இளஞ் செல்வரின், மழலை, கனிவாய், கொஞ்சும் சொல், உறக்கம், விளையாட்டு ஆகியவை பற்றிய செய்திகள் முதல் நூலுள் இல்லை. அவ்வாறே, மறுமை இன்பங்கருதிக் கணவரல்லாதாரோடு சேர்ந்து மகப்பேறு எய்தும் கருத்துத் தமிழ்நூல்களில் இல்லை. முதல் நூலுள் வரும் செய்தியைப் பேண வேண்டியும், தமது மரபுக்குரிய பெருமையை நிலை நாட்டுதற் பொருட்டும், வில்லி தமிழருடையனவற்றையும், பிறருடையனவற்றையும் இணைத்துக் கூற வேண்டியவரானார். ஆதலின் தமிழ் மரபுக்கேற்ப இம்மை மறுமை நலன் கருதிய மக்கட் பேற்றின் விருப்பத்தை எடுத்தியம்பியதோடு தமக்கு மறுமை நலன் கருதித் தம் மனைவி பிறரொடு புணர்ந்து மக்கட்பேறெய்தலாம் என்னும் தமிழர் பண்பாட்டுக்கு உரியவல்லாத பிறர் பண்பாட்டையும் இணைத்துக் கூறுகிறார்.

காலம் செல்லச் செல்லத் தேவர நீதி முதலிய முறைமைகளும், மக்கட் பேறு கருதிப் பிறரைப் புணர்ந்தொழுகும் வழக்கும் வீழ்ந்துபட்டன. கைம்மையுற்ற மகளிர், மகப்பேறு கருதி மைத்துனரைச் சேர்தல், ஐம்பெரும் பாவங்களுள் ஒன்றென, ஆதி சங்கரர் மரபில் வந்த சங்கரர் ஒருவர் இயற்றியதாகச் சொல்லப்பெறும் ஆசாரமயூகம் என்னும் நூல் கூறுகிறது.[24அ] பாரதக் கிளைக் கதைகளுள் சிறந்த ஒன்றாகிய சகுந்தலை-துஷ்யந்தன் வரலாற்றை நாடகக் காவியமாக்கிய காளிதாசர், வேந்தர் மரபு மிகத் தூயதாகப் போற்றப் பெறுதல் வேண்டும் என்றும், மகப்பேறு முதலியன முறைப்படி மணந்த மனைவியின் வழியே எய்துதல் வேண்டும் எனவும், தோற்றம் பண்பு முதலியவற்றால் மகன் தந்தையை முழுதும் ஒத்திருத்தல் வேண்டும் எனவும் தமது காவியங்களுள் விளக்கியுள்ளார்.[25] புகழ்சால் புதல்வன் எனத் தமிழர் போற்றிய மரபு போலும் ஒன்றினைக் காளிதாசர் எடுத்துரைக்கிறார். தம் மக்களின் ஆடல் பாடல்களில் தீ மனம் மகிழ்ந்து, இம்மை நலம் கனியும் மக்கட்பேறு எய்துவது பற்றி அவரும் குறிப்பிடுகிறார்.[26]

இவ்வாறு மரபுத் தூய்மையும் ஒழுங்கும் பிற்கால வளர்ச்சியில் காணக்

---

24அ. S. Radhakrishnan: Indian Philosophy. Vol.I. Page 609 (1966).

25. B.S.Upadyaya: Indian in Kalidasa. Page 192 (1947).

26. B.S.Upadyaya: India in Kalidasa. Page 192 (1947).

கிடக்கின்றனவெனின், பாரத காலத்தில் பல்வேறு கலப்புமண நாகரிகச் சுவடுகள் பொதிக்கிடப்பதையே மிகுதியாகக் காண்கிறோம். பாரதத்துள் வரும் மாந்தர்தம் திருமணங்கள், இருவேறு இனங்கள் கலந்தமையையே புலப்படுத்துகின்றன. திங்கள் மரபில் வந்த புதனும் மனுவின் மரபில் (சூரிய மரபில்) வரும் இளையும் மணந்த வரலாறு, அவ்வாறே புரூரவா தேவர் மரபினள் எனப்பெறும் ஊர்வசியை மணந்த வரலாறு, நகுடன் இந்திராணியை[27] மணக்க விழைந்த வரலாறு, யயாதி அந்தணர் மகளாகிய தேவயானையையும் அசுர குல மரபினளாகிய சன்மிட்டையையும் மணந்த வரலாறு, சந்தனு, சத்தியவதி என்னும் மீனவர் குலத்து மகளை மணந்த வரலாறு, பாண்டு, யாதவ குலத்தவளாகிய குந்தியை மணந்த வரலாறு, அந்தணர்களாகிய பரத்துவாஜ மகரிஷியும், சரத்வான் என்னும் முனிவரும் முறையே தேவர் குல மகளிரான, கிருதாசி, ஜானபதீ என்பவரை மணந்த வரலாறு, (இவர்களாற் பிறந்தவரே துரோணரும், கிருபரும்) அரக்கர்குல மகளாகிய இடும்பியை வீமன் மணந்த வரலாறு, அரசகுல மரபினளாகிய திரௌபதியை மணத்தற் பொருட்டுப் பாண்டவர் (அரச குலத்தவராயினும்) அந்தண வடிவம் தாங்கிச் சுயம்வரம் காண வந்த வரலாறு, அந்தணருகிய அசுவத்தாமாவும், அரச குலத்தவரைப் போல், திரௌபதியின் சுயம்வரம் காண வந்த வரலாறு,[28] அருச்சுனன் நாக மரபினளான உலூபியை மணந்த வரலாறு, பாண்டிய குல வேந்தனின் மகளாகிய சித்திராங்கதையை மணந்த வரலாறு, யாதவ குலத்தவளாகிய சுபத்திரையை மணந்த வரலாறு, அபிமன்யு உத்தரையை மணந்த வரலாறு, ஆகிய இம் மண வரலாறுகள் யாவும் வெவ்வேறு குலத்தவர் தம்முள் கலந்தமையைத் தெரிவிப்பனவேயாகும்.[29]

ஒருபுறம், திருமணம் முதலிய உறவுகளால் இனங்களிடைக் கலப்பு நிகழ்ந்தவே, பாரதம், காட்டுகின்றதெனினும், மறுதொரு புறம், சாதிப் பாகுபாடு,

---

27. வில்லிபாரதம்: ஆதிபருவம் - பக்.15. வை.மு.கோ.பதிப்பு (1963)
28. வில்லிபாரதம்: ஆதிபருவம்: வை.மு.கோ.பதிப்பு பக்.263 (1963)
    வில்லிபாரதம்: ஆதிபருவம்: வை.மு.கோ.பதிப்பு பக்.281 (1963)
    ஸ்ரீ மகாபாரதம்: ஆதிபருவம்: பக். 678 (1923 )
    ஸ்ரீ மகாபாரதம்: ஆதிபருவம்: பக். 729 (1923 )
29. வில்லிபாரதம்: ஆதிபருவம்: பக்.12-13,16,160,162. வை.மு.கோ.பதிப்பு (1963)
    Edward C. Dimock Jr and other five authors. (

அதன் கொடுமை முதலியவற்றையும் அது காட்டுகின்றது. யயாதியின் மனைவி தேவயானை, தான் உயர் குலத்தவள் என்னும் செருக்கினால், சன்மிட்டையைத் தாழ்ந்த குலத்தவள் என்று கருதி இழிவு படுத்துகிறாள்.[30] சத்தியவதி மீனவர் குலத்தினள் ஆதலின், அவளைச் சாதியால் தாழ்ந்தவள் அல்லள் என்று காட்டுவதற்காக, அவளுடைய முற்பிறப்பு உயர்ந்த குலத்தொடு பொருந்தியது என்னும் கதை இயம்பப்பட்டுள்ளது.[31] மக்கட்பேறு கருதி முனிவர், வேறு குலத்துக் கன்னியரைச் சேர்ந்து அஃது எய்திய பின்னர், தம் தவம் முதலியவற்றிற்கு இடையூறு வந்ததாகக் கருதி அவர்களை விட்டு விலகுதலைக் குறிப்பிடும் கதைகளும், அவர்தம் உயர்வு மனப்பான்மையையே புலப்படுத்துவன.[32]

விற்பயிற்சிக் கலையில், விருமனும் போற்றும் சிறப்புற்ற துரோணன், தன்னைக் கொல்லப் பிறந்தவன் திட்டத்துய்ம்மன் என்று தெரிந்தும் அவனுக்கு விற்பயிற்சியளிக்கிறான். தன்னிடம் மிக்க பக்தி செலுத்திய ஏகலைவனுக்குப் பயிற்சியளிக்க மறுக்கின்றான். தானே பயின்று தேறிய ஏகலைவனிடத்துக் குருதக்கிணையாக அவனுடைய கட்டை விரல்களை வாங்கி அவன் பயிற்சியைப் பயன்படாமல் செய்து விடுகின்றான். இவ்வரலாறு துரோணனின் உயர்வு மனப்பான்மையையே புலப்படுத்தும்.[33]

அறிவாற்றலால் பெருமை கொள்ளும் அந்தணனாகிய துரோணனை, நாடாளும் செல்வம் பெற்ற பெருமிதம் கொண்டு (அரச குலத்தவனாகிய) துருபதன் இகழ்கிறான்.[34] இவ்விருவரும் ஒருவர் மீது ஒருவர் கொண்ட காய்ப்பு, அவர் காலத்தோடு முடியாது, திட்டத்துய்ம்மன்–அசுவத்தாமன் காழ்ப்பாக உருவெடுக்கிறது. பாரதப் போரின் முடிவில், அசுவத்தாமன் துருபதனின் மகனை, உறங்கும் நேரம் பார்த்துக் கொன்றொழித்துத் தன் பழியைத் தீர்த்துக் கொள்கிறான்.[35] சாதி உயர்வு மனப்பான்மை, காழ்ப்பாய்ப் பெருகிக் கொலை செய்யும் கொடுமையாய் முதிர்ந்து நின்றமைக்கு இது தக்கதோர் எடுத்துக் காட்டு.

---

30. வில்லிபாரதம்: ஆதிபருவம்: குருகுலச் சருக்கம்: வை.மு.கோ.பதிப்பு. பக்.18,19 (1963)
ஸ்ரீ மகாபாரதம்: ஆதிபருவம்: பக். 282, 279, 280 (1923)
31. வில்லிபாரதம்: ஆதிபருவம்: குருகுலச்சருக்கம்: 103-6. பக். 63-65. வை.மு.கோ.பதிப்பு. (1963)
32. வில்லிபாரதம்: ஆதிபருவம்: வாரணாவதச் சருக்கம்-29 பக்.160. வை.மு.கோ.பதிப்பு (1963)
33. வில்லிபாரதம்: வாரணாவதச் சருக்கம்: 49. பக்.47. மர்ரே பதிப்பு (1959)
34. ஸ்ரீ மகாபாரதம்: ஆதிபருவம்: பக். 534 (1923)
34. வில்லிபாரதம்: வாரணாவதச் சருக்கம்: மர்ரே பதிப்பு பக்.43 (1959)

கர்ணன், பிறப்பு வரலாற்றால் உயர்ந்த குலத்தினனாயினும், அவன் வளர்ந்த குலம் காரணமாக, இழி குலத்தவனாகவே கருதப்படுகிறான். அருச்சுனனின் வில் திறத்துக்கு எதிராகத் தன் வில் திறத்தைக் கூற முற்பட்டு வீரச்சொல் சொல்ல முனைந்த கர்ணனைக் கிருபன் இழித்துரைக்கிறான். தேர்ப்பாகன் மகன், அரசகுமாரரோடு வெகுண்டு உரையாடல் செய்தற்குத் தகுதியற்றவன் என்றும், அவன் அவ்வாறு செய்வது பெருங் குற்றம் என்றும் கூறுகிறான்.[36]

"சூதன் மைந்தன் வேலையோ டூரு மேதினிக் கெலாம்
நாதன் மைந்தனுடன் வெகுண்டு நல்லதன்று நன்மையோ
ஏதமென்று சால" — வில்லிபாரதம்: ஆதிபருவம்: வாரணாவதம்-67

கிருபனைப் போலவே, அசுவத்தாமன், வீடுமன், துரோணன் ஆகியோரும் கர்ணனை இகழ்கின்றனர்.[37] இவ்வாறே, சல்லியனும் கர்ணனை இகழ்கின்றான். கர்ணனுக்குத் தேர்ப்பாகனாய் உதவ வேண்டுமென்று சல்லியனைத் துரியோதனன் வேண்டிய பொழுது, புல் தின்னும் ஆடு எவை, புலி அதற்குப் பணியின், மத்திரத்தான் கர்ணனுக்குப் பாகன் ஆவான் என்று கூறி இகழ்கிறான்.[38] கர்ணன் தற்சொல்லுடையனாய்ச் சல்லியனைக் கடிந்தபொழுது, சல்லியன் மிகவும் சினந்து, தேர்விட்டு இறங்கி, வாளெடுத்து அவனை எதிர்த்துப் போர் புரிய முனைந்து எலியின் படைப் பூனைக்கு எதிரில் என்னபாடுபடும்! என்று கூறி இகழ்கிறான்.[39]

கர்ணனைக் கிருபன் இகழ்ந்தபோது, துரியோதனன் கர்ணனின் இழிவு போக்க வேண்டி, அவனை அங்க நாட்டுக்கு வேந்தனாக்கித் தன் அரியணையில் சமமான இடந்தந்து மேம்படுத்துகிறான். சாதியின் கொடுமையைக் கடிந்து யார் யார் சாதிப் பாகுபாட்டுக்கு அப்பாற்பட்டவர் என்று விளங்க உரைக்கிறான்.

36. ஸ்ரீ மகாபாரதம்: ஆதிபருவம்: பக். 548 (1923 )
37. வில்லிபாரதம்: நிரைமீட்சிச் சருக்கம் 82,83. பக்.314.
உலூகன் தூதுச் சருக்கம் 19, பக்.329
கிருட்டிணன் தூதுச் சருக்கம் 136, பக்.356
படையெழுச்சிச் சருக்கம் 55, பக்.383
பன்னிரண்டாம் போர்ச் சருக்கம் 85,86 பக்.465.
பதினைந்தாம் போர்ச் சருக்கம் 180, பக்.180. மர்ரே பதிப்பு (1959)
38. வில்லிபாரதம்: பதினேழாம்போர்: 26. பக். 572. மர்ரே பதிப்பு (1959)
39. வில்லிபாரதம்: பதினேழாம்போர்: 41. பக். 575. மர்ரே பதிப்பு (1959).

"கற்றவர்க்கும் நலம் நிறைந்த கன்னியர்க்கும் வண்மை கை
உற்றவர்க்கும், வீரர் என்ற உயர்ந்தவர்க்கும் வாழ்வுடைக்
கொற்றவர்க்கும் உண்மையான கோதஇல் ஞான சரிதராம்
நற்றவர்க்கும் ஒன்று சாதி; நன்மை தீமை இல்லையால்"

- வில்லிபாரதம்:வாரணவதம்-67

கல்விச் சிறப்பால் சாதிபோகும்; பெண்மையின் அழகுச் சிறப்பால் சாதிபோகும்; பெருங்கொடைச் சிறப்பால் சாதிபோகும்; பெரு வீரத்தால் சாதி போகும்; ஆளும் உரிமை பெற்ற அரசரால் சாதிபோகும், ஞான ஒழுக்க தவ சீலங்களால் சாதிபோகும் என்று அவன் கருதுகிறான்.[40]

இத்தகைய நலங்கட்கு உட்பட்டவர்களின் வரலாறுகளையும் சான்று எடுத்துரைக்கிறான்.[40அ]

பிறந்த இடத்தின் எளிமை கருதாது, பெற்ற பெருநிலையின் உயர்வால் மாந்தரை மதித்தல் வேண்டும் என்பதுவே துரியோதனனின் உட்கிடக்கை.

சாதிப்பாகுபாட்டின் இழிவு பற்றி இத்துணைத் தெளிவு பெற்றிருந்த துரியோதனன், பொன்னைப் புடமிடுதல் போல், கன்னனைப் பிறப்பால் வரும் இழிவினின்றும் பேணிக்காத்து, முடிசூட்டி அரசனாக்குகிறான்.[41] எனினும் அந்தணன் வடிவிலிருந்த அருச்சுனனுக்குத் திரௌபதி மாலையிட்டு அவனைக் கணவனாக ஏற்றுக் கொண்டபோது (அருச்சுனன் அவன் என்று தெரிதற்கு முன்னரேயே) பொறாமை காரணமாகத் தன் உட்கிடக்கையை மறந்து பேசுகிறான். பார்ப்பனக் குலத்தினன் திரௌபதியை மணந்தது அரசர் குலத்திற்கு இழிவு என்று கூறி அவர்களைப் போருக்கு எழுமாறு தூண்டிவிடுகிறான்.

"பார்ப்பான் வந்து ஒரு கோடி அரசைச் சேரப் பரிபவித்து, பாஞ்சாலன் பயந்த தெய்வச் சீர்ப்பாவை தலை வலியக் கொண்டு போகச் செயல் இன்றி இருந்தீர்! என் செய்தீர் என்று .... கூற". வில்லிபாரதம்:திரௌபதிமாலை-59

---

40. நாலடியார்:அறத்துப்பால்:தாளாண்மை-5. பக்.140. மர்ரே பதிப்பு. ~~பக்-140~~ (1959)
40அ. வில்லிபாரதம்:வாரணவதச் சருக்கம்-67. பக்.68. மர்ரே பதிப்பு (1959)
41. வில்லிபாரதம்:வாரணவதச் சருக்கம்-69. பக்.51. மர்ரே பதிப்பு (1959).

தனக்கு உற்ற ஆசிரியனும் அமர்ந்து கலைகள் பலவும் கற்பித்தவனும், பின்னல் போரில் அணி வகுத்துத் தனக்கு வெற்றி தேடித் தரப் போகின்றவனுமாகிய துரோணனும்,[42] அவனையொத்த வல்லமை மிக்கவனாகிய அவன் மைந்தன் அசுவத்தாமனும் அந்தணர் மரபினர் என்பதை மறந்து பேசுகின்றான். சாதி இயல்பு பொறுமையும் செருக்கும் உடையானைப் பற்றிக் கொண்டு தன்னைப் புலப்படுத்திய மைக்கு இஃது ஓர் எடுத்துக்காட்டு.

பிறப்பினால் உயர்வு தாழ்வு கருதலாகாது என்று கூறிய அவனே, கண்ணனைப் பிறப்பினால், தாழ்ந்த குலத்திற்குரியவன் என்று இகழ்கிறான். தான் பிறப்பினால் உயர்ந்த குலத்திற்குரியவன் என்று பெருமிதமாகத் தன்னைப் புகழ்ந்து கொள்ளுகிறான்.

"புன்பிறப்புடைய பொதுவர் தங்களொடு
புறவில் ஆன்நிரை புரந்திடும்
உன் பிறப்பும் ........
மன் பிறப்பில் உயர் குருகுலத்தவர்தம்
வாய்மைதானும் ஒருமாசுஇலா
என் பிறப்பும் ..........
— வில்லிபாரதம்: கிருட்டிணன் தூது: 119: பக். 354.

தருமனிடத்திருந்து, போர் அறம் கருதித் தூது வந்த கடோற்கசனோடு, தக்கப்படி உரையாட இயலாமல் அவனை அரக்கி மகன் என்று இகழ்கிறான்.[42அ]

கண்ணனை இகழ்ந்தது போலவே, பிறப்பின் தாழ் நிலையைச் சுட்டி, விதுரனைப் பொதுமகள் மகன் என இன்சொல் சொல்லி இகழ்கிறான். தனக்குப் பொருள் நல்லுவார் நல்லும் பொருள் மிகுதிக்கேற்ப அவரவரை முயங்கும் பொதுமகள் ஈன்றமைந்தனும் தாய்போனும் இயல்பினைத் தனக்கு உற்றார் செய்த உதவி மறந்து மற்றையார்பால் அன்பு காட்டுவான் என்று உலகியல் மீது வைத்துக் கூறுவான் போல் கூறி விதுரனை மிகக் கடுமையாக இகழ்கிறான்.[43]

---

42. வில்லிபாரதம்: 15ம்போர்ச் சருக்கம்-47. பக்.550. மர்றே பதிப்பு (1959)
42அ வில்லிபாரதம்: 13ம்போர்ச் சருக்கம்-242. பக்.503. மர்றே பதிப்பு (1959)
43. வில்லிபாரதம்: கிருட்டிணன் தூதுச் சருக்கம்-126. பக்.355. மர்றே பதிப்பு (1959).

அறக்கடவுள்[43அ] என்ற பெயர் பெற்ற வீரன் தன் பொறுமையிழந்து, துரியோதனன் சொன்ன சொல்லைத் தாங்கமாட்டாது,[43ஆ] "சொன்ன வாய் குருதி சோர வாள் கொடு துணித்து நின் முடி துணிப்பன் யான்"[44] என்று கூறிக் கடுஞ்சினம் கொள்ளும் அளவிற்கு, மிகக் கொடுமையாக நடக்கிறான் துரியோதனன். பிறவிச் செருக்கைப் பற்றிக் கொண்டு சாதிக் கொடுமை, மைந்தனைத் தந்தை சொல்லை புரிவதாகக் கூறும் அளவிற்குத் தன் இயல்பைப் புலப்படுத்துதற்கு இஃது ஓர் எடுத்துக்காட்டு.

துரோணன் அந்தண குலத்தவன் ஆயினும் போர்க்கலையில் தனக்கு உவமை இல்லாதான் என்னும் புகழ் பெற்றவன்.[45] போர்க்களத்தில் தருமனையும் அவனுடைய படைகளையும் புறங்கண்டு பெருமிதம் உற்று நின்ற வேளையில்,[45அ] மரீசி, அகத்தியர் முதலிய முனிவரர் பலர் வந்து, அரசகுலத்திற்குரிய பெருமிதம் அந்தணனாகிய துரோணனுக்கு ஆகாது என்று எடுத்துரைக்கின்றனர். மறை நூலறிவும், அதனாற் பெறும் தெளிவும், அதனாற் பெறும் தவமும், அதனாற் பெறும் ஞானமும், அதனாற் பெறும் மெய்யுணர்வுமே முனிவரர்க்கு உறுதிபயப்பனவென்றும் பகைவரைச் செருக்கும் போரும், அதற்குரிய வலிமையும், அதனாலடையும் வாழ்வும் அரசர்க்கே இயற்கையாவன; அந்தணர்க்கு அவை ஆகா; ஆதலின் பல துறைகளில் வல்லவனாயினும், அந்தணர்க்கு இயற்கையாவனவற்றை மேற்கொள்ளலே முறையென்றும் அரசர்க்குரிய வில்லும், கணையும், வாளும், குதிரையும், களிறும், தேரும் ஆகிய இவற்றொடு வெஞ்சினமும் வேண்டா வென்று விலக்குக என்றும் அறிவுரை கூறுகின்றனர். புறத்தில் கலகம் செய்யும் பகைவரை வெல்வதினும் அகத்தின் சலந்தம் நீங்கி உணர்வால் ஒன்றுபடலே அவனுக்கு முறையென்றும் எடுத்தியம்புகின்றனர்.[46]

43அ. வில்லிபாரதம்: வாரணாவதச் சருக்கம்-53.பக்.48.மர்ரே பதிப்பு (1959)
43ஆ. Bavan's Journal Vol. XV. No.21. Page 53 May 18, 1969.

44. வில்லிபாரதம்: கிருட்டினன் தூதுச் சருக்கம்: 127.பக்.355. மர்ரே பதிப்பு (1959)

45. வில்லிபாரதம்: முதற்போர்ச் சருக்கம்-13.பக்.388. மர்ரே பதிப்பு (1959)
45அ. வில்லிபாரதம்: 15ம்போர்ச் சருக்கம்-11-12.பக்.544. மர்ரே பதிப்பு (1959)

46. வில்லிபாரதம்: 15ம்போர்ச் சருக்கம்-14,15.பக்.544. மர்ரே பதிப்பு (1959).

துரியோதனன், சல்லன் ஆகியோர் போலச் செருக்கால் இகழ்வில்லை என்றும், அவ்வம்மரபுக்குரிய வாழ்வைக் கடைப்பிடித்தலே முறையென் முனிவரர் அறிவுறுத்தும் அறிவுரையில், ஒருமரபுக்குரிய வரம்பு கடந்து செல்வது அக்குலத்தினைத் தாழ்த்துவதோடு தம்மையும் தாழ்த்துவதாகும் என்றும் கருத்து மறைந்து கிடத்தல் காணத்தக்கது. அவ்வம்மரபுக்குரியனவற்றைப் பேணிச் செல்வின் அமையுமெனக் கூறும் கருத்தில், தொன்றுதொட்டு வரும் வழக்கங்களைப் போற்ற வேண்டும் என்ற எண்ணமிருத்தல் தெளிவாகும்.

வேட்டுவ வடிவங் கொண்டு அருச்சுனனொடு பொர வந்த சிவபிரான், நால்வகை வருணங்களையும் குறிப்பிட்டு, அருச்சுனன் அந்நான்கு வகை வருணங்களுள் எதனைச் சார்ந்தவன் என்று வினவுகிறான்.[46அ]

பாண்டவர் பக்கத்தவனான சோமன், அசுவத்தாமனை வெளிப்படையாகவே இகழ்கிறான். சல்லன் துரோணனை இகழ்ந்தது (பன்னிரண்டாம் போர்-84) போலச் சோமன், அந்தணர், படை வன்மைக்கு ஆகாதவர் என்று கூறி அசுவத்தாமனை இகழ்கிறான். வேதநெறி கடைப்பிடித்து வேள்விகள் புரிந்து ஏனைவர் பாவமுந் தீர்ப்பது அந்தணர் கடமை; அவர் மரபுக்குரிய அக்கடமையினின்றும் நெகிழ்ந்து கூரிய போர்ப்படைகள் பல தாங்கி வன்மை தோன்றப் போர்த்திறம் காட்டும் வல்லமை உடையர் அல்லர் அவர் என்று இகழ்கிறான்.[47]

அரசகுல மரபுக்குரிய ஒன்றை அம்மரபுக்குரியரல்லாதார் மேற்கொள்ளுங்கால், அவர் மரபுக்கே உரிய கடமை (அஃது எத்துணை உயர்ந்ததாயினும்) எள்ளற்குரியதாகின்றது என்பது இதனால் விளங்கும். அன்றியும், தொன்றுதொட்ட மரபுகள் தொடர்ந்து நடத்தல் வேண்டும் என்ற நினைவோட்ட உட்கிடக்கையும் புலனாகும்.

சாதி உயர்வு மனப்பான்மை, புராண நிகழ்ச்சி வாயிலாகவும் வில்லி-பாரதத்துள் காட்டப்பட்டுள்ளது.

46அ. வில்லிபாரதம்: [illegible] சருக்கம் அருச்சுனன் தவநிலைச் சருக்கம்: 96 பக். 203. மர்ரே பதிப்பு (1959)

47. வில்லிபாரதம்: பதினேழாம் போர்ச் சருக்கம்: 122. பக். 588 மர்ரேபதிப்பு (1959).

இந்திரன், தன்னோடு அருச்சுனனை உடன் இருத்தி அமுதுண்ணும் பொழுது இந்திராணி சினமுற்று மானுட மன்னன் ஒக்க உண்ணல் தகாது என்று கூறுகிறாள்.[48] அருச்சுனன் மாயோனுக்கு மைத்துனன்; சிவபிரானோடு போர்புரியும் திறல் உடையவன், அவனைப் பெருமையில்லாத மனிதன் என இகழ்தல் தகாது என்று கூறி இந்திரன் அவளை அமைதிப்படுத்துகிறான்.[49] மாயோனுக்கு மைத்துனனாகிய அருச்சுனனின் வருகைக்குக் காரணம் உள்ளது. அவனை எளியனாகக் கருதலாகாது என்று இந்திரன்பால் தேவர் அருச்சுனனைப் போற்றி உரைக்கின்றனர்.[50]

அருச்சுனனோ, தான் இந்திரனோடு ஓராசனத்தில் சமமாக அமர்தல் தகாது என்கிறான். அவனால் முடிசூடப்பெறுதலும் தனக்குப் பொருந்தாது என்று தாழ்வு மனப்பான்மை கொள்கிறான்.[51] இந்திரன் அவனது தாழ்வு மனப்பான்மையைப் போக்கும் வகையில், சிவபிரான், அக்கினி, பிரமன் முதலிய தெய்வங்களால் அவன் பெற்ற நலன்களை எடுத்துக் கூறியும் அவன் தேவர்கட்குச் சமமானவனே என்று மேம்படுத்திக் கூறியும் அவனை உச்சப்படுத்துகிறான்.[52] தனக்கொரு வரம் நல்க வேண்டுமென்று இந்திரன் அருச்சுனனை வேண்டியபொழுது, தேவர்க்கு மானுடர் செய்யத் தக்கதும் உண்டோ என்று வியந்து மீண்டும் தன் தாழ்வு மனப்பான்மையைப் புலப்படுத்தி, வரம் வேண்டுதலும் தன்னைனால் கொள்ளுவதே தன்னிலைக்குத் தகுதியுடையதாகும் என்று அவன் தாழ்ந்து நிற்கிறான்.[53]

இந்திரன் வேண்டுகோளின்படி நிவாதகவசரை எதிர்த்துப் பொருதற்குப் போர்க்கோலம் கொண்ட அருச்சுனனை வானவர் மகளிர் பார்த்து, முப்பத்து முக்கோடி தேவரும் வெல்ல ஒண்ணாதை அரக்கரை மானுடன் வெல்ல நினைவது அறியாமை என்று எள்ளி நகையாடுகின்றனர்.[54]

48. வில்லிபாரதம்: நிவாதகவசர் காலகேயர் வதைச் சருக்கம்-6.பக்.214. மர்ரேபதிப்பு (1959)
49. வில்லிபாரதம்: நிவாதகவசர் காலகேயர் வதைச் சருக்கம்-7.பக்.214. மர்ரேபதிப்பு (1959)
50. வில்லிபாரதம்: நிவாதகவசர் காலகேயர் வதைச் சருக்கம்-8.பக்.215. மர்ரேபதிப்பு (1959)
51. வில்லிபாரதம்: நிவாதகவசர் காலகேயர் வதைச் சருக்கம்-9.பக்.215. மர்ரேபதிப்பு (1959)
52. வில்லிபாரதம்: நிவாதகவசர் காலகேயர் வதைச் சருக்கம்-10,11.பக்.215. மர்ரேபதிப்பு (1959)
53. வில்லிபாரதம்: நிவாதகவசர்: காலகேயர் வதைச் சருக்கம்-13. பக்.215. மர்ரேபதிப்பு (1959)
54. வில்லிபாரதம்: நிவாதகவசர் காலகேயர் வதைச் சருக்கம்-23 பக்.216. மர்ரேபதிப்பு (1959)

ஒருபுறம் தேவர் மானுடனை (அருச்சுனனை) இகழ்கின்றனர் என்
பிறிதொருபுறம் தேவர், மானுடர் இருவரையும் அரக்கர் இகழ்கின்றனர். பூனை என்ற புலிக் கூட்டத்தை எதிர்க்க ஆசைப்படுவது போல், மானுடன் ஒருவன் வந்து அரக்கர் கூட்டத்தை எதிர்ப்பதா என்று எள்ளுகின்றனர். மானுடனின் போர் முலம் அந்திரருக்கும் அழிவு வந்தது என்று பொய்மிதம் கொள்ளுகின்றனர்.[55] காலகேயர் என்னும் அரக்கர் கூட்டத்தார், மண்மீது வாழும் மானுடர், தம்மால் புல்போல மதிக்கத் தக்கார் எனவும், புலியைக் கண்ட மான்கூட்டம் போல், தம்மைக் கண்டு மலைக் குகைகளில் ஓடி ஒளிந்த கொள்ளும் தேவர் சொல் கேட்டு, தம்மை எதிர்க்கவந்தது ஏனோ எனவும் அருச்சுனனை எள்ளுகின்றனர்.[56]

போர்க்கோலம் பூண்டு, நிவாதகவசர் முன் நின்ற அருச்சுனன், போர்க்களம் வந்து, போரிட முனைந்து, தான் பகைவர்க்கு அஞ்சிப் புறங்காட்டி ஓடிய விண்ணகத்து உறையும் வீரர் போன்றவன் அல்லன் என்றும், பகைவர் மேனியைப் பொடியாக்கிய பின்றே போர்க்களம் விட்டுச் செல்வான் என்றும் வஞ்சினம் மொழிகின்றான்.[57] தேவர்பால் தாழ்ந்த அன்புடைமை மேற்கொண்ட அருச்சுனன், தேவரை அச்சுவிக்கும் அரக்கரைத் தான் அச்சுவிப்பன் என்ற வீரம் பகர்கின்றான்.[58]

வீரம் பகன்றதற்கேற்ப அருச்சுனன், அரக்கரை வென்று தேவர்தம் அச்சம் போக்குகின்றான். அருச்சுனனின் வெற்றியைப் பாராட்டி, யானை மீது ஏற்றி அவனை நகர் உலாச் செய்து இந்திரன் அழைத்து வந்த போது, விச்சையன் ஒருவன் அதனைப் பொறாது, "பொய்யுடைத் தவத்தோர்க்கு இன்ன பொறைக்குமோ" (வில்லிபாரதம்: நிவாதகவசர் காலகேயர் 150) என்று வினவுகின்றான். தேவர்க்குரிய பகை நீக்கி, அச்சம் தவிர்த்து அரண் நல்கிய பிறகும் தேவருள் ஒருவனாகிய விச்சையன், மானுடனுக்குச் சமநிலை ஆகாது என்கின்றான். அந்த விச்சையனைத் தெளிவுறுத்தற்பொருட்டு, இந்திரன் சிறந்த கருத்சொல் சொல்கின்றான்.

---

55. வில்லிபாரதம்: நிவாதகவசர் காலகேயர் வதைச் சருக்கம்-47. பக். 219 மர்ரே பதிப்பு. (1959)
56. வில்லிபாரதம்: நிவாதகவசர் காலகேயர் வதைச் சருக்கம்: 122. பக். 229 மர்ரே பதிப்பு (1959)
57. வில்லிபாரதம்: வேத்திரகீயச் சருக்கம் பக். 221 மர்ரே பதிப்பு (1959)
58. வில்லிபாரதம்: வேத்திரகீயச் சருக்கம்: 123. பக். 229 மர்ரே பதிப்பு (1959).

தேவர், மனிதரைப் பற்றிக் கொண்டிருந்த இழிந்த மனப்பான்மையைப் போக்க, மனிதரைத் தேவர் போல் உயர்ந்தவராக ஆக்கிக் காட்டுகிறான். தேவர் துயரும், நிலமகள் துன்பமும் தீர்ப்பதற்குப் பிறந்த இராமன் போல, அருச்சுனனும், இராமனின் செய்கை செய்யவே பிறந்துள்ளான் என்று அவனை இராமனோடு ஒப்பிட்டுக் கூறி மேம்படுத்துகிறான்.[59]

மானுடர், தேவர், அரக்கர் பற்றிய உயர்வு இழிவுகள் வீமனைப் பற்றி வரும் நிகழ்ச்சிகளிலும் சொல்லப்பட்டிருக்கின்றன.

தன் தங்கை, வீமன்பால் காதல் கொண்டுள்ளதைத் தெரிந்த இடிம்பன், அரக்கர் மகளிர்க்கு மானுடவர் மணம் புரியத் தகுதியற்றவர் என்று இகழ்கிறான்.[60] வானவர் மகளிரைக் காதலிக்க நேர்ந்ததன் மூலம் அரக்கர் கையால் மடிந்து விண்புகுந்த வானவர் மகளிரைக் கூடுக என்று எள்ளி, மனிதனாகிய வீமனையும், தேவர்களாகிய வானவர்களையும் ஒருசேர இகழ்கிறான்.[61] மனிதனாகிய வீமன் தனக்கு ஒத்த பகைவன் அல்லன் என்றும் ஆதலால் அவனோடு போரிடல் ஆகாது என்றும், ஆளரி அற்பப்புலையோடு போரிட நினையாது என்றும் செருக்குற்றுக் கூறுகிறான்.[62] உணவுப் பொருளாகக் கொன்று தின்ன வேண்டிய மனிதனை, உள்ளம் நெகிழ்ந்து, உவகை ஆசையோடு கணவன் என்று காதலித்தல் தகாது என்றும், அரக்கர் கடன் பிழைத்தல் ஆகாது என்றும் தன் தங்கையைச் சாடுகிறான்.[63] வயிற்றுக்கனல் அவிந்து, காமக்கனல் காரணமாகக் கொல்லவல்ல பெண்புலி, அச்சி ஒடும் ஆண்மானை நயப்பது போலும் என்று தன் தங்கை எற்றத்தையும், வீமன் இழிவையும் தன் தங்கைக்கே எடுத்துரைக்கிறான். தன் மனநிலையைப் புலப்படுத்த வந்த இடிம்பியும், வீமனைக் கொல்லுங் கடமையை விடுத்து, அவன்

---

59. வில்லிபாரதம்: நிவாதகவசர் காலகேயர் வதைச் சருக்கம்: 151, 152. பக். 232-33. மர்ரே பதிப்பு (1959)
60. வில்லிபாரதம்: வேத்திரகீயச் சருக்கம்: 11. பக். 62. மர்ரே பதிப்பு (1959)
61. வில்லிபாரதம்: வேத்திரகீயச் சருக்கம்: 11. பக். 62, மர்ரே பதிப்பு (1959)
வில்லிபாரதம்: ஆதிபருவம்: வேத்திரகீயச் சருக்கம்-15. பக். 229 வை.மு.கோ. பதிப்பு (1963)
62. வில்லிபாரதம்: வேத்திரகீயச் சருக்கம்: 11. பக். 62. மர்ரே பதிப்பு (1959)
63. வில்லிபாரதம்: வேத்திரகீயச் சருக்கம்: 10. பக். 62. மர்ரே பதிப்பு (1959)

பால் இன்பமயக்கம் உள்ளது கூறித் தன் அன்னை கூறிய கருத்தைக் கூறி அறன் செய்கிறான்.[64]

வேத்திரகீயத்தில் வாழ்ந்த அந்தணர்களைத் தான் விரும்பியவாறு கொன்று அலைக்கழித்த பகன் என்னும் அரக்கனை வீமன் கொன்றொழித்த வரலாற்றிலும் அரக்கர் மாண்டர் உயர்வு தாழ்வுகள் கூறப்பட்டுள்ளன. தனக்கென்று அமைந்த உணவை, வீமன், சிறிதும் அச்சமும் கவலையுமின்றித் தின்றுக் கொண்டிருந்ததைக் கண்ணுற்ற பகன், புலியின் உணவாகச் செப்பப்பட்டப் பெற்ற இறைச்சியைப் பூனை தின்பது போலத் தின்னலாகுமோ[65] என்று இகழ்ந்து அவன் மீது பாய்கிறான்.

வீமன் அரக்கனின் சொற்களைப் பொருட்படுத்தவில்லை. "வெம்மொழி கூறல் விடுத்து, வீரத்தையும் வல்லமையையும் புலப்படுத்து! நானும் வீண்சொற்கள் கூற விரும்பவில்லை. நீ அரக்கன்; நான் மனிதன், உனது தொழில்கள் அனைத்தையும் காட்டி, என்னிடம் போர் புரிந்து வெல்லும் நெஞ்சம் உனக்குண்டேல் வந்து பொரு; முன்னர் இடிம்பனைக் கொன்று வந்தேன்; இப்போது உன்னைக் கொல்ல வந்திருக்கிறேன்" என்று தன் இருகைகளையும் கொட்டித் தோள் தட்டி எதிர் நெடுமொழி பகர்ந்து, அரக்கனுக்கு (மனிதனாகிய) தான் இளைத்தவன் அல்லன் என்கிறான்.[66]

பகனைக் கொன்றமையால், உலகைப் படைத்த பிரமன் தோன்றிய உந்தியுடைய திருமால் இவன் என அவர் வீமனைப் புகழ்கின்றனர்.[67]

இடிம்பன், பகன் இருவரையும் வென்றது போலவே, திரௌபதி விரும்பிய தெய்வமலரைக் கொணர்தற் பொருட்டு வீமன் மேற்கொண்ட யாத்திரையின் போது,

64. 1. வில்லிபாரதம்: வேத்திரகீயச் சருக்கம்-5. பக்.61. மர்ரேபதிப்பு(1959)
2. வில்லிபாரதம்: வேத்திரகீயச் சருக்கம்-14. பக்.62. மர்ரேபதிப்பு(1959)
3. வில்லிபாரதம்: வேத்திரகீயச் சருக்கம்: 15. வை.மு.கோ. விளக்கம். பக்.229 வை.மு.கோ. பதிப்பு (1963)

65. வில்லிபாரதம்: வேத்திரகீயச் சருக்கம்-53. பக்.70. மர்ரேபதிப்பு (1959)

66. வில்லிபாரதம்: வேத்திரகீயச் சருக்கம்-55, 56. பக்.71. மர்ரேபதிப்பு (1959)

67. வில்லிபாரதம்: வேத்திரகீயச் சருக்கம்-63. பக்.73. மர்ரேபதிப்பு (1959).

அவனுக்கு இடையூறு விளைக்க முற்பட்ட அரக்கரை அவன் வென்ற வரலாறு கூறப்படுகிறது.

புண்டரீகன் என்னும் அரக்கன், வீமனைக் கண்டபோது, "நான் வாழும் காட்டில் தேவரும், தானவரும் அணுகார்; மானுடனாகிய நீ இங்கு வந்தது சுவை மிக்க உன் ஊனை எனக்குத் தருதற்குத் தானோ" எனத் தேவரையும் தானவரையும் மானுடரையும் ஒரு சேர இகழ்கிறான்.[68]

மலர் இருந்த பொழிலைச் சார்ந்து நின்ற அரக்கர் வீமனைக் கண்ணுற்றபோது, "இந்திரன் முதலாக உள்ள தேவர்களும், இந்த மண மிக்க சோலையைக் காண விழையும் நினைப்பிலும் நைந்து போவார்; மதியில்லாத மானுடா! நீ இங்கு வந்தது ஏன்? உன் ஆவி சிந்துவதற்கு முன் சொல்" என்று அதட்டித் தேவரையும் மானுடரையும் இகழ்கின்றனர்.[69]

எதிர்த்த அரக்கரெல்லாம் வீமனின் வீரத்திற்கு இரையாகிய பின்னர், குபேரனிடம் ஓடி முறையிட்ட காவலாளர் வீமனின் செய்கையைக் குறிப்பிட்ட சொற்களிலும், அவர் சொல் செவியுற்ற குபேரனின் சிரிப்பிலும், சினத்திலும், வீமனைக் கொல்லாது, பிடித்துக் கொணர்க எனத் தானைத் தலைவனுக்கு அவன் இட்ட கட்டளையிலும் மானுடரை இகழும் இகழ்ச்சி காணப்படுகிறது.[70]

தன்னை எதிர்க்க வந்த அரக்கர் அச்சுறுத்தி இகழ்ந்தபோது, வீமன், அரக்கர் குலம் மாய வந்த வீரனாகிய இராமன், மனிதனா? வானவனா? என வினவி, மானுடர்க்கும் (ஒருவாறு) தேவர்க்கும் ஏற்றம் உண்டு என அவர்க்குப் புலப்படுத்துகிறான். அவரை ஒழித்துப் பெற்ற வெற்றியால், மானுட வல்லமை பிறர் வல்லமைக்குத் தாழ்ந்தது அன்று என்று நிறுவிக் காட்டுகிறான்.

குபேரனின் ஏவலால் தன்னைப் பிடிக்க வந்த கஞ்சோடனையும் அவனுடைய படைகளையும் புறங்கண்டு பெற்ற வெற்றியாலும் மானுட ஏற்றத்தை நிலை நிறுத்துகிறான்.

---

68. வில்லிபாரதம்: முண்டகச் சருக்கம்-74. பக்.246. மர்ரே பதிப்பு (1959)
69. வில்லிபாரதம்: முண்டகச் சருக்கம்-75. பக்.248. மர்ரே பதிப்பு (1959)
70. வில்லிபாரதம்: முண்டகச் சருக்கம்-108-110. பக்.250. மர்ரே பதிப்பு (1959).

சங்கோடணன், வீமன் வல்லமையை, எடுத்தியம்பிய சொற்களிலும், மானுட ஏற்றம் (தெய்வத்தோடு ஒப்பக் கொள்ளப்பட்ட நிலை) புலப்படுகிறது.[71]

வீமன் விரும்பியவற்றை உடன் நல்கி அவனிடம் பண்பும் நட்பும் காட்டாவிடின், இயக்கர்புரம் முழுதும் விண்புகும் என்று அச்சுறுத்திய சொற்களிலும் மானுட ஏற்றம் தெளிவு படுத்தப்பட்டுள்ளது.[72]

குபேரன் ஏவலால், வீமனின் வேட்கையை நிறைவு செய்ய வந்த அவனுடைய மகன் உருத்திரசேனனுக்கு வீமன் தன்னைப் பற்றியும், தான் வந்த நோக்கம் பற்றியும் கூறிய கூற்றிலும், அதுகேட்ட உருத்திரசேனன் வியந்த வியப்பிலும், வீமன் வேண்டியதை நல்கிய சோலைப் பற்றியும் மானுட ஏற்றம் விளக்கமுறுகிறது.[73]

யாரும் அறியாத போது, திரௌபதியைக் கவர்ந்து சென்ற சடாசுரனை வீமன் வதைத்த வரலாற்றிலும் மானுட ஏற்றம் குறிப்பிடப்பட்டுள்ளது. இடிம்பன், பகன், புண்டரீகன் ஆகியோரும், ஊளசேசன் நகரில் தன்னை எதிர்த்த அரக்கர் அனைவரும் உற்ற நிலையை உனக்கும் நல்குவேன் என்று கூறி அவனைச் சொன்ன மானுட ஏற்றத்தை நிறுவிக் காட்டுகின்றன், வீமன்.[74] வெள்ளிமால் வரை கொண்டு, இராவணனை ஈசன் நலிந்தது போல் சடாசுரனின் உடம்பை வீமன் அரைத்தான் என்பதுபோல வரும் உவமைகள் தேவரோடு மானுடர் ஒத்தனர் என்பதைப் புலப்படுத்தும்.[75]

வீமன் மீண்டும் அளகாபுரி சென்று, குபேரனின் தானைத் தலைவனை வதைத்ததைக் கூறும் மணிமான் வதைச் சருக்கமும் மானுட ஏற்றத்தைக் குறிப்பிடுகின்றது. மணிமான் வீமனை இழித்துரைத்ததும் பிறகு அவனொடு பொருது உயிரிழந்ததும், பாண்டவர் வரலாறு கேட்டுக் குபேரன் சினந்தணிந்ததும், தன் அனுமதி பெறாமல் சென்ற வீமனைத் தேடி அளகாபுரி சென்ற தருமன் குபேரனிடத்துப்

---

71. வில்லிபாரதம்: முண்டகச் சருக்கம்: 117. பக். 251. மர்ரேபதிப்பு (1959)
72. வில்லிபாரதம்: முண்டகச் சருக்கம்: 118. பக். 251. மர்ரேபதிப்பு (1959)
73. வில்லிபாரதம்: முண்டகச் சருக்கம்: 122, 123, 124: பக். 252. மர்ரேபதிப்பு (1959)
74. வில்லிபாரதம்: சடாசுரன் வதைச் சருக்கம்: 12. பக். 257. மர்ரேபதிப்பு (1959)
75. வில்லிபாரதம்: சடாசுரன் வதைச் சருக்கம்: 15, 16. பக். 258. மர்ரேபதிப்பு (1959).

பணிந்தொழுகியதனால், குபேரன் அன்பு பாராட்டுதலும் ஆகிய செய்திகள் மாறனார் பெருமையை விளக்குவனவாகும்.[76]

புராண, காவிய நிகழ்ச்சிகளும் பாத்திரங்களும் உள்ளவாறே உண்மையான வரலாறுகளாகவும் வரலாற்று மாந்தர்களாகவும் கொள்ளத்தக்கன அல்ல. எனினும், அந்நிகழ்ச்சிகளும், பாத்திரங்களும் தொல் பழங்கால வரலாற்றைத் துருவிக் காண்பதற்கு உதவுவன. புராண, காவிய நிகழ்ச்சிகள் திட்டமான வரலாற்று நிகழ்ச்சிகள் ஆகாவெனினும், வரலாற்றுக்குரிய சாயல்கள், நிழல்கள் அவற்றில் உள்ளன என்று ஆய்வாளர் கருதுகின்றனர்.[77] புராணக் கூறுகளாக, மக்களிடையே, அவர்தம் நினைவில் வாழும் கதைகளில் வரலாற்றிற்குரிய அடிச்சுவடுகள் உண்டு. பழங்கால மனிதன் காரண காரியத் தொடர்பு அறியாதவனாய், அறிவுக்கும் உணர்வுக்கும் வேறுபாடு காணாதவனாய்த் தன்னைப் பற்றியே பற்பல கதைகளை வழங்கி வந்தான். அவற்றுள் பல்வகை வரலாற்றுக் கூறுகள் தென்படுகின்றன. இக்கதைகள் மனிதகுலத்தின், பண்பாட்டு, வரலாற்று சமயப் பின்னணிகள் காணக் கூடும் என்று அறிஞர் அவற்றைப் பாடுபட்டுத் தருகின்றனர். இத்துறையில் முன்னேற்றம் மெல்லவே நடந்து வருகிறது; கூரிய நோக்கும் நிறைவேறி உண்மைகளைக் கண்டறிவதற்குள் பல தலைமுறைகள் சென்றுவிடலாம். ஆயினும் உண்மை காணும் கருத்தோடு செய்யப்படும் ஆராய்ச்சிகள் தக்க அடித்தளமாக அமையும் வகையில் இன்றியமையாதனவாகும் என்று எடுத்துரைக்கின்றனர்.[78]

புராணங்களை ஆய்வோர், அவற்றில் உள்ள கதைகளை வேடிக்கைக் கதைகளாகக் கருதுதல் பிழை. ட்ராய் நகரத்தைப் பற்றிய கதைகள் கிரேக்க வரலாற்றை விரித்தெழுதுவதற்குப் பயன்பட்டன. புராணங்களைத் தக்கவாறு ஆராய்ந்தால், தொல் பழங்கால வரலாற்றிற்கும், வரலாற்றுக் காலத்திற்கும் இடையே உள்ள தொடர்பை நன்கு அறியலாம்; மனிதர் பலர் எவ்வாறு தெய்வநிலைக்கு

76. வில்லிபாரதம்: மணிமான் வதைச் சருக்கம்: 26, 27, 33-39, 41-49, 60-64, 94-104.
வில்லிபாரதம்: மர்ரே பதிப்பு: பதிப்புரை. பக். 50 (1959)
வில்லிபாரதம்: மணிமான் வதைச் சருக்கம்: 112. உரை பக். 386. வை.மு.கோ. பதிப்பு (1964).

77. Jawaharlal Nehru: Glimpses of World History. Page 22 (1975).

78. Egerton Sykes: Introduction to Everyman's Dictionary of Non Classical Mythology. Page IX (1965).

உயர்ந்தனர் என்று தெளியலாம். புராணக் கதைகளின் அடிப்படைக் கருத்தைத் தவறாகப் புரிந்து கொள்வதனால்தான் அவற்றைப் பொருட்படுத்தாத மனநிலை ஏற்படுகின்றது.[79]

கிரேக்க, ரோம நாட்டுப் புராணக் கதைகள், இத்தாலிய மறுமலர்ச்சியின் போது, மேற்கு நாடுகள் முழுதும் பரவின. [illegible], கவிதை, கலை, பழைய வைத்தியங்களைப் பயிலல் ஆகிய துறைகளில் புத்துணர்ச்சி பிறந்தது. இந்திய நாட்டுப் புராணங்கள், மகாபாரதம், இராமாயணம், அவை போலும் பிற பெருங் காவியங்கள் அத்தகைய விளக்கம் பெறாமல் போயினமை வருந்தத்தக்குரியது. அவற்றிலுள்ள கதைகள், பழமை பற்றிய செய்திகள், ஆகியவை, அவற்றின் தோற்றம் பற்றிய நோக்கம் புலப்படுமாறு ஆராயப்படாவிடில், ஏற்கெனவே மிகுதியும் அழிவை நோக்கிச் சென்று கொண்டுள்ள இந்த சமயம், சில தலைமுறைகளுக்குப் பின், வேதகால மக்களின் பழம் பெருமை பற்றிய புதிய செய்திகள் எவையும் கற்போர்க்கு எட்டாமல் ஒழிந்து போகும்.[80]

அருகருகே உள்ள நாடுகளிலும், தொலைவில் உள்ள நாடுகளிலும் தோன்றிய புராண நூல்கள் ஒன்று போல் விளங்குவதை ஆராய்ந்தால், தொல் பழங்காலத்தில் மன்பதை, பற்பல பண்பாடுகளை ஒன்றோடு ஒன்று விரவி வளர்த்த உண்மையைக் கண்டறியலாம். எச்சமயமும் தனக்கெனத் தனித்தன்மையின்றி, தனக்கு முன் வழங்கிய ஒன்றினின்று முகிழ்த்தும், தன் காலத்து வழங்குபவற்றுள் வேண்டுவன கொண்டும் வளர்ந்துள்ள செய்தியினின்றும் அவ்வுண்மையை அறுதியிடலாம். புராண நூல்களின் அடிப்படையில் சமய அமைப்பு முறைகளை ஆய்தல் என்றோ ஒருநாள் நடைபெறுதல் இயலும். அவ்வாய்வின் பயன் விந்தை மிக்க விளைவுகளை நல்கும்.[81]

புராண ஆய்வாளர்களின் இத்தகைய கருத்துகளைக் கொண்டு, தேவர், அரக்கர் மானுடர் என்னும் சொற்களால் குறிக்கப் பெறுவோர்தம் நிலைகளையும் அவர்களுக்கிடையே இருந்த அறன் (ஒற்றுமை) முறன் (இகல்) போட்டி, பகல், உயர்வு

---

79. Egerton Sykes: Introduction to Everyman's Dictionary of Non Classical Mythology. Page XIV. (1965 ).
80. Egerton Sykes: Introduction to Everyman's Dictionary of Non Classical Mythology. Pages XIV [redacted](1965 ).
81. Egerton Sykes: Introduction to Everyman's Dictionary of Non Classical Mytnology. Pages XIV & XV (1965 ).

தாழ்வு முதலியவற்றையும் சூழ்ந்த நோக்கின், தொல் பழங்காலத்திலும் வரலாற்றின் துவக்க காலத்திலும் பல்வேறு மைந்தர், தனித்தனிக் குழுக்களாகவும் கூட்டங்களாகவும் இருந்து, அவ்வப்போது, முரண்டும் ஒற்றுமையுற்றும், கலந்தும், பிரிந்தும், வாழ்ந்த சமுதாயப் பண்புகளே இவை தெரிவிக்கின்றன என்பது விளங்கும்.

நாகரிகம் முதிர முதிர, தத்துவம், சமயம் முதலிய துறைகளில் ஈடுபடுவோர், உடல் வன்மை, போர் முதலியவற்றின் அத்துணைச் கருத்துச் செலுத்தாமற் போவர். தம்முடைய நாகரிக முதிர்ச்சியை நோக்கப் பிறர் அத்தகைய நிலையை அடையாதது கண்டு அவரைத் தாழ்ந்தோராகக் கருதுவர். உடல் உரன், போர்த்திறன் ஆகியவை பெரியவை என மதித்து அவற்றைக் கலையாக வளர்ப்போர், தாம் தாழ்ந்தோராகக் கருதப்படுவதைப் பொறுத்துக் கொள்ள மாட்டார்கள். எனவே அவர்கட்கிடையே இகலும் பூசலும் நிகழ்ந்தே தீரும். தேவர், மானுடர், அரக்கர் என்போரிடம் உயர்வு தாழ்வுகள், போர்கள் என்பன தாம் தாம் பெரிய நாகரிகம் காரணமாகத் தம்மை மேம்படுத்தியும், பிறரை இகழ்ந்தும் பழகிய பழக்கத்தால், ஏற்பட்ட இனச் செருக்கு, சிறப்பு, தாழ்வு ஆகியவற்றை விளக்குவனவேயாகும்.[82]

புராண மரபால், நிவாதகவசர், காலகேயர் எனக் குறிக்கப் பெறுபவர் பாரத காலத்து வாழ்ந்த பழங்குடியினராதல் வேண்டும். தேவர்க்கும், அவர்க்கும் பகை என்ற புராணக் குறிப்பு, புதியராய் வந்த ஆரியர் அல்லது ஆரியர் போலும் இனத்தவர்கட்கும், முன்னமேயே இந்நாட்டில் வாழ்ந்த பழங்குடியினர்க்கும் நிகழ்ந்த இனக் காழ்ப்பை அடிப்படையாகக் கொண்டு எழுந்ததாகும்.

நிவாதகவசர் என்னும் சொல்லுக்குக் காற்றும் ஊடுருவிச் செல்ல இயலாத சட்டையினை உடையவர் என்று பொருள்; இதனால் அவர்தம் வீரமும் போர்க் கலைத் திறனும், தம்மைப் பேணிக் கொள்ளும் பொறுப்பும் புலப்படும். இந்திரனும், பிறதேவரும் இவர்க்கு அஞ்சியொழுகினர் என்னும் புராணச் செய்தி, போர் வன்மையில் இப்பழங்குடியினர் மேம்பட்டிருந்தனர் என்பதைப் புலப்படுத்தும்.

---

82. ரவீந்திரநாத் தாகூர்: ரவீந்திரர் கட்டுரைத் திரட்டு: பக். 230 ( 1964 ).

காலகேயர் என்பது காலகை என்னும் அசுர மகளிரின் மக்கள் என்று பொருள்படும். இது தாய் வழி வந்த பெயராதலின், இவர்கள் ஆரியரல்லாதார் எனப்பெறல் வேண்டும்.[83] நிவாதகவசரும் திதியின் மைந்தர் எனப் பெறுகின்றனர். (3:2:77 வை.மு.கோ.பதிப்பு பக்.174) எனவே காலகேயர் போல் இவரும் ஆரியரல்லாத பழங்குடியினராதல் வேண்டும். தைத்தியர் என்னும் சொல்லும் (3:2:23: வை.மு.கோ.பதிப்பு.பக்.143) திதியின் மைந்தர் என்னும் பொருள் தந்து நிவாதகவசரைக் குறிக்கின்றது.[84]

அரக்கரின் வருணனை வருமிடத்தெல்லாம் அவர்தம் உடல், நிறம், தோற்றம் முதலியன தவறாது விளக்கப்பட்டுள்ளன.

(1) "இருள் குழம்பால் எழில் பண்ணி யாக்கை வகுத்தன்ன பான்மையார்"

(2) "விண் முகிலைக் கவின் அழித்த மேனியர்"

(3) "உடம்பு பெற்றது ஓர் இருள் மகத்திலே"

(4) "முகில் எனத் தோன்றும் மேனியர்"

(5) "அஞ்சன மேகமோடு ஆலம் அளாவி வஞ்சனை கொண்டு வகுத்தன மெய்யாள்"

(6) "சூழ் இருட்பிழம்பு நக்க தோய்ந்தன்ன தவக்கர்"[85]

என்று வரும் தொடர்கள் அவர்கள் கரிய நிறத்தினை உடையவர் என்பதனைச் சுட்டுவன. இவை போலும் பிற (உயர்வு நவிற்சி) விளக்கங்கள், பாரத காலத்தில் வாழ்ந்த பழங்குடி மக்களைக் குறிப்பன எனலாம்.

---

83. ரவீந்திரநாத் தாகூர்: ரவீந்திரர் கட்டுரைத் திரட்டு. பக்.231 (1964)

84. வில்லிபாரதம்: ஆரணியபருவம்: நிவாதகவசர் காலகேயர் வதைச் சருக்கம்: அவதாரிகை. பக்.125. வை.மு.கோ.பதிப்பு (1964)
நிவாதகவசர் காலகேயர் வதைச் சருக்கம்: 28.பக்.148. வை.மு.கோ.பதிப்பு (1964)
நிவாதகவசர் காலகேயர் வதைச் சருக்கம்: 23.பக்.145. வை.மு.கோ.பதிப்பு (1964)

85. வில்லிபாரதம்: (1) நிவாதகவசர் காலகேயர் வதைச் சருக்கம்-33.
(2) நிவாதகவசர் காலகேயர் வதைச் சருக்கம்-32.
(3) வேத்திரகீயச் சருக்கம்-8.பக்.61
(4) நிவாதகவசர் காலகேயர் வதைச் சருக்கம்-38.பக்.218.
(5) முண்டகச் சருக்கம்-69. பக்.245
(6) முண்டகச் சருக்கம்-86. பக்.247 மர்றே பதிப்பு (1959)

எனினும், காலகேயர் என்னும் கூட்டத்தவர் நிறத்தினால் வேறுபட்டவராகக் காண்கின்றனர். அவர் நிறம் பொன்போலும் ஒளிவிடும் சிவந்த நிறம் எனப்படுகிறது.[86] அவர்களுடைய வனப்பு, அணிமணி அணிந்த தோற்றம் ஆகியவை அருச்சுனனை மிகவும் கவர்கின்றன. அவர் தம் தோற்றம் காரணமாகவே, அவரோடு பொருவது ஆகாது என்று தயங்குகிறான். "அவருடைய பற்கள் நிலவு போல ஒளி வீசுகின்றன; காதிலணிந்த குண்டலங்கள் அழகு வீசுகின்றன; மன்மதனை வென்ற அழகிய தோற்றமும் ஒளிமிக்க அணி விளங்கும் மார்பும் தேவர்க்கும் இல்லை. இவருடைய ஆவியை அழிப்பது என்ன பாவம்" என்று இரங்குகின்றான்.[87] காலகேயர்தம் மனைவியரும் அக்குலத்து மாதரும், அழகிய தோற்றம் உடையவர் என்று புலவர்தம் கவிக் கூற்றால் கூறுகிறார்.[88]

காலகேயர் தம் தாயரைக் குறிப்பிடுங்காலும் "கன்னங்கரிய குழல் காலகை" எனவும் "சாமர் சோதிப் பொன் அம் கொடி போல் எழில் கூர் நுண் இடைப்புலோமை" எனவும் அவர்தம் அழகிய தோற்றம் நன்கெடுத்துக் காட்டப்படுகிறது.

நிவாதகவசர், நிறம் தோற்றம் ஆ முதலியன கூறுங்கால், கருமையும் அழகற்ற தோற்றமும் உடையர் எனக் குறிப்பிடுதலும், காலகேயரைக் குறிப்பிடுங்கால் நேர் எதிர்மாறாகப் பொன்போலும் நிறமும் அழகுடைய தோற்றமும் கொண்டவர் எனக் குறிப்பிடுதலும், இவரையும் பொதுவாக அசுரர் என்று குறிப்பிடுவதையும் நோக்கின், பாரத காலத்தில் வாழ்ந்த (ஆரியரல்லாத) வெவ்வேறு குடியினரை இப்புராணக் கதைகள் சுட்டுகின்றன எனக் கொள்ளல் வேண்டும். அன்றியும் ஒரு சாரார், கரியர், அழகற்றவர் எனவும், பிறிதொரு சாரார் சிவந்தவர், அழகுடையார் எனவும் கூறுவதால், பின்னவர் ஈரினத்தவர் கலப்பால் தோன்றிய குடியினர் எனக் கொள்ளுவதும் பொருந்தும்.

எனினும், இவர்தம் (காலகேயர்) பிறப்பு வரலாற்றைக் கூறுங்கால், வேறுபடப் பொருதற்கு இவர்தம் தாயரே படைப்புக் கடவுளை நோக்கித்தவம்

---

86. வில்லிபாரதம்: நிவாதகவசர் காலகேயர் வதைச் சருக்கம்-109,110. பக்.227. மர்ரே பதிப்பு (1959)

87. வில்லிபாரதம்: நிவாதகவசர் காலகேயர் வதைச் சருக்கம்-119,120. பக்.228,229. மர்ரே பதிப்பு (1959)

88. வில்லிபாரதம்: நிவாதகவசர் காலகேயர் வதைச் சருக்கம்-145. பக்.232. மர்ரே பதிப்பு (1959)

89. வில்லிபாரதம்: நிவாதகவசர் காலகேயர் வதைச் சருக்கம்-106. பக்.227. மர்ரே பதிப்பு (1959).

செய்தனர்[90] என்று கூறித் தாம்வழிச் செல்வாக்கைக் குறிப்பிடுவதால் இவர் ஆரியரல்லாத (கலப்பினத்தவராயினும்) பழங்குடிச் மரபு வழியால் கடப்பாடுடையர் என்று கொள்வது பிழையாகாது.[91]

அரக்கரைப் பற்றிய விளக்கம் வருமிடங்களிலெல்லாம் அவர்தம் போர் வன்மையே மிகுதியாகக் கூறப்படுகிறது. எனினும், தம் இனநலம் கருதித் தவம் யோகம் முதலியன செய்யும் திறன் உடையராயிருந்தனர் என்ற குறிப்புகளும் உள்ளன.[92] தொடர்ந்த இடையறாத தவ முயற்சி உடையராயிருந்தனர், தொடர்ந்த தவம் செய்யும் உரிமை காரணமாக அதன் பயனால், எண்ணற்ற வரங்கள் உடையராயினர்.[93] தவ முயற்சி வரம் பெற்றுத் தந்தது[94] என்னும் குறிப்புகள், போர் வன்மையாகிய புற வளர்ச்சியோடு உள்ள, உயர் வன்மைக்குரிய தவம் யோகம், மந்திரம், முதலிய அக வளர்ச்சியும் உற்றவராய் அப்பழங்குடி மக்கள் திகழ்ந்தனர் என்பதைக் குறிப்பனவாகும்.

ஆரியர் வருகைக்கு முற்பட்ட நாகரிகத்தின் மேம்பாட்டை விளக்கப் போந்த ஆய்வாளர், சமயம், தத்துவம் யோகம் போன்ற துறைகளிலும் ஆரியரல்லாதார் சிறப்பாடுடையவராக விளங்கினர் என எடுத்துக் காட்டுகின்றனர்.[95] சமயம்,

---

90. வில்லிபாரதம்: நிவாதகவசர் காலகேயர் வதை: 107. பக். 227. மர்றே பதிப்பு.
91. வில்லிபாரதம்: நிவாதகவசர் காலகேயர் வதைச் சருக்கம்: 108. பக். 227. மர்றே பதிப்பு (1959)
 நிவாதகவசர் காலகேயர் வதைச் சருக்கம்: 108. வை. மு. கோ. விளக்கம்: பக். 192. வை. மு. கோ. பதிப்பு (1964).
 தக்கயாகப் பரணி பா. 260. உரை.
 அடிக்குறிப்புகள் 74-78 இங்குக் கருதத்தக்கவை. பக். 41 48
 வில்லிபாரதம்: ஆதிபருவம்: வேத்திரகீயச் சருக்கம்: 82. உரை விளக்கம். பக். 225. வை. மு. கோ. பதிப்பு (1963).
92. வில்லிபாரதம்: நிவாதகவசர் காலகேயர் வதைச் சருக்கம்-35. பக். 218. மர்றே பதிப்பு (1959).
93. வில்லிபாரதம்: முண்டகச் சருக்கம்: 88. பக். 247. மர்றே பதிப்பு (1959)
94. வில்லிபாரதம்: நிவாதகவசர் காலகேயர் வதைச் சருக்கம்-90, 92. பக். 225. மர்றே பதிப்பு (1959)
 நான்காம் போர்ச் சருக்கம்: 33, 34. வை. மு. கோ. விளக்கக் குறிப்பு. பக். 128 (1968)
 பதின்மூன்றாம் போர்ச் சருக்கம்: 206
 எட்டாம் போர்ச் சருக்கம்: 17, 18, 21, 22
 பதினைந்தாம் போர்-38.
95. S.K. Chatterji. Indo-Aryan and Hindu. Page 31-32.
 Quoted by Dr. M. Varadarajan: [illegible] page 334 (19[illegible])

தத்துவம் யோகம் போன்றவை ஆரியர்க்கே உரியவை என்றும் அவரிடமிருந்து ஆரியரல்லாத (திராவிடர் முதலிய) பழங்குடியினர் பெற்றனர் என்றும் இரவீந்திரநாத தாகூர் விளக்குகிறார்.[96] திராவிடரிடத்திருந்தும், பிற பழங்குடியினரிடத்திருந்தும், உலகியல் நலன்களுக்குரிய பலவற்றை ஆரியர் கொண்டனர் என்றும், எனினும், திராவிடருடையவை அல்லது பழங்குடியினருடையவை, ஆரியருடையவை எனப் பகுத்து விளக்க முடியாத வகையில், சிக்கலும் நுண்மையும், தொடர்ந்த சலப்பும் உடையவாய் இருவகை நாகரிகங்களும் கலந்து போயின என்றும் இராதாகிருஷ்ணன் விளக்குகிறார்.[97] பல்வகை விளக்கங்கள் பலவாறு கூறினும், பிறர்க்கு நல்கும் வகையிலும், பிறருடையவற்றை ஏற்றுப் பயன்பெறுதலோடு, பிறர்க்குத் தாழ்ந்து போகாது எதிரேற்று நிற்கும் வகையிலும் மேம்பட்டு விளங்கிய நாகரிகமொன்று ஆரியர் வருகைக்கு முன்னிருந்தது என்பதை இதிகாச புராணங்களில் வரும், அரக்கர் மானுடர் தேவர் உறழ்வுகள் புலப்படுத்தும் என்பது உண்மையாகும். அவ்வப்போது, அவரவர் மேம்பட்டபொழுது, தம்மைத் தேவரென்றும், மானுடர் என்றும் போற்றிப் பிறரை அரக்கர் என்று இகழ்ந்து வந்தனர் என்பதும் அப்புராணக் குறிப்புகளால் அறியலாகும் செய்தியாகும்.[98]

பற்பல குழுவினர்க்குமிடையே, பூசலும் போரும், உயர்வு தாழ்வும் பற்றிய உணர்ச்சி இருந்தது போலவே ஒரு குழுவினர்க்குள்ளும் ஆட்சி உரிமை காரணமாக அவ்வுணர்ச்சி வலுவுடையதாக இருந்தது என்பதைப் பாண்டவர் துரியோதனையர் வரலாறு காட்டுகிறது.

அரச குல நீதிப்படி தந்தைக்குப் பிறகு அவனுடைய மூத்தமைந்தனே ஆட்சிக் குரியவனாகின்றான். அவ்வகையில், திருதராட்டிரன் மைந்தனாகிய துரியோதனனே ஆட்சிக்கு உரியவன். பாண்டவரோ, குறிப்பாகத் தருமனோ, ஆட்சிக்கு உரியவர் ஆகார். தருமனின் தந்தையாகிய பாண்டு, திருதராட்டிரனுக்குச் சேனைத்

---

96. Rabindranath Tagore: Vision of India: Viswa Bharathi. No.1.

97. S. Radhakrishnan: Eastern Religion and Western thought. Page 308 (1948 )

98. S. Radhakrishnan: Eastern Religion and Western thought. Page 307 (1948 ).
Pratima Bowels: Tne Hindu Religious Tradition of philosophical approach P-21 (1976)

தலைவனைவே அமர்த்தப்படுகிறான்; விதுரன் அமைச்சனாக இருந்து துணைபுரிகிறான்.[99] எனவே, மரபு முறைப்படித் திருதராட்டிரன் மகனாகிய துரியோதனனே ஆட்சியுரிமைக்குத் தகுதியுடையவனாகிறான்.

காவியத்தில் வரும் குருகுல மரபு வரலாற்றிலும் இந்நிதியே காணப்படுகிறது.

ஆயினும், சிற்சில வேந்தர்தம், பண்பு ஒழுக்கம் ஆகியவற்றின் மாற்றம் நிகழ்ந்தபோது மரபுமுறை மாறியுள்ளது. யயாதி காம வேட்கைக்கு மிக்க இடமளித்தவன் ஆதலின், அவன் தன் மக்களொடு மாற வேண்டியதாயிற்று. முறைப்படி மணந்த தேவயானியின் மக்கட்கு உரிமை தாராது, தன் வேட்கை காரணமாகக் காந்தருவ முறையில் (தேவயானிக்குத் தெரியாமல்) மணந்த சன்மிட்டையின் மகனை புருவுக்கு உரிமை தருகின்.[100]

சந்தனு, தேவ விரதன் என்னும் தகுதி மிக்க மைந்தனைப் பெற்றும், சத்தியவதி என்னும் மீனவர் குலத்து மங்கை மீது கொண்ட காதலால், மரபு மாறி அவளுடைய மக்கட்கு அரசுரிமை நல்க வேண்டியதாயிற்று.[101]

காமம் காரணமாக மரபுமுறை மாறினும் மூத்தவனுக்கு உரிமை நல்கும் முறைமை அவ்வப்போது கடைப்பிடிக்கப் பெற்றுள்ளது. சத்தியவதியின் மக்களில் முதல்வனாகிய சித்திராங்கதனே அரசுரிமை எய்துகிறான். அவனுடைய முடிவுக்குப் பின்னரே[102] அவன் தம்பி விசித்திரவீரியன் அரசனாகிறான்.

விசித்திரவீரியன் மறைவுக்குப் பிறகு, அவனுக்கு மகப்பேறின்மையால், தேவர நீதி என்னும் முறை பற்றி, வியாதன் வாயிலாக மீண்டும் மரபு தோற்று விக்கப் பெறுகிறது. விசித்திர வீரியன் மனைவியரான அம்பிகையும் அம்பாலிகையும் மகப்பேறெய்துகின்றனர். திருதராட்டிரனும் பாண்டுவும் ஆகிய அவ்விருவருள்,

---

99. வில்லிபாரதம்: சம்பவச் சருக்கம்: 21. பக். 29. மர்ரே பதிப்பு (1959)

100. வில்லிபாரதம்: குருகுலச் சருக்கம்: 31. பக். 5 மர்ரே பதிப்பு (1959)

101. வில்லிபாரதம்: குருகுலச் சருக்கம்: 97-106 பக். 15-17. மர்ரே பதிப்பு (1959)

102. வில்லிபாரதம்: குருகுலச் சருக்கம்: 114. விளக்கம் பக். 69. வை. மு. கோ. விளக் பதிப்பு (1963).

முறைப்படித் திருதராட்டிரன் ஆட்சியுரிமை எய்துகின்றான். வீடுமனே, அவனுக்கு முடி சூட்டி வைக்கிறான்.[103]

மருமகளிர் வாயிலாக மகப்பேறு வேண்டிய சத்தியவதி, விழிப்புலன் அற்றவனையும், வெளிர் நிறமுடையனாகவும் பிறந்த இருவரைக் கண்டு மகிழ்ச்சியடையவில்லை. அவ்விருவரும் ஆளும் நிலைக்கு உரியராகார் எனக் கருதி மீண்டும் ஒரு மகப்பேறு கருதி, வியாதனை அம்பிகைபால் அனுப்புகிறாள்.[104] எனவே, உறுப்புக் குறை முதலியன அற்ற மைந்தனே அரசு செலுத்துதற்குரியவன் என்பது அவள் கருத்து.

இரண்டாம் முறை அம்பிகை வியாதனை ஏலாது தோழியை அனுப்பியதனால், அவள் வழி, சத்தியவதி விரும்பிய, குறை எதுவும் இல்லாத, மகப்பேறு (விதுரன்) கிட்டுகின்றது. சத்தியவதியின் நோக்கத்தின்படி, எக்குறையும் அற்ற விதுரனே ஆட்சி எய்தியிருக்க வேண்டும். ஆயின், தான் விரும்பியவாறு அவன் அம்பிகைக்குப் பிறவாமல், தாழ்குலத்து மகளுக்குப் பிறந்தமையின் அவனை அரசனாக்க அவள் விரும்பவில்லை போலும்.[105] வீடுமனும் விதுரனைத் தேர்ந்தெடுக்காமல், மரபு முறைக்கேற்ப, திருதராட்டிரனையே வேந்தனாக ஆக்குகிறான்.[106]

எனவே, மரபு மாறினும், மரபு குன்றினும் அவ்வப்போது தோற்றுவிக்கப் பெறும் புதிய மரபில் மூத்தவனே ஆளும் உரிமை பெற்றவன் என்னும் அரச நீதி திருதராட்டிரன் வரை, கடைப்பிடிக்கப் பெற்றுள்ளது.

முடிசூட்டப் பெற்று அரசுரிமை எய்தினும் விழிப்புலன் இல்லாமையால், திருதராட்டிரன் கடமைகளைத் தானைத் தலைவனாக இருந்த பாண்டுவே செய்து வந்திருத்தல் கூடும்.[107] காந்தாரி மக்கட்பேறு எய்தியதைத் தெரிந்து தன் மனைவியரும் மக்கட்பேறு எய்த வேண்டுமென விரும்பிக் குந்தியை வற்புறுத்துகிறான் பாண்டு.

---

103. வில்லிபாரதம்: சம்பவச் சருக்கம்: 21. பக். 28. மர்ரே பதிப்பு (1959)
104. வில்லிபாரதம்: சம்பவச் சருக்கம்: 16,17, பக். 28. மர்ரே பதிப்பு (1959)
105. ஸ்ரீ மகாபாரதம்: ஆதிபருவம்: பக். 437 (1923)
106. ஸ்ரீ மகாபாரதம்: ஆதிபருவம்: பக். 437 (1923)
107. வில்லிபாரதம்: ஆதிபருவம்: சம்பவச் சருக்கம். 22. விளக்கவுரை: பக். 98
வை.மு.கோ. பதிப்பு (1963)
ஸ்ரீ மகாபாரதம்: ஆதிபருவம்: பக். 437 (1923).

தன் மூத்தவன், குருடனாயிருந்தமை பற்றித் தான் ஆளும் நிலை உற்றதறிந்து, தனக்கு மக்கட்பேற வாய்ப்பின், அவர்க்கு ஆட்சியுரிமை நல்கி மரபை மாற்றி விடலாம் என்று பாண்டு கருதவில்லை. இம்மை மறுமை நலன்கள் கருதியே தனக்கு மக்கட்பேறு வேண்டும் எனக் கருதுகிறான்.[108] ஆதலின், ஆளும் பொறுப்பேற்ற நிலையிலும், பாண்டு, குலத்தில் முதல்வனே ஆளும் உரிமை பெற்றவன் என்பதை ஏற்றுக் கொண்டான் என்பதே பொருந்துவதாகும்.

இவ்வாறு, மூத்தவனுக்கே அரசுரிமை முறைமை என்ற மரபு தொட்ட வழக்கினைத் திருதராட்டிரன் மாற்றுகிறான். தன் முன்னோர் போல், காமம் காரணமாக மாற்றவில்லை. தான் குருடனாகி விட்டதனால், தனக்குத் தானைத் தலைவனாக இருந்து தன் கடமையை ஆற்றி வந்த தம்பியை உண்மையாகவே வேந்தனாகத் தான் கொண்டு விட்டதால் - மூத்தவன் போல் கருதி விட்டதால் - மாற்றுகிறான்.

தன் உள்ளத்தில் தான் செய்து கொண்ட மாற்றத்தை உடன் பாண்டுவினிடத்தில் நிகழ்த்தவில்லை; அவனுக்கு முடிசூட்டித் தான் விலகவில்லை. பாண்டு இறந்ததும், தருமனுக்கு ஆட்சி அளிப்பதன் வாயிலாக அம்மாற்றத்தை நிகழ்த்துகிறான்.

தருமன் இளவரசனாகியது கண்டு, தந்தையின் செய்கைக்கு வருந்தி அவனிடம் முறையிட்ட துரியோதனனிடம் தன் அகத்தில் நிகழ்ந்த மாற்றத்தையும், அதைப் புறத்தில் தான் செயற்படுத்தியதையும் எடுத்துரைக்கிறான்.

"பொன்றிய எம்பிதம் புதல்வர்க்கே
அன்றி நமக்கு அரசாளுதல் ஆமோ"
- வாரணாவதம்: 99. பக். 55.

தம்பிக்குரியது அரசு என்றும், அதனால் தம்பி புதல்வர்க்கு (அவருள் மூத்தோனாகிய தருமனுக்கு) அஃது உரிமை என்றும் தான் கொண்டமைக்குக் காரணமும் கூறுகிறான். வேந்தன் விழிப்புலன் இல்லாதவனாயின், அவன் ஆட்சிக்குரியனாகா என்பது மனுநீதி; தான் அந்நெறி நின்று அவர்க்கு நல்கியதாகவும், அந்நெறியில்

---

108. வில்லிபாரதம்: சம்பவச் சருக்கம்: 58-61. பக். 33.
மர்ரே பதிப்பு (1959).

நின்ற அதனை எண்ணிக் கடைப்பிடியாது வருந்துவது தவறு என்பதாகவும் விளக்கம் நல்குகிறான்.[109]

"நின்றிலையால், மனு நீதியில்"

"நீதி இலா நெறி எண்ணிலை"

—வில்லிபாரதம்: வாரணாவத: 99,100. பக்.55.

மனுநீதி முறைப்படித் தம்பிக்கும் தம்பி புதல்வர்க்கும் அரசுரிமை நல்கியது புறத்தில் தெரிவித்த காரணம். அதனினும் மேலாய உயர்ந்த காரணம், அகத்தில் சூழ்ந்துணர்ந்த காரணம், வேறு ஒன்று உண்டு. அது தருமனின் பண்பாடு பற்றிய காரணம்.

திருதராட்டிரனும் தம்பியாகிய விதுரனும் தருமனை ஒழுக்கம் காரணமாக மதித்தனர். அஃது ஒரு அழகாக அவனிடம் திகழ்வதைக் கண்டார். வீடுமனும் அவரோடு உதிட்டிரனைப் பற்றி ஒத்த கருத்துடையவனாயினன். அதனால் அவர் மதித்த மதிப்புக் காரணமாக உதிட்டிரன் இளவரசனாகின்றான்.[110]

மனுநீதி விளங்க வேண்டும் என்ற புறச்சிந்தனையும், ஒழுக்கம், நேர்மை ஆகியவற்றின் விருப்பம் தெரிந்து அவை விளங்க வேண்டும் என்ற அகத்தில் ஆழ்ந்த உணர்வும் திருதராட்டிரன் (வீடுமன் விதுரன் ஆகியோர்தம் உட்கிடக்கையும் கொண்டு) விளைத்த மரபு மாற்றம் அரசியலில் குறிப்பிடத்தக்க மாற்றமாகும். தன் மகனாயினும், உரிமைக்குரியவன் தீயவன் என்ற கருத்தால் அவனுக்கு உரிமை மறுத்தும் தம்பி மகனாயினும், உரிமையற்றவன் ஒழுக்கமுடையவன், நல்லவன் என்ற கருத்தால் அவனுக்கு உரிமை ஈந்தும் திருதராட்டிரன் விளைத்த மாற்றம், அரசியல் உலகில் விரும்பிய மாண்புப் பண்புகள், அறக் கூறுகள் ஆகியவை விளங்க வேண்டும் என்னும் கருத்தொடு செய்த மாற்றமாகும். உறவு உரிமை ஆகியவற்றினும், ஒழுக்கம் நேர்மை ஆகியவை பொது வாழ்விற்கு இன்றியமையாதவை என்ற உயர்ந்த உணர்வின் திட்பம் கொண்டு

---

109. வில்லிபாரதம்: வாரணாவதச் சருக்கம்: பக்.203. வை.மு.கோ.பதிப்பு (1963)
பதினெட்டாம் போர்: 132. பக்.639. மர்ரே பதிப்பு (1959)
ஸ்ரீ மகாபாரதம்: ஆதிபருவம்: பக்.585 (1923)

110. வில்லிபாரதம்: வாரணாவதச் சருக்கம்: 93-96 மர்ரே பதிப்பு (1959).

விளைந்த மாற்றமாகும். மிக்க உறவால் நெருங்கிய தீயோரைக் கடிந்து, உறவால் நெருக்கமிலா நல்லோரைத் தேடி உலக நலம் காக்க வேண்டும் என்னும் தெளிவு கொண்டு விளைந்த மாற்றமாகும்.[111]

உலகிலுள்ள இடர்களுக்கெல்லாம் காரணம், வாழ்வில் விழுமியது எது எனக் கண்டு தெளியாமையே; மனிதனின் பருமை நலன் குறித்தவற்றைப் பெரியவை என மதித்துத் தெரிந்தெடுக்கிறோம். விருப்பு வெறுப்புகளை விட நேர்மையும், அதிகாரத்தை விட அமைதியும், பிற எதையும் விட மன்பதையும் உயர்ந்தவையாகக் கருதப்பெறல் வேண்டும். நேர்மையைப் புறக்கணிக்கும் உரிமையையும் மன்பதையின் அமைதி கெடுக்கும் உரிமையையும் வற்புறுத்தும் அரசதை எந்த நாட்டிற்கும் இல்லை[112] என்று ஆய்வாளர் தெளிவு படுத்துவன, திருதராட்டிரனின் மனநிலையோடு ஒத்து எண்ணத் தக்கவாகும்.

எனினும், திருதராட்டிரனின் விழுமிய நோக்கம் நிறைவேறவில்லை. ஒழுக்கத்து அறனால் உதிட்டிரனைத் தேர்ந்தெடுத்தும், அவன் வாயிலாகச் சீரிய அறப்பண்புகள் அரசியல் உலகில் வாழுமாறு திருதராட்டிரன் செயற்பட இயலவில்லை. அதற்குக் காரணம் அவனுடைய சஞ்சல உள்ளமே![113]

துரியோதனனின் பொறாமையுள்ளத்தில் தோன்றிய எண்ணங்களுக்கும் அவற்றைப் புலப்படுத்தும் சொற்களுக்கும் இடந்தந்து விடுகிறான்.[114] விதுரனும், வீடுமனுங்கூட ஏதும் செய்ய இயலவில்லை. சிறு பருவத்திலிருந்தே பாண்டவரும் துரியோதனாதியரும் பகைவராய் வளர்ந்து விட்டமையைக் குறித்துத் தம் சொற்களைத் துரியோதனாதியர் கேளார் என்றுரைத்துச் செயற்பட முடியாமல் நின்று போகின்றனர்.[115]

அரசியல் உலகில் அறத்திற்கு இடம் இல்லை; நல்லோர் உரைக்கு ஏற்றம் இல்லை; சூழ்ச்சித் திறனே வெல்லுகிறது. துரியோதனனின் கருத்துப்படி, தரும்

---

111. ஸ்ரீ மகாபாரதம்: ஆதிபருவம்: பக். 571-72 (1923 )
112. Sir Francis Young Husband: A venture of faith. Page 209(1936)
113. Sudhisankar Bhallacharya: Imagery in the Mahabharata, P-66 (1971).
வில்லிபாரதம்: சூதுபோர்: 270. பக். 185. மர்ரே பதிப்பு (1959)
114. வில்லிபாரதம்: வாரணவதச் சருக்கம்: 102. பக். 55. மர்ரே பதிப்பு (1959)
115. வில்லிபாரதம்: வாரணவதச் சருக்கம்: 105. பக். 56. மர்ரே பதிப்பு (1959)

உரிமை பெற்றவரும் கூட அத்தகுதி கொண்டு இவ்வுலகை அவர் ஆளுதல் இயலாது; வன்கண்மை மிக்க வீரமே உலகாளும் உரிமை தருவது"[116] என்னும் வல்லமைப் போக்கே அரசியல் உலகுக்கு ஆவது என்று ஆகின்றது.

சமுதாயத்திற்கு விழுமிய நன்மை விளைய வேண்டுமென்று கருதி அரசியலில் அறம் இன்றியமையாது வேண்டப்படுவது என்று வற்புறுத்துவர் ஒருசாரார். ஒழுக்க மின்மை, கொடுமை, தகாதன புரிதல் ஆகியவற்றால் அதிகாரத்தைப் பற்றும் வகையில் தந்திரம் செய்தலே அரசியலுக்கு ஆவது என்று கூறி அவ்வாறே ஒழுகுவர் பிறிதொரு சாரார், என இருவேறு நிலைமைகள் இருந்து வருவதை அரசியலுலகு பற்றிய ஆய்வாளர் எடுத்துரைக்கின்றனர்.[117]

ஒழுக்கத்து அழகால் உட்கொள்ளப்பட்டு இளவரசாக்கப்பட்ட யுதிட்டிரன், தொடர்ந்து அரசுரிமை பெற்று ஆளாத வகையில், தீமதியும், புன்மதியும் உடைய துரியோதனன் செய்யும் சூழ்ச்சியே வெற்றி பெறுகின்றது. "மேதகு வாழ்வு வில்" விதுரனும் "நாதகு நல் உரை" நதி மகனாகிய வீடுமனும் எண்ணும் எண்ணங்கள் செயற்படாமல் வலுவிழந்து போகின்றன.

"நீதியினும் நிறைந்தனன் நன்றால்
ஓதிய கேள்வி உதிட்டிரன்"
"இவ்வே இந்த நிலக்கு இனி இளவரசு"
- வில்லிபாரதம்: வாரணாவதம்: 94, 95. பக். 54.

என்று தீ எண்ணி, உணர்ந்து தேர்ந்தெடுத்த நிலையில், துரியோதனனின் சூழ்ச்சித் திறன், அறவோர் தேர்ச்சி செயற்படாமல் தடுத்து விடுகிறது.

எனவே, தனி வாழ்வில் முகிழ்த்துச் செழிக்கும் விழுமிய அறங்கள், பொதுவாழ்வில் வெற்றி பெறுவதில்லை என்பதை பாரதம் காட்டுகிறது.

---

116. வில்லிபாரதம்: கிருட்டினன் தூது: 117. பக். 354. மர்ரே பதிப்பு (1959)

117. Alan Gewirth: Political Justice: an article in "social Justice" (Ed) Richard B. Branot. Page 119-20. (1962)

சாலக்காலமாக, அறம் வேறாகவும் அரசியல் உலக நியதிகள் வேறாகவும் இருந்து வருகின்றன என்னும் கருத்துக்கு அரண் செய்யும் வகையில் பாரதத்தில் சான்றுகள் உண்டு என்பது மேற்குறித்த செய்திகளால் புலனாகின்றது.

நேர்மை, அறம் ஆகியவற்றை விட, தந்திரம் அதனை அடிப்படையாகக் கொண்ட நயம், பயம் ஆகிய முறைகளே பெரிதும் ஆட்சி புரிகின்றன என்பதற்குப் பிற சான்றுகளும் உள்ளன.

தூது சென்ற கண்ணன், "உனக்கு உரிமை உள்ளது போல், பாதி உரிமை அவர்க்கும் உள்ளது; அதனால் பாதியை அவர்க்குத் தந்துவிடு" என்று கூறவில்லை, அல்லது இன்னும் வெளிப்படையாகவே, வீடுமனும், விதுரனும் திருதராட்டிரனும் எடுத்த முடிவுக்கேற்ப, "உதிட்டிரனை வேந்தனாக ஏற்றுக் கொண்டு, சூதாடி நாடு பறித்ததையும் திரௌபதியை அவையில் அவமானப்படுத்தியதையும் குற்றமென ஒப்புக் கொண்டு அறத்தின் வழி நின்று உய்தி பெறுக" என்று கூறவில்லை. அல்லது மனுநீதி என்னும் அவ்வழி நின்றாலே முறைமை என்று திருதராட்டிரன் கூறியது போல் நீதி முறை காட்டித் தெளிவு செய்யவும் இல்லை.

"உன் சொற்படிக் கானகம் சென்ற காலம் கழித்துத் திரும்பி வந்தமையின், அவர்க்குரிய உரிமையை நட்புணர்வுடன் நல்குக" என்று யோசனை கூறுவது போல் கூறினான்.[118] "உன் வல்லமை தோன்றச் சில நாடுகளைத் தந்து அவரோடு பொருந்தி வாழ்க"[119] என்று அறிவுரை கூறுகிறான். "அவர்க்குரிய நாடு முழுவதையும் தாராவிடினும் அதில் பாதியாவது நல்குக"[120] எனக் கொடைப் பண்பு தோற்ற விளங்குமாறு கூறி மனமிரங்கச் செய்கிறான். துரியோதனன் மறுத்துவிட, "ஐந்து ஊர்களேனும் நல்குக" என மிகத் தாழ்ந்து இரந்து, அவனுடைய உள்ளத்தில் மேலும் இரக்கம் தோன்றுமாறு உரையாடுகிறான்.[121] இரந்ததையும், இரக்கம் வேண்டித் தாழ்ந்ததையும் பொருட்படுத்தாது, "ஓர் வீடு அளிக்கவும் மறுப்பரோ" என்று

---

118. வில்லிபாரதம்: கிருட்டினன் தூதுச் சருக்கம்: 109. பக். 352. மர்ரே பதிப்பு (1959)

119. வில்லிபாரதம்: கிருட்டினன் தூதுச் சருக்கம்: 110. பக். 353. மர்ரே பதிப்பு (1959)

120. வில்லிபாரதம்: கிருட்டினன் தூதுச் சருக்கம்: 113. பக். 353. மர்ரே பதிப்பு (1959)

121. வில்லிபாரதம்: கிருட்டினன் தூதுச் சருக்கம்: 113. பக். 353. மர்ரே பதிப்பு (1959).

என்கிற துரியோதனனின் கவனத்தை, குருகுல வரலாற்றை நோக்கித் திருப்பி, வீடுமனின் பெருந் தியாகப் பண்பை அவனுக்கு எடுத்துரைக்கிறான். தந்தையின் காதலுக்காக வாழ்நாள் முழுதும் புலனடக்கம் மேற்கொண்டொழுகிய வீடுமனின் பண்பாட்டை எடுத்துரைக்கிறான். இளையதாய் ஈன்ற மக்கட்கு அரசு செல்வம் வழங்கிய பெருங் கொடைப் பண்பை விளக்கி அவன் துரியோதனனுடன் வாழ்ந்து வருதலையும் சுட்டுகிறான்.[122]

"வீடு அளிக்கினும் மறப்பரோ" என்ற வினவி "ஈ இருக்கும் இடம் எனினும் இப்புவியில் யான் அவர்க்கு அரசு இனிக் கொடேன்" (கிருட்டினன் தூது:112) என்ற உறுதியும் புலப்படுத்தியவனுக்கு, வீடுமன் வரலாறும், அவனுடைய விரதமும் பெருந்தியாகப் பண்பும் எதுவுஞ் செய்யா என்பது கண்ணன் அறிந்ததே; அறிந்தும் இவ்வாறு எடுத்துரைப்பது துரியோதனனைத் திருத்தும் நோக்கம் பற்றியது என்பதை விட, அவனுடைய செருக்கின் பெருக்கைச் சுட்டிக் காட்ட வேண்டும் என்னும் தந்திரம் பற்றியது என்பதே பொருந்துவதாகும்.

துரியோதனனின் செருக்கையும் சினத்தையும் மேலும் தூண்டி விடும் வகையில் இன்னும் தந்திரமாக மொழிகிறான் கண்ணன். துரியோதனனை நோக்க உதிட்டிரன் மூத்தவன்; அவன் பாண்டுவின் மூத்த மகனுமாவான், திருதராட்டிரன் விழியிலான் ஆதலின், பாண்டு வேந்தனாயினமையால் அவனுடைய மூத்த மகன் அரசுரிமை எய்துதல் முறைமை; ஆதலின், துரியோதனனுக்கு மூத்தவன் என்னும் முறைமை பற்றியும், பாண்டுவின் மூத்த மகன் என்னும் உரிமை பற்றியும் நாடு முழுதும் பாண்டவர்க்கே உரியதாகும் என்று கூறுகிறான்.

"முந்த மாநிலம் அனைத்தினுக்கும் உயர் முறைமையால் உரிய அரச(ர்)"
—கிருட்டினன் தூது:115.

என்று பாண்டவரே ஆட்சிக்கு உரியர் என்பதை மறைமுகமாக எடுத்துக் கூறுகிறான். அத்தகைய உரிமை உடையார்க்கு, "ஐந்து மாநகரும் கொடாது ஒழியின் என்னதாகும் உனது அரசியல்?" என்று கூறித் துரியோதனனின் செருக்கு மேலும் கிளர்ந்தெழுமாறு உரையாடுகிறான்.

---

122. வில்லிபாரதம்: கிருட்டினன் தூது:115. பக்.353. மர்ரே பதிப்பு (1959)

கண்ணனின் தந்திரம் மேலும் வளர்கிறது. ஒரு குலத்தில் இரு வேந்தர் பிறந்த அரசுரிமை எய்தின் இருவரும் ஒத்து வாழ்தல் எக்குலத்தவர்க்கும் இயற்கை; ஒரு குலத்தவர் மட்டும் இகலிப் பகைத்தல் ஆகாது என்று ஒரு சாரார்க்கும் சந்து செய்விப்பவன் போல் கூறுகிறான்.[123]

இனி, "இருகுலத்தவரும் ஒக்க வாழ்வுறுதல் எக்குலத்தினும் இயற்கையே" என்று உலகியலில் பொதுமைப்பட வழங்குவது போலும் நியதி ஒன்றினை[124] எடுத்தியம்புதல் அவனுடைய தந்திர மனப்பான்மையையே புலப்படுத்தும். துரியோதனனின் குறைபாட்டினை உள்ளவாறு அறிந்தவனாதலின், அக்குறைபாட்டினை (செருக்கினை) மேலும் தூண்டி விடுமாறு தந்திரமாக மொழிந்தான் என்று கொள்ளுவது பொருத்தமே.

உடன் பிறந்தார் இருவர், இருவேறு குலத்தவர் போல் (தாய முறைமை பற்றி) ஆகிவிடுகின்றனர். இருவேறு குலத்தவர் ஒத்து வாழ்தல் போல், ஒரு குலத்தில் தோன்றி இரு குலத்தவர் போல் ஆகியவர், ஒத்து வாழ வேண்டும் என்பதும் அஃது இயற்கை என்பதும் கூறி, ஆகாத ஒன்றை - உலகியலில் மிக அரிதாக உள்ள ஒன்றை - மிக இயல்பான ஒன்று போல் காட்டி, "இருகுலத்தவரும் ஒக்க வாழ்வுறுதல் எக்குலத்தினும் இயற்கையே" என்றுரைக்கும் சொற்கள், அரசியல் நுண்ணறிவு வல்ல கண்ணனின் தந்திரத்தையே புலப்படுத்துவன.

கண்ணனின் எண்ணத்தை நன்கறிந்தவன் துரியோதனன். சூதாடி உரிமையெல்லாம் இழந்து போனவர்கள் பாண்டவர்கள். அவர்க்குப் பரிந்து பேசி, அவர் உரிமை வேண்டி நீ தந்திரம் செய்தால் அதற்கிரையாகும் அளவில் யான் எளியனோ, என்று வினவிக் கண்ணனின் தந்திரத்தை அவன் முகத்துக்கெதிரே வெளிப்படக் கூறுகிறான்.[125]

துரியோதனன், பாண்டவர்பால் கொண்டுள்ள பகைமையையும் காழ்ப்பையும் வெளிப்படையாகப் புறத்தோர்க்கு அறிவித்தலோடு, தானும் உறுதி செய்து கொள்ளல்

---

123. வில்லிபாரதம்: கிருட்டிணன் தூது: 116. பக்.353. மர்ரே பதிப்பு (1959)
124. புறநானூறு: 44,45,47.
125. வில்லிபாரதம்: கிருட்டிணன் தூதுச் சருக்கம்: 111. பக்.353. மர்ரே பதிப்பு (1959).

வேண்டும் என்னும் எண்ணம் பற்றிய தந்திரமே கண்ணனுடைய அறிவுரையின் உட்கிடக்கை.[126] தன் அறிவுரையின் நேரிய நோக்கங்களை உள்ளவாறே கொண்டு அவற்றை நிறைவேற்றிப் பாண்டவரோடு ஒத்துப் போவான் என்ற கருதிக் கண்ணன் அறிவுரை கூறவில்லை. துரியோதனன் திருந்தித் தான் கருதியவாறு பாண்டவர் உரிமை நல்குவான் என்னும் உடன்பாட்டு நோக்கில் கூறியிருப்பானேல், மீண்டும் காடேக வேண்டித் திருதராட்டிரன் கூறிய அறிவுரை தாங்கிப் பாண்டவர்பால் தூது வந்த சஞ்சயனுக்கு அவன் கூறிய,

"இவர்கள் இப்புமி ஆளுதல், அவர்களுக்கு அமர் உலகம் ஏறுதல்,
புரிதவம்" - சஞ்சயன் தூது.17.பக்.334.

என்ற இருசாரார்தம் எதிர்காலத்தைப் பற்றி அறுதியிட்டுக் கூறிய சொற்களும் தூதால் வஞ்சினம் பொய்க்கும் என்ற வருந்திக் கண்ணீர் வடித்த பாஞ்சாலிக்கு,

"பாண்டவர்க்குத் தூது போய் மீண்டதற்பின்
நல்லாய் உன்பைங் கூந்தல் நானே முடிக்கின்றேன்
எல்லாரும் காண இனி விரிப்பது என்றோ அரிவாய்
புல்லார்தம் அந்தப்புர மாதர் புன்குழலே"
- கிருட்டிணன் தூது:47.பக்.344.

என்ற உறுதி கூறிப் பாண்டவர் வஞ்சினமும் முடியும் என்ற தெளிவு செய்த சொற்களும் வெற்றுரைகளாகிவிடும். "நன்மைகள் புரிவதாயினும் அவரவர் பண்பறிந்தே நன்மை புரிய வேண்டும், இன்றேல் அந்நன்மைகள் பிழைபாடுகளாகி விடும்"[127] என்னும் அரசியல் உலகத்து நீ சூழ்ச்சி (இராச தந்திரம்)க்கு ஏற்ப, நன்மை தருவனவற்றையே கண்ணன் மொழிகின்றான். எவ்வாறெனும் துரியோதனன் திருந்திலன் போதும் என்ற எண்ணங் கொண்டு கூறியதாகக் கற்போர் உணருமாறு கண்ணன் வாயிலாகப் புலவர் அரச நீதிகளை மொழிந்துள்ளார். ஆயினும், பண்படாத உள்ளத்திற்கு, எந்நன்மையும் தீமையாகவே படும் என்னும் உண்மையை, உரைகல்லில் உரைத்துக் காண்பது போல் காண்பதற்காகவே - துரியோதனனின் மனநிலையை வெளிக் கொணர்வதற்காகவே -

---

126. Krishna Chaitanya: A New History of Sanskrit Literature. Page 217 (1962).

127. திருக்குறள்: பொருட்பால்: தெரிந்து செயல் வகை-9. பக்.179. சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகப் பதிப்பு (1958).

உயர்ந்த உண்மைகள் தந்திரமாக மொழியப்பட்டன என்பதைக் கருத்தாகக் கொள்ளல் வேண்டும். உயரிய அறங்கள், கொள்வாரின் இழிபுநிலை பற்றி, அரசியல் சூழ்ச்சிகள் முதலிய உலகியல் நிலைகளுக்கு ஆட்படுத்தப்பட்டுள்ளன என்பதற்கு, துரியோதனனுக்குக் கணிகன் உரைத்த அறிவுரை பற்றிய நிகழ்ச்சி தக்கதோர் எடுத்துக்காட்டு.

அரசியல் உலகில் தன் நேர் இலாத தலைவனை விளங்க வேண்டின், இன்ப நாட்டம் முதலியவற்றின் தலைப்பட்டு, எல்லாரையும் போல் தாம் ஒரு வேந்தர் என்னும் எண்ணத்தோடு வாழ்தல் ஆகாது.[128] தன்னினும் மெலியார் மேல் பகை கொண்டு அவரை அடக்கும் போர்த்திறமும், தன்னினும் வலியாரின் பகை கொளாது, அவர்க்கு அடங்கி நடக்கும் சூழ்ச்சித் திறமும் (உபாய தந்திரமும்) உடையராதல் வேண்டும்.[129] ஆதலின் போர்த்திறமும், சூழ்ச்சித் திறமுமே ஒருவரைச் சிறந்த அரசியல் தலைவராக்கும்.

அவ்வகையில், போர்த்திறனுக்கு ஒப்பதாய், சூழ்ச்சித் திறன் என்னும் பெயரில், பெரியதொரு சூழ்ச்சித்திறனை[130] பாரதத்துள்ளும், பாரத காலத்துச் சாதாரணத்துள்ளும் ஒரு இடம் பெற்றுள்ளது.

(1) தனி வாழ்வில் ஒரு முகிழ்த்து வளர்ந்த வரலாறு முறையான ஆரம்பத்திற்கு எட்டாததாக உள்ளது. ஆதலால், தெய்வம் தனக்குப் பயன் நல்குகிறது என்று ஆதி மனிதன் நம்பியுள்ளான்.

(2) தனி வாழ்வில் பொழுது போக்காக இருந்திருக்கக் கூடிய ஒரு மெல்லமெல்ல ஆக்கம் பெற்றுச் சமுதாயப் பொழுதுபோக்காக மாறிச் சமுதாய வாழ்வின் திருப்பத்துக்குக் காரணமாகும் வகையில் வரலாற்று வன்மையும் பெற்று விட்டது.

(3) அறவோரும் சமயச் சான்றோரும் அவ்வப்போது அதைக் கடிந்து வந்துள்ளனர்.

(4) கிறிஸ்து பிறப்பதற்கு முன்னமேயே இந்தியாவில் ஆதிமனு ஒரு நிலைச் சாடிந்து கூறியுள்ளார்.

---

128. புறநானூறு: 8, வரி: 2-3.

129. திருக்குறள்: பொருட்பால்: பகைமாட்சி-1. பக். 324. சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகப் பதிப்பு (1958).

130. சீவகசிந்தாமணி: 1951, 879 பக். 969, 441. உ.வே.சா. பதிப்பு (1949) உ.வே.சா. அடிக்குறிப்பு. பக். 441, 969. உ.வே.சா. பதிப்பு (1949)

(5) அரசின் அனுமதிபெறின், சூதாடுகளம் அமைத்தல், கருவிகள் வழங்குதல் ஆகியவை மேற்கொள்ளலாம் என்று அர்த்த சாஸ்திரம் கூறுகிறது. ஆதலின், பிற்காலத்தில், அரசாங்க அனுமதியோடு கூடிய ஆதரவு கொண்டு சூது செல்வாக்குப் பெற்றிருந்திருக்கிறது என்பது தெளிவு.

(6) சட்டம், நீதி ஆகிய துறைகளில் புகழ் பெற்றிருந்த ரோமானியர்களும், சூது பற்றிய விதிகளையோ, சூது ஆகாது என்னும் கருத்தைப் பற்றிய நீதிகளையோ தெளிவுறக் கூறவில்லை; எனினும் தனிப்பட்ட வகையில் அதனைக் கடிந்துள்ளனர்.

(7) சூதாட்டம் இந்தியாவில் ரிக்வேதகாலத்திலேயே வழங்கி வந்துள்ளது. அதன் கொடுமைகள் பழங்காலத்தவர் அறிந்தவையே. சூதின் கொடுமைக்கு ஆளாகித் துன்புற்று இறைவனிடம் முறையிட்டுப் புலம்பியதாக ரிக் வேதத்தில் சான்று உள்ளது. சூதினை விரைந்து கடிந்து அதன் தீமையைப் போக்குவதில் பெரிதும் கடுமை காட்ட வேண்டுமென்று வேந்தனை மனு வேண்டிக் கொண்டார் எனவும் வெளிப்படையாகத் திருடும் திருட்டுக்கு ஒத்தது அது எனவும் ஆய்வாளர் சூதினைக் கடிந்து ஒதுக்கியுள்ளனர்.

(8) சூதாடுவோனின் இழிநிலை, அவன் வாயிலாகவே நன்கு விளக்கப்பட்டுள்ளது. அவனுடைய மனைவியும் மாமியாரும் அவனை வசைமொழி கூறி இல்லத்தினின்றும் வெளியேற்றுகின்றனர். சூதாடு களத்திற் புகுவதில்லை என்னும் தன் தீர்மானத்தையும் பிறர் வற்புறுத்தலையும் புறக்கணித்து அருகிலுள்ள சூதாடு களத்திற் புகுமாறு அச்சூது அவனைக் கவர்கின்றது. வட்டில் கொண்டு சூதாடற்க; விளைபுலத்தை வளமைச் செய்து அது நல்கும் செல்வத்தை, விழுமிதெனக் கொண்டு, இல்லாளை மகிழ்வித்துக் கால்நடைகளைப் பேணி வாழ்க என்னும் அழகிய அறிவுரையையும் ரிக் வேதம் எடுத்தியம்புகின்றது.[131]

எனினும், எந்த நாட்டிலும், எக்காலத்திலும், சூதினைச் சட்டத்திற்குட்படுத்திய குற்றமாக்கி யாரும் அதனை முற்றிலும் ஒழிக்க முற்படவில்லை.

131. Encyclopaedia of Social Sciences. Vol.III. P-555(1933)
2 Encyclopaedia of Social Sciences. Vol.I. P-40 (1937)
3 Encyclopaedia of Social Sciences. Vol.I. P-45 (1937)
4 Encyclopaedia of Social Sciences. Vol.I. P-45 (1937)
5, Mr. R.Sharmasastry: Kautilya Arthasastra. Page 225-26 (1967)
(6) Encyclopaedia of Social Sciences. Vol.I. Page 559.(1937)
(7) Sir P.S.Sivasamy Iyer. Evolution of Hindu Moral Idea. Page 111-12 (1935)
(8) Sri A.V.Subramanian's observations. The Poetry of Vedas-I]
7th March 1980

பொழுதுபோக்கிற்குரிய விளையாட்டாகத் துவங்கி, அரசியலில் நாடு கவரும் சூழ்ச்சி (இராச தந்திரம்) யாக அது வளர்ந்தோங்கி நாடாளும் வேந்தர்தம் வாழ்வில் பெருமாறுதல் செய்திருக்கிறது. தரும சாத்திரமென்றும், சட்ட நூல் என்றும்[132] இந்த சமயத்தினர் போற்றும் மகாபாரதத்துள் சூது சட்டப்படிக் குற்றம் என்று குறிக்கப் பெறவில்லை. விதுரனும், திருதராட்டிரனும், சூதாட்டத்தை வெறுக்கிறார்கள்; பாண்டவர், துரியோதனதியர் ஒற்றுமை குலையும் என்று அஞ்சுகின்றனர்.[133] ஆயினும் சட்டத்திற்குட்பட்ட குற்றம் என்று அதனை அவர்கள் குறிப்பிடவில்லை. விதியின் கட்டளை[134] என்று கைப்போரு துரியோதனனின் சட்டங்களுக்கு இணங்குகிறார்களேயன்றி, அரசியற்சமூகங்களுக்கு இடையூறு செய்யும் குற்றமென அவர்கள் கூறவில்லை. விதுரனின் நாதினை ஏற்றுத் துரியோதனதியருடன் சூதாட ஒப்புதல் அளிக்கும் தருமனும், விதியின் மேல் பழிசுமத்தி, ஆட முன் வருகிறான்.[135]

தமிழர் தம் பழங்கால நாகரிகத்தைப் புலப்படுத்தும் பழந்தமிழ் நூல்களில் சூது பற்றிய குறிப்புகள் உள்ளன.[136] அவையும் சூது சட்டப்படிக் குற்றம் எனக் கூறவில்லை. எனினும் சூது, நாடு கவர்வதற்குரிய சூழ்ச்சியாக அவற்றில் குறிக்கப் பெறவில்லை. அந்தணரும் அரசரும் சூதாடிப் பண்பிறந்த செய்தியை மட்டும் புறநானூறு கூறுகிறது.[137] சூதின் தீமைகளைக் கடியப் புகுந்த திருவள்ளுவரின் கருத்துகளும், அரசியல் துறைக்கு ஆகாத நீதிகளை (விலக்கியன ஒழிதல்) எடுத்துரைக்கும் போக்கில் உள்ளவேயன்றிச் சட்டப்படிக் குற்றம் என்று தெற்றென விளக்கவில்லை.[138]

132. K.M.Max Muller: The Six Systems of Indian Philosophy. Page-30 (1912).

133. ஸ்ரீ மகாபாரதம்: சபாபர்வம். பக்.242, 262 (1924)

134. ஸ்ரீ மஹாபாரதம்: சபாபர்வம்: பக்.242, 262 (1924)

135. ஸ்ரீ மஹாபாரதம்: சபாபர்வம்: பக்.264 (1924)

136. புறநானூறு: 43, 52. அகநானூறு: 377.

137. புறம் 43: கிளவிக்குறிப்பு, உரையாசிரியர் கூற்று. பக்.112: புறநானூறு: உ.வே.சா.பதிப்பு (19[illegible]9)

138. திருக்குறள்: பொருட்பால்: சூது-5. பரிமேலழகர் உரை. பக்.351. சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகப் பதிப்பு (1958).

முதனூல் மரபு தழுவியும், தமிழர் நாகரிகக் கூறுகளை ஆங்காங்குப் புகுத்தியும் நூல் செய்த வில்லிபுத்தூராரும், "தக்கோர் ஆடாச் சூது" (1:5:37. பக்.280) என்றும், "மேதகத் தெரி ஞான நூற் புலவரும் வேத நூலறிந்தோரும் பாதகத்திலொன்றெனவே முன்னமே பலபடப் பழித்திட்டார்" (2:2:67.பக்.231) என்றும் காவிய மாந்தர் வாயிலாகப் பழிக்கின்றாரேயன்றி சூது சட்டப்படி குற்றம் என்று காட்டவில்லை.[139]

மனவேறுபாடு காரணமாகத் தனித்தனியே வாழுமாறு பிரிந்து நின்ற பாண்டவரும் துரியோதனியரும் மீண்டும் இகலிப் பொருமாறு, சூது இடை நின்று, பெருமுரண் விளைவிக்கின்றது. ஒருவர்க்கொருவர் மிகுக்கும் படைவன்மை காரணமாக இருவரும் பொருது ஒருவரை ஒருவர் அழித்திருக்கலாம். அது பின்னால் நிகழ்ந்திருக்கக் கூடியது. ஆயின் அப்போருக்கு, அடிப்படையாக, முதற்காரணமாக, இருந்து, இருசாரார்க்குமிடையே பகை வளர்த்துத் தன் வல்லமையைக் காட்டி நிற்கின்றது சூது.

"சூதினால் அன்றி, எழு பிறவியாயினும் தருமனை வெல்லுதல் அரிது" என்று சூதுவல்ல சகுனி, கௌரவர்க்குரிய போர்த்திற வரம்பினை அளவிடுகிறான்.[140] சஞ்சல மனம் உடைய திருதராட்டிரன், "நல்ல தந்திரத்தால் வெல்ல முற்பட்டீர்; நெடும் போர் புரிந்தாலும் பாண்டவரை வெல்ல முடியாது. சகுனியை அன்றி, வேறு யார், நில முழுவதையும் துரியோதனியர்க்குத் தரமுடியும்?"[141] என்று கூறித் தன் மைந்தர்தம் போர்த்திற வரம்பினை உள்ளபடி எடுத்துக் கூறுகிறான்.

சூதினால் துரியோதனன் கொண்ட நாட்டினைத் திரும்பச் சூதினாலேயே பெற வேண்டும்; வில்லெடுத்துப் போர் புரிந்து வெற்றி பெற்று நாடடைதல் அரச நீதி ஆகாது என்று தந்திர மொழி[142] புகலும் கன்னனும், துரியோதனியர் போர்த் திற வரம்பினை மறைமுகமாகக் குறிப்பிடுகிறான்.

---

139. வில்லிபாரதம்: சபாபருவம்: சூதுபோர்ச் சருக்கம்: 169.பக்.138. வை.மு.கோ.பதிப்பு (அங்குக் குறிக்கப்பெறவில்லை).
ஃ மகாபாரதம்: ஆதிபருவம்: பக்.767-8. (1923)
வில்லிபாரதம்: ஆதிபருவம்: திரௌபதி மாலையிட்ட சருக்கம்: 83.பக்.313. வை.மு.கோ.பதிப்பு (1963)
வில்லிபாரதம்: அருச்சுனன் தவச்சருக்கம்: 255.பக்.282-83 (1966)
வில்லிபாரதம்: விராடபருவம்: நிரைமீட்சிச் சருக்கம்: 119-125.பக்.188-193. வை.மு.கோ.பதிப்பு (1960)

140. வில்லிபாரதம்: சூதுபோர்ச் சருக்கம்: 23.பக்.153.மர்ரே பதிப்பு (1959)
141. வில்லிபாரதம்: சூதுபோர்ச் சருக்கம்: 48.பக்.157.மர்ரே பதிப்பு (1959)
142. வில்லிபாரதம்: உலூகன் தூதுச் சருக்கம்: 2.பக்.326. மர்ரே பதிப்பு (1959).

கண்ணனின் சொற்களைக் கேட்ட பலராமன், அச்சொற்களினூடே மறைந்து கிடந்த தந்திரம் உணராது, அவற்றின் நேரான பொருளையே உளத்திற் கொண்டு, "உதிட்டிரனுக்கு உரிய நாட்டை, அவையில் வந்தார் பலருங் காணச் சூதினால் வென்று பல்லாண்டு அடிப்பட (தனக்கே உரியதாக) ஆண்டு விட்டான்; அதனை மீண்டும் வன்னெறி கொண்டு வாங்குதற்கு முயலும் மதி தீயமதி என்று அனைந்து கூறி, போரில் பாண்டவர்க்கு எதிர் நிற்றல் கௌரவர்க்கு ஆகாது என்பதைக் குறிப்பாகக் கூறுகிறான்.[143]

பாண்டவர் பொருட்டுத் தூது சென்ற உலூகனும், துரியோதனாதியரை நோக்கி, "முன்னரும் நீர் பொருதது சூது போர்; இன்னும் போர வேண்டின், மோதுபோர் கருதாமல், மீண்டும் சூதுபோர் பொருக! அவ்வாறு கருதாது, அவருடன் போரிடுவோம் எனக் கருதின், அவரை வெல்வதும் அரிது; வீமனும் விசயனும் களம்புகின் அனைவரும் பொன்றுவீர்" என்று அறுதியிட்டுக் கூறிப் பாண்டவர் போர் ஏற்றமும், கௌரவர் ஆற்றலையும் சீர்தூக்கிக் கௌரவர் போர் நெறி மேற்கொள்ளல் ஆகாது என வேண்டுகிறான்.[144]

உலூகன் துரியோதனாதியர்க்குக் கூறிய அறிவுரையை, வீடுமன் திருதராட்டிரனுக்குக் கொண்டு கூறி, துரியோதனாதியர் போர்த்திற வரம்பினை அறுதியிடுகிறான்.[145]

அதற்கு முன்னரே, விதுரனும் துரியோதனனுக்கு, வழக்கம் போல் அறிவுரை கூறினான். "வேதியன் (உலூகன்) சொற்படிப் பாண்டவர்க்கு நாடு வழங்கவில்லையேல் தாமகன் நிங்குவான்; அரசியற் சுற்றமும் சேனையும் அழியும்" என்று கௌரவர் போர் வரம்பினை அறுதியிடுகிறான்.[146]

கல்வி பயிற்றி வீரராக்கிய கிருபனும் துரோணனும், துரியோதனாதியரின் போர்த்திறத்தை நன்கு அளவிட்டவர்; ஆதலின் "சேனையும் வல்லாமையும் கொண்டு போர் புரிதல் பெரும் பிழை"; அப்பிழையைப் புறக்கணித்துப் போர் மேற்கொள்ளின்,

---

143. வில்லிபாரதம்: உத்தியோகபருவம்: உலூகன் தூதுச் சருக்கம்: பக். 9. வை.மு.கோ. பதிப்பு (1966)
வில்லிபாரதம்: உலூகன் தூது சருக்கம்: 3. பக். 327. மர்ரே பதிப்பு (1959
144. வில்லிபாரதம்: உலூகன் தூதுச் சருக்கம்: 11, 1?. பக். 328. மர்ரே பதிப்பு (1959
145. வில்லிபாரதம்: உலூகன் தூதுச் சருக்கம்: 16. பக். 328. மர்ரே பதிப்பு (1959
146. வில்லிபாரதம்: உலூகன் தூதுச் சருக்கம்: 14. பக். 328. மர்ரே பதிப்பு (1959

"திக்குமிடமெல்லாம் குருதி பெருக்கும் அம்பு விடுவான் தனஞ்செயன்" என்று எச்சரித்துத் தக்கவகையில் அவர்தம் போர்த்திற வரம்பினை அறுதியிடுகின்றனர்.[147]

வீமன் தனியே வனம் போந்தமைக்குரிய காரணத்தை அனுமன் கேட்டபோது, தாயத்தாரும், வஞ்சனைச் சகுனியும் கூடி மாயச் செய்து சூதாட வைத்து, தங்கள் மண் கொண்டு, தமக்குக் காடு தந்தனர் என வீமன் இறுத்த விடை சூதுபோர் அன்றி, மோதுபோர் கொண்டு பாண்டவரை அடர்த்தற்கியலாது என்பதை உய்த்துணருமாறு அமைந்துள்ளது.[148]

போர்க்களத்தில் தன்னை எதிர்த்த சகுனிக்கு, "வஞ்சனை கொண்டு அடர்த்த சூது போன்றது அன்று மோதுபோர்; சூது கருவிகள் போல் அல்லாது, மெய் அனைத்தும் செல்லும் வீரப் பகழிகள் இவை" என்று கூறி வில்லெடுத்துப் போர்தொடுத்து, அவனைப் புண்படச் செய்து, சூதுபோர் நெறி வேறு, மோதுபோர் நெறி வேறு எனக்காட்டிப் போரைப் பொருத்தவரை, பாண்டவர்க்கே ஏற்றம் என்பதை நிறுவுகிறான்.[149]

தன் வாழ்வில் பொழுது போக்கிற்காகக் கொள்ளப்பட்ட சூது, அரசியலில், சூழ்ச்சியாய் (இராச தந்திரமாய்) வளர்ந்து, அரசர்க்குரிய கருமமாகிய போர் வன்மைக்குரிய இயுத்தியைக் கவர்ந்து அதனொடு போட்டியிட்டு முரணி நின்ற வரலாற்றை மேற்குறித்த செய்திகள் தெரிவிக்கின்றன. துரியோதனன், துச்சாதனன், கன்னன், சகுனி ஆகிய நால்வரும் பாண்டவர்களை வெல்லும் உபாயம் பற்றி ஆயுங்கால், துரியோதனன், போர் புரிந்தோ அல்லது வஞ்சமும் தீமையும் செய்தோ அவரை வீழ்த்த வேண்டும் என்று கூறுகிறான்.[150]

வஞ்சக நெறி கொண்டாயினும் பாண்டவரை ஒழிக்க வேண்டும் என்று துரியோதனன் கூறியது கேட்ட கன்னன்,

147. வில்லிபாரதம்: உலூகன் தூதுச் சருக்கம்: 15. பக். 328. மர்ரே பதிப்பு (1959)
148. வில்லிபாரதம்: முண்டகச் சருக்கம்: 39. பக். 241. மர்ரே பதிப்பு (1959)
வில்லிபாரதம்: நாடுகரந்துறைச் சருக்கம் - 30. பக். 284. மர்ரே பதிப்பு (1959)
149. வில்லிபாரதம்: பன்னிரண்டாம் போர்ச் சருக்கம்: 72. பக். 463. மர்ரே பதிப்பு (1959)
வில்லிபாரதம்: நிரைமீட்சிச் சருக்கம்: 67. பக். 312. மர்ரே பதிப்பு (1959)
150. வில்லிபாரதம்: சூதுபோர்ச் சருக்கம்: 11, 18. பக். 152-53.
(1959)

"வஞ்சனை கொண்டு வெல்ல மதிப்பது வாளால் வெல்ல
அஞ்சினம் ஆயின் அன்றோ" - வில்லிபாரதம்: சூதுபோர்-19.

என்று தன் கருத்தைக் கூறுகிறான். எனவே, போர்க்குரிய இடத்தில், வேந்தர் வஞ்சனை ஒன்றை ஏற்றிவைக்க முற்பட்டிருந்தலையும், அவ்வஞ்சனை சூதாய் வடிவமெடுத்-திருந்தலையும் காணலாம். ஆதலின், போர் வன்மைபோலும் அரசியல் நியதியாய், எவ்வேளையாலும் ஒப்புக் கொள்ளப்படாத போயினும், அதற்கு ஒத்ததாய்க் கைக்கொள்ளப்பட்டிருந்திருக்கிறது என்பது நன்கு புலனாகும்.

அரசியல் அறமாகிய போர் வன்மையை முந்திக் கொண்டு, அரசியல் சூழ்ச்சித் திறன் (இராச தந்திரம்) என்னும் பெயரால் சூதின் வடியில் மறம் தலையெடுத்து நின்று, தனித்தனி வாழத்தலைப்பட்ட இருபெரு வேந்தர் குழுவைத் தொடர்ந்து இகல் கொள்ளுமாறு செய்து, இயல்பான போர் மனப்பான்மையை மேலும் உரங்கொள்ளச் செய்துள்ளது உய்த்துணரத்தக்கது.[151]

சூதின் வடிவில் செயலாற்றும் மறம், ஏமாற்றத்தின் விளைவால், இழந்ததைப் பெறவேண்டும் என்னும் எண்ணத்தைப் பாண்டவர் பால் வயப்படுத்தி விடுகிறது; வென்று நாடு மிகுத்துக் கொண்ட செருக்கின் விளைவால் பெற்றதை இழத்தல் ஆகாது என்னும் இவறன்மையை (ஆசை மிகுதியை) துரியோதனுதியர்பால் வயப்படுத்தி விடுகிறது. முடிவும் இருவேறு எண்ணங்களால் விளையும் விளைவு கடும் போராக உருவெடுக்கிறது.

இரு பகை வேந்தர்க்கிடையே, மண்ணாசை காரணமாக, இயல்பாக நிகழும் போரின் இயல்பு வேறு. வஞ்சனையை நன்னெறியாகவும் அரச நீதியாகவும் கொண்டு செயற்பட, அதனுல் நிகழும் போரின் இயல்பு வேறு.

'நற்செயல்களைப் போலவே, தீச் செயல்கள் நன்மை விளைவிக்கக் கூடும் என எண்ணி, தீயன வேண்டா வென்னும் கொள்கையை விலக்கி, நன்மையினிடத்தில் தீயதை ஏற்றி வைத்துப் பயன் காண முயலலாம்; தொடர்ந்த தீச்செயல்களால் பெருநன்மை விளையக் கூடும் என்று கருதலாம். எனவே, பெருநன்மை ஒன்று

---

151. ஆய்வாளர் விளக்கம்: அடிக்குறிப்பு: பக்.62

கருதித் தீயதை மேற்கொள்ளல் தேவை என்று எண்ணலாம்; எனினும் தீயது என்றும் தீயது என்பதே என்றுமுள்ள உண்மை" என்று தத்துவஞானி எடுத்துக்காட்டுகின்றனர்.[152]

சூது வஞ்சனை நெறி என்று துரியோதனன் முதலியோர் அறிந்ததே. பாண்டவர் அதனைத் தீயது என்று கருதினர் என்பதைக் கூறவேண்டுவதில்லை. வீடுமன், விதுரன் முதலிய பெரியோரும் அதன் தீமையை உணர்ந்தவரே. எனினும், பகைவரை அழிக்கும் வகையில் அதனை நல்லது போலும் சூழ்ச்சித் திறனாகத் துரியோதனனியர் கொண்டதும், அச்சூழ்ச்சிக்கு இரையாகித் தருமன் அதனை மேற்கொண்டதும் அதனால் நிகழ்ந்த-தொடர்ந்த வரலாறுகளும், தீமை என்றும் தீமையே என்பதனை நன்கு நிறுவுவன.[153]

பொழுதுபோக்குக்காக மேற்கொள்ளப்படும் தீய பழக்கம், மெல்லமெல்ல உரம் பெற்று, சமுதாய, அரசியல் நிலைகளில், அறத்தின் இடத்தைப் பற்றிக் கொண்டு அதன் ஆற்றலொடு முரணி நின்று கடும் விளைவுகளை உண்டாக்கும் என்பதற்குப் பாரதத்தில் நிகழும் சூதாட்டம் தக்க சான்று பகர்கின்றது.

சூது வடிவில் வந்த தீமைக்கு இடந்தந்து இடருற்றும், அதற்கு முற்றிலும் இரையாகாது, சூது கொண்டு தீமை புரிந்தாரையும், ஓர் உடம்பில் உள்ள கண்ணையும் கையையும் போல், உடன் பிறப்பினராகவே கொண்டொழுகி உரிமை பாராட்ட வேண்டும் என்று தருமன் விழைகின்றான்.[154]

எனினும் அவன் விழைவு எளிதில் நிறைவேறுமாறு இல்லை; அறம் வேண்டின் உரிமை இழத்தல், உரிமை கருதின் அறத்தைப் புறக்கணித்துப் போரிடல் என்ற நிலையே உள்ளது. காரணம், மறத்தின் தீங்கு பற்றிய எண்ணமேயில்லாமல், அது தமக்கு எல்லா நன்மையும் செய்துவிடும் என்று துரியோதனனியர் நம்பும் நம்பிக்கையின் உறுதிதான்; அதனோடு அறநெறியும், அது நல்கும் பயனும் பற்றிய எந்தத் தெளிவும் இன்மைதான்.

அறத்தின் விழுப்பம் உணர்ந்த தருமன் அதைத் தன் தம்பியரான துரியோதனனியரும் தம்போல் உணர்ந்து நடக்க வேண்டும் என்னும் எண்ணத்துடன், தன் உரிமைகளுள் பெரும்

152. Hastings Rash Lall: The Theory of good and evil. Vol.II. Page 242-43 (1907).
153. மு.கதிரேசச் செட்டியார்: சக்கிரவர்த்தி: பக். 16 ( 1926 )
154. வில்லிபாரதம்: கிருட்டினன் தூது: 15, 16. பக்.338. மர்ரே பதிப்பு (1959)

பகுதியானவற்றை விட்டுத்தர முற்படுகிறான். உரியநாடு தரவில்லையேல் ஐந்து இல்லம் சாலும்[155] என்று அவன் விட்டுத்தர முன்வருவது அச்சத்தினாலோ கோழைமை-யினாலோ அன்று; பகைவர் அறத்தின் திறம் உணர வேண்டும் என்ற எண்ணம் பற்றியதே.

தருமன் உள்ளம் உணர்ந்ததுபோல், அறத்தின் வெற்றியைப் பகைவர் உள்ளம் உணருமாறு இல்லை. அறநெறி நின்று உற்றார்க்கு உரியன நல்கும் பெருமை பகைவர்க்கு இல்லை என்பதைத் தருமனின் உடன் பிறந்தார் உணர்ந்திருக்கின்றனர். அறமும் கிளை உறவும் கருதினால், பணிந்து இரந்து உண்டிருந்து காலம் கழிக்கும் வாழ்வே கிட்டும்; பகைவன் குடைக்கீழ் உயிர் வாழும் வெற்று வாழ்வே கிட்டும் என்று வீமன் கருதுகிறான்.[156] அறம் மேம்பாடு உடையது என்றாலும், அம்மேம்பாட்டைப் பகைவர் உணராவிடில், அவையில் எல்லாரும் காணத் தமக்கு விளைந்த மாசு வாழத் தாம் வாழ வேண்டிய நிலையே இருக்கும்; மாசு நீங்குமளவில், பகைவர் அறம் உணர்ந்து திருந்தி உரிமை நல்கார்.

வளமான விதையிடினும், உவர் நிலம் அதற்குரிய பயன் நல்காது; மாறாக விதையையே பாழாக்கும். உயிரை நெடிது வாழ வைக்கும் அமிழ்தம் ஊட்டினும், பாம்பு அதற்குரிய பயன் நல்காது; மாறாக அமிழ்தத்தையே பாழாக்கி நஞ்சையே உமிழும்; எத்துணை விழுமிய கேள்விச் செல்வம் ஆயினும், இயல்பிலேயே கெடுமதி உடைய உள்ளம், அக்கேள்விச் செல்வம் ஏற்றுப் பயன் பெற்றுப் பயன் தராது; மாறாக அக் கேள்விச் செல்வத்தையே பாழாக்கும். ஆதலின் அறத்தின் விழுப்பம் எத்துணை உயர்ந்ததாயினும், மறநெறியில் அடிப்பட்டு நிற்பார், அறம் உணர்ந்து திருந்தார்; மாறாக அறத்தின் பெற்றியையே சிதைப்பர் என்று அருச்சுனன் கருதுகிறான்.[157]

அரசநீதி வேறு; வேந்தர் தன்மை வேறு; பொதுமை அறம் இவ்விரண்டையும் பிணைத்து வையாது; பகை ஊறி உரம் பெற்று விட்ட உள்ளம், அறவுரைக்கு இயைந்து திருந்தாது; சொல்லால் உணர்த்தப் பெறாத வெற்றியைப் படை வன்மையால் உணர்த்திப் பகைவரை அறத்தின் பாங்கு உணரச் செய்ய வேண்டும். மகளிர் நிறை காக்கும் அறம் போலும் உயரிய அறங்கள், படைவன்மையால் நிலைப்பட்டமைக்கு வரலாறு உண்டேயன்றி,

---

155. வில்லிபாரதம்: கிருட்டினன் தூது: 9. பக்.337. மர்ரே பதிப்பு (1959)
156. வில்லிபாரதம்: கிருட்டினன் தூது: 14,18. பக்.338-39. மர்ரே பதிப்பு(1959
157. வில்லிபாரதம்: கிருட்டினன் தூது: 22,23. பக்.339-40. மர்ரேபதிப்பு(1959).

நாவுரை மூலம் பேணப்பட்டமைக்கு வரலாறு இல்லை. கற்போருக்கு இயல்பாகக் கல்வி வேட்கை இருந்தாலன்றிக் கற்பிப்பவனின் வேட்கைக்கு ஏற்பக் கல்வி பயன்படும் என்பது பொருந்தாக் கருத்து; ஆதலின் அறம் கெட, இரக்கமிலார்பால் இரந்து வாழும் வாழ்வே அமையும்; அறம் வாழாது என்று நகுலன் கருதுகிறான்.[158]

சமுதாய அரசியல் நிலைகளில் அறத்தின் விழுப்பம் உடனடியாக உணர்ந்து போற்றப்படுதல் இல்லை என்பது, தருமனின் தம்பியர் கூற்றுகளாலும், துரியோதனாதியர்தம் மனப்பான்மையாலும் நன்கு விளங்கும்.[159]

அறநெறி ஒன்றே உரிய உரிமையினை உடன் தாராது என்பதைத் தன் தம்பியர் போல் தருமனும் உணர்ந்துள்ளான்; நாடும் ஊரும் இல்லமும் முறைமுறை வேண்டி மறுக்கப்பட்ட பின்னர், இறுதியில் போர் வேண்டு என்று கண்ணனிடம் வேண்டும் வேண்டுகோளிலும், 'நாடும் தாயமும் தாராவிடில் போர் செய்தேனும் பெறுவேன்; அது பழி அன்று' என்ற தன் கருத்தைத் தெளிவு படுத்தும் சொற்களிலும், போர்த் தொழிலும் இறுதியாக உள்ளது எனக் கூறி வீமனை அமைதிப்படுத்தும் சொற்களிலும், 'துறவு மேற்கொள்க' என்று திருதராட்டிரன் விழைந்த விழைவைத் தெரிவித்துத் தூது வந்த சஞ்சயனிடம், இம்மையில் வசை நிற்க, வீடுபேறு கருதித் துறவு மேற்கொள்வதினும் எழு நரகிலும் தனித்தனி உழல்வது நலம் பயக்கும், ஆதலின் மன்னர்க்குரிய அறத்தை முதலிற் கடைப்பிடித்துப் பகைவரை விசும்பு ஏறச் செய்து அதன் பின்னர்த் துறவறத்தில் கருத்துச் செலுத்துவேன் என்று வகைபட உரைக்கும் கூற்றிலும், அறத்தை வாழ வைத்தற்கு அறநெறி உடன் உதவாதாயின், மன்னவர்க்குரிய (போர்) அறநெறி கொண்டு அதனைப் பெறுதல் ஒல்லும் என்பதைத் தருமன் தன் உள்ளத்தில் தகவுபட அமைத்திருந்தான் என்பது புலப்படும்.[160]

எனவே, அறநெறிக்கு முதன்மை தந்து, அந்நெறிப்படியே உலகியற் சிக்கல்களைத் தீர்க்க வேண்டுமென்னும் கோட்பாடுடைய அறநெறியாளர்தம் முயற்சிகள்

---

158. வில்லிபாரதம்: கிருட்டினன் தூதுச் சருக்கம்: 24-27. பக்.340. மர்ரே பதிப்பு (1959).
159. Dr.S.Radhakrishnan. Quoted by I.C.Sharma: Ethical Philosophies of India. Page 64 (1965).
160. வில்லிபாரதம்: கிருட்டினன் தூதுச் சருக்கம்: 9,8,16. பக்.336-38. மர்ரே பதிப்பு (1959).

பெருஞ் சோதனைக்கு உள்ளாவன உள்ளன.[161] மறநெறியின் (தீமையின்) போக்கிற்கு ஏற்ப, அறம் மட்டுமல்லாது, படைவன்மை, இராச தந்திரம் ஆகிய வேறு முயற்சிகளையும் அறவோர் மேற்கொள்ள வேண்டியிருந்திருக்கிறது என்பது பாரதம் உணர்த்தும் உண்மைகளுள் ஒன்றாகும்.[162]

பொதுவாகவே, தீயோரை அறநெறி கொண்டு திருத்துதல் அரிது. அதிலும், உரிமை, நீதி என்று நாடுவோர், தாம் விரும்புமாறு அவற்றின் பெருமை தெரிந்து நடப்பர் தீயோர் என்று கருதி அறம் உரைத்துத் திருத்திக் கருதியது முடிக்க முயல்வது வறிய முயற்சியேயாகும். இவ்வுண்மையை அறவோராகிய கண்ணனும் விதுரனும் பாண்டவர் உரிமை பற்றி உரையாடுங்கால் தெளிவாகப் புலப்படுத்துகின்றனர்.

"வழக்கறிந்து உரிமை நல்கும் நற்பண்பு துரியோதனனிடம் இல்லை. போரில் கலக்கமுறச் செய்தால் அன்றி, நீதி உரிமை ஆகியவற்றின் பெருமையை அவன் உணர்வானோ" என்று விதுரன் கண்ணனை வினவுகிறான்.[163] தன்போலும் வாழ்வு, தன் தாயத்தார்க்கும் உரியது என்று கருதிப் பெருமனம் கொண்டு அவனே அவர்கட்கு வாழ்வளித்து உரிமை காத்திலனேல், பாண்டவர், எதிர்த்துப் போர் புரிந்து, பகைவர் மூளை அவர் வாய் வழிச் சிந்துமாறு அவரை அழிப்பது உறுதி என்று விதுரனுக்கு விடையளிக்கிறான் கண்ணன்.[164]

அறம் செயற்படாத நிலையில், அறத்தின் இடத்தில் வீரம் வந்து நின்று செயல் புரிந்து, உரிமை, நீதி ஆகியவற்றை நிலை நிறுத்தும் என்பதை அறத்தின் பெற்றி உணர்ந்த நல்லோராகிய விதுரனும் கண்ணனும் தெளிந்துள்ளனர். தம்போலும் அறவோரே எண்ணித் தெளிந்துணரும் உண்மை என்பதினும், உலகியல்பே பொதுவாக அத்தகையதுதான் என்று கண்ணன் எடுத்துரைக்கிறான். "இன்சொல் கூறித் தாழ்ந்து இரந்து வேண்டினால், கிளைஞர் என்று கருதி உலகத்தார் எந்த ஒன்றையும் ஈய முன் வரமாட்டார்கள். தாழ்ந்து இரந்து வேண்டி நின்றவரே, பெரும்போர்

---

161. S. Gopalan: Social Justice. Page 35-36.(1972)

162. வில்லிபாரதம்: பதினெட்டாம் போர்: 248. பக். 664. மர்ரேபதிப்பு (1959)
163. வில்லிபாரதம்: கிருட்டினன் தூது-91. பக். 350. மர்ரேபதிப்பு (1959)
164. வில்லிபாரதம்: கிருட்டினன் தூது-92. பக். 350. மர்ரேபதிப்பு (1959).

மேற்கொண்டு, பகைவர் உடம்பெல்லாம் சென்று தைக்குமாறு பகழிபல துரக்கும்போது, அவர் வேண்டுவனவெல்லாம் உதவித் தம்மைக் காத்துக் கொள்ள முனைவார் அப்பகைவர்" என்று உலகியலின் மேலிட்டுக் கூறி, அறம் விளைக்க விழையும் விளைவுகளை வீரம் மிக எளிதில் விளைத்து விடும் என்று விளக்குகிறான்; அறத்தை எளிதெனப் புறக்கணிப்போர், மறத்திற்கு (வீரத்திற்கு ) இலக்காகித் துன்புறுதல் மூலம் அறத்தின் வெற்றியை அறிந்திடுவர் எனப்புலப்படுத்துகிறான்.

> இதம்பட மொழிந்து இரந்து வேண்டினும், வினைஞருக்கு ஒருபொருள் ஈயார்; பரந்த போரினில் எதிர்த்து அவர் படப்படப் பகழி துரந்தபோது அவர்க்கு உதவுவர், சொன்னவை எல்லாம்"
>
> - வில்லிபாரதம்:கிருட்டினன் தூது-93.பக்.350.

துரியோதனுடியர் தம் இயல்புக்கு ஏற்ப, மறநெறி (தீயநெறி)யே கருதுவார்; அறநெறியின் பெற்றி அறிந்திலராயிருந்தார்; கண்ணன் இதனை முன்னமே அறிந்தவன். அறிந்தும் தூது செல்கின்றான். அவர் இயல்பை நேரில் ஒருமுறை கண்டறிந்து, தானும் அவர்தம் சூழ்ச்சிக்கு இலக்காகித் தன் ஆற்றலால் தன்னைக்காத்து[165] அறநெறிக்கு இயைவுறாத பகைவரை மறநெறி (வீரநெறி) கொண்டே தொலைத்தல் வேண்டும் என்ற ஓர் உறுதியடைந்து, திரும்புகிறான். துரியோதனுடியரிடம் தான் தூது வந்ததை அறிவித்துப் பாண்டவர் மனநிலையைப் புலப்படுத்தித் துரியோதனுடியர் கருத்தறிதற்கு முன்னமேயே, விதுரனிடம் தன் உறுதியைத் தெரிவிக்கிறான். தூதுக்குப் பின்னர்த் தான் கொண்ட உறுதியே உண்மையாயிற்று என்ற மனநிலையோடு பாண்டவர்பால் திரும்புகிறான்.[166]

கண்ணனின் தூதுக்குப் பின்னர், கண்ணன் கொண்ட முடிவையே தருமன் கொள்ள வேண்டியவனாகின்றான். கண்ணனைத் தான் தூது அனுப்புதற்கு முன்னரே, தன்பால் திருதராட்டிரனிடமிருந்து தூது வந்த, சஞ்சயனிடம்,

> "மன் அறத்தினை விட்டு, நல் அறம் மன்னர் ஆனவர் முயல்வரோ"
>
> - வில்லிபாரதம்:சஞ்சயன் தூது-11.பக்.333.

---

165. வில்லிபாரதம்:கிருட்டினன் தூதுச்சருக்கம்:212-23. பக்.365-66. மர்றே பதிப்பு (1959)
166. வில்லிபாரதம்:கிருட்டினன் தூதுச்சருக்கம்:260.பக்.375.மர்றேபதிப்பு(1959)
வில்லிபாரதம்:சம்பவச் சருக்கம்:113.பக்.40. மர்றே பதிப்பு (1959)
வில்லிபாரதம்:பதினெட்டாம் போர்:189.பக்.650. மர்றேபதிப்பு(1959).

என்று விளைவதற்கு ஏற்ப, அறவோர் நெறியில் நின்று அறத்தினைக் கடைப்பிடித்து அரசியற் சிக்கலைத் தீர்க்க விரும்பிய தருமன், அரசர் நெறிக்குத் திரும்பி மறநெறி (போர் நெறி) மேற்கொண்டு, தன் உரிமையை நிலைநாட்டிக் கொள்ளும் நிலைக்கு மாறுகிறான். தூது சென்று திரும்பிய கண்ணன், தான் தூது சென்ற வரலாற்றினைக் கூறுமுன்னமே, தருமன், தனக்கு ஆதரவு காட்டும் வேந்தர்க்கெல்லாம் படை கொண்டுவரும்படி ஓலை போக்குகிறான்.[167]

புறச் சூழல்கள் எவையும் நெகிழ்விக்க இயலாத வகையில், ஒருவன் பண்பாடுடையனாய் இருப்பின், அதுவே அவனுக்குரிய பெருநலன் ஆகும். சமுதாய நீதி, அநீதி என்பன அவனைப் பொறுத்தவரை அத்துணை முக்கியமானவை ஆகா; ஆதலின் நல்ல சமுதாயம் அமைய வேண்டுமென அவன் கவலைப்படவுந்தேவையில்லை என்று சமய நூலாருந் தத்துவ நூலாரும் கூறுவர். எனினும், உயர்நலன்கள் யாவும் சிலர்க்கே எனவும், அவற்றை அடுத்து வரும் ஏனைய நல்லனகளெனில் பிறர்க்கு ஆகும் எனவும் கொள்வது அறத்தொடு பொருந்திய நிறைவு தாராது. ஆதலின் அனைவரும் வாழ வேண்டுமென்று கருதுவோர், தமக்குரிய ஆணை (அதிகாரம்) உடைமை ஆகியனவற்றை இன்றியமையாத நலன்களாகக் கருதுவர், எனவே இவை பற்றி அநீதி நிகழுங்கால், அவ்வநீதிக்குரிய சமுதாய அமைப்பு முறையைத் தாங்கிக் கொண்டு அமைதியாய் இரார்[168] என்று அரசியல் உலகில் நல்லோர் கொள்ளும் மனநிலையை ஆய்வாளர் விளக்கியுள்ளனர்.

இக்கருத்துகளை நோக்க, "இருவர்க்கும் வசை அன்றோ இருநிலம் காரணமாக எதிர்ப்பது" (கிருட்டினன் தூது:15.பக்.338) என்று அறம் கருதும் தருமன், "நம்பதியும் தாயமும்... பொருது பெறுவன்; வசையும் அன்றே" (கிருட்டினன் தூது-8. பக்.336) என்று மறநெறி, (வீரநெறி) மேற்கொண்டு தன் உரிமை உடைமை ஆகியவற்றைப் பெற முயலும் முயற்சி பொருந்துவதே என்பது நன்கு புலப்படும்.

உரிமை தாராவிடின் பாண்டவர் பொருது பெறுவர் என்று உலூக முனிவன்[169] கூறுதல் போன்றே, அமைதி நெறிகளெல்லாம் கடைப்பிடித்த பின்னர், போர்

167. வில்லிபாரதம்: படையெழுச்சிச் சருக்கம்:2.பக்.375.மர்ரே பதிப்பு (1959)
168. Bertrand Russell: History of Western Philosophy. Page 199 (1954).
169. வில்லிபாரதம்: உலூகன் தூதுச் சருக்கம்:12.பக்.328.மர்ரேபதிப்பு(1959)

நெறியினைக் கடைப்பிடித்தல் முறைமையின் பாற்பட்டதே என மேல் நாட்டுச் சமயச் சான்றோரும் ஒப்பியுள்ளனர். எல்லாம் தம்முடைமை என்னும் நோக்கில் செயல் புரிவார்தம் நடவடிக்கைகட்கு வரம்பு கோலுவது இயற்கை நியதிக்கு ஒத்ததே என அவர் விளக்கினர்.[170]

எனவே, அறம் உலகில் வாழவேண்டும் என்று விரும்பும் தருமனும் அறத்தை உலகில் நிலை நிறுத்த வேண்டும் என்று விரும்பும் கண்ணனும், விழுமிய நோக்கொடு வீரநெறியைப் போற்ற முற்படுகின்றனர். ஊழ போக்கிப் பகைத்திறம் அறியும் தருமனும், ஊது சென்று பகைத்திறம் உறுதி செய்யும் கண்ணனும் கருத்தால் ஒன்று படுகின்றனர்.

"நேர்மை குன்றி, ஒழுங்கு தவறி உள்ளத்தில் எழும் பூசலே, அரசியற் சிக்கல்களாகப் புறவடிவங்கொள்கின்றது. அதைத் வரலாற்று நிகழ்ச்சிகளாகப் புறத்தில் வெளிப்படுதற்கு முன்னமேயே, மனிதனின் உள்ளத்தில் வாழ்வு நிகழ்ச்சிகள் உருப்பெற்று விடுகின்றன. பேராசை, பெருவேட்கை ஆகியவற்றிற்குக் காரணமான நிலைகளை வெல்வதற்கு, முன்னோர் கொண்டிருந்த முனைப்பை மீண்டும் கடைப்பிடிப்பது இன்றியமையாத கடப்பாடாகின்றது. இம் முயற்சியில் தலைப்படவில்லையேல், இன்று பயன்பாடுகளியாவும் பொருளற்றனவாய் அறத்திற்குப் புறம்பானவையாய்ப் போய் விடும்" என்று, அரசியற் சிக்கல்களுக்கெல்லாம் காரணம் அகத்தூய்மையின்மையே யென ஆய்வாளர் விளக்குகின்றனர்.[171]

அகத்தில் உள்ள மாசினை எதிர்த்து மனிதன் தனக்குத் தானே மேற்கொள்ளும் போராட்டமும், அகமாக பேராசையாய்ப் பெருவேட்கையாய், பிறர் உரிமை, பிறர் உடைமை மறக்கும் வன்மையாக முதிருமெனின் உரிமைக்கும் உடைமைக்கும் உரியார், அவற்றை மறப்பாரை எதிர்த்து மேற்கொள்ளும் போராட்டமும் ஒரு தன்மையானவையே. இவ்வகையில் பாண்டவர் மேற்கொள்ளும் போர், மறநெறி (கொலை நெறி) பற்றியதாயினும், அஃது அறநோக்கம் பற்றியது என்பது தெளிவாகப் புலப்படும்.

---

170. G.P. Frantsov: Philosophy and Sociology. Page 56.(1975 )
171. S. Radhakrishnan: Contemporary Indian Philosophy.

அறத்திற்குப் பொருந்தாத நீதியை, அறத்திற்கியைந்து வருமாறு மாற்றுவதை மன்பதை நீண்ட காலப் போராட்டமாக நிகழ்த்தி வருகிறது; முடிவெடுத்து அமைக்கப் பட்டதுவோ, தொடர்ந்து நிறுவப்பட்டுவிட்டதுவோ அதுவே சரி என்னும் உரிமை கொண்டு, புரியாத புதிராக உள்ள எவ்வகை அறத்தையும் மாற்ற வேண்டும் என்பது மன்பதையின் நோக்கமன்று. யாவர்க்கும் பொதுவானதாய், பொருந்தியதாய் உள்ளது எனத் தெரிந்தபின் அத்தகைய அறத்தைப் பேணவேண்டும் என்பதே அதன் நோக்கம். இவ்வகையில் பெருஞ்சாதனை நிகழ்ந்துள்ளதெனினும், இன்னும் எவ்வளவோ செய்ய வேண்டியுள்ளது; அது தக்கவாறு அமையாதவரையில், பூசல், அமைதியின்மை, புரட்சி ஆகியவற்றிற்கு முடிவு காணல் இயலாது. கன்றுடிகளாய் அடிமைகளாய் உழல்வோரே, அறத்திற்கியையாத நீதியைத் தாங்கிக் கொண்டிருப்பர்; தக்கது இன்னது என்ற தெளிவு புலப்பட்டதும், அதனை இயல்பான, அமைதி மிக்க நெறி கொண்டு செம்மை செய்ய முற்படுவர். எங்கும் எதிலும் அறம் திறம்பிய நீதி உள்ளதெனின், அனைவர்க்கும் ஒத்ததும் பொருந்தியதுமாய நீதி நெறிமுறையின், முயன்று பாடுபட்டு அந்நிலையை மாற்றுவர்; அத்தகு திருத்தம் நிகழும் வரை, கடும் பூசல்களே விளையும். செப்பமும் அமைதியும், உண்மையாக, நின்று நிலவா என்று அரவிந்தர் மொழிந்து கூறும் கருத்துகள்[172] பாரதப் போர்க்குப் பின்னணியாக இருக்கும், கண்ணன் தருமன் ஆகியோர்தம் மனநிலைக்கும் முடிவுகளுக்கும் பொருந்துவனவாகவே உள்ளன.

கண்ணனுக்கும் பாண்டவர்க்கும் அறம் இன்னது எனவும், நீதி இன்னது எனவும் புலப்பட்டன. கண்ணனைத் தூது போக்கித் தருமன் அவற்றை நிறுவ முயன்றான். கண்ணன் தூது சென்று அவற்றை நிறுவ முயன்றான். பகைவர் நெஞ்சம், அறம் நீதி ஆகியவை பற்றிய தெளிவு கொள்ளாத நெஞ்சமெனக் கண்டதும், போர் நெறி கொண்டு, பகைவரை அடர்த்து வென்று அவற்றை வாழ்விப்பது என்று அவ்விருவரும் கொண்ட முடிவு பொருந்திய முடிவேயாகும்.

---

172. Aurobindo: The human cycle, The Ideal of Human Unity, War and Self determination. Page 880 (1962).

இருவர்தம் முடிவாலும், அவர் முடிவுக்கு ஏற்ப அவரொடு ஒத்துச் செயற்படும் பாண்டவரும் அவர்க்கு உதவும் பிறவேந்தரும் அவர் வழி நிற்க முற்படுதலாலும் அரசியல் உலகில் அறம் ஆற்றாத ஒன்றை, அதன் பொருட்டு, அதனிடத்தில் நின்று, வீரம் ஆற்றி அறத்தின் சீர்மையை நிலை நிறுத்துகிறது என்பது புலனாகும். எனவே, அறம், வீரத்தின் உதவி நாடி அதன் பின் நின்று பயன்பெற்றுத் தன்னை நிறுவிக் கொள்ளுகிறது என்பது பாரதம் (குறிப்பாக பாரதப்போர்) உணர்த்தும் உண்மையாகும்.

## இயல் - 4

## கலைகளும் அவற்றின் பயன்களும்

மனிதனை, விலங்கினின்றும் வேறுபடுத்தி, உயர்த்தி நிறுத்தித் தொடர்ந்து மேம்பட்டுச் செல்லுமாறு செய்யும் நாகரிகச் சாதனங்கள் கல்வியும் கலைகளுமேயாகும். உலகில் நாகரிகம் படைத்த இனங்கள் எல்லாம் இவ்விரண்டையும் உயிர்போல் பேணி வளர்த்தன. மாற்றிச் சொன்னால், எவ்வினமாவது விழுமிய நாகரிகம் பெற்றுத் திகழ்ந்திருந்ததெனின், அது, கல்வி, கலைகள் ஆகிய இவ்விரண்டையும் பேணி வளர்த்தே அந்நாகரிகத்தினைப் பெற்றது என்பது முற்றிலும் உண்மையே.[2]

வில்லி பாரதத்தில் வரும் காவியமாந்தர் தம் கல்வி, கலைத் திறன்கள் அவரவர்தம் இயல்புகளை (மனித மாண்பியல்புகளை)ப் புலப்படுத்துவதோடு, அவை காவிய காலத்து மக்களியல்பு, நாகரிக நிலை ஆகியவற்றையும் நன்கெடுத்துக் காட்டுவனவாய் அமைந்துள்ளன.

அந்தணர், அரசர், வணிகர், வேளாளர்[3] எனப் பகுக்கப்பட்ட நால்வகை மாந்தருள், அந்தணர் கல்வி கலைகளில் வல்லவராய்த் திகழ்ந்தமையை பாரதம் விரிவாக எடுத்துரைக்கிறது. தத்தம் உரிமை கருதிப் புகழ் வாய்ந்த பெரும் போர் விளைத்த, பாண்டவர் கௌரவர்களுக்குக் கல்வி நல்கிய துரோணர்[4] அந்தணர். துரோணரின் தந்தை பாரத்துவாச முனிவர், தானம், இசை இரண்டொடும் பொருந்திய வேதம் வல்லவர் எனப்புகழ் பெற்றவர்; பதினான்கு வகை வித்தைகளில் வல்லவர்

---

1. Brignarain Sharma: Social life in Northern India. Page 77 (1966

   திருக்குறள்: பொருட்பால்: கல்லாமை: 10.
2. Radha Kumud Mukherjee: Ancient Indian Education: Prologue XXXV (1965).
3. வேளாளர் எனத் தமிழ் நாகரிகத்தில் குறிக்கப் பெறுவோர் சூத்திரர் என ஆரிய நாகரிகத்துள் குறிக்கப் பெறுவர்
4. Javaharlal Nehru: Glimpses of World History. Page 27 (1975).

எனவும் அவரே அவற்றைத் துரோணர்க்குக் கற்பித்தவர் எனவும் பெயர் பெற்றவர்.[5] "நிறைந்த கேள்வி நெஞ்சன்" என்ற பெருமை பெறுமாறு, தம் மகனுக்கு விரிந்த அறிவு நல்கியவர்.[6]

அறிவுக் கலை நல்கிய பாரத்வாச முனிவரைப் போலவே, படைமைக் கல்வி நல்கிய பரசுராமரும்[7] அந்தணரே. தொடர்ந்து அப்படைமைக் கல்வி மேம்பட்டுப் பெருகுமாறு துரோணர்க்குக் கற்பித்த அக்கினிவேச முனிவரும் ஓர் அந்தணரே[8] துரோணரைப் போலவே பெரு வீரராய்த் திகழ்ந்த வீடுமனுக்கும் கன்னனுக்கும் படைமைக் கல்வி நல்கினர் அந்தணராகிய பரசுராமர்.[9] அவர் வீடுமனின் பெரு வீரத்திற்கு ஆசிரியர் எனின் அவனுடைய ஆத்திகவியப் புலமைக்கு ஆசிரியராகத் திகழ்ந்தவர் வசிட்ட முனிவர்; அவரும் புகழ் வாய்ந்த அந்தணர்.[10]

பாண்டவரும் கௌரவரும் இளஞ்சிறுராய் இருந்த போது அவர்க்கு விற்கலை, வேற்கலை, வாட்கலை ஆகியவை நல்கிய கிருபனும் ஓர் அந்தணனே.[11] அக்கிருபனின் தந்தையாகிய சரத்வான் என்னும் முனிவன், தான் பிறக்கும் போதே அம்புகளுடன் பிறந்தவன் என்று கூறப்பெறுகின்றான்.[12] கிருபன் பிறந்தபோது தவத்திற்கு இடையூறென அவனை விலக்கினும், பின்னர் அத்தினபுரி போந்து, தன் மகனுக்கு அம்முனிவன் படைமைக் கல்வி நல்கிச் செல்கின்றான்.[13]

துரியோதனனுக்கு இதவுரை கூறித் திருத்த முயன்ற மைத்ரேய முனிவன் 'சிலையின் குரு' எனப் போற்றப் பெறுகின்றான்.[13அ]

5. வில்லிபாரதம்; வாரணாவதச் சருக்கம்; 31, 32. பக். 44-45. மர்ரே பதிப்பு (1959)
6. வில்லிபாரதம்; வாரணாவதச் சருக்கம்; 32. பக். 45. மர்ரே பதிப்பு (1959)
7. வில்லிபாரதம்; வாரணாவதச் சருக்கம்; பக். 45. மர்ரே பதிப்பு (1959)
8. வில்லிபாரதம்; வாரணாவதச் சருக்கம்; 37. பக். 45. மர்ரே பதிப்பு (1959)
9. வில்லிபாரதம்; குருகுலச் சருக்கம்; 93. பக். 14. மர்ரே பதிப்பு (1959)
வில்லிபாரதம்; சம்பவச் சருக்கம்; 41. பக். 31. மர்ரே பதிப்பு (1959)
வில்லிபாரதம்; கிருட்டினன் தூதுச் சருக்கம்; 24. பக். 378. மர்ரே பதிப்பு (1959)
10. வில்லிபாரதம்; குருகுலச் சருக்கம்; 93; பக். 14. மர்ரே பதிப்பு (1959)
11. வில்லிபாரதம்; வாரணாவதச் சருக்கம்; 29. பக். 44. மர்ரே பதிப்பு (1959)
12. வில்லிபாரதம்; வாரணாவதச் சருக்கம்; வை. மு. கோ. விளக்கம்; பக். 160.
ஆதிபருவம்; வை. மு. கோ. பதிப்பு (1963).
புறப்பொருள் வெண்பாமாலை; கரந்தைப்படலம்; உ. வே. சா. பதிப்பு. பக். 18 (1946
13. வில்லிபாரதம்; வாரணாவதச் சருக்கம்; 29. வை. மு. கோ. விளக்கம்; பக். 160.
ஆதிபருவம்; வை. மு. கோ. பதிப்பு (1963)
13அ. வில்லிபாரதம்; பதினெட்டாம் போர்ச் சருக்கம்; 194. பக். 148.
வை. மு. கோ. விளக்கம்; வை. மு. கோ. பதிப்பு (1966).

பாரதப் போரில் தந்தையைப் போலவே பெருவீரம் புலப்படுத்தும் அசுவத்தாமாவின் பெருமை காவியத்துள் பலபடப் பாராட்டப்பட்டுள்ளது.[14] வீரத்திற்குரிய படைமைக் கல்வியேயன்றி, விவேகத்திற்குரிய நூற் கல்வித்திறமும் உடைமை பற்றி அவன் கல்வி கரை கண்ட பெரியோன் எனப் புகழ் பெற்று விளங்குகின்றான்.[15]

இவ்வாறு, அந்தணர் அறிவுக் கலையிலும் படைமைக் கலையிலும் வல்லவராயிருந்தமையைப் பாரதம் விரிவாகக் கூறுகிறது. எனினும், தமிழ் மரபில் அந்தணர் அறுவகைக் கலையிலும் வல்லமை பெற்று விளங்கியமைக்குச் சான்று இல்லை. அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கம்[16] என்னும் தொல்காப்பிய நூற்பா, ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என அறிவு முதலிய கலை பற்றிய அறுவகைத் தொழில்களையே குறிக்கின்றது.[17] அந்தணர்க்கும் அரசர்க்குரிய நிலை உண்டு என்று கூறும் தொல்காப்பியரே[18] அந்தணர் படை வகைக்கு உரியர் ஆகார் எனவும் கூறுகின்றார்.[19]

இயல்பாக, அந்தணர் படை வன்மைக்குரிய உடல் உரன், உள்ளத்திட்பம் ஆகியவை உடையர் அல்லர்.[20] எனினும் காலப்போக்கில் அவர், அரசமரபினர் போல் போர்த்திறன் வளர்த்துப் பெயரும் புகழும் பெற்றமையை ஆய்வாளர் எடுத்துக்காட்டுகின்றனர். வேந்தர் தாமே முன்வந்து, அந்தண மரபினின்று போர் வீரரைத் தேர்ந்தெடுத்தமைக்கு வரலாற்றில் சான்று இல்லை என்றும், அந்தணர் தாமே முன்வந்து போர்த்துறையில் தொண்டு புரிய முன் வந்தனர் என்று வரலாற்றுஞர் எடுத்துக்காட்டுகின்றனர்.[21]

அந்தண மரபுக்கே உரிய தொழில் பயன்படாத பொழுது, உடலில் உயிரை நிறுத்திப் பேணுதற்கியலாத கடும் வறுமை உறும்பொழுது, படைக்கலப் பயிற்சி முதலியன பெற்றுத் தொண்டு புரிய முன்வருதல் அவர் மரபுக்கு இழுக்காகாது என்று

---

14. இயல்-4 : கலைகளும் அவற்றின் பயன்களும் : அடிக்குறிப்பு : 14. பக். 70
15. வில்லிபாரதம் : வாரணவதச் சருக்கம் : 58. பக். 49. மர்ரே பதிப்பு (1959)
16. தொல்காப்பியம் : பொருளதிகாரம் : புறத்திணையியல் : 74. இளம்பூரணம். பக். 109 கழகப்பதிப்பு (1961).
17. தொல்காப்பியம் : பொருளதிகாரம் : புறத்திணையியல் : 74. இளம்பூரணர் உரை. பக். 110. கழகப்பதிப்பு (1961)
18. தொல்காப்பியம் : பொருளதிகாரம் : மரபியல் : 83. இளம்பூரணம் : பக். 570. கழகப் பதிப்பு (1961). புறநானூறு : 166, 305.
19. தொல்காப்பியம் : பொருளதிகாரம் : மரபியல் : 76 பேராசிரியர் உரை. பக். 468. கழகப்பதிப்பு (1975)
20. V.R. Ramachandra Dikshitar: War in Ancient India. Page 197 (1948)
21. V.R. Ramachandra Dikshitar: War in Ancient India. Page 196 (1948)
Radha Kumud Mookerji: Ancient Indian Education. Page 152 (1951).

பழங்கால அறிஞரே கருதியுள்ளனர்.[22] அசுவத்தாமனை வளர்ப்பதற்குப் பால் இன்றிக் கடும் வறுமையுற்றுத் துரோணன் வருந்திய வருத்தத்தை அவனே எடுத்துரைக்கிறான்.

"இம்மகவும் வறுமை உளர வளர்த்தான்"

"மாவின் பாலே அன்றி மரபுக்கு உரிய மைந்தன்
ஆவின் பால்கண்டு அறியான்"[22அ]

பெற்ற பிள்ளையையும் வளர்க்க இயலாத கடும் வறுமையைப் போக்குதற்காகவே, தன்னோடு உடன் பயின்ற யாகசேனனிடம் உதவிகேட்கச் சென்றதாகக் கூறுகிறான்.[23] யாகசேனன் உதவி மறுத்தமையாலேயே அவன் வீடுமனைத் தேடி அடைகிறான்.[24] தனக்குற்ற வறுமையைத் தீர்ப்பதற்காகவும், தன்னை இழிந்துரைத்த யாகசேனனைப் பழிவாங்குதற்காகவும், தன் கல்வியையும் கலையையும் பயன்படுத்துகிறான் துரோணன். குருகுல இளைஞர்க்குக் கல்வித் திறம் நல்கி அவர்தம் திறமைகொண்டே, தன் வஞ்சினத்தையும் முடிக்கலாம் என்று வீடுமன் கூறி துரோணனின் எண்ணத்தை வலுப்படுத்துகிறான்.

"புதல்வர் தம்மைக் காட்டி,
நீயே இவரைக் கடிதில் படைமைக் கல்வியூட்டி
நின் வஞ்சினமும் முடித்தி" என்று மொழிந்தான்[24அ]

தன் மாணவர்களாகிய பாண்டவர், கௌரவர் ஆகியோரைக் கொண்டே தன் வஞ்சினம் முடிக்கிறான், துரோணன், "மன்னன் யான்; நீ முனிவன்; மரபால் எனக்கும் உனக்கும் என்ன நட்பு உண்டு"[25] என்று இகழ்ந்த யாகசேனனைத் தன் மாணவனாகிய அர்ச்சுனன் போரில் வென்று கொண்டுவந்து தன்முன் நிறுத்த, "மறையில் அந்தணன் யானும்; மன்னன் நீயும்.... சிறுவன் வென்று உனைப்பிணித்த சிறுமை என்ன பெருமையோ?"[26] என்று வினவி, தனக்கு அவன் பாதி நாடு உதவுவதாக வாக்களித்திருந்ததை நினைப்பூட்டித் தான் அவனுக்குப் பாதி நாடு நல்கி உயிரும் வாழ்வும் உதவியதாகக் கூறிப் பெருமிதம்

---

22. V.R. Ramachandra Dikshitar: War in Ancient India. Page 197 (1948).

22அ. வில்லிபாரதம்; வாரணவதச் சருக்கம்; 41, 42. பக். 46. மர்ரே பதிப்பு (1959)
23. வில்லிபாரதம்; வாரணவதச் சருக்கம்; 42. பக். 46. மர்ரே பதிப்பு (1959)
24. வில்லிபாரதம்; வாரணவதச் சருக்கம்; 33. பக். 45. மர்ரே பதிப்பு (1959)
வில்லிபாரதம்; வாரணவதச் சருக்கம்; ஆதிபருவம்; பக். 163. வை.மு.கோ. பதிப்பு (1963)
24அ. வில்லிபாரதம்; வாரணவதச் சருக்கம்; 45. பக். 46. மர்ரே பதிப்பு (1959)
25. வில்லிபாரதம்; வாரணவதச் சருக்கம்; 43. பக். 46. மர்ரே பதிப்பு (1959)
26. வில்லிபாரதம்; வாரணவதச் சருக்கம்; 80. பக். 52. மர்ரே பதிப்பு (1959)

கொள்கிறான்.[27]

தந்தையைப் போலவே, அசுவத்தாமனும் வஞ்சினம் கூறுகிறான். தன் தந்தையிடமே பயின்ற, தந்தையையே கொன்ற திட்டத்துய்ம்மனைப் பழி வாங்குதற்பொருட்டு வஞ்சினம் கூறுகிறான். "குந்தி மைந்தர் யாவரையும் தலைகொய்து, "யாகசேனன் புதல்வனையும் உயிர் போகுமாறு போரிட்டு ஒழிப்பேன்" என்கிறான்.[28]

அசுவத்தாமனைப் போலவே, திட்டத்துய்ம்மனும் வஞ்சினம் மொழிகிறான். உடன் பயின்ற தன் தந்தையைத் துரோணன் பழிவாங்கியமைக்காக,[29] "என் கண்ணெதிரே என் தந்தையைக் கொன்றது போல், உன் மகன் எதிரே உன்னை நான் கொல்வேன்" என்று கூறித் தனக்குக் கல்வி நல்கிய ஆசிரியனை எதிர்த்து வஞ்சினம் மொழிகின்றான், திட்டத்துய்ம்மன்.[30] மொழிந்த வஞ்சினத்திற்கேற்பத் தன் கை அம்பினால் ஆசிரியன் தலையைக் கொய்கிறான் அவன்.[31]

துரோணனும் யாகசேனனும் ஓராசிரியரிடம் பயின்ற ஒருசாலை மாணவர்; எனினும் அவர்க்கிடையே இகலும் பழி உணர்ச்சியுமே எஞ்சி நின்றன. உடன் பயின்ற துரோணனை ஏசி இகழ்ந்து தாழ்த்தினான் யாகசேனன்; உடன் பயின்ற நண்பன் என்று பாராது அவனைத் தானும் இகழ்ந்து பழிவாங்கினான் துரோணன்.

துரோணனும் திட்டத்துய்ம்மனும் ஆசிரிய மாணவராய்ப் பழகியவர். எனினும் ஆசிரிய மாணவ உறவு அவர்பால் நிலவவில்லை. தன் உயிர்க்கு ஊறு விளைப்பான் என்று தெரிந்தும் துரோணன் திட்டத்துய்ம்மனுக்குக் கல்வி நல்குகிறான்.[32] பயிற்றிய ஆசிரியன், பெற்ற தந்தையைக் கொன்றமையின், அவன்மீது பழி உணர்ச்சியே மிக்கு நின்றது மாணவனுக்கு. தந்தையின் மீது கொண்ட காதல், ஆசிரியன் உயிர்க்கு ஊறு விளைத்தது.

உள்ளத்தில் எழும் தீய பண்புகளைச் செம்மைப்படுத்திப் பயன்படும் கல்வி, துரோணர், திட்டத்துய்ம்மன், அசுவத்தாமன் ஆகியோரிடத்து, உள்ளத்தில் எழுந்த

---

27. வில்லிபாரதம்; வாரணவதச் சருக்கம்; 81. பக். 53. மர்ரே பதிப்பு (1959)
28. வில்லிபாரதம்; பதினேழாம் போர்ச் சருக்கம்; 35. பக். 547. மர்ரே பதிப்பு (1959)
29. வில்லிபாரதம்; பதினைந்தாம் போர்ச்சருக்கம்; 218. பக். 540. மர்ரேபதிப்பு (1959)
30. வில்லிபாரதம்; பதினைந்தாம்போர்ச்சருக்கம்; 216. பக். 540. மர்ரேபதிப்பு (1959)
1. வில்லிபாரதம்; பதினேழாம்போர்ச்சருக்கம்; 29. பக். 546. மர்ரே பதிப்பு (1959)
2. வில்லிபாரதம்; வாரணவதச் சருக்கம்; 92. பக். 54. மர்ரே பதிப்பு (1959).

பழியாக்கல் முதலிய எதிர்மறை உணர்ச்சிகளைச் செயற்படுத்தவே பயன்படுகிறது. கற்கும் மாணவனாலேயே தனக்கு ஊறு வரும் என்று தெளிந்துணரும் அளவில் உய்த்துணர்வும் எதிர்கால உணர்வும் உடைய துரோணனே, வல்லுணர்வு (பண்படாத உணர்வு) களைக் கட்டுப்படுத்த முடியாதவனாக உள்ளான். அவனைப் போலவே, அவன் மைந்தனும், அவன் மாணவனும் வல்லுணர்வுகளுக்குக் கருவியாகிச் செயற்படுகின்றனர்.

இத்தகைய நிலைக்குக் காரணம் கூறுகின்றனர் ஆய்வாளர்; அக்காலக் கல்வியில், சிந்தனையை விடச் செயலுக்கே முதலிடம் இருந்தது. படைமைக் கல்விக்கு ஏற்றம் தந்தமையில், அறிவுத்திட்பத்தைப் புறக்கணித்துப் போர் உணர்ச்சியையே அக்காலக் கல்வி வளர்த்து வந்தது என்றும், அதனாலேயே இருபெரும் இதிகாசங்களிலும் சமூக நிலை பற்றிக் காணப்படும் விரிந்த செய்திகள் போல், கல்வி பற்றி விரிவான செய்திகள் மிகுதியாக இல்லை என்றும் கூறுகின்றனர்.[33]

பகைவளர்த்துக் காழ்ப்பு முதிர்ந்தவர், நல்ல பல நூல்களைக் கற்பினும், பகை விடுத்து மனம் திருந்துவதில்லை என்று திருவள்ளுவர் கூறுகிறார்.[34] புறவாழ்வு பற்றிய நீதி நூற்கல்வி அனைத்தும் மனத்தைப் பண்படுத்தற்கு அத்துணையாகப் பயன் படுதல் இல்லை; வல்லுணர்வுகளைச் செயற்படுத்தற்கே அக்கல்வி பயனாகிறது என்பதை அறிஞர் ஓர்ந்து கூறியுள்ளனர்.[35]

மனிதன் நாடி நரம்புகளாலும், அவற்றின் நுண்கூறான உள்ளத்தினாலும் வாழ ஏற்பட்டவன். புற உறுப்புகளாகிய தசைகள், கை, கால்கள், கருவிகள், பொறிகள், போர்க் கருவிகள் ஆகியனபோலவே, இதயம், காற்றுப் பை, குடல், ஆகியவையும் அவை போலும் பிற நுண்ணிய உறுப்புகளும் அவனுக்கு இன்றியமையாதவை. இயக்க இயங்கும் உறுப்புகளும், தாமே இயங்கும் உறுப்புகளுமாக இவ்விருவகை உறுப்புகளும் கொண்டே மனித வாழ்வு நடைபெறுதல் வேண்டும். தன்னுணர்வுக்கும், உறுப்புகளின் இயக்கத்திற்கும் உரிய தொடர்பு, முன்னும் பின்னும் நடக்கும் நிகழ்ச்சிகளும் இன்ப துன்பக் கூறுகளும் உறுப்புச் செறிகளில் விளைக்கும் மாறுதல்கள், இன்னதெனத்

---

33. Radha Kumud Mukerji: Ancient Indian Education. Page 326 (1951).

34. திருக்குறள்: பொருட்பால்: கூடாநட்பு:3.

35. திருக்குறள்: பொருட்பால்: கூடாநட்பு:3. பரிமேலழகர் உரை.

தெளிதற்கரிதான ஒன்று, குழவியிலிருந்து கிழவனாக வடிவெடுக்கும் முறைமை ஆகியவை பற்றிய அறிவு மனிதனுக்கு மிகமிகக் குறைவு என்று விளக்கி, மனிதன் வேண்டியவாறு ஒழுகுதற்குரிய காரணங்களை இக்கால உடலமைப்பியல் உளவியல் வல்லாரும் எடுத்துக்காட்டுகின்றனர்.[36]

படைக்கலைத் திறன், போர் புரியும் ஆற்றல் ஆகியவை மிகுந்த நிற்றமை பற்றியே, அகமுகமான விழுமிய கொள்கைகளை வாழவைக்கும் முயற்சியிலும், கருவி தாங்கிப் போரிடும் நிலை, ஆசிரியர் மாணவர்க்கிடையே வந்துற்றது என்பதற்கு பாரதத்தில் சான்று உள்ளது.

காசி வேந்தன் மகள் அம்பைக்கு மணவாழ்வு நல்க வேண்டுமென்று தன் மாணவனாகிய வீடுமனிடம் வேண்டுகின்றான், அவனுக்கு "வின்மை நிலையிட்டகோ" வாகிய பரசுராமன்.[37] வீடுமனோ, தன் தந்தையின் முன்னிலையில் 'மணம் உறேன்' என்ற "வன்சொல்" சொல்லி, 'மனத்திலும் விரதம் மன்னி' அவ் "விரதம் ஆபரணம்" என உள்ளத்திற்கு அதனை அணிந்து, தனக்கே உரிய "தன் கொடிய விரதமே"[38] புரிந்து வரும் பெருந்திறலாளன். ஆதலின் ஆசிரியன் வேண்டுகோளை நிறைவேற்ற இயலாதவனா-கின்றான் அவன்.

பெண்ணின் மீது கொண்ட இரக்கத்திற்கும், பெண் கொண்டு வாழும் வாழ்வு ஆகாது என விலக்கிய உறுதிக்குமிடையே பூசல் நிகழ்கிறது. அதனால் ஆசிரியனும் மாணவனும் கருத்து வேறுபாடு கொள்ளுகின்றனர். தன்னிடம் பயின்ற மாணவன், தன் சொல் மறுக்கின்றானே என ஆசிரியன் இகல் கொள்கின்றான். தந்தைக்கு உறுதி நல்கியபின், தந்தைபோலும் தகைமையுடைய ஆசிரியனே வேண்டினும் தன் நிலை பிறழ்தல் ஆகாது என்னும் கோட்பாடு பற்றி மாணவன் ஆசிரியனின் பகையை ஏற்று நிற்கின்றான்.

"உளம் புகுந்து அங்கு இருக்கும் நல் கடவுள்
உன்னை அன்றி இலை; உண்மையே"[39]

---

36. Dr. Alexis Carrel: Man the Unknown. Pages 76-77, 79 (1959).

37. வில்லிபாரதம்: குருகுலச் சருக்கம்: 143. பக். 23. மர்ரே பதிப்பு (1959)
38. வில்லிபாரதம்: குருகுலச் சருக்கம்: 144, 142, 138, 105: பக். 23, 17. மர்ரே பதிப்பு (1959).
39. வில்லிபாரதம்: குருகுலச் சருக்கம்: 145. பக். 24. மர்ரே பதிப்பு (1959).

என்று தன் ஆசிரியன் மீது தனக்கிருக்கும் மதிப்பைப் புலப்படுத்தி, தன் உறுதி காரணமாக, அவன் வேண்டுகோளை நிறைவேற்ற இயலாத தன் நிலையை விளக்கி,

"மங்கையர் பொருட்டிருள் விளம்பும்
இந்த மொழி ஒழிக![39]

என்று இரந்து வேண்டி, வேறு வகையால் அவன் இடும் ஆணை எதனையும் நிறைவேற்றுவன் என்ற உறுதியை,

"என்றன் உயிர் வேண்டும் எனினும் ஈவேன்"[39]

என்னும் சொற்களில் வெளிப்படுத்தித் தன்பால் இரக்கம் காட்டுமாறு தன் உள்ளம் தெளிவிக்கிறான், மாணவன். மாணவன் தேற்றிய தெளிவு ஆசிரியன் உள்ளத்திற் பதிந்து அவன் மனத்தைச் செம்மையின்பால் நிறுத்தவில்லை. தன்முனைப்பே ஓங்கி நிற்கிறது. தனக்கே உரிய கடல்போலும் வெகுளியால், நெஞ்சம் கறுத்து, மெய்வெதுத்துக் கண் சிவந்து வில்தாங்கித் தேரேறி மாணவனொடு பொரத் தலைப்படுகிறான்.[40]

விரதம் விடல், உயிர் விடல் இரண்டனுள் ஆசிரியன் பொருட்டு விரதம் விடலினும், ஆசிரியன் கையில் உயிர் விடலே பெரிதெனத் தேர்கிறான் மாணவன். ஆசிரியன் சினத்திற்கு அஞ்சி அடிவீழ்ந்து தொழுதவேண்டிய பின்னரும், ஆசிரியன் சினம் மிகுந்தமையால்,

"விரதம் வழுவி நான் நரகம் உறுவதின், குருவுடன்
பொருது மடிதல் நன்று"[41]

என்று துணிந்து, அவன் கையால் மடியும் எண்ணத்துடன் ஆசிரியனொடு பொரத் தலைப்படுகிறான் மாணவன்.

தன்வழி நிறுத்தற் பொருட்டுப் படை தாங்கி மாணவனை எதிர்க்கிறான் ஆசிரியன். அவன் உள்ளம் பெண்வாழ்வு கருதிய இரக்கம் பற்றியது. தன் விரதம் நிறுவுதற்பொருட்டுப் படைதாங்கி ஆசிரியனை எதிர்க்கிறான் மாணவன். அவன் உள்ளம் தந்தைக்குத் தந்த உறுதி கருதிய அறம் பற்றியது. இரக்கம் பற்றி உதவ முற்படுவதும் அறமே, ஈந்த உறுதியைத் தொடர்ந்து பேண முற்படுவதும் அறமே.

---

39. வில்லிபாரதம்: குருகுலச் சருக்கம்: 145. பக். 24. மர்றே பதிப்பு (1959)
40. வில்லிபாரதம்: குருகுலச் சருக்கம்: 146. பக். 24. மர்றே பதிப்பு (1959)
41. வில்லிபாரதம்: குருகுலச் சருக்கம்: 147. பக். 24. மர்றே பதிப்பு (1959).

"அறநெறியில் வரும் சிக்கலெல்லாம் அறத்தின் உண்மை தெரிந்து அதன் பொதுமைத்தன்மையைப் பேணி நடப்பதிலேயே அடங்கி உள்ளது. அறநெறி நின்று செயற்படுங்கால், அறத்தைப் பேண வேண்டும் என்னும் உறுதிமட்டும் போதாது; அவ்வுறுதியோடு செயற்படுங்கால் விளையும் விளைவுகளையும் உன்ன வேண்டும். அவ்விளைவுகளால் வந்து சேரக் கூடிய, உலகம் ஏற்கும் நோக்கையும் மறந்து விடலாகாது. ஆதலின், தன் உறுதி, பிறர் உறுதி, தன் நோக்கம், பிறர் நோக்கம் ஆகியவற்றை இணைத்து நோக்கித் தானும் பிறரும் செயற்படுங்கால் விளையும் இன்பங்களை வாழ்வு ஒருமை கருதி ஏற்குக வேண்டும்" என்று அறவோர் விளக்கியுள்ளனர்.[42]

இவ்விளக்கத்தினைக் கருத்திற் கொண்டு நோக்கின், ஆசிரியனுக்கும் இழுக்குத் தேடாது, தன் உறுதியும் குலையாது, ஆசிரியன் செயல் தன் செயல் ஆகிய இரண்டாலும் விளையும் இன்பங்களைத் தாங்க முற்பட்ட வீமனின் உள்ளம் புலனாகும். தனக்குக் கல்வி அளித்த ஆசிரியன் கையால் உயிரிழந்து தன் விரதம் காத்து, மாய்ந்த பின்னரும், உலகோர் நோக்கில், பெரும் பெயரொடு புகழ் வடிவில் வாழ்த்தலைப்பட்ட உள்ளத் திட்பம் புலனாகும். இவ்வுள்ளத் திட்பம், அவனுக்கு வசிட்ட முனிவனிடம் கற்ற எண்ணற்ற நூற்கல்வியால் அமைந்தது எனலாம்.[43] ஆயினும் அத்திட்பத்தைப் புலப்படுத்துதற்குக் கருவி தாங்கிப் போராட வேண்டியிருந்தமை, அக்காலச் சமுதாயத்தின் படைமைக் கல்விக்குரிய முதன்மையைச் சுட்டுவது என்பது கருத்திற்கொள்ள வேண்டுவதாகும்.

காவிய மாந்தர், தத்தம் உரிமையை நிலை நாட்டுதற் பொருட்டுப் படைமைக் கல்வித்திறத்தை மிகுதியும் காட்டினர் என்பது உண்மையே; ஆயினும், படைமைக் கல்வியோடு, நூற்கல்வியும் அவர் பெற்றனர் என்பதற்குச் சான்றுகள் உள்ளன.

பாண்டவர் இளஞ்செல்வர்களாக இருந்தபொழுது, அவர்களின் உடல் வளர்ச்சிக்குரிய கல்வியோடு உள்ளத்து வளர்ச்சிக்குரிய கல்வியும் நல்கப்பட்டது. உடல் திறனை எடுத்துக்காட்டுவதற்கு அறிகுறியாகத் திகழ்வது அகன்ற மார்பு. அம்மார்பு அமைதற்குரிய உடற் கல்வி பெற்றனர் பாண்டவர்; மார்பினும் அகன்றதாக உள்ளம் விளங்கும் வகையில், பரந்த நூற்கல்வியையும் அவர் உடன் பெற்றனர்.

---

42. Joseph L. Blan: Men and Movements in American Philosophy: Page 208 (1954).
43. அடிக்குறிப்பு: 10. பக். 69

இளமையில் உடல் வளர்ச்சி உறஉற வனப்பு மிகுந்து வரும். அவ்வனப்பு மிகுதிக்குரிய பயிற்சிகளோடு, சான்றோர் போற்றும் பண்புகளுக்குக் காரணமாகிய பண்பாட்டுத் துறை கல்வியும் அவர் பெற்றனர். புயங்களின் வல்லமை உடல் உரனுக்கு எடுத்துக்-காட்டாகத் திகழ்வது; அவ்வல்லமை அமைதற்குரிய பயிற்சிகளோடு, அரசியல் வெற்றிக்குரிய நீதி நூற் கல்வியையும் அவர் பெற்றனர். கண்களின் தோற்றம் தெளிவும் ஒளியும் உடல் நலத்தின் மேம்பாட்டை நன்கு புலப்படுத்தும். அத்தகைய உடல் நலம் பற்றிய கல்வியுடன் நெஞ்சத்து நலன், சொல்லுறுதி, செயல்மாறுபடாமை இயைவதற்குரிய வாய்மை முதலிய அறங்களிலும் அவர் தேர்ந்து வந்தனர். இத்தகைய புற அக வளர்ச்சிக்குரிய கல்வித் திறங்கள் பெற்றமையின், நாடு நல்கும் வளங்களை, நாட்டு மக்கட்கு நல்கும் கொடைப் பண்பு பற்றிய பண்பாடும் அவர்கட்கு அமைந்தது.[44]

இனி, மூல காவியகாலத்து மரபுப்படி, அக்காலத்து விளங்கிய அறுபத்து நான்கு கலைகளிலும் பாண்டவர் வல்லவர்களாக விளங்கினர் என்னும் குறிப்பினை ஆசிரியர் நல்குகின்றார்.[45] அக்கால சமுதாய நோக்கின்படி, கல்வி, கலைகளில் தேர்வார், அப்பொழுது விளங்கும் அனைத்துக் கலைகளிலும் பயிற்சி பெற்றுத் தேறுதல் வேண்டும் என்பது நியதி போலும்.[45அ] காவியத்தின் கதைப்போக்கில் ஆங்காங்குக் காவிய மாந்தர் புலப்படுத்தும் திறன்களைக் கொண்டு இவ்வுண்மையை அறுதியிடலாம்.[46]

நூல்களில் குறிப்பிடப் பெறும் அறுபத்து நான்கு வகைகளேயன்றி, அவற்றின் கிளைகள் போல்வனவும், ஒருவாறு தொடர்புடையனவாயும் உள்ள வேறு வேறு கலைகள் பற்றியும் அவற்றின் வல்லராய் விளங்கிய மாந்தர்தம் திறம் பற்றியும் பற்பல குறிப்புகள் காவியத்தின் வருகின்றன.

44. வில்லிபாரதம்: சம்பவச் சருக்கம்: 89. பக்.37. மர்ரே பதிப்பு (1959)
புறநானூறு: 179.
45. வில்லிபாரதம்: சம்பவச் சருக்கம்: 88. பக்.37. மர்ரே பதிப்பு (1959)
45அ. வில்லிபாரதம்: பதினெழாம் போர்: 29. வை.மு.கோ. விளக்கம்: பக்.68 (1968)
வில்லிபாரதம்: நாடுகரந்துறைச் சருக்கம்: 19. பக்.281. மர்ரேபதிப்பு (1959)
கம்பராமாயணம்: பாலகாண்டம்: திரு அவதாரப்படலம்: 122-23. பக்.67. மர்ரே பதிப்பு (1959)
Radha Kumud Mukerji: Ancient Indian Education. Page 340 (1951)
46. சுக்கிர நீதி: பக்.214. பண்டிதமணி கதிரேசச் செட்டியார் பதிப்பு (1926).

குருகுலத்து முன்னோர்களுள் ஒருவனாகிய புதன் என்பான் தன் பேரறிவுத் திறத்தால் பெரும் புகழ் பெற்றிருந்தான்.[47] புரூரவா என்னும் வேந்தன் பகைவர் நடுங்கத் தேர் செலுத்துவதில் வல்லவனாயிருந்தான். தேரைச் செலுத்தலும் போர் புரிதலும் ஆகிய இரண்டையும் வேதகாலத்தில் ஒருவரே செய்தனர் எனவும், ஐத்ரேய பிராமணம் முதலிய நூல்கள் காலந்தொட்டே இரண்டும் வேறாயின எனவும் ஆய்வாளர் எடுத்தியம்புகின்றனர்.[48] இராமாயண பாரத காலங்களிலேயே, போர் புரிதலும், தேர் செலுத்தலும் மிகப் பெரிதும் வேறு வேறாக விளங்கின எனவும் குறிப்பிடுகின்றனர். கண்ணன் அருச்சுனன் பொருட்டுத் தேரூர்ந்து பார்த்தசாரதி எனச் சிறப்புப் பெயர் பெற்றமையையும் எடுத்துக் கூறுகின்றனர்.[49] புரூரவாதாமே தேர் செலுத்தி, ஊர்வசியைக் கவர்ந்த அசுரரை வென்றான் எனவரும் கதைப் பகுதியைக் கூர்ந்து நோக்கின், அவன் இரு வேறு திறமைகள் பெற்றிருந்தமையையும் அதனால் அவன் மிகப் பழங்காலத்தில் வாழ்ந்தமையையும் உணரலாம்.

புரூரவாவின் மைந்தனாகிய ஆயு என்பான் வேள்வி செய்விக்கும் திறத்தில் வல்லவனாக இருந்தான்.[50] ஆயுவைப் போலவே, பரதன் என்னும் வேந்தன், வேள்வி வல்லுநனாய் விளங்கியமையோடு, கேள்வி, பரதம், இசை ஆகியவற்றிலும் வல்லவனாய்த் திகழ்ந்தான். இவற்றோடு அவன் பெரு வீரனாய்த் திகழ்ந்தான் எனவரும் குறிப்பு அவன் படைமைக் கல்வியிலும் வல்லன் என்பதைக் காட்டுவதாகும்.[51]

47. திருக்குறள்: அறத்துப்பால்: மக்கட்பேறு: 1,2,8,10; பரிமேலழகர் உரை: அறத்துப்பால்: மக்கட்பேறு: 1,2,8,10. அகநானூறு: 66; புறநானூறு: 183, தொல்காப்பியம் பொருளதிகாரம்: மெய்ப்பாட்டியல்-9; சுக்கிர நீதி: கதிரேசச் செட்டியார் மொழிபெயர்ப்பு: பக். 214-18 (1926), S. Radhakrishnan: Contemporary Indian Philosophy. Page 488 (1958)

48. வில்லிபாரதம்: குருகுலச் சருக்கம்: 17. பக். 3. மர்ரே பதிப்பு (1959) புறநானூறு-7; வில்லிபாரதம்: பதினேழாம் போர்ச் சருக்கம்: 25. பக். 572. மர்ரே பதிப்பு (1959). V.R.Ramachandra Dikshidhar: War in Ancient India. Page 158 (1948)

49. V.R.Ramachandra Dikshidhar: War in Ancient India. Page 159 (1948)

50. வில்லிபாரதம்: குருகுலச் சருக்கம்: 19. பக். 3. மர்ரே பதிப்பு (1959) புறநானூறு: 15,26; தொல்காப்பியம்: பொருளதிகாரம்: புறத்திணையியல்: 20. நச்சினார்க்கினியர் உரை. சைவசித்தாந்தக் கழகப் பதிப்பு (1975). Kautilya's Arthasastra: Tr. by Sharmasastry. Page-6 (1967).

51. வில்லிபாரதம்: குருகுலச்சருக்கம்: 32. பக். 5. மர்ரே பதிப்பு (1959) நாடுகரந்துறைச் சருக்கம்: 11. பக். 279. மர்ரே பதிப்பு (1959)

அத்தி என்னும் வேந்தன் நகரமைக்கும் திறத்தில் வல்லவனாக விளங்கினான். புகழ் வாய்ந்த குருகுல வேந்தரின் தலைநகரமாக விளங்கிய அத்தினபுரம் என்னும் நகர், இவ்வேந்தனின் பெயரால் அமைந்த நகரமாகும்.[52] பாண்டவரை, காண்டவப் பிரத்தத்திற்கு அனுப்பிப் பாதி நாட்டை அவர்க்கு நல்கிப் பாதி நாட்டைத் திருதராட்டிரன் தன் மகன் துரியோதனனுக்கு ஆக்கியபோதே அது தொல்பழம்பதியாக இருந்தது என்று ஆய்வாளர் குறிப்பிடுகின்றனர்.[53] குருகுலத்து இளையோர் காலத்தேயே அந்நகர் "அந்தம் இல் சுவர்க்கம் அன்ன அத்தினபுரி"[54] எனப் போற்றப்பட்டுப் புகழ் வாய்ந்த நகராகத் திகழ்ந்தது. பாண்டவர் திரௌபதியை மணந்து பாஞ்சால நாட்டில் தங்கியிருந்தபோது, அவர்க்கு நாடு நல்குவதாகத் தூது அனுப்பி அவரைத் தம்பால் அழைக்கின்றான் திருதராட்டிரன். அந்நாளில் அந்நகர், "தொல்பதி"[55] என்று சுட்டப்பெறுகின்றது. ஆதலின் தம் மரபில் வரும் பிற்காலத்தவரும், தொடர்ந்து போற்றி வருமாறு வேந்தன் நகர் அமைக்குந்திறம் உடையனாய் இருந்தான் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

காண்டவப் பிரத்தத்தை அழித்துப் புதியதொரு நகரைப் பாண்டவர்க்கு விசுவகன்மா என்னும் அசுரத் தச்சன் அமைத்துத் தந்தான் என்னும் புராணக்குறிப்பும் மயன் என்னும் தெய்வத் தச்சன் அழகிய மணிமண்டபங்கட்டித் தந்தான் எனவரும் புராணக் கதைக்குறிப்பும் நகரமைக்குந் திறத்தில் வேந்தர் காட்டிய ஆர்வத்தையும் அவர்க்கு உதவிய நகரமைக்குங் கலை, சிற்பக்கலை முதலியவை வல்ல கலைஞர்தம் திறத்தையும் நன்கு விளக்கும்.[56]

இத்தாலிய மறுமலர்ச்சிக் காலத்தில் – ஐரோப்பிய வரலாற்றின் இடைக் காலத்தில் – சமய, பொருளாதாரப் பின்னணிகளைக் கொண்டு, திருக்கோயில்களையும் வேந்தர்க்குரிய அரண்மனைகளையும் கட்டித் தம் ஆற்றலையும், திறமையையும் வெளிப்படுத்தினர் கட்டிடக் கலை வினைஞர். அவை வானளாவிய உயர்ந்த அகன்ற

52. John Dowson.M.R.A.S. A Classical Dictionary of Hindu Mythology and Religion, Geography and Literauture. Page 420 (1914)

53. Swami Prabhavananda: Spiritual Heritage of India. Page 88 (1977)

54. வில்லிபாரதம்: சம்பவச் சருக்கம்: 111. பக். 40. மர்ரே பதிப்பு (1959)

55. வில்லிபாரதம்: திரௌபதி மாலையிட்ட சருக்கம்: 108. பக். 88. மர்ரே பதிப்பு (1959)

56. இயல்-4: கலைகளும் அவற்றின் பயன்களும்: அடிக்குறிப்பு. 56ன் விரிவு.

கூடங்களும் உடையனவாய் விளங்கினும், அவையெல்லாம், அழகும், கவினும் குன்றியே விளங்கின என்றும், கட்டடக் கலை பற்றிய நணுக்கங்களைத் தெரிந்து கொள்ளும் வகையில் அவை அமையவில்லை எனினும், ஓரளவு, கட்டட அமைப்புக்களை அறியும் வகையிலேயே இருந்தன வென்றும், இவ்வுண்மையை அவற்றை இயற்றியோரே ஒத்துக் கொண்டனர் என்றும், அறிஞர் எடுத்துக்காட்டுகின்றனர்.[57]

இக்கருத்துகளை உளங்கொண்டு, இந்தியநாட்டுக் கட்டடக்கலை பற்றிய நூல்களையெல்லாம், பெருங் கோயில்கள் அரண்மனைகள் ஆகியவற்றின் எழிலை விடாது எடுத்துரைக்கும் பெற்றியைக் கருதின், கட்டடக் கலையின் அழகும் கவினும் குன்றாது காக்க வேண்டும் என்ற அத்துறை வினைஞர் கொண்ட ஆர்வம் நன்கு புலப்படும்.

குரு என்னும் பெயருடைய வேந்தன் படைமைக் கல்வி, அரச நீதிக்கலை, (நிர்வாகக்கலை) வேள்விக்கலை ஆகிய மூன்றிலும் வல்லவனாகத் திகழ்கின்றான்.

"பொரு பெரும் படைத் தொழில் வயப்புரவி தேர் மதமா
.... மன்னர் நீதியின் தொழில் சுருதியின் தொழில்
அனைத்திறக்கும் குருஎனும் புகழ்க் குரு"[57அ]

இதுவரை ஆய்ந்தவற்றால், அந்தணர், அறிவுத் திறன், படைமைத் திறன் ஆகியவற்றில் சிறப்புற்று விளங்கியமை போல அரச மரபினர், தமக்கே உரிய படைமைத் திறன் மட்டுமின்றி அந்தணர் போலவும் அறிவுத் திறனிலும் புகழ் வாய்ந்தவராகத் திகழ்ந்தனர் என்பது நன்கு விளங்கும். அல்லல் மிக்க வேளையிலும் கல்வி பயிற்றும் அந்தணர் வாய்க்காதவிடத்தும், அரசமரபினரிடத்து அந்தணர் கலைபயிலலாம் என்ற நியதி அக்காலத்திருந்தமையை ஆய்வாளர் எடுத்துக் காட்டுகின்றனர். அந்தண ஆசிரியர்க்குத் தர வேண்டிய மரியாதையை அரச மரபைச் சார்ந்த ஆசிரியர்க்கு நல்க வேண்டும் என்னும் விதியும் அக்காலத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்டது. மனுநீதியும் அதனை ஏற்றுப் போற்றியுள்ளது. ஜனகன், அஜாதசத்துரு, அசுவபதி முதலிய புகழ் வாய்ந்த அரசர்கள் அந்தணர் போலவும் கூர்த்த மதியும் அரச குலத்திற்குரிய ஆற்றலும்

---

57. Leuis Mumford: Architecture: Page 71: Encyclopaedia of Social Sciences. Vol.I. (1937).

57அ. வில்லிபாரதம்: குருகுலச் சருக்கம்:37.பக்.5. மர்ரே பதிப்பு (1959).

வாய்ந்த புகழ் பெற்றிருந்தமையை அறிஞர் சுட்டுகின்றனர்.[58]

பொதுவாக, வேந்தர் படைமைக் கல்வி, அறிவுக் கல்வி ஆகியவற்றில் தேர்ந்த வந்தனர் எனினும் அவரவர் தம் அடிப்படையான விருப்பம் திறமை ஆகிய-வற்றிற்கேற்ப, தமக்கே உரிய தனித்தனிக் கலையில் தேர்ந்த வல்லவராய் விளங்கினர் என்பதற்குப் பாரதத்தில் சான்றுகள் உள்ளன. தருமன் அரச மரபுக்குரிய போர்க் கலையில் வல்லமை பெற்றிருப்பினும், அந்தணர் போல், அறம் நீதி பற்றிய கருத்துக்களைப் பயில்வதில் பெரிதும் ஈடுபாடு காட்டுகிறான். பாண்டவர் சேனைக்கு மார்பு என்று போற்றுமாறு வீரனாக விளங்குகிறான் அவன்.[59] அரசர்க்குரிய இயல்புடன் கூடிய அந்தணர் தன்மையும் உடையவனாயிருந்தான் என்பதை, உடல் வல்லமை-யைப் பெரிதென மதிக்கும் வீமன் "ஈரமான தயாமனத்தொடு இராயசூய மகம் செயும் வீரமாமுனி"[60] என்று போற்றுதல் கொண்டு நன்கு உணரலாம். நீதி நூலறிவும், புண்ணிய நூல்களிற் சென்ற அறிவும், அவை வல்லார்பால் கேட்டறிந்த பெருக்கிய கேள்விச் செல்வமும் உடையவன் என்று திருதராட்டிரன் முதலியோர் அவனைப் போற்றுகின்றனர்.[61] கற்றகலை உணர்வும் அதற்குத் தக்க மதித்தெளிவும், அதற்குத் தக்க சத்திய குணவரம்பும் உடையவன் என்று கண்ணன் அவனைப் பாராட்டுகிறான்.[62] எண்ணற்ற மறைவல்ல அந்தணர் உரைத்த நூல்களையெல்லாம் ஆய்ந்து, அவற்றிற் சொல்லிய அறங்கள் யாவும் தன்பால் அமையப் பெற்றவன் என்று கண்ணன் அவனைப் போற்றுகின்றான்.[63] மானுடப் பேறு எய்திய தன் அருமையை உணரும் தெளிவும், அத்தெளிவிற்கேற்ப, மாயையினின்று நீங்கிய தத்துவஞானச் செல்வமும் அது பயன்பட்டு உயிர் விடுதலை பெறுவதன் பொருட்டுச் செய்யும் தவமுயற்சியும் உனக்கு இயற்கையாக வாய்த்துள்ளன என்று சஞ்சயன் பாராட்டுகிறான்.[64] அரச மரபுக்குரிய வீரநெறிக்கு அப்பாற்பட்டுப் பற்பல பண்புகளின் ஆக்கம் பெற்ற உள்ளத்திட்பம் நிறைந்தவனாகத் தருமன் விளங்குகிறான் என்பதை ஆய்வாளர் எடுத்துக்காட்டுகின்றனர்.[65]

---

58. Radha Kumud Mukerjee: Ancient Indian Education. Page 209(1951)

59. வில்லிபாரதம்: படையெழுச்சிச் சருக்கம்: 51. பக். 382. மற்றோர் பதிப்பு (1959)
60. வில்லிபாரதம்: சஞ்சயன் தூது: 16. பக். 334. மற்றோர் பதிப்பு (1959)
61. வில்லிபாரதம்: வாரணாவதச் சருக்கம்: 94. பக். 54. மற்றோர் பதிப்பு (1959)
62. வில்லிபாரதம்: பதினேழாம் போர்ச் சருக்கம்: 93. பக். 584. மற்றோர் பதிப்பு (1959)
63. வில்லிபாரதம்: பதினைந்தாம்போர்ச்சருக்கம்: 25. பக். 546. மற்றோர்பதிப்பு (1959)
64. வில்லிபாரதம்: சஞ்சயன் தூதச் சருக்கம்: 6. பக். 333. மற்றோர்பதிப்பு (1959).
65. R.C.Zaehner: Hinduism: 172, 178 (1966).
வில்லிபாரதம்: பதின்மூன்றாம்போர்ச் சருக்கம்: 90. பக். 466. மற்றோர் பதிப்பு (1959).

"குன்றுன் மெய் வகுத்தனைய வீமன்"[66] என்ற வீமன் உடல் வல்லமைக்கு எடுத்துக்காட்டாகச் சுட்டப் பெறுகிறான். அத்தகைய வல்லமைக்கு ஏற்ப, அவன் மற்போரிலும், கதைப் போரிலும் பெரு வீரனாகத் திகழ்கிறான். பாண்டவர்க்கும், துரியோதனாதியர்க்கும் பயிற்சி நல்கிய கிருபரும், துரோணரும், இவ்விருகலைகளை அவனுக்குப் பயிற்றியதாகச் சான்று இல்லை; மேலும் இவ்விருவரும் அந்தணராதலின் அவ்விரு கலைகளில் அவர் வல்லவராதல் அருமையே. எனினும், வில், வேல், வாள் முதலியவற்றொடு, மற்போரிலும் அவனைத் தேரச் செய்தனர் என்று (உபசார வழக்கால்) கொள்ள வேண்டியுள்ளது.[67] கதைப் பயிற்சியைத் துரியோதனன் பலராமனிடம் கற்றுக் கொண்டான் என்று ஆய்வாளர் குறிப்பிடுகின்றனர்.[68] துரியோதனனைப் போலவே, வீமனும், பலராமனிடத்தோ அல்லது அவன் போலும் வல்லமையுடையாரிடத்தோ கற்றிருத்தல் கூடும்.

பகனொடு மற்போர் புரிய நேர்ந்தபோது,

"உலக்கு உரிய தொழில்களாம்
மல்லினும், படைவிருத்தியினும் செருவில்
வல்ல வல்லன புரிந்து.... வந்த பொரு"[69]

என்று அவனை அறை கூறிய கூற்றிலும்,

வட்டம் வட்டம் வர, ஒட்டி ஒட்டி உற
மல் தொழில் செருவில் மட்டியா
முட்டி யுத்த நிலை கற்ற கற்ற வகை
முற்ற முற்ற எதிர் முட்டினர்[70]

என இருவரும் போரிட்ட வகைகளைக் கூறும் கவிக் கூற்றிலும் வீமனின் மற்போர்த் திறனையும், அவனுடைய பகைவனின் மற்போர்த் திறனையும் உணரலாம். அவ்வாறே, சராசந்தனொடு போரிட்ட போது, "மற்போர் சொன்ன போர் விதம் எலாம் தொடங்கி"[71] போரிட்டு அவனை வீழ்த்துகிறான். திரௌபதி விரும்பிய மலர்கொய்தற்

---

66. வில்லிபாரதம்: திரௌபதி மாலையிட்ட சருக்கம்: 62. பக். 82. மர்ரே பதிப்பு (1959)
67. ஸ்ரீ மகாபாரதம்: ஆதிபருவம்: பக். 542, 543, 533 (1930)
வில்லிபாரதம்: பதினேழாம்போர்ச்சருக்கம்: 178. பக். 533. மர்ரே பதிப்பு (1959)
68. வில்லிபாரதம்: உத்யோகபருவம்: பக். 8. வை. மு. கோ. பதிப்பு (1966)
69. வில்லிபாரதம்: வேத்திரகீயச் சருக்கம்: 56. பக். 71. மர்ரே பதிப்பு (1959
70. வில்லிபாரதம்: வேத்திரகீயச் சருக்கம்: 57. பக். 71. மர்ரே பதிப்பு (1959
71. வில்லிபாரதம்: இராயசூயச் சருக்கம்: 231. பக். 129. மர்ரே பதிப்பு (1959

பொருட்டுச் சென்றபோது, அவனைத் தடுத்த புண்டரீகன் என்னும் அரக்கனொடு, பொருது, தன் கதை வல்லமை காட்டி அவனை வீழ்த்துகிறான்.[72] அடுத்து வந்த அரக்கர் பலரைக் கதை வல்லமையாலும், வில் வல்லமையாலும் வெல்லுகிறான். இதனால் கதையாற்றலுடன் வில்லாற்றலும் உடையன் அவன் என்பது புலனாகிறது.[73] பகனொடு போர் புரியுங்கால் மற்போரில் திறம் புலப்படுத்தியது போலவே, திரௌபதியைக் கவர்ந்த சடாசுரனை எதிர்த்துப் போர் புரியுங்கால், "மல் தொழிலின் வல்லன வல்லன புரிந்து" பெருந்திறமை காட்டி அவனை வீழ்த்துகிறான்.[74]

மற்போர் வல்ல வீரர் விராடன் அவையில் பலர் இருந்தனர்; அவர் மற்கலை நூல் சொல்லும் முறைமைக்கேற்ப மற்போர் புரியும் வீரர். அவரையெல்லாம் வென்ற வாசவன் என்னும் வீரனை வீமன் தான் கற்ற இலக்குகளையெல்லாம் காட்டி வெல்லுகிறான்.[75] விரதசாரிணி என்னும் வேறு பெயரொடு விராடன் மனைவிக்குப் பணிப் பெண்ணாய் இருந்து வந்த திரௌபதியிடம் தகாமல் நடந்த கீசகனை, "மல்கெழு தோளொடு தோள் உறத்தோய்ந்து..... பார்மிசை வீழ்வரப்புடைத்து"க் கொல்கிறான்.[76]

கண்ணனைத் தூது போக்கித் துரியோதனனைத் தெளிவு செய்து நாடு பெறலாம் என்று கருதிய தருமனிடம், துரியோதனனின் உண்மையியல்பை எடுத்துரைக்குங்கால், போரில் தான் செய்யவிருக்கும் அருஞ்செயல் பற்றிக் குறிப்பிட்டுத் தன் கதையின் மீது தனது நம்பிக்கையை ஏற்றி, "என் கைம் மறத்தண்டின் வலி கண்டும்.... அவன் குடைக் கீழ் உயிர் வாழக் குறிக்கின்றுயே" என்று தன் போர்க் கருவி (கதை)த் திறனை வெளிப்படுத்துகிறான்.[77] போர்க் கருவியாகிய கதையின் மீது வைத்த அத்தகைய தன்னம்பிக்கையே, அவன் துரியோதனன் அவையில் உரைத்த வஞ்சினத்திலும் காணப்படுகிறது. துரியோதனனின் உடம்பெல்லாம் வயலில், தனது கதையாகிய

---

72. வில்லிபாரதம்: முண்டகச் சருக்கம்: 76,80,81. பக். 246-47. மர்ரே பதிப்பு (1959)
73. வில்லிபாரதம்: முண்டகச் சருக்கம்: 97,98,100,102,104,106,114,115. பக். 249-50. மர்ரே பதிப்பு (1959)
74. வில்லிபாரதம்: சடாசுரன் வதைச் சருக்கம்: 18. பக். 259. மர்ரேபதிப்பு (1959)
75. வில்லிபாரதம்: மற்போர்ச் சருக்கம்: 5,12. பக். 285-86. மர்ரேபதிப்பு (1959
76. வில்லிபாரதம்: கீசகன் வதைச் சருக்கம்: 74,75. பக். 299. மர்ரேபதிப்பு (1959
77. வில்லிபாரதம்: கிருட்டிணன் தூதுச் சருக்கம்: 18. பக். 339. மர்ரேபதிப்பு (1959

கலப்பை யொன்று உழுத, அக்கலப்பை உண்டாக்கிய புண் என்னும் படைச்சாலில் கொழுப்பினை மிக வளர விடுவேன் என்று குறித்தல் கருவி வல்லமையை எடுத்துரைக்கின்றன.[78]

பாரதப் போரில் தன்னை எதிர்க்கும் பகைவர் திறங்களுக்கேற்பப் பல்வகைத் திறங்களை அவன் புலப்படுத்துகின்றான். பகதத்தனை எதிர்க்கும்போது, அவன் காட்டிய மற்போர்த் திறன், கதைப் போர்த்திறன், விற்போர்த்திறன் ஆகிய மூன்றாலும் சுடுதந்தவனை எதிர்க்கிறான்.[79] காசி வேந்தன் கதைப் போர்த்திறம் காட்ட, கதைப் போர் வல்லார் எல்லாம் வியக்குமாறு கதை கொண்டு பொருது அவனை வெல்கிறான்.[80] சல்லியன் விற்போர், கதைப் போர் இரண்டும் வல்லவனாதலின் அவனிடம் இவ்விரு கலைகளறிந்தான் அவனைப் போரில் வல்லனாதலைக் காட்டி அவனை எதிர்க்கின்றான்.[81] அலாயுதன் என்னும் அரக்கனும், வில் திறன் கதைத் திறன் ஆகிய இரண்டும் உடையவனாதலின் அவனை இவ்விருவகைப் போரிலும் வென்று வீழ்த்துகின்றான்.[82] துச்சாதனனை விற்போர்த் திறனும் கதைப் போர்த் திறனும் முட்டிப் போர்த் திறனும் வல்லனாதலின் அம்மூவகைத் திறனும் காட்டிப் பொருது அவனை வீழ்த்துகின்றான்.[83]

இவற்றை ஆய்ந்தவைகளால், துரோணர் கற்பித்த படைமைக் கல்விகளாகிய வில், வேல் முதலியவற்றில் தேர்ந்தமையோடு, மற்போர் கதைப் போர் முதலிய, உடல் வன்மைக்கே உரிய, கலைகளிலும் வீமன் தேர்ந்தமை புலப்படும்.

உடல் வன்மைக்கே உரிய இக்கலைகளோடு, அகமுகமான, உள்ள வளர்ச்சியைப் புலப்படுத்தத்தக்க பண்புகளிலும் அவன் தேர்ச்சி மிக்கவனாயிருந்தான் என்பதற்கு வில்லியின் நூலில் சான்றுகள் உள்ளன.

வாய்மையைப் பெரிதெனப் போற்றி அதனை வாழ்வில் கடைப் பிடிக்கத் தலைப்பட்டவன் வீமன். வெய்யபுகழ் இலக்காகிய பகைவரிடத்து இகல் மிகுதற்

---

78. வில்லிபாரதம்: சூதுபோர்ச்சருக்கம்: 255. பக். 183. மர்ரேபதிப்பு (1959)
79. வில்லிபாரதம்: பன்னிரண்டாம் போர்ச்சருக்கம்: 49-51. பக். 458-59 (1959)
80. வில்லிபாரதம்: பதினாறாம்போர்ச்சருக்கம்: 16, 17. பக். 553. மர்ரேபதிப்பு (1959
81. வில்லிபாரதம்: பதினெட்டாம்போர்ச்சருக்கம்: 30-32. பக். 621. மர்ரேபதிப்பு (1959)
82. வில்லிபாரதம்: பதினான்காம்போர்ச்சருக்கம்: 198-99. பக். 653. மர்ரேபதிப்பு
83. [illegible] 43, 146, 153. பக். 641-43.

பொருட்டு அவன் பொய் கூறுவதில்லை. விருப்புக்கு இலக்காகிய போக மகளிடத்துக் காதல் மிகுத்தற் பொருட்டும் பொய் கூறுவதில்லை.[84] தன்னை விரும்பிய இடும்பியிடத்துத் தன் முன்னவன் மனம் பெறாதிருந்த நிலையைச் சுட்டித் தான் அவள் காதலை ஏற்றற்கியலாமையைக் கூறித் தன் வாய்மைத் திறத்தைப் புலப்படுத்துகிறான்.[85] தன் பகைவனாகிய துரியோதனன் தன்னுடைய உயிர் நிலை உள்ள இடம் எது என்று வினவியபோது, பொய் கூறாது உள்ளதை உள்ளவாறு உரைக்கின்றான்.[86]

பெருவலியும் மனத்திண்மையும் கொண்டு தான் கருதியது முடிக்கும் ஆற்றலை வளர்த்தவனாயினும், உயர்ந்தோர் கூறும் அறிவுரைக்குச் செவி சாய்த்து, அதற்கேற்பத் தன் சினம், பகை உணர்வு ஆகியவற்றைச் சமன் செய்து கொள்ளும் பண்பையும் அவன் சேர்த்துள்ளான். "துரியோதனன்பால் தூது விடலாம்" என்று தருமன் கூறியபோது, பெருஞ்சினம் புலப்படுத்துகின்ற வீமனே, "மூத்தோர் கூறும் நெறிக்கு முதன்மை தர வேண்டும்; சினம் பெருக்கல் ஆகாது" என்று கண்ணன் எடுத்துக் கூறுகின்றபோது அவன் உரையை ஏற்று அமைந்து நிற்கிறான்.[87] அதற்கு முன்னரே, துரியோதனனின் அவையில், கௌரவரை எதிர்க்கப் பெருஞ்சினம் கொண்டு போர்க்கு வருமாறு பகைவரை அறைகூவிய பொழுது, தருமன் உரைத்த உரைகளைக் கேட்டு அடங்கி நிற்கிறான்.[88]

தன் வல்லமையின் மிகுந்த தன்னம்பிக்கை உடையவனாயினும், தன்னினும் வலியார்பால் பணிந்து நடத்தல் வேண்டும் என்னும் மனத் தெளிவையும் அவன் பெற்றிருக்கிறான். தன் முன்னவனாகிய அனுமன், தன்னினும் மிக்க வலிமை உடையவன் என்றும், அவனுடைய வலிமை மிக்க வால் அன்றிப் பிறிதொரு குரங்கின் வாலைத் தான் கடந்து செல்லுதல் தனக்கு மிக எளிது என, அனுமனிடத்திலேயே, அவனை இன்னானெனத் தெரிந்து கொள்ளுதற்கு முன்னர்த் தன் வல்லமையையும், மனத்தெளிவையும் புலப்படுத்துகிறான்.[89]

---

84. வில்லிபாரதம்: முண்டகச் சருக்கம்: 26. பக். 240. மர்ரே பதிப்பு (1959)
85. வில்லிபாரதம்: வேத்திரகீயச் சருக்கம்: 20. பக். 64. மர்ரே பதிப்பு (1959)
86. வில்லிபாரதம்: பதினெட்டாம் போர்ச்சருக்கம்: 174. பக். 647. மர்ரே பதிப்பு (1959)
87. வில்லிபாரதம்: [illegible]: புட்பயாத்திரைச்சருக்கம்: 26. உரை. பக். 244. வை. மு. கோ. பதிப்பு (1964)
87. வில்லிபாரதம்: கிருட்டினன் தூதுச்சருக்கம்: 19. பக். 339. மர்ரே பதிப்பு (1959)
88. வில்லிபாரதம்: சூதுபோர்ச்சருக்கம்: 251. பக். 182. மர்ரே பதிப்பு (1959)
89. வில்லிபாரதம்: புட்பயாத்திரைச்சருக்கம்: 28. பக். 240. மர்ரே பதிப்பு (1959).

பிறர்பெருமை கேட்டு, அவர் திறம் அறிந்து அவரை மதித்தொழுகும் பண்பு, கேள்விச் செல்வத்தால் அவன் பெற்ற பண்பாகும். மாணவர்க்கு விற்கலைத் திறன் நல்கும் பாரத்துவாசன் பெரியோர் வரலாறு கூறிக் கேள்விச் செல்வத்தையும் பெருக்கினன் ஆதலின் அவன்பால், இராமனின் விற்கலைத் திறனைக் கேட்டுப் பயன் பெற்றதாக அனுமனிடம் எடுத்துரைக்கிறான்.[90]

போர்த் திறத்தால், உற்றாரையும் பகைவரையும் வியக்க வைக்கும் வீமன் அமைதி மிக்க நாட்களில் பல்சுவை உணவு வகைகளால் யாவரையும் மகிழ வைக்கும் சமையற்கலையில் வல்லவனாக விளங்குகிறான்.

"வரு அறத் தெரிவர் போரும், மன்னவன் உணவும், கையால்
அடு தொழிற்கு உரிய செம் பொன் வரை இரண்டு அனைய தோளான்"[90அ]

என்னும் தொடர்கள் போர்த் திறம் இயற்றும் கைகளே அட்டில் தொழில் வன்மையும்[91] புலப்படுத்துவன என்பதைக் கூறுவனவாகும். தருமன் இராயசூய வேள்வி வேட்டபோது, அனைவர்க்கும் இன் சுவை மிக்க உணவு சமைக்கும் பொறுப்பினை வீமனிடத்திலேயே நல்குகிறான்.[92]

இவ்வாறு, துரோணன் முதலிய ஆசிரியன்மார் கற்பியாத, போர் வீரருக்கு உரியனவாகாத கலைகளில் அவன் தேர்ச்சி பெற்றிருந்தமையும், தான் விரும்பும் கலைகளை அவை வல்லார்பால் பெற்றுப் பயனடையும் பண்பு பெற்றிருந்தமையும் இவரை ஆய்ந்தவற்றால் புலனாகும்.

90. வில்லிபாரதம்: புட்பயாத்திரைச் சருக்கம்: 34. பக். 241. மர்ரே பதிப்பு (1959)
வில்லிபாரதம்: புட்பயாத்திரைச் சருக்கம்: 139. பக். 254. மர்ரே பதிப்பு (1959)
வில்லிபாரதம்: சடாசுரன் வதைச்சருக்கம்: 27. பக். 260. மர்ரே பதிப்பு (1959)
வில்லிபாரதம்: ஆரணியபருவம்: பக். 306, 324. வை. மு. கோ. பதிப்பு (1964)

91. திருக்குறள்: அறத்துப்பால்: வாழ்க்கைத்துணை நலம்-1. பரிமேலழகர் உரை.

92. வில்லிபாரதம்: நாடுகரந்துறைச்சருக்கம்: 13. பக். 280. மர்ரே பதிப்பு (1959)
வில்லிபாரதம்: இராயசூயச் சருக்கம்: 100. பக். 140. மர்ரே பதிப்பு (1959)
பத்துப்பாட்டு: சிறுபாணாற்றுப்படை: 240-41.
சீவகசிந்தாமணி: 2735.
உ. வே. சாமிநாதய்யர்: சீவகசிந்தாமணி 2735 அடிக்குறிப்பு. உ. வே. சா. பதிப்பு. பக். 1343 (1949)

அருச்சுனனும், வீமனைப் போல் விற்போர்க்கலை, வாட் போர்க்கலை, வேல்போர்க் கலை எனப் பல்வகைக் கலைத் திறன்களில் கருத்துச் செலுத்துகிறான். ஆயினும், விற்கலை ஒன்றில் அவன் பெருந்தேர்ச்சி உடையவனாக விளங்குகிறான். தனக்குப் பயிற்றிய துரோணரே, தன்னிடம் பயில வேண்டும் என்னும் விழைவு பெருக்குமாறு அத்தனை வல்லவனாகத் திகழ்கிறான்.[93] துரோணரிடத்துப் பெற்ற பயிற்சியோடு நின்றுவிடாமல், வேறு பலரிடமும் பெற்ற போர்க் கருவிகளால் அவன் தன்னை வளர்த்துக் கொண்டுள்ளான்.[94] இரவு பகலாகத் தன் பயிற்சியில் கருத்துச் செலுத்துவதிலும் ஆசிரியனை வழிபட்டு நின்று பயன் பெறுவதிலும் அவன் பெரிதும் ஈடுபட்டிருந்தமையின் தன் திறமையைத் தனக்கு உவமை இல்லாத வகையில் பெருக்கிக் கொண்டான் என்று ஆய்வாளர் எடுத்துக்காட்டுகின்றனர்.[95]

கற்பித்த ஆசிரியனும் வியக்கும் திறமையே, கற்பித்த ஆசிரியனின் வஞ்சினத்தை முடித்தற்கும் ஏதுவாகின்றது. தனக்கு நல்கும் குருதக்கிணையாக, துரோணன், தன் பகைவனாகிய துருபதனைப் போரில் வென்று பிடித்து வர வேண்டுமென்று, பொதுவாகப் பாண்டவர் கௌரவர் ஆகிய இருசாராரையும் வேண்ட, அவ்வேண்டுகோள் அருச்சுனனாலேயே நிறைவேறுகின்றது. பாண்டவரும் துரியோதனனுமியரும் தம் பயிற்சியைப் புலப்படுத்துதற்கு வாய்ப்பாகப் பெற்ற கன்னிப் போரில், துரியோதனனியர் ஆசிரியனின் பகைவரிடம் தோற்றுப் போய், ஒருவகையில் ஆசிரியனின் திறமைக்கு இழுக்குத் தேடுகின்றனர். அருச்சுனனோ, நேர் எதிர்மாறாக, ஆசிரியனிடம் பெற்ற திறமை முழுதையும் பயன் படுத்தி, ஆசிரியனின் பகைவனைப் புறங்கண்டு, போரில் அகப்படுத்திக் கட்டிக் கொணர்ந்து ஆசிரியன் முன் நிறுத்தி, ஆசிரியனின் வஞ்சினத்தை மெய்ப்பித்து அவனுடைய திறமைக்கும் பெருமை தேடித் தருகிறான்.[96] இளையனாகிய அருச்சுனனிடம் தான் தோற்றுப் போனதையும் பலர் முன்னிலையில் தான் அகப்பட்டு இழிவுற்றதையும்

93. வில்லிபாரதம்: நிரைமீட்சிச் சருக்கம்: 92. பக். 315. மர்ரே பதிப்பு (1959)
நல்லாப்பிள்ளை பாரதம்: விராடபருவம்: உத்தர நிரைமீட்சிச் சருக்கம்: பக். 705. (1911)

94. வில்லிபாரதம்: விராடபருவம்: நிரைமீட்சிச் சருக்கம்: 93. வை. மு. கோ. விளக்கம்: பக். 168. வை. மு. கோ. பதிப்பு (1960).

95. Radha Kumud Mookerji: Ancient Indian Education. Page 38 (1951)

96. வில்லிபாரதம்: வாரணாவதச் சருக்கம்: 79, 78, பக். 52. மர்ரே பதிப்பு (1959).

நினைந்து நினைந்து வருந்திடும்.[97] அருச்சுனனின் திறமை யாகசேனன் மனத்தில் காழ்ப்பையும் பகைமையையும் உண்டாக்கவில்லை; மாறாக, அவன் திறமையின் மீது உரிமையும் உறவும் கொண்டாடும் வகையில், அவனைத் தனக்கு மருகனுக்கும் உடன்பாட்டு உணர்வையே பெருக்குகிறது.[98] மருகன் பொருட்டும், பிற பாண்டவர் பொருட்டும் பாரதப் போரில் கலந்து கொண்டு வீரமரணம் அடையும் பெருமையை மிகுவிக்கின்றது.[99]

இவ்வாறு பகைவரும் உறவினராகி உயிர் தர முன்வரும் அளவில்[100] படைமைக் கல்வியில் திறம் பெற்ற அருச்சுனன், நூற்கல்வியிலும் வல்லமை மெய்தி பெற்றிருந்ததை ஆய்வாளர் எடுத்துரைத்துள்ளனர்.[101] பகைவர் மீது பரக்கம் கொண்டு, அவரைக் கொல்ல மறுத்து மயங்கி நின்ற அருச்சுனன், தெளிந்த அறிவுறுதற் பொருட்டுக் கண்ணன் அவனுக்குக் கீதையை உபதேசித்தான் என்னும் கருத்து, அறிவு நூற் கல்வி பெறுதற்கு அருச்சுனன் கொண்டிருந்த தகுதியையும் வேட்கையையும் நன்கு புலப்படுத்தும்.[102] படைமைக் கல்வியால் பெற்ற திறமையைப் பகைமையை ஒழிக்கப் பயன்படுத்தும் வேளையில், உற்றார் உறவினர் என்ற எண்ணம் தோற்றுவித்த பாசம் முன்வந்து செயற்பட முடியாமல் தடுத்த நிலையில், மயக்கம் நீக்கும் அறிவு வளர்ச்சிக்குக் கண்ணன் நல்கும் மெய்ப் பொருள் நூற் கல்வி அவனுக்குப் பெரிதும் பயன்படுகிறது. மயக்கம் நீங்கித் தெளிந்து கடமை செய்ய முற்பட்டதனைக் கண்ணனிடமே பெருமிதத்தோடு புலப்படுத்துகிறான் அவன்.

"மறைந்தை ஆரணங்களுக்கும் முடிவில் நின்ற
மெய்ப்பொருளை என்
சிந்தை ஆரமுற்றுவித்து வினை அறுத்த செம்மலே"[102அ]

---

97. வில்லிபாரதம்: வாரணாவதச் சருக்கம்: 82. பக். 53. மர்றே பதிப்பு (1959)
98. வில்லிபாரதம்: வாரணாவதச் சருக்கம்: 83. பக். 53. மர்றே பதிப்பு (1959)
99. வில்லிபாரதம்: பதினொன்காம் போர்ச்சருக்கம்: 215. பக். 540. மர்றே பதிப்பு (1959)
100. வில்லிபாரதம்: பத்தாம் போர்ச்சருக்கம்: 34, 43. பக். 442, 444. மர்றே பதிப்பு (1959).
101. Radha Kumud Mookerji: Ancient Indian Education: Page 338 (1951)
102. வில்லிபாரதம்: பதினொன்காம் போர்ச்சருக்கம்: பக். 531. மர்றே பதிப்பு (1959)
102அ. வில்லிபாரதம்: பத்தாம் போர்ச்சருக்கம்: 10. பக். 437. மர்றே பதிப்பு (1959).

கண்ணன் நல்கிய தெளிவுரைக்குப் பின் போரில் யாவரையும் கொல்வேன் என்று அவனுக்கு உறுதி கூறி, அறிவு நூற் கல்வியால் தான் பெற்ற தெளிவையும் ஊக்கத்தையும் அவ்வுறுதியின் வாயிலாக வெளிப்படுத்துகிறான்.[103] கண்ணன் தேர்ப் பாகனாகியமையால் தன் படைமைக் கல்வி சிறந்தது போல், உற்ற வேளையில் அவன் ஞானாசிரியனாகியமையால் தன் உள்ளம் உரம் பெறற்கேற்ற அறிவு நூற்கல்வி சிறந்து எடுத்த வினையில் வெற்றி கொள்கிறான் அவன். இவ்வாறு தான் கருதியதனை எளிதில் முடிக்கும் பெருந்திறன் எய்தியமை பற்றி அவன் தெய்வத்தோடு ஒப்பித்துச் சொல்லப் பெறுகிறான்.[104]

படைமைக் கல்வியிற் சிறந்தது போலவே, நீதி நூற் கல்வியிலும், அருச்சுனன் மேம்பட்டு நின்று, உற்ற வேளையில் தன் முத்தோனுக்கு ஏற்ற யோசனை சொல்வதில் வல்லவனாகத் திகழ்கிறான். படைமைத் திறத்தால் வெல்வது அரிது எனத் தெரிந்து மாயச் சூதினால் வெல்லலாம் என முடிவு செய்து, திருதராட்டிரனையும் இணங்கச் செய்து, பாண்டவரை அழைத்துவரத் துரியோதனன் விதுரனைத் தூது அனுப்பியபோது, அவன் விருப்பத்திற்கேற்ப அத்தினபுரி செல்வது அரசியல் திறம் ஆகாது என்று அருச்சுனன் எடுத்துரைக்கிறான். தெளிந்து நம்பத்தகாதவர்களை நம்புதல், நம்பித் தெளிந்தவர்களை ஐயுறுதல், நண்பர்களைப் பகைவராகக் கருதி அவரொடு போரிடல், பகைவர்களை நண்பர்களாகக் கருதி அவரொடு மருவி வாழ்தல் ஆகியவை அரசியல் தலைவர்க்கு ஆகாத செயல்கள்; இவை அரச நீதிகள் பற்றி நூல் செய்த அறிஞர் உரைத்த நீதிகள். அவற்றைப் புறக்கணித்து, அறவோர் நெறி நின்று, அரசியல் துறைக்கு ஆகாதனவற்றை – அவை எத்துணை உயர்ந்தனவெனினும் – எடுத்துச் சொல்வதும், பகைவர் ஏவல் ஏற்று அவர்பால் செல்லுதலும் எதற்காக என வினவித் தன் நீதி நூலறிவுத் திறத்தைப் புலப்படுத்துகிறான்.

"தேறலார் தமைத் தேறலும், தேறினர்த் தேறலாமையும் என்றும்
மாறலாருடன் மலைதலும், மாறுடன் மருவி வாழ்தலும், முன்னே
ஆறு அலாதன அரசருக்கு" என்று கொண்டு, அரச நீதியில் சொன்னார்.
"கூறலாதன சொல்வது என்? சொல்வது என், கொடியவன் அருகு என்று"[104அ]

---

103. வில்லிபாரதம்: பத்தாம்போர்ச்சருக்கம்: 10. பக். 437. மர்ரே பதிப்பு (1959)
104. வில்லிபாரதம்: நிரைமீட்சிச் சருக்கம்: 102. மர்ரே பதிப்பு (1959)
வில்லிபாரதம்: விராடபருவம்: நிரைமீட்சிச் சருக்கம்: 103. வை.மு.கோ. விளக்கம்: பக். 177. வை.மு.கோ. பதிப்பு (1960)
104அ. வில்லிபாரதம்: சூதுபோர்ச்சருக்கம்: 71. பக். 71. மர்ரே பதிப்பு (1959).

அரசியல், வணிகம், ஆன்மிகம் ஆகியவை ஒன்றுக்கொன்று வெவ்வேறான துறைகளே; அவற்றின் பெருமைகளையும் விதிகளையும் அவ்வவற்றிற்கே உரிய தனித் தன்மைகளைக் கொண்டு நோக்கிப் பின்னர் அவற்றின் பயன்களை மொத்தமாக அறியும் காலமும் நிலையும் இருந்தன; காலப்போக்கில் சமயத் துறைச் செல்வாக்கு அரசியல் துறைக்கு மாற, அதன் விளைவால் ஒவ்வொன்றும் தனித்தனித் துறையாகப் பிரிந்து நிற்க, அவற்றிற்கிடையே சமன்பாடு அமைந்து, மனித நலவிழைவுகள், நடவடிக்கைகள் ஆகியவை தொன்று தொட்ட நியதிகளால் பயன் நல்கும் முறையை ஆசிரியர் எடுத்துக்காட்டுகின்றனர்.[105]

இவ்வாறு, சமயத் துறையையும், அரசியல் துறையையும் வேறுபடுத்திக் காணும் அறியமையாமை கொண்டு அருச்சுனனின் மனநிலையை அறிதல் வேண்டும். படைமைக் கல்வியாயினும், பண்பு, அறிக் கல்விகளாயினும், அறத்துறை, முறையே துரோணனிடத்தும், கண்ணன் முதலியோரிடத்தும், பெற்றபொழுதெல்லாம், அவற்றை வழிபாட்டு உணர்ச்சி-யோடு பெற்றவன் அருச்சுனன்.[106] அத்தகைய பண்புடையவன், சமயத்துறை வேறு, அரசியல் துறை வேறு என்ற தெளிவு உடையவனாக உள்ளான். அதனாலேயே, காடுறை வாழ்வும், கரந்துறை வாழ்வும் முடிந்த பிறகு, கண்ணன் துரியோதனன்பால் தூது போவது பற்றிய தன் கருத்தைக் கூறுங்கால், தனி வாழ்வுக்குரிய அறம், அரசியலில் உதவாது; அறங்கொண்டு பகைமுடித்தல் இயலாது எனவும் பகைவர் தமக்கு இழைத்த தீங்கு நீங்க வேண்டின் அறம் பார்த்தல் ஆகாது எனவும் கூறிச் சமயம், அறத்துறை ஆகியவை பற்றிய கருத்துகள் அரசியல் துறைக்கு ஆகா என்று எடுத்துக்காட்டுகிறான்.

"அக்காலம் பொறுத்த எலாம் அமையாமல்
இன்னம் இருந்து அறமே சொன்னால்,
எக்காலம் பகை முடித்து, திரௌபதியும்
குழல்முடிக்க இருக்கின்றாளே?"

105. K.P. Karuanakaran: Religion and Political awakening in India. Introduction: Page 13-15 (1965)

106. வில்லிபாரதம்: நிரைமீட்சிச் சருக்கம்: 87. பக். 314. பதினைகாம் போர்ச் சருக்கம்: 17. பக். 509. 122. பக். 525. மர்ரே பதிப்பு (1959)
வில்லிபாரதம்: வாசுதேவனைப் படைத்துணை அழைத்த சருக்கம்: 9. பக். 330. மர்ரே பதிப்பு (1959)
வில்லிபாரதம்: முதற்போர்ச்சருக்கம்: 8. பக். 388. மர்ரே பதிப்பு (1959)
வில்லிபாரதம்: மூன்றும் போர்ச்சருக்கம்: 15. பக். 405. மர்ரே பதிப்பு (1959)

"மாண்டார் போல், .... மன் அவையில்
யாம் இருந்த மாசு தீர வேண்டாவோ?
வென்டுவதும் மேம்படும் நல் அறமேயோ?[106அ]

படைக் கல்வியிலும், அரசியல் அறிவிலும் தேர்ச்சியும் சிறப்பும் பெற்றுள்ள அருச்சுனனே அருளாளர் போல் உள்ளத்தை மென்மைப்படுத்தி இரக்கம் முதலிய உயரிய பண்புகளை வளர்த்துச் சான்றாண்மையும் புலப்படுத்துகிறான். படைக் கல்வி நல்கிய ஆசிரியன் முதலை வாய்ப்பட்டபோது, தன் படைக் கல்வித் திறத்தால், அம் முதலையைத் துணித்து ஆசிரியனுடைய உயிரைக் காக்கின்றான். தன்னையொத்த பிற சகோதரர்கள் யாவரும் தயங்கி நின்று விட, அருச்சுனனே, தயக்கம் எதுவும் இன்றி அம்பெய்து முதலையைக் கொல்கிறான்.[107]

திரௌபதியை மணத்தற் பொருட்டு, வில்லெடுத்து நாணேற்றி இலக்கு எய்வதில் அரசமரபினர் அனைவரும் தவறிப் போகிறார்கள். அந்தண வடிவில் இருந்த அருச்சுனன், அரசர்க்குரிய பெருமிதத்தோடும் முனைப்புணர்வுடனும் முன்வந்து, தான் இலக்கெய்தல் கூடும் என்று அறை கூவாது, அடக்கத்துடனும் அமைதியுடனும், தன் உள்ளத்தைப் புலப்படுத்துகிறான். மன்னர் மரபில் பிறந்து, தோள் வல்லமை பெருக்கி, அதனால் மண்ணாளும் உரிமை உடைய வேந்தரே அன்றி மறை நூல் பயின்று அதன் வழி ஒழுகும் அந்தணர் இலக்கெய்தினால், அரச குலத்து மகள் அவ்வந்தணனுக்கு மாலை சூட்டுவாளா என்று வினவுகிறான். தன் மரபுக்கு அஃது இழுக்கன்று; அந்தணரை மாலையிடும் வாய்ப்புப் பெறின், அது தமக்குப் பெருமையே என்று திட்டத்துய்ம்மன் விளக்கம் சொன்ன பிறகே அருச்சுனன் இலக்கெய்ய முன் வருகிறான்.[108]

பெருந்திறல் அமைந்திருந்தும், உற்ற வேளையில் அல்லாத மற்ற வேளையில் பயன்படுத்தலாகாது என்ற தெளிவும், அத்தெளிவு காரணமாகப் பெற்ற செறிவும் அருச்சுனன் கொண்டிருந்த இறையப்பண்பாடுகளாகத் தெரிகின்றன. அடக்கத்தின் செறிவே, வீரத்தோடு உடன் நின்று, சீர்மை நல்கி, அவனுக்குத் திரௌபதியையும்

---

106அ. வில்லிபாரதம்; சூதுபோர் சருக்கம் 20,22. பக். 540. மர்ரே பதிப்பு(1959)
107. வில்லிபாரதம்; வாரணவதச் சருக்கம்; 51,52. பக். 488. மர்ரே பதிப்பு (1959)
108. வில்லிபாரதம்; திரௌபதி மாலையிட்ட சருக்கம்; 55. பக். 81. மர்ரே பதிப்பு (1959).

பெற்றுத் தருகிறது. அவ்வகையில், அவன் அறிய வேண்டுவனவற்றை முறைப்பட அறிந்து அதன் மேல் அடக்கம் மேற்கொண்டு[109] ஒழுகுகின்றான் என்பதை அவனுடைய சொற்களும் அவற்றை அவன் வெளியிடும் முறையும் தெரிவிக்கின்றன. ~~109~~ அந்தண வடிவில் இருந்த தன் தோற்றத்தைக் கண்டு தன்னை எளிதாக மதித்துப் போர் செய்ய முன்வந்த அரசர்களை அவையிலிருந்த பிற அந்தணர் தன் பொருட்டு எதிர்க்க முற்பட்டபோது மெல்லப் புன்னகை புரிந்து, அவர்களைத் தடுத்து நிறுத்துகிறான்; கன்னன் ஒருவன் மட்டும் தனக்கே உரிய தருக்குடன், தன் கோலத்தை இகழ்ந்து, தன் மீது அம்பு எய்ய முற்பட்டபோது, தன் கைப்பட்ட ஓரம்பினால் அவனுடைய அம்பை விலக்குகிறான்.[110] திரௌபதியை மணங்கொண்டவர் அந்தணர் அல்லர், பாண்டவரே எனத் தெரிந்து, துரியோதனாதியர் அவரொடு மீண்டும் பொர வந்த பொழுதுதான் அருச்சுனன் தன் உண்மையாற்றலைப் புலப்படுத்துகிறான்.[111]

இல்வாழ்வில், ஆன்றோர் உரைத்த அறிவுரையின்படி வாழும் பண்பாடும், ஆன்றோர் விதித்த ஆணை பிழைப்பின் அதன் பொருட்டு அவர் கூறும் கழுவாய்தேடும் உறுதியும் அவன் வாழ்வில் அமைந்துள்ளன. நாரத முனிவன் உரைத்த சுந்தோப சுந்தர் வரலாற்றிற்கேற்ப, இல்வாழ்வில் பிற சகோதரர்களோடு முரண் இன்றி வாழ்கின்றான். தருமனொடு திரௌபதி உடனிருந்தலைக் காணுமாறு நேர்ந்தபொழுது, பிழை உணர்வு எய்தி, உடல் நடுங்குகிறான்; முகம் ஒளி குன்றுகிறான்; மனம் மிகவும் நாணுகிறான். தன் உணர்வுகளைச் செயற் படுத்த வேண்டியும், நாரதமுனிவனுக்கு அளித்த வாக்கின்படியும் உயிரனைய உடன் பிறந்தாரைப் பிரிந்து தீர்த்த யாத்திரை புறப்பட்டுச் செல்கிறான்.[111அ]

தீர்த்த யாத்திரையின்போது, தன் காம வாழ்க்கையை நெறிப்படுத்திப் புலன்களைச் சமன் செய்து கொள்ளவும், அந்தணர் கூட்டுறவால், பல தலங்களைக் காண்பதன் மூலம் பத்தி உணர்வைப் பெருக்கித் தன் இதயத்தை மேலும் தூய்மையும்

109. திருக்குறள்: அறத்துப்பால்: அடக்கமுடைமை: 3.
110. வில்லிபாரதம்: திரௌபதி மாலையிட்ட சருக்கம்: 61. பக். 82. மர்ரே பதிப்பு (1959)
111. வில்லிபாரதம்: திரௌபதி மாலையிட்ட சருக்கம்: 61. பக். 82. மர்ரே பதிப்பு (1959)
111அ. வில்லிபாரதம்: அருச்சுனன் தீர்த்த யாத்திரைச் சருக்கம்: 5-6. பக். 98. மர்ரேபதிப்பு (1959).

தெளிவும் உடையதாகச் செய்து கொள்ளலும் ஆகிய இருவகை மேம்பாடுகளையும் அவன் எய்துகின்றான்.[112]

காம வாழ்க்கை நெறிப்பட்டுப் புலன்களைச் சமன் செய்தற் பொருட்டு அவன் கற்றிருந்த திறன்கள் குறிப்பிடத்தக்கன. புலவாடுங்கால், தன்னைக் கண்ணுற்ற உலூபி, தன்மீது காதல் பெருக்குமாறு மென்மையாக நடந்து கொள்ளுகின்றான்.[113] பாண்டியர் பாவையாகிய சித்திராங்கதை கண்களித்துக் காதல் பெருக்குமாறு தன் தோற்றத்தைப் புலப்படுத்துகிறான். அதனால் களவு நெறி பற்றிய காதற் பயன் தனக்கும் அவட்கும் கிட்டுமாறு தன்மென்மைத் திறத்தை மேம்படுத்திக் காட்டுகிறான்.[114] துவராபுரி சென்று, துறவியர் கோலத்தில் வாழ்ந்து, கண்ணனின் ஆசியுடனும், அறிவுரையுடனும், யாதவர்பாவையாகிய சுபத்திரையின் அன்பைப் பெறும் முயற்சியில் மிகு வல்லவனாகத் திகழ்கிறான். தன் உரையாடல் திறத்தால், துறவுக் கோலத்தில் உள்ள தானே, அவள் காதல் கொள்ளும் அருச்சுனன் என்பதைப் புலப்படுத்துகிறான்.[115]

இறைவனுறையும் கோயில்களை வணங்கல், தூய தீர்த்தங்களை ஆடல் ஆகியவை பொருட்டு அவன் மேற்கொள்ளும் நெறிகள் வேறு. உள்ளத்தைப் பண்படுத்தும் அக்கடமைகளை மேற்கொள்ளுங்கால் அக்கடமை வல்லாரோடு இயைந்து நின்று அவர் விரும்புமாறு நடக்கும் திறம் அவனிடம் உள்ளது. அக்கடமைகளைச் செவ்வனே செய்வதற்குரிய தக்க வேடத்தை மேற்கொள்ளும் திறமும் அவன் பால் உள்ளது. மன்னர்க்குரிய ஆடம்பரத் தோற்றத்தை மாற்றி, மறையவர்க்குரிய எளிய தோற்றத்தை – வணக்கத்தக்க தோற்றத்தை – மேற்கொள்ளும் மனமும் திறமும் அவன்பால் அமைந்துள்ளன.[116] எடுத்த கருமத்திற்கேற்பப் பெரியாரைப் பணிந்து அவர் துணை கொண்டு பயன்பெறும் உள்ளத் தெளிவு உடையவனாக அவன் திகழ்கிறான்.[117]

112. வில்லிபாரதம்: அருச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கம்: 13,15-19,45,49. பக்.99-105. மர்ரே பதிப்பு (1959)
113. வில்லிபாரதம்: அருச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கம்: 8.பக்.99. மர்ரே பதிப்பு (1959).
114. வில்லிபாரதம்: அருச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கம்: 27.பக்.101.ம.ப.19
115. வில்லிபாரதம்: அருச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கம்: 65,68.பக்.108. மர்ரேபதிப்பு (1959)
116. வில்லிபாரதம்: அருச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கம்: 7.பக்.99.ம.ப.(195
117. வில்லிபாரதம்: அருச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கம்: 11.பக்.99.ம.ப. "

காம வாழ்க்கை செம்மையுறுதற் பொருட்டு ஆங்காங்கு மகளிர் உளங் கொள நடக்க நேருங்கால், உயரிய தோற்றம் கொண்டு, கூடா ஒழுக்கம் மேற்கொள்வதில்லை சித்திராங்கதையின் அன்பைப் பெற விழையுங்கால், அந்தணர்க்குரிய தோற்றத்தோடு சூற்றம் புரியவில்லை; அத்தோற்றத்தை மாற்றித் தன் இயல்பான உருவம் தோற்றித் தன் உள்ளன்பு புறத்துப் புலப்படுமாறு, அகமும் புறமும் ஒத்து நிற்கச் சித்திராங்கதை-யின் முன் நிற்கின்றன்.[117அ]

சித்திராங்கதை உறவினள் அல்லள்; ஆதலின் அவளன்பைப் பெறுதற் பொருட்டு அவளை ஏமாற்றுமல் உண்மை உருவம் காட்டுகிறன். சுபத்திரை உறவினள்; ஆதலின் அவளன்பைப் பெறுங்கால் துறவுக் கோலம் கொண்டு தந்திரம் செய்கிறன். தன் அன்பு வெல்வதற்கு அதைத் தக்கவாறு பயன்படுத்துகிறன். உறவுக்குரியவளைப் பெறுவதில் தந்திரம் மேற்கொள்ளற் பொருட்டு அவ்வாறு செய்கிறனேயன்றி, அவளிடத்தும் அக்கோலத்தைத் தவறுபடக் கையாளவில்லை.

உள்ளத்தில் சுபத்திரை பற்றிய நினைவிருப்பினும், புறத்தில் தான் கொண்ட கோலத்திற்கேற்ப, யாருக்கும் தீங்கின்றி நடக்கும் திறன்-யாரும் தன் கோலத்தைக் கொண்டு அக் கோலத்திற்குரிய உள்ளம் உடையன் என நினைத்தொழுக, அந்நினைப்புக் கெடாதவாறு அவர்க்குப் பயன்படுமாறு நடக்கும் திறன் - அவன்பால் உள்ளது.

துறவுக் கோலத்தில் உள்ள தன் உள்ளக் குறிப்பைத் தான் போற்றும் கண்ணன் உணர்ந்தவனே; எனினும் அக் கண்ணனும் தன்னை வணங்குமாறு, தன் புறக் கோலத்திற்கேற்ப இயைந்து ஒழுகும் திறம் அவன்பால் உள்ளது. தன்னை வணங்கியகண்ணனு உயர்ந்தோர் கூறும் வேதவாக்கிய ஆசிமொழிகள் கூறும் அறவிற்கு மறை நூலறிவுத் திறன் அவன்பால் உள்ளது. ஆல மரத்தின் நிழலில் அமர்ந்தருள் தென்திசைக் கடவுள் என நம்புமாறு அவன் தோற்றம் மிகப் பொருந்தி அமைய அதற்கேற்ப ஒழுகுகிறன் அவன்.[118]

117அ. வில்லிபாரதம்: அருச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கம்: 27. பக். 101. மர்ரே பதிப்பு (1959).

118. வில்லிபாரதம்: அருச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கம்: 49-50, 52. பக். 105-6, மர்ரே பதிப்பு (1959).

கருத்தறிந்த கண்ணனே அல்லாமல், கருத்தறியாத பலராமனும், சுபத்திரையும் மற்றையோரும், தன் தோற்றத்திற்கேற்ற உயர் ஒழுக்கமுடைய பெருந் துறவி என நம்பி, அருள் நலம் பெறத் தன்னை அணுகுமாறு, தன் தோற்றத்திற்கேற்ப நடக்கும் அருச்சுனனின் திறம் பெரிதும் குறிப்பிடத்தக்கதாக உள்ளது. முக்கோல், கமண்டலம், காவி ஆடை, முந்நூல், சடாபாரம் ஆகியவை மிகப் பொருந்தி அமைய, அக்கோலத்தைக் கண்ணுற்ற அளவிலேயே கையெடுத்து வணங்குவதும், அதனையே நோக்குவதும் அருள் நலம் பெறுதலும் ஆகியவை இயல்பாய் நடக்குமாறு பெருந் திறமை காட்டுகின்றான்.[118அ]

கருதியதை முடிப்பதற்கேற்ற கோலம்புனையும் திறமும், அதற்கேற்ப நடக்கும் திறமும், அருச்சுனன்பால் அமைந்தமையைக் கண்ணன் அறிந்தவன் ஆதலின், அவனுக்குப் பணி புரியச் சுபத்திரையை ஏவும் போது, "மெய்ம்மை உறக்கொண்ட கோலப் படிவ முனி"[119] எனக் கவர்பொருள்படப் பேசுகிறான்.

இவ்வாறு, படைமைக் கல்வியால், பெருவீரமும், அறிவுக் கல்வியால் உதயப் பண்பாடும் வளர்த்துப் பெருக்கிக் கொண்டமையால், தன் தமையன் அமைத்த இந்திரப் பிரத்த அரசில் – அவனுக்கும் பாண்டவர்க்கும் மொத்தமாகப் புகழ் விளைக்கும் அரசியற் கருமங்களில் – அறிவுரை கூறும் தகுதி அவனுக்கு ஏற்பட்டுள்ளது. இராயசூய வேள்வி செய்வதெனத் தருமன் முடிவு செய்து, நாலு திக்கிலும் தன் பெருமையை நிலை நாட்டுவதற்கு யார் யார் எவ்வெத் திக்கில் போர்ச் செலவு மேற்கொள்வது என எண்ணத்துவங்கிய வேளையில், இன்னின்னார் இன்னின்ன திசைகளில் செல்க என்று நம்பிக்கையோடும் உறுதியோடும் அறிவுரை கூறும் அரசியல் திறன் அவன்பால் அமைந்துள்ளது.

இராயசூயம் பற்றி ஆய்வதெற்கெனக் கூடிய அவையில் அறிவு நூற்கல்வியால் பெரும் புகழ் பெற்ற வியாதன்[120] உள்ளான்; படைமைக் கல்வித் திறத்தால் பெரும்

118அ. வில்லிபாரதம்: அருச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கம்: 55. பக். 107. மர்ரே பதிப்பு (1959)

119. வில்லிபாரதம்: அருச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கம்: 57. பக். 107. மர்ரே பதிப்பு (1959).

120. வில்லிபாரதம்: இராயசூயச் சருக்கம்: 38. வை.மு.கோ. உரை விளக்கம். (ஆண்டுக் குறிக்கப் பெறவில்லை).

புகழ் படைத்த பெருவேந்தர் உள்ளனர். முதுபேரறிஞரை வியாதனும், பெரும்போர் வல்லவேந்தரும் வியக்குமாறும், ஒப்புமாறும் அருச்சுனன் கூறும் போர்த்திட்டம் ஏற்றுக் கொள்ளப்படுகின்றது.[120அ]

அரசியல் போக்கு முறைகளில் தேர்ந்த அறிவுடையராய் இருப்பது வேறு; அவ்வறிவுக்கேற்பச் செயல்பட்டுக் கருதியதைக் கருதியவாறு முடிக்கும் செயல்திறம் உடையராயிருத்தல் வேறு. முறைப்பட ஆராய்ந்தாலும், செயல்திறன் இன்றேல், தாம் கருதியவாறு பயன்பெறல் இயலாது என்பதை ஆன்றோர் எடுத்துக்காட்டியுள்ளனர்.[121] செய்து முடிப்பதற்குரிய வினைகளை ஆராயுங்காலும் இறுதி முடிவு காணுங்காலும் அவ்வினைகள் பற்றிய முறையறிவும் பொது அறிவும் பயன்படுமாறு ஆய்ந்து முடிவெடுக்க வேண்டும். செய்து முடிப்பதற்குரிய ஆதாரத்தைத் தேர்ந்து வெளிப்படுத்துந் திறமையையும், ஆதாரம் தெளிவாகப் புலப்பட்டதும், ஒருபால் கோடாது, உரிமை தோன்ற அதை முடிக்குந் திறத்தையும் அறுதியிட வேண்டும். நடைமுறைக்கு ஏற்றவைற்றைக் கருதி வருங்கால் பொருத்தமிலாச் செய்திகள் புகுந்து கவனத்தைக் கலைக்குமானால், முடிவெடுக்கும் பண்பு சிதைந்து போகுமாதலின், ஆகாதனவற்றை விட்டொழித்துச் சிந்தனையைச் செம்மைப் படுத்திக் கொள்வதைக் கொள்கையாகப் போற்ற வேண்டும். சிந்தனை செய்வதிலும் விவாதிப்பதிலும் சில நியதிகளைக் கடைப்பிடித்து, குறிக்கோள்கள், அவற்றின் வகை, மாற்றங்கள் ஆகியவற்றைத் தெளிந்து கொள்ளல் வேண்டும் என, நாற்பயிற்சித் திறத்திற்கும் வினை முடிக்குந் திறத்திற்கும் உள்ள முறைமைகளை ஆய்வாளர் எடுத்துக்காட்டியுள்ளனர்.[122]

இக்கருத்துகளைக் கூர்ந்து நோக்கின், அருச்சுனன், நூலறிவுத் திறத்தையும் அதற்கேற்ற செயல்புரியும் திறத்தையும் ஒருங்கிணைத்துத் தன்னை ஆக்கிக் கொண்டுள்ள பெருந்திறமை புலப்படும்.

தோற்றப் பொலிவும், உடல் வன்மை, உள்ளத்திட்பம் ஆகியவற்றால் செயற்படும் ஆற்றலும், பல்வகை அருட் பண்புகளும் அமையப் பெற்றமையின்,

120அ. வில்லிபாரதம்; இந்திரப் பிரத்தச் சருக்கம்; 38, 39. பக். 132. மர்ரே பதிப்பு (1959)
121. திருக்குறள்; பொருட்பால்; அமைச்சு; 10. பரிமேலழகர் உரைக்குறிப்பு.
122. Herold D. Loss Well. The analysis of Political behaviour. Page 50. (1949)

அவையெல்லாம் ஒருங்கு அமையப் பெற்ற இராமனல்லாது அவனுக்கு உவமையாவார் வேறு ஒருவரும் இலர் என, வில்லிபுத்தூரார் கவிக்கூற்றாக எடுத்துரைக்கும் விளக்கம் ஈண்டுக் குறிப்பிடத்தக்கது.[122அ]

இதுவரை ஆய்ந்தவற்றால், படைமைக் கல்வியோடு, நூற்கல்வி, வழிபாட்டு-ணர்வு, சமயத்துறை, அரசியல் துறை, ஆகியவற்றிற்குரிய கருத்துகளையும் நெறிகளையும் அவ்வத்துறைக்கேற்பப் பயன்படுத்துதல், இரக்கம் முதலிய இதயப் பண்பு வளர்ச்சி, அகமும் புறமும் ஒத்து இயையுமாறு கரவின்றி நடத்தல் ஆகியவற்றில் அருச்சுனன் மிகத் தேர்ச்சி பெற்றுள்ளான் என்பது நன்கு புலப்படும்.

நகுலனும், சகதேவனும் மூத்தோர் இருவரைப் போலும் படைமைக் கல்வியில் நன்கு தேர்ச்சி பெற்றுள்ளனர். 'இருவர் பொருந்திறல்'[123] என வீமனே அவ்விருவர்தம் படைமைக் கல்வித் திறத்தைப் பாராட்டுகின்றான். திரௌபதியை மணந்த பாண்டவர் மீது காழ்ப்புற்றுப் படை கொண்டு பொருதற்கெழுந்த துரியோதனாதியரொடு வந்த கன்னனை வென்று புறங்காணும் திறங்காட்டுகின்றான் நகுலன்.[124] துரியோதனாதியர் பொருட்டுப் போரிட முன்வந்த சல்லியை, இடியேறு நாகத்தை அஞ்ச வைப்பதுபோல் அஞ்சச் செய்கின்றான் சகதேவன்.[125]

தீச்செயல் புரிவதற்குத் திட்டமிட்டு அவ்வாறே செய்த துரியோதனனையும் துச்சாதனனையும், அவர்க்கு உதவிய கன்னனையும் கொல்வதென வீமனும் அருச்சுனனும் வஞ்சினங் கூறினர் எனின், எல்லாத் தீமைகட்கும் காரணமாகிய சகுனியையும் அவன் மரபையும் தொலைப்பதெனச் சகதேவனும் நகுலனும் வஞ்சினங் கூறித் தம் திறம்

122அ. வில்லிபாரதம்: அருச்சுனன் தவநிலைச் சருக்கம்: 29. பக்.190. மர்ரே பதிப்பு (1959)

123. வில்லிபாரதம்: கிருட்டினன் தூதுச் சருக்கம்: 18. பக்.339. மர்ரே பதிப்பு (1959)
வில்லிபாரதம்: கிருட்டினன் தூதுச் சருக்கம்: 20. பக்.98. வை.மு.கோ. உரை விளக்கம். வை.மு.கோ.பதிப்பு (1966)

124. வில்லிபாரதம்: திரௌபதி மாலையிட்ட சருக்கம்: 102. பக்.88. மர்ரே பதிப்பு (1959)
வில்லிபாரதம்: திரௌபதி மாலையிட்ட சருக்கம்: 102. வை.மு.கோ. விளக்கம். பக்.323. வை.மு.கோ.பதிப்பு (1963)

125. வில்லிபாரதம்: திரௌபதி மாலையிட்ட சருக்கம்: 103. வை.மு.கோ. விளக்கம். பக்.323. வை.மு.கோ.பதிப்பு (1963).

முன்னவர் திறத்தோடு ஒத்தது என்பதை நிறுவுகின்றனர்.[126]

படைமைக் கல்வியைப் பொறுத்தவரை, வீமனும், அருச்சுனனும் ஒவ்வொரு கலையில் சிறந்துள்ளமை போல், நகுலனும் சகதேவனும் வேற்கலையில் தேர்ந்து விளங்குகின்றனர்.[127] குதிரை ஏறிப் பொருங்கால் நகுலன் பெரு வீரம் விளைப்பவன்.[128] போர்க்களத்தில் வீரம் விளைக்குங்கால், வீமனுக்குத் தக்க தம்பி என்னுமாறு ஆற்றல் உடையவனாக விளங்குகிறான் சகதேவன்.[129]

படைமைக் கல்வியில் முன்னவர் போல் திறம் புலப்படுத்தும் இருவரும்,[130] அறிவு நூற் கல்வியிலும் முன்னவர் போல் ஆற்றல் உடையராய்த் திகழ்கின்றனர்.

வீமன் பாரத்துவாசன் வாயிலாக இராமன் பெருமைகேட்டு உள்ளம் உயர்த்தியது போல், நகுலன் தன் முன்னோர் பெருமையெல்லாம் கேட்டு வீரமும் பண்பும் உயர்த்தியுள்ளான்.

'அன்ன நடை அரம்பை தலை அவுணர் கவர்ந்திட,
இமையோர் அரசுக்காக,
முன்னம் அவருடன் பொருது, சிறை மீட்டான்
நம் குலத்து முதல்வன்'[130அ]

126. வில்லிபாரதம்: சூதுபோர்ச்சருக்கம்: 258. வை.மு.கோ.விளக்கம்: பக்.390. வை.மு.கோ.பதிப்பு (ஆண்டுக் குறிக்கப்பெறவில்லை)
பதின்மூன்றும் போர்ச்சருக்கம்: 29. வை.மு.கோ.விளக்கம்.பக்.1[illegible]
வை.மு.கோ.பதிப்பு (1968)
பதின்மூன்றும் போர்ச்சருக்கம்: 30. வை.மு.கோ.உரை விளக்கம். பக்.117. வை.மு.கோ.பதிப்பு (1968)
பதினெட்டாம் போர்ச்சருக்கம்: 34, 35. பக்.622. மர்ரே பதிப்பு (1959)

127. வில்லிபாரதம்: கிருட்டினன் தூதுச் சருக்கம்: 24. பக்.340. மர்ரே பதிப்பு (1959)
பதினெட்டாம் போர்ச்சருக்கம்: 97. பக்.634. மர்ரேபதிப்பு (19[illegible]
சூதுபோர்ச்சருக்கம்: 109. பக்.164. மர்ரே பதிப்பு (1959)
நாடுகரந்துறைச் சருக்கம்: 26. பக்.283. மர்ரேபதிப்பு (1959)

128. வில்லிபாரதம்: பதினெட்டாம்போர்ச்சருக்கம்: 34. வை.மு.கோ.விளக்கம். பக்.24. வை.மு.கோ.பதிப்பு (1966)

129. வில்லிபாரதம்: பதினெட்டாம் போர்ச்சருக்கம்: 97. பக்.634. மர்ரேபதிப்பு (19[illegible]

130. பெருந்தேவனார்: பாரதவெண்பா: 107, 109. பக். 43, 44 சைவசித்தாந்தக் கழகப் பதிப்பு (1973)

130அ. வில்லிபாரதம்: கிருட்டினன் தூதுச் சருக்கம்: 2[illegible]. பக்.341. மர்ரேபதிப்பு (1959)

என்று தன் கேள்விச் செல்வத்தின் திறத்தை எடுத்துக் கூறி, புரூரவா போல் பெண்மை நலம் காக்கத் தான் துடிப்பதை உணர்த்தினான்.[131]

புரூரவாவின் பெருமை கேட்டுப் பீடு பெற்றதுபோல், பிறர் மனை நயத்தலின் தீங்கினை இராவணன் வரலாறு கேட்டுத் தெளிந்துள்ளான் என்பதை, திரௌபதியைக் கவர்ந்து சென்ற சடாசுரனுக்கு[132] அறிவுரை கூறி அவனொடு போரிட்ட நிகழ்ச்சியால் தெளியலாகும். இதனாலும் நகுலனின் கேள்வித் திறன் நன்கு புலப்படும்.

அரசநீதி பற்றிய நூற்கல்வியிலும் நகுலன், அருச்சுனன் போல் தெளிவு பெற்றவன் என்பதை அவன் கூற்றே மெய்ப்பிக்கின்றது. "அரசியல் நூல்களில், பொறுமை முதலிய பண்புகள் மட்டுமே எடுத்துரைக்கப்பட்டில; நெறி தவறின், போர் வல்லமை காட்டிப் பகைவரை ஒழிக்கும் வீரத்திறன்களும் உரைக்கப்பட்டுள" என்பதைத் தருமன் முகத்தெதிரே வினவும் வினாவால் உணர்த்துகிறான் நகுலன்.

'கோத் தருமந்தனின் ஆண்மை கூறுதோ
கூறுக நீ கொற்ற வேந்தே'[132அ]

அரசியல் துறையில் அறம் பார்த்தல் ஒன்றே சாலாது என்பதும், பகையை எதிர் கொள்ள நேருங்கால் போரிட்டே தீர்த்தல் வேண்டும் என்பதும் நகுலன் அரசியல் நீதி நூற்கல்வியால் பெற்ற உண்மைகளாகும்.

ஒன்றுக்கொன்று இகல் கொள்ளும் நாடுகளின் பொதுவான நலன்களைப் பேணுதற்கு அரசியல் நுண்ணறிவு (Diplomacy) உதவுவது என்பது உண்மையே. தூது போக்கல் (Negotiation) தெளிவுறுத்துதல் (Persuasion) ஒருவர்க்கொருவர் விட்டுக்கொடுத்தல் (Conciliation) ஆகியவை கொண்டு ஆகாதவற்றை விலக்கி ஆவனவற்றை நிரந்தமைத்துக் கொள்ளலாம். இவற்றொடு, போர் பற்றிய ஆயத்தமும்

131. வில்லிபாரதம்: கிருட்டினன் தூது: 26. பக். 341. மர்ரே பதிப்பு (1959)
132. வில்லிபாரதம்: சடாசுரன் வதைப்படலம்: 9. பக். 257. மர்ரே பதிப்பு (1959)
சடாசுரன் வதைப்படலம்: 8. பக். 256. மர்ரே பதிப்பு (1959)
குருகுலச்சருக்கம்: 17. பக். 3. மர்ரே பதிப்பு (1959)
132அ. வில்லிபாரதம்: கிருட்டினன் தூதுச் சருக்கம்: 24. பக். 340. மர்ரே பதிப்பு (1959).

அரசியல் நன்னறிவுக்கு உட்பட்டதேயாகும். சில நிலைகளில், போர் பற்றிய அச்சுறுத்தலை ஒரு கருவியாகக் கொண்டொழுகலும் அதனோடு இயைந்ததே என அரசியல் திறன் பற்றி ஆயும் அறிஞர் எடுத்துரைத்துள்ளனர்.[133]

இக்கருத்துகளை நோக்குங்கால், அரசியலில் ஆக்கப் பண்புகளைப் பேணுதலோடு கூடி, நெருக்கடி நேருங்கால், போர்புரிய ஆயத்தமாகவும் இருக்க வேண்டும் என்று நகுலன் பகுத்துணர்ந்து தெளிந்த தெளிவின் திட்பம் நன்கு விளங்கும். நூலறிவைச் செயற்படுத்த வேண்டிய இன்றியமையாமையை அவன் உணர்ந்திருந்த சிறப்பும் புலப்படும்.

கல்வித் தெளிவைப் பொறுத்தவரை, தான் உணர்தல், பிறர் உணர்த்த உணர்தல் என்னும் இரண்டனுள் தான் உணர்ந்து திருந்தும் தன்மை இயல்பாக இருந்தாலன்றிப் பிறர் உணர்த்த உணர்தல் அரிதாகும் என்பது நகுலன் கொண்ட முடிவாகும். நாடு நல்க மறுக்கும் துரியோதனனின் பண்பை அளவிடுங்கால்,

"தான் அறியாதவன், பிறர் போய்க் கற்பித்தால் அறியனோ?"[133அ]

என்னும் வினாவின் வாயிலாகத் தன் முடிவை வெளியிடுகின்றான்.

உளவியல் தன்மையுடையனவாம், அகத்தில் அமைந்த பண்புகளும், உள்ளம் அ( பற்றி எய்தும் உணர்வும், முன்னர்ப் பெற்ற அனுபவத்தால் அடையும் நுகர்திறமும், தெளிவும் ஆகிய இவையே உள்ளத்தை மேம்படுத்துவனவாகும். அகமுகமாகிய இப் பண்புகளே முற்றுறப் புற உலகோடு தொடர்பு கொள்வன.... தனக்குரிய இயல்பு களோடு, உள்ளம், தன் போக்கில் போராடித் தன்னைச் செம்மை செய்து கொள்ளும் அளவில், தன்னிச்சையாக விடப்பட்டுள்ளது. தொடர்ந்து கடும் பாடுபட்டு உயர்ந்து அது தனக்குரிய ஒரு நிலையையும் வைராக்கியம் முதலிய உறுதிகளையும் எய்துகிறது. அத்தகைய சாதனையாலேயே பொறியுணர்வால் நிலை குலையாத கட்டுப்பாடு அதற்கு அமைகிறது[134] என்று, தான் உணர்ந்த தெளிதலின் இன்றியமையாமையையும்

---

133. V.R.Ramachandra Dikshidhar: War in Ancient India. Page 301 (1948)

133அ. வில்லிபாரதம்: கிருட்டினன் தூதுச் சருக்கம்: 28. பக். 341. மறுபதிப்பு(1959)

134. Radha Kumud Mookerji: Ancient Indian Education. Page 302 (1959).

அதனால், புற உலகோடு பொருந்தி வாழ்வதால் உறும் பயனையும் கல்வித் துறை அறிஞர் எடுத்துரைத்துள்ளனர்.

தானுணர்ந்து தெளிதலின் இன்றியமையாமையை, இக்கருத்துகளை அடிப்படையாகக் கொண்டு உணரின், 'தானறியாதவன் பிறர் போய்க் கற்பித்தால் அறிவனோ?' என்று நகுலன் வினவிய வினாவின் திட்பம் நன்கு விளங்கும். தன்னுணர்வு இல்லாதவன், புறத்திலிருந்து வரும் அறிவுக் கூறுகளால் திருந்தான் என்று அவன் கொண்டிருந்த முடிவின் தெளிவும் நன்கு புலப்படும்.

அறிவு நூற் கல்வி சிறந்து, அக்கல்வி மாட்சிமைக்கேற்ற செயல் திறனும் வாய்ந்த நகுலன், குதிரை நூல் வல்லவனாகவும் திகழ்கிறான். உன்னயம் என்னும் புகழ் வாய்ந்த குதிரை நூலும் அதுபோலும் வேறுபல குதிரை நூலும் கற்றிருந்தமையோடு, அக்கல்விக்கு ஏற்பக் குதிரைகளைத் தேர்ந்தெடுக்கும் திறமும் அவற்றைப் பயிற்றி நடத்தும் திறமும் உடையவனாக விளங்குகிறான்.[135] தன் தேர்ந்த பயிற்சித் திறத்தால் அவன் குதிரை நூலும் குதிரை மருத்துவ நூலும் செய்ததாக ஆய்வாளர் எடுத்துக் காட்டுகின்றனர்.[136]

குருகுலத்து முன்னோர்களுள் ஒருவனாகிய புதன் என்பான் தன் பேரறிவுத் திறத்தால் பெரும் புகழ் பெற்றிருந்தான் என்று முன்னர்க் கூறப்பட்டது.[137] அவ்வரலாற்றுண்மையை மெய்ப்பிப்பது போல், பின்வந்த பாண்டவருள் சகதேவன் தன் பேரறிவுத் திறத்தால் கண்ணனும் மதிக்கும் பெரும் புகழ் உடையவனாகத் திகழ்கிறான்.[138] "இமையோரோடு ஒத்த பெருஞான பண்டிதன்", "வித்தகன்", "மதிகொள் ஞானி" என்னும் தொடர்களால் சகதேவனின் பேரறிவுத் திறத்தை வில்லிபுத்தூரார் எடுத்துக்காட்டுகின்றனர்.[139]

---

135. வில்லிபாரதம்: நாடுகரந்துறைச் சருக்கம்: 22-23. பக். 282. மர்ரே பதிப்பு (1959)
136. V.R.Ramachandra Dikshidhar: War in Ancient India. Page 177 (1948).
வில்லிபாரதம்: நாடுகரந்துறைச்சருக்கம்: 22-23. பக். 282. மர்ரே பதிப்பு (1959)
137. அடிக்குறிப்பு: 47. பக்.
138. வில்லிபாரதம்: கிருட்டினன் தூதுச் சருக்கம்: 30. பக். 111. வை.மு.கோ. உரை விளக்கம்: வை.மு.கோ. பதிப்பு (1966)
139. வில்லிபாரதம்: இராயசூயச் சருக்கம்: 65. பக். 135. பதினெட்டாம்போர்ச்சருக்கம் 66. பக். 628. பதினெட்டாம் போர்ச்சருக்கம்: 92. பக். 633. மர்ரே பதிப்பு (1959)
இராயசூயச்சருக்கம்: 65. வை.மு.கோ. உரைவிளக்கம்: பக். 75 வை.மு.கோ. பதிப்பு (நூல் குறிக்கப்பெறவில்லை)
பதினெட்டாம்போர்: 66. பக். 54. பதினெட்டாம் போர்: 92.

சகதேவனின் இத்தகைய பேரறிவுத் திறத்தை வில்லி புலப்படுத்தியது போல் பாரதஞ் செய்த பிறர் எவரும் கூறவில்லை என்பர் ஆய்வாளர்.[140]

பாரதப் போர் நிகழாமல் தடுத்தற்குப் பிறர் கூறும் உபாயமெல்லாம் அவரவர் படைமைக் கல்வித் திறத்தைப் பற்றி எழுந்தவை.[141] சகதேவன் உரைக்கும் உபாயமோ, அவனுடைய படைமைக் கல்வித் திறத்தொடு சிறிதும் தொடர்பிலாது, அவனுடைய தத்துவஞான உணர்வை முற்றும் அடிக்கொண்டெழுந்ததாகும்.[142] சகதேவன் வேற்கலையில் வல்லவனாயினும்,[143] வீமன், அருச்சுனன், நகுலன் ஆகியோர் போல், தன் படைமைக் கல்வித் திறம் கூறிச் செருக்கும் சினமும் புலப்படுத்தவில்லை.[144]

கண்ணன் உள்ளத்தை உள்ளவாறு உணரும் தத்துவஞானம் அமைந்திருந்தும் அதனால் அவன் பெருமிதங் கொண்டு போர் நிகழ்த்தும் வன்மையையோ போர் நிகழாமல் தடுத்தற்குரிய உண்மையையோ, யாவரும் அறிய உடனெடுத்துக் கூறவில்லை.[145] இறுதியில் நிகழும் முடிவு தனக்குத் தெரியாது என்று அடக்கம் புலப்படுத்துகிறான்.[146] கண்ணனின் மாயை ஒருவர்க்கும் தெரியாதது; தனக்குத் தெரியும் ஆயினும், அந்த உண்மையைப் பிறர் விளங்கிக் கொள்ளாத வகையில்-தானும் கண்ணனுமே உணரும் வகையில்-எடுத்துரைக்குங்காலும் மிக்க அடக்கமே காட்டுகிறான்.[147]

தத்துவஞானம் பெருக்கியுள்ள அளவிற்குத் தன்னடக்கமும் வளர்த்துள்ளான் சகதேவன்; அதனோடு கூடப் பிறர் அறியா வகையில் உண்மையைப் பொதுப்பட உரைக்கும் தந்திரக்

140. M.V.Subramainian: The Mahabharata Story: Vyasa and Variations Page 187 (1967)
141. வில்லிபாரதம்; கிருட்டினன் தூதுச்சருக்கம்;10-28.பக்.337-341. மர்ரே பதிப்பு (1959)
142. வில்லிபாரதம்; கிருட்டினன் தூதுச்சருக்கம்;31.பக்.342.மர்ரேபதிப்பு(1959)
143. வில்லிபாரதம்; சூதுபோர்ச்சருக்கம்;109.பக்.164.
கிருட்டினன் தூதுச்சருக்கம்;31.பக்.342.மர்ரேபதிப்பு(1959)
நாடுகரந்துறைச்சருக்கம்;26.பக்.283.
பதினெட்டாம் போர்ச்சருக்கம்;97-98.பக்.634.
மர்ரே பதிப்பு (1959)
144. வில்லிபாரதம்; கிருட்டினன் தூதுச்சருக்கம்;29,30.பக்.342.மர்ரேபதிப்பு(1959)
145. வில்லிபாரதம்; கிருட்டினன் தூதுச்சருக்கம்;29.பக்.342.மர்ரேபதிப்பு(1959)
146. வில்லிபாரதம்; கிருட்டினன் தூதுச்சருக்கம்;29.பக்.342.மர்ரேபதிப்பு(1959)
147. வில்லிபாரதம்; கிருட்டினன் தூதுச்சருக்கம்;30.பக்.342.மர்ரேபதிப்பு(1959)

கலையும் ஒரு சேர அவனிடம் அமைந்துள்ளது. பிறர் முன்னிலையில் பொதுப்பட உரைக்கும் உண்மையிலே,[148] தனியே அழைத்துச் சென்று கண்ணன் வினவுங்கால், மிகக் கூறுபட விளக்குகின்றான்.[149]

கண்ணன் முடிகுடல், அருச்சுனனைக் கொல்லல், பாஞ்சாலி குழல்களைதல், இவையாவற்றிற்கும் மேலாக, கண்ணன் செயற்படாமல் அவன் காலில் தளையூட்டல் இயலை நடப்பின் பாரதப் போர் நிகழாமல் தடுக்கலாம் என, அவனைப்போல் தத்துவ உணர்வுடையாரன்றிப் பிறர் கேட்க நேரின் உள்ளம் அதிர்ந்து நடுங்கத் தக்க வகையில், நிகழ்தற்கரியன நிகழ்ந்தால் பாரதப் போர் வராது தடுக்கலாம் என்று அவன் வகுத்துரைக்கும் செய்திகள் அவனுடைய பேரறிவுத் திறத்தை விளக்குவனவாக உள்ளன.[150]

எனினும் அவை நிகழமாட்டா என்ற உறுதி அவன்பால் உள்ளது; அவ்வுறுதியிலேயே அவனுடைய பேரறிவுத் திறத்தின் நுட்பமும் அடங்கியுள்ளது. பாரதப் போர் பாண்டவர் உரிமை பெறுதற்குரிய போர் மட்டும் அன்று, படைப்பில் உள்ள தீமையைக் களைதற்குப் படைத்தோன் மேற்கொள்ளும் - யாவராலும் விலக்க இயலாத - கடமை என்பது அவ்வொட்பத்தின் நுணுக்கமாகும்.[151]

அந்நுணுக்கத்தை உளங் கொண்டமையாலேயே, கண்ணனன்றிப் பாரதப் போர் நிகழாது தடுக்க வல்லவர் பிறர் எவருமிலர் என்ற தெளிவையும் அவனிடத்திலேயே வெளியிடுகின்றான். அதனோடு, தன் தத்துவஞான வரம்பு கண்ணனின் ஆற்றலுக்கு உட்பட்டது என்பதையும் உணர்ந்து, தன்னையும் தம் முன்தோரையும், அருட்பார்வை கொண்டு போரில் காக்க வேண்டும் என்று கண்ணனை வேண்டி நிற்கின்றான்.[152]

---

148. வில்லிபாரதம்: கிருட்டினன் தூதுச்சருக்கம்: 29, 30. பக். 342. மர்ரே பதிப்பு (1959)
149. வில்லிபாரதம்: கிருட்டினன் தூதுச்சருக்கம்: 32. பக். 342. மர்ரே பதிப்பு (1959)
150. வில்லிபாரதம்: கிருட்டினன் தூதுச்சருக்கம்: 33. பக். 342. மர்ரே பதிப்பு (1959)
151. வில்லிபாரதம்: கிருட்டினன் தூதுச் சருக்கம்: 32. பக். 342. மர்ரே பதிப்பு (1959)
152. வில்லிபாரதம்: கிருட்டினன் தூதுச் சருக்கம்: 32, 37. பக். 342-343. மர்ரே பதிப்பு (1959).

தன் தத்துவஞான உணர்வுக்கு - பேரறிவுத் திறத்திற்கு - சோதனை நிகழுங்கால், அதற்கு ஈடுதரும் செயல்திறன் உடையவனாகவும் விளங்குகிறான் சகதேவன்.[153] கன்னன் முடிசூடல், அருச்சுனனைக் கொல்லல், பாஞ்சாலி குழல்களைதல் ஆகியவை நிகழினும் தன்னைக் கட்டுவது யாங்ஙனம் என வினவிய கண்ணனுக்கு - எங்கு நோக்கினும் தன் தோற்றமே விளக்கிய கண்ணனுக்கு - தன் பத்தி உணர்வின் வாயிலாகத் தன் செயல்திறத்தைப் புலப்படுத்துகிறான்.[154] அதற்கும் அவனுடைய பேரறிவுத் திறமே வழிகாட்டுகின்றது.[155] வல்லமையும், தந்திரமும் காட்டிக் கயிறு, விலங்கு முதலியவற்றால், கண்ணனைத் தளைபூணச் செய்வது இயலாது என்று உணர்ந்த சகதேவன், தன் நெஞ்சத்தால், பத்தி உணர்வெனும் கயிறு கொண்டு பிணித்துத் தன் செயல் திறமையைக் காட்டுகிறான்.[156]

இழைத்த வஞ்சினம் மாறாமல், பகைவரைக் கொல்லும் படைமைக் கல்வித் திறன் அவன்பால் உள்ளது.[157] கண்ணனோடு ஒத்து வைத்தெண்ணத் தக்க,[158] அவனும் வியந்து போற்றத்தக்க பேரறிவுத் திறம் அவன்பால் உள்ளது. தன்போலும் தத்துவ உணர்விலார் முன் அதனைப் பொதுப்பட உணர்த்தும் பொது அறிவும் தந்திரமும் அவன்பால் உள்ளன.[159] தன்போலும் உணர்வுடைய தலைவன் முன் உள்ளதை உள்ளவாறு எடுத்துரைக்கும் தெளிவும் திட்பமும் அவன்பால் உள்ளன.[160] அனைத்திற்கும் மேலாக, பெற்ற திறத்தால் செருக்கடையாத மன நலமும், தன்னினும் பெரியோர் உள்ளம் தனக்குத் தெரியினும், தான் கருதியது நடவாது, தான் போற்றும் பெரியோர் கருதியதே நடக்கும் என்று உணரும் அகத் தெளிவும், அவ்விரண்டு பேறு காரணமாகத்

153. வில்லிபாரதம்: கிருட்டினன் தூதுச் சருக்கம்: 33. பக்.342.
மர்ரே பதிப்பு (1959)
154. வில்லிபாரதம்: கிருட்டினன் தூதுச் சருக்கம்: 34. பக்.343.
மர்ரே பதிப்பு (1959)
155. வில்லிபாரதம்: கிருட்டினன் தூதுச் சருக்கம்: 35. பக்.343.
மர்ரே பதிப்பு (1959)
156. வில்லிபாரதம்: கிருட்டினன் தூதுச் சருக்கம்: 35-36 பக்.343.
மர்ரே பதிப்பு (1959)
157. வில்லிபாரதம்: பதினெட்டாம் போர்ச்சருக்கம்: 97, 98. பக்.634.
மர்ரே பதிப்பு (1959)
158. வில்லிபாரதம்: கிருட்டினன் தூதுச் சருக்கம்: 30. பக்.342.
மர்ரே பதிப்பு (1959)
159. வில்லிபாரதம்: கிருட்டினன் தூதுச் சருக்கம்: 29, 30. பக்.342.
மர்ரே பதிப்பு (1959)
160. வில்லிபாரதம்: கிருட்டினன் தூதுச் சருக்கம்: 28. பக்.341.
மர்ரே பதிப்பு (1959).

தலைவன்பால் காட்டும் அடக்கமும், அவன் விரும்பி நல்கும் சோதனைக்கு ஈடுதரும் - அவ்வடக்கத்தோடு கூட அமைந்த விடுக்கச் செய்யும் - பத்தி உணர்வும் சகதேவனுக்கு அமைந்த விழுச் செல்வங்களாகும்.[161]

"வரம்புக்குட்பட்ட நம்முடைய செயல்கள் (காரியங்கள்) ஒன்றை ஒன்று நோக்கச் சிறந்து வருவது கொண்டு, முழு முதற் பொருள் ஒன்று உண்டு என்று உய்த்துணரலாம். நம் செயல்கள் யாவும் மேம்பட்டுத் திகழ வேண்டுமென்பதே அதன் நோக்கமாகும். உள்ளொளியால், தானறிந்த தெளிவுற்ற தனியொருவனின் வாழ்வு, எவ்வகை அறிவும் நிரம்பியது; அவனுடைய வாழ்வு நிகழ்ச்சிகளின் வாயிலாக அவன் வாழ்வு பொருள் பொருந்தியதாகின்றது; அவன் அகத் தெளிவால் முழுமையுற்றவனாகிறான்" என்று தத்துவ ஞானத்திறமுடைய ஒருவன், படைப்பில் உள்ள முழுமைத் திறத்தோடு தன்னை இயைத்துக் கொள்ளும் தன்மையைத் தத்துவத் துறையினர். நன்கெடுத்துக் காட்டுகின்றனர்.[162] இவ்வாறு அவர் உரைக்கு இலக்கியமாகத் திகழ்ந்த முக்காலத்திற்கும் உரிய நிகழ்ச்சிகளைக் குற்றங்குறையின்றி எடுத்துரைக்கும் திறமும்,[163] அவற்றைப் பற்றின்றி, பிற துன்னார்வில்லா மாந்தரைப் போல் காண்பார் எளியனெனக் கருதுமாறு உலகியற் கடமைகளைச் செய்து போகும் மாணுடவியற் போக்கும்[164] புலப்படுத்தலின், சகதேவன் மானுடனுக்கு மானுடனாய்த் தெய்வத்திற்குத் தெய்வமாய் விளங்குகின்றான்.[165] தன் கருத்தை எவரும் அறிவு வெளியிடலாகாது என்று தெய்வமே வேண்டிக்கொள்ள, அதற்கேற்ப ஒழுகித் தெய்வத்தின் கடமைகட்கு உறுதுணையாய் நின்று அதன் நம்பிக்கைக்கு இலக்காகிறான்.[166]

தத்துவஞானப் பேரறிவால் தெய்வநிலைக்கு உயர்ந்த சகதேவன், அத்தெய்வம் போலவே எளிய தொழில் மேற்கொண்டு, உலகியற் காரணம் பற்றிப் பிற பாண்டவர் போல் கரந்துறையும் கலை வல்லவனாகத் திகழ்கிறான். ஆயர்பாடியில்

---

161. வில்லிபாரதம்: கிருட்டினன் தூதுச்சருக்கம்: 36, 38. பக். 343. மர்rே பதிப்பு (1959). கிருட்டினன் தூதுச்சருக்கம்: 37. பக். 343. மர்ரே பதிப்பு (1959). அடிக்குறிப்புகள். 151, 152. பக். 93-94.
162. Joseph L. Blan: Men and movements in American Philosophy. P-215 (1954)
163. தொல்காப்பியம்: பொருளதிகாரம்: புறத்திணையியல் நூற்பா: ~~25~~ 19 நச்சினார்க்கினியர் உரை. பக். 209 சைவசித்தாந்தக் கழகப்பதிப்பு (1976)
164. வில்லிபாரதம்: குருபோர்ச்சருக்கம்: 257. பக். 183. பதினெட்டாம் போர்ச் சருக்கம்: 97. பக். 634. மர்ரே பதிப்பு (1959)
165. வில்லிபாரதம்: கிருட்டினன் தூதுச்சருக்கம்: 39. பக். 343. மர்ரேபதிப்பு (1959) கிருட்டினன் தூதுச்சருக்கம்: 41. பக். 122. வை. மு. கோ. பதிப்பு
166. [illegible]

நந்தகோபன் மகளும் வளர்ந்த கண்ணன் போல,[167] ஆநிரை காக்கும் இடையர் கோலம் கொள்ளுகிறன். அக்கோலத்திற்குரிய, ஒற்றைக் காதில் குழையும், தோளில் தடியும் அமைய, ஆநிரை காக்கும் தன் வல்லமையை[168] விராட வேந்தனிடம் எடுத்துரைக்கிறன்.

பகைவரை உறவினராய்க் கண்டு மயங்கிக் கலங்கிய வேளையில் கண்ணன் உணர்த்திய உண்மையை உணர்ந்து தெளிந்தவன் அருச்சுனன். பகைவர் உறவினர் என்னும் மயக்கம் இலாது, கண்ணன் உளம் கொண்டிருந்த உண்மையை அவனும் வியக்குமாறு தன் உளத்தில் தெளிந்து அமைத்துக் கொண்டவன் சகதேவன். துரியோதனன் வேண்டப்படாது நிற்க அவனுக்கு உறுதி நல்குகிறன் கண்ணன் எனின் பாரதப் போரில் வெற்றி கொள்ள நன்னாள் வகுத்துத் தர வேண்டும் என்று துரியோதனன் வேண்ட, பகைவன் என்று பாராது,[169] தன் கலைத்திறம் காட்டி அவனுக்கு நாள் வகுத்து உதவித்[170] தன் மெய்யுணர்வுக் கல்வியின் பெருமையை நிலைநாட்டுகிறன் சகதேவன்.[171]

இதுவரை ஆய்ந்தவற்றல், பாண்டவர் தம் கல்வி, கலைத் திறன்கள் அவர்தம் உள்ளத்து இயல்புகளையும், பண்பு மேம்பாடுகளையும் விளக்கும் வகைகள் தெளியப்பட்டன.

இனி, அவரொடு முரணி நின்ற துரியோதனுதியரின் கல்வி கலைத் திறன்கள் எவ்வாறு அவர்தம் இயல்புகளை விளக்குகின்றன எனக் காணலாம்.

பாண்டவர்க்குப் பயிற்றிய துரோணரே துரியோதனுதியர்க்கும் பயிற்றுவிக்கிறன்; படைக் கல்வியோடு பண்பாட்டுக் கல்வியும் நல்குகின்றன். எனினும் பாண்டவர்

---

167. வில்லிபாரதம்: நாடுகரந்துறைச் சருக்கம்: 26. பக். 20. வை. மு. கோ. பதிப்பு (1960)
168. வில்லிபாரதம்: நாடுகரந்துறைச்சருக்கம்: 25-26. பக். 283. மர்ரே பதிப்பு (1959)

169. வில்லிபாரதம்: உத்தியோகபருவம்: வை. மு. கோ. பதிப்பு: பக். 314-15 (1966)
170. வில்லிபாரதம்: மூகூர்த்த கேள்விச் சருக்கம்: 2. வை. மு. கோ. பதிப்பு. பக். 313 (1966)
பெருந்தேவனுர்: பாரதவெண்பா: 413. பக். 164. 423. பக். 168: உரை, அடிக்குறிப்பு முதலியன: சைவசித்தாந்தக் கழகப்பதிப்பு (1973)
171. பெருந்தேவனுர்: பாரதவெண்பா: 413, 415. உரை. பக். 165. சைவசித்தாந்தக் கழகப்பதிப்பு (1973).

அறிவும் புலன் திறனும் பெற்றதுபோல்[172] துரியோதனுதியர் பெறவில்லை. அழுக்காறு முதலிய எதிர்மறைப் பண்புகளே அவர்பால் மிகுந்து காணப்படுகின்றன.[173] பாண்டவர் கல்வி கலைத் திறன்களால் கதிரவன் போல் ஒளிர்ந்தனர் எனில் துரியோதனுதியர் மின்மினி போல், பொலிவின்றி இருந்தனர்.

"எஞ்சிய குமாரர்கள் பொருமையின் மிகுத்தனர்கள்
இரவி எதிர் மின்மினிகள் போல்"[173அ]

துரியோதனன் துரோணனிடம் பயிலத்தலைப்படுவதற்கு முன்னரேயே, மிக்க இளமையிலேயே, அழுக்காறு மிகுந்தவனுக உள்ளான். அதற்கு இலக்காயினமையாலேயே, வலிமையால் தன்னை ஒத்த வளரும் வீமனுக்குப் பற்பல இடையூறுகளை விளைவிக்கிறுன். வீமனைக் கொடிகளால் கட்டி ஆற்றில் உருட்டுதல், பாம்புகளை ஏவிக் கடிக்கவிடல், நீர்க்கீழ்க் கழுமரங்களை அமைத்து மறைத்து நீர்பாயச் செய்தல், நஞ்சூட்டி ஆற்றில் வீழ்த்தல் ஆகிய கொடுஞ்செயல்கள் அவ்வழுக்காற்றின் செயல் வடிவங்களாக உள்ளன.[174] கல்வி பயில்வதற்கு முன்னரேயே, மிக்க இளமையிலேயே தீச்செயல் புரிந்து பழகிவிட்ட தன் இயல்பினை, உயிர் விடும் வேளையில் தானே ஒத்துக் கொள்ளுகிறுன் அவன்.[174(அ)]

கற்கும் கல்வியைக் கருவியாகக் கொண்டு நெஞ்சத்தைத் தூயதாக்கிப் பண்படுத்தலே கல்வி கற்போர் கடன். துரியோதனன், கல்வியின் மூலம் நெஞ்சம் பண்படுத்தும் பண்டைமையை மேற்கொள்ளவில்லை. 'கல்வி தூய நெஞ்சு இலாத அச்சுயோதனன்'[175] என்று அவன் மேற்கொள்ளத் தவறிய கடமையை வில்லி எடுத்துக்காட்டுகின்றனர். நெஞ்சம் பண்படுதற்கு உதவாத கல்வியால் தீமையே விளையும் என்று திருவள்ளுவரும் பரிமேலழகரும் விளக்கியுள்ளனர்.[176]

---

172. வில்லிபாரதம்:நாடுகரந்துறைச் சருக்கம்:1.பக்.277.
மர்ரே பதிப்பு (1959)
173. V.R.Ramachandra Dikshidhar: War in Ancient India: P-30 (1948)
173அ. வில்லிபாரதம்:வாரணுவதச் சருக்கம்:48.பக்.47.மர்ரேபதிப்பு (1959)
174. வில்லிபாரதம்:வாரணுவதச் சருக்கம்:4-11. பக்.41-42.
மர்ரே பதிப்பு (1959)
174(அ) வில்லி பாரதம்: பதினெட்டாம் போர்ச் சருக்கம்: 228: மர்ரே பதிப்பு (1959)
175. வில்லிபாரதம்:உலூகன் தூதுச் சருக்கம்:14.பக்.328.
மர்ரே பதிப்பு (1959)
176. திருக்குறள்:பொருட்பால்:கூடாநட்பு:3. ஆ பரிமேலழகர் உரை.

பாண்டவர் அரசுபெறுதற்கு உரிமை அற்றவர் ஆயினும் அவர் மேற்கொள்ளும் நெறி, அனைவரும் அவர்பால் பரிவு கொள்ளச் செய்கின்றது.[177] துரியோதனன் அரசுக்கு உரிமை உடையவன் ஆயினும் அவன் மேற்கொள்ளும் தகாத நெறி, அனைவரும் அவன்பால் பரிவு கொள்ளஇயலாமற் செய்கின்றது.[178]

தருமன் இந்திரப் பிரத்தத்தில், செங்கோன்மைத் திறம் விளங்குதற்பொருட்டு மணிமண்டபம் கட்டுகின்றான் எனின், துரியோதனன் பாண்டவரை வஞ்சனையாற் சதிப்பதற்கு அத்திருபுரியில் மணிமண்டபம் கட்டிச் சிற்பக்கலைத் திறனைத் தன் தீய உணர்வு ஆக்கம் பெறுதற்குப் பயன்படுத்துகின்றான்.[178அ]

தருமன் இராயசூய வேள்வி செய்து, கண்ணன், வியாதன், நாரதன், வீடுமன், ஆகிய உயர்ந்தோர் ஆசியையும் பிறவேந்தர் பாராட்டையும் பெற்றுத் தன் ஆட்சியை நிறுதி செய்து ஆளுங்கலையை (நிர்வாகத் திறத்தினை) வளர்த்துக் கொள்ளுகின்றான்;[179] ஆனால், துரியோதனன், கன்னன், சகுனி, துச்சாதனன் ஆகியோர் தம் அறிவுரை கொண்டு, போர்க்கலையையும், சூதக்கலையையும் பயன்-படுத்திப் பகைவென்று தான் ஒருவனே தனிப்பெரு வேந்தனாக விளங்க விரும்புகின்றான்.[180]

சிற்பக்கலை, போர்க்கலை, சூதக்கலை ஆகியவற்றோடு கூட மாளிகை அமைக்குங்கலையும் தீமைக்கே துணை போகின்றது. தனித்து வாழுமாறு வேண்டிய திருதராட்டிரன் சொற்கேட்டு, வாரணுவதம் சென்று வாழ்ந்த பாண்டவரை ஒழித்தற் பொருட்டே அரக்குமாளிகை அமைக்கப்படுகின்றது. உடன்வந்து வாழ்ந்து பாண்டவர்க்கு ஆட்சித் துறையில் அறிவுரை கூறி அவர்க்கு உதவ வந்த அமைச்சனின் மதித்திறமும் வஞ்சனைக்கே துணைபோகிறது.[180அ]

177. இயல்:4.கலைகளும் அவற்றின் பயன்களும்:அடிக்குறிப்பு:177.பக்.97.
178. வில்லிபாரதம்:சூதுபோர்ச்சருக்கம்:144-45.பக்.169. 155.பக்.170. 220.பக்.178. மர்ரே பதிப்பு (1959)
178அ.வில்லிபாரதம்:இராயசூயச் சருக்கம்:4.பக்.127.மர்ரே பதிப்பு (1959) வில்லிபாரதம்:சூதுபோர்ச்சருக்கம்:42.பக்.156. மர்ரே பதிப்பு(1959)
179. வில்லிபாரதம்:இராயசூயச் சருக்கம்:153,152.பக்.150. மர்ரே பதிப்பு (1959)
180. வில்லிபாரதம்:சூதுபோர்ச்சருக்கம்:11,18,29.பக்.151-52. மர்ரே பதிப்பு (1959)
180அ.வில்லிபாரதம்:வாரணாவதச்சருக்கம்:118,117.பக்.57 மர்ரே பதிப்பு (1959)

உயிர் பறித்தற் பொருட்டுத் தீமதியுடன் வல்லோர் அமைத்த கட்டடக் கலையின் பயன், உயிர் காத்தற் பொருட்டு, நல்லோன் ஒருவன் (சிற்பி) அமைத்த நிலவறை வழியாலும் அது மறைக்கும் தூணின் அமைப்பாலும் தகர்த்தெறியப்படுகின்றது. நல்லவனின் தந்திரம் தீயோரின் தந்திரத்தை வெல்லுகின்றது. சிற்பியின் நல்லுதவியொடு பாண்டவர்தம் - குறிப்பாக வீமனின் - மதித்திறமும் பொருந்திப் பகைவர்தம் கட்டடக்கலை நோக்கு நிறைவேறாமல் செய்கின்றது.[181]

வேள்வியைக் கலையாகப் போற்றி அதனைத் திறம்பட இயற்றிப் புகழ் பெற்ற வேந்தர்தம் பெருமைகள் முன்னர் ஆராயப்பட்டன.[182] தருமனும் வேள்விக்கலையால் தன் பண்புக்குத்தகப் பெருமை எய்துகின்றான்.[183]

நல்லோர் மேலும் நல்லோராதற் பொருட்டுப் பயன்படுத்தப்பட்ட வேள்விக் கலையைத் துரியோதனன் தன் தீய இயல்புக்கு ஆக்கம் தரும் வகையிலேயே பயன்படுத்துகின்றான். காளமாமுனி என்னும் முனிவனை வரவழைத்துப் பாண்டவரைக் கொல்லும் நோக்கம் கொண்டு வேள்வி இயற்ற வேண்டும் என்று வேண்டுகின்றான். தீமைக்குத் துணைபோனால், தவமும் பெருந்தகைமையும், பிறவிப் பயனாகிய நல்வினைப் பேறும் அழியும் என்று நினைத்து, காளமாமுனி வருந்தி,[184] அவ்வாறு வேள்வி இயற்றினும் பாண்டவர் அழியார் என எடுத்துக் கூறுகின்றான்.[185] எனினும், அம்முனிவனது இச்சைக்கு எதிராக, வேள்வி இயற்றப்படுகின்றது.[186] அதன் விளைவாக அம்முனிவன் உயிரிழக்கின்றான். துரியோதனன் பலருடைய வெறுப்புக்கு ஆளாகின்றான்.[187]

உயிர்வாழும் நல்லோரின் உயிர் பறித்தற்கு வேள்வி செய்ய முற்படும்

181. வில்லிபாரதம்: வாரணாவதச் சருக்கம்: 122-23, 130. பக்.58-59.
மர்ரே பதிப்பு (1959)
182. கலைகளும் அவற்றின் பயன்களும்: இயல்: 4. அடிக்குறிப்பு. 50. பக்.77.
183. இராயசூயச் சருக்கம் முழுதும் வேள்வியால் தருமன் தன்னை உயர்த்திக் கொண்டதைக் கூறும்.
வில்லிபாரதம்: நாடுகரந்துறைச் சருக்கம்: 1. பக்.279. மர்ரேபதிப்பு (1959)
184. வில்லிபாரதம்: நச்சுப்பொய்கைச் சருக்கம்: 8. பக்.262. மர்ரேபதிப்பு (1959)
185. வில்லிபாரதம்: நச்சுப்பொய்கைச் சருக்கம்: 9. பக்.262. மர்ரேபதிப்பு (1959)
186. வில்லிபாரதம்: நச்சுப்பொய்கைச் சருக்கம்: 15. பக்.263.
மர்ரே பதிப்பு (1959)
187. வில்லிபாரதம்: நச்சுப்பொய்கைச் சருக்கம்: 44, 45. பக்.266.
மர்ரே பதிப்பு (1959).

துரியோதனன், போரில் இறந்து பட்டோரை எழுப்பி மீண்டும் தன் தீய எண்ணத்திற்கு உதவச் செய்வது கருதி, அவர்க்கு உயிர் தரவிரும்புகிறான். அதன் பொருட்டுத் தன் கேள்விச் செல்வத்தையும் மந்திரக் கலைத்திறனையும் பயன்படுத்துகிறான்.[188]

தன்னுடைய தீய குறிக்கோளுக்காக, நல்ல பல திறமைகளையெல்லாம் பயன்படுத்துகிறான். ஐம்புலன்களை ஒருமைப்படுத்துகிறான்; உலகியல் ஆசைகளையெல்லாம் விடுகிறான்; மனத்தை அறிவொடு பொருந்த நிறுத்துகிறான். நீரில் மூழ்கித் தன் மூச்சுக் காற்றை (பிராணவாயுவை) யும் அடக்கி, பெருஞ்சுடர் விளக்கொளிபோல், ஞானத் தெளிவைப் புலப்படுத்துகிறான். பலநாள் யோகக் கலை பயின்றோரையும் விடத் தன் உடம்பு நலம் காட்டி வாயால் ஓதாமல் மனத்தால் ஓதி மந்திர ஆற்றல் வளர்க்கிறான்.[189] அவனுடைய திறமை அசுவத்தாமனும் கண்ணனும் போற்றத்தக்கதாக உள்ளது.[190] இவ்விருவர் வாயாலுமன்றிக் கவிக் கூற்றாலும், துரியோதனனின் மந்திரக் கலைத்திறன் பெரிதும் பாராட்டப்படுகின்றது.[190அ]

தந்திரமாக வெல்லும் போர் முறையில் மந்திரக் கலை பயன்படுத்தப் பட்டதென்றும் அதனை மந்திரப் போர் எனக் கூறல் உண்டென்றும், நூல்கள் வகுக்கும் நால்வகைப் போர்க் கலைகளுள் மந்திரக் கலை பற்றிய போர்க்கலை ஒன்றென்றும் ஆய்வாளர் விளக்குகின்றனர்.[191]

அரியகலைகள் பயின்று அவற்றைத் திறம்படப் பயன்படுத்தும் ஆற்றல் உடையவனாயிருந்தும், அவை யாவற்றையும் தான் செய்யும் தீமைக்குத் துணையாக அமையும் பொருட்டுப் பயன்படுத்த விரும்புவதால் அவை யாவும் தீயனவாகவே போகின்றன.

துரியோதனனுக்குத் துணையாக உள்ள, துச்சாதனன், கன்னன், சகுனி, ஆகியோர் தம் கலைத் திறன்களும் அவரவர் தம் பண்புகளுக்கு ஏற்பவே பயன்படுகின்றன. துச்சாதனன், தருமன் நடத்திய வேள்வியைத் தன் பண்புக்கு ஒப்பவே நோக்குகின்றான்.

---

188. வில்லிபாரதம்: பதினெட்டாம் போர்ச்சருக்கம்: 101. பக். 79-80. வை.மு.கோ. பதிப்பு (1966)

189. வில்லிபாரதம்: பதினெட்டாம் போர்ச்சருக்கம்: 104-05, வை.மு.கோ. விளக்கம் பக். 83, 84. வை.மு.கோ. பதிப்பு (1966).

190. வில்லிபாரதம்: பதினெட்டாம் போர்ச்சருக்கம்: 121, 128-29. பக். 637-38. மர்ரே பதிப்பு (1959)

190அ. வில்லிபாரதம்: பதினெட்டாம் போர்ச்சருக்கம்: 104-05. பக். 635. மர்ரே பதிப்பு (1959)

191. V.R.Ramachandra Dikshidhar: War in Ancient India: Page 59,93 (1948)

தன் வலிமையையும், தம்பியர் நால்வர் வலிமையையும், கன்னனின் வலிமையையும் பெருக்கி, நாடு முழுவதையும் கவரும் எண்ணத்துடனும், பிறவேந்தர் அனைவரையும் தன்னடிப்படுத்தும் நோக்கத்துடனும் தருமன் வேள்வி நடத்தியதாகக் கருதுகிறான்.[191அ]

பிறவியிலேயே தீய பண்புகள் மிகுந்தவனாதலின் நல்லன எவையும் நல்லனவாக அவன் கண்களில் படவில்லை.

"பிறர்க்குக் கல்வி பயிற்றுதலிலும், தான் கல்வி பயிலுதலிலும், தேவர்களிடத்தும் குரவர் பாலும், அந்தணரிடத்தும், ஓவியஞ் சிற்பம் முதலிய கலைகள்மாட்டும், இசையின் கண்ணும், பணிசெய்தலிலும், நேர்மையிலும், மகளிர்பாலும், வீரத்திலும், தவஞ்செய்தலிலும், காவிய முதலியவற்றிலும் எவன் மனம் இன்புறுதலில்லையோ அவன் துறவியாக, அன்றிக் கயவனாக, அன்றி மனிதவுருவந் தாங்கிய விலங்காக இருத்தல் வேண்டும்.

பிறர் ஆக்கங்கண்டு பொறாமையும், பிறரிடத்துப் புரைவழி காண்டலும், பிறர் பழி தூற்றலும், பிறர்க்கின்னா செய்யுங் குணமும் மலர்ந்த முகமும், இருண்ட அகமும் உடையவன் கயவனென்று கூறப்படுவான்."[192]

கயமைக்கு உரியனவாகச் சுக்கிரநீதி கூறும் இவ்விலக்கணங்களை நோக்கின், துச்சாதனன் கயவனெனப் படுதலில் பிழையில்லை.

விற்போர், கதைப்போர், முட்டிப்போர் ஆகிய மூன்றிலும் அவன் வீமனுக்கு ஈடுதரும் ஆற்றல் உடையவனாகத் திகழ்கிறான்.[193] எனினும் அவன் வாழ்வின் நீதிகள் யாவும் பிறர்க்கு இன்னாசெய்யும் தீய நீதிகளே.[194] ஆதலின் அவன் கலையால் எப்பயனும் பெறவில்லை. பாண்டவர்க்குப் போலத் துச்சாதனனுக்கும் கேள்விச் செல்வம் வாய்த்திருந்தது.[195] எனினும் அவனுடைய கயமைப் பண்பே மேலோங்கி நின்றது.[196]

191அ. வில்லிபாரதம்: சூதுபோர்ச்சருக்கம்: 15. பக். 152. மர்ரே பதிப்பு (1959)
192. சுக்கிரநீதி: மூன்றாம் அத்தியாயம்: 245-47. பக். 150-51. பண்டிதமணி கதிரேசச் செட்டியார் மொழிபெயர்ப்பு (1926)
193. வில்லிபாரதம்: பதினேழாம் போர்ச்சருக்கம்: 142-156. பக். 590-93. மர்ரே பதிப்பு (1959)
194. வில்லிபாரதம்: பதினேழாம் போர்ச்சருக்கம்: 162. பக். 133. வை.மு.கோ. பதிப்பு (1968 )
195. வில்லிபாரதம்: பதினேழாம் போர்ச்சருக்கம்: 13. பக். 184. வை.மு.கோ. பதிப்பு ( 1968 )
196. வில்லிபாரதம்: பதினேழாம் போர்ச்சருக்கம்: 13. பக். 184. வை.மு.கோ. பதிப்பு (1968 )

துச்சாதனனை அன்றிப் பிற தம்பியரும் படைக் கல்வியும் அறிவு நூற்கல்வியும் உடையராகத் திகழ்கின்றனர்.[197] எனினும், அவர்கள் யாவரும் துரியோதனனின் தீய நெறிக்கே துணை போகின்றனர். ஆதலின் அனைவரும், துச்சாதனன் போல் வீமன் கைப்பட்டு மாண்டு போகின்றனர்.

துரியோதனாதியர்க்குத் துணை நிற்கும் சகுனி, பொழுதுபோக்குக்கு உரிய சூதக்கலையை, அரசியல் வெற்றிக்குப் பயன்படுத்துகிறான்.[198] போர்க்களத்துப் பொரும் போர், அவைக்களத்துப் பொரும் சூதுபோர் ஆகிய இரண்டையும் அரசியல் சூழ்திறனுக்கு உரியனவாகக் கருதுகிறான். பகைவராகிய பாண்டவர் போர்க்களத்துப் பொரும் போர் ஒன்றே வல்லராதலின், தன் போல் சூதுபோர் வல்லமை பெறாத அவரை அப்போர் கொண்டு வெல்லும் திறத்தில் தனக்கு இணையற்றவனாகத் திகழ்கிறான்.[199]

அரசியல் சூழ்திறனிலும் (Diplomacy ) அவன் மிக்க வல்லமை காட்டுகிறான். திருதராட்டிரன், பாண்டவர்க்குரிய உரிமை, நாடு, செல்வம் ஆகியவற்றைத் திரும்பத் தந்து, அவரை ஊர்க்கு ஏக விடைகொடுத்தபோது, சகுனி மனம் பொறாதவனாய்த் தன் அரசியல் அறிவைப் பயன்படுத்தித் துரியோதனாதியர்க்கு அறிவுரை கூறுகிறான்.

"அரசியல் கடமை எதனையும் எண்ணியே துணிதல் வேண்டும்; அல்லாமல் துணிந்தபின் எண்ணும் கடமைக்கு இடம் இல்லை. இது அரசியல் நூலோர் சொன்ன இலக்கணம். அந்த அறிவின்றி, முதலில் பகை கருதி வேறுபாடு செய்து, - அவரைச் சூதுபோரால் வென்று - பின்னர்ப் பகைவர்க்காக உருகுகின்றீர்கள். இது பெரும் பிழை" என்று எடுத்துக்காட்டுகின்றான். துரியோதனாதியர் பாண்டவரைக் குறித்துச் சொன்ன சொற்கள் தீயை விடக் கொடிய சொற்கள்; வாயினால் சுட்ட அச்சொற்களைப் பாண்டவர்

197. வில்லிபாரதம்: நான்காம் போர்ச்சருக்கம்: 28. பக். 412.
எட்டாம் போர்ச்சருக்கம்: 30. பக். 427.
பதினோராம் போர்ச்சருக்கம்: 118. பக். 524.
பதினெட்டாம் போர்ச்சருக்கம்: 78, 80, 84. பக். 631-32.
மர்ரே பதிப்பு (1959)
198. வில்லிபாரதம்: சூதுபோர்ச்சருக்கம்: 27. பக். 154. மர்ரே பதிப்பு (1959)
199. கல்லாடம்: 97. பக். 86. மர்ரே பதிப்பு (1957)
வில்லிபாரதம்: சூதுபோர்ச்சருக்கம்: 23. பக். 153. 28. பக். 154.
மர்ரே பதிப்பு (1959).

ஒருபோதும் மறவார்; ஆதலின், பாண்டவர் மீது காட்டும் இரக்கம், புலியை வால் உருவி விடும் செய்கைபோல் பெருந்துயர் விளைக்கும் என்று எச்சரிக்கின்றான்.[199அ]

சூதக்கலை கொண்டும், அரசியல் நீதி நூலறிவு கொண்டும் துரியோதனனுயிர்க்கு உதவும் சகுனி போரிலும் அவர்க்கு உதவுகின்றான். எனினும் போர்க்கலையில் பாண்டவர் போலும் வல்லமை அற்றவன் ஆதலின், சகதேவன் கைவேலுக்கு இரையாகித் தன் வஞ்சனைக்குரிய தண்டனை பெற்று மாள்கின்றான்.[200]

உறவு காரணமாகச் சகுனி துரியோதனனின் தீமைகட்கெல்லாம் உடந்தையாக உள்ளான் எனின், நன்றி உணர்வு காரணமாகத் துரியயோதனனின் தீமைகட்கு உடந்தையாகின்றான் கன்னன்.[201]

வில்கலையில் அவன் அருச்சுனனுக்குச் சமமான ஆற்றல் உடையவனாக இருந்தும்,[202] அருச்சுனன்பால் உள்ள பணிவு அவனிடம் இல்லை; தனக்கே உரிய செருக்குணர்வால் தன் நிலை இழந்து போகின்றான்.[203] சூதினால் வெல்லல் தகாது என்று வாதிடும் கன்னனே,[204] அவைக்கு வந்த தருமனிடம், பொழுதுபோக்குக்காகச் சூதாடலாம் என்று கூறி, துரியோதனன், சகுனி, துச்சாதனன் ஆகியோர் சூழ்ச்சிக்குத் துணை போகிறான்.[205] காளமாமுனியை அழைத்து வேள்வி செய்து, பாண்டவரைக் கொல்ல வேண்டும் என்று துரியோதனன் செய்யும் சூழ்ச்சிக்குத் தன் ஆதரவினை நல்குகின்றான்.[206]

199அ. வில்லிபாரதம்: சூதுபோர்ச்சருக்கம்: 265, 266, 264. பக். 184 மர்ரே பதிப்பு (1959)

200. வில்லிபாரதம்: பதினெட்டாம் போர்ச்சருக்கம்: 98. பக். 634. மர்ரேபதிப்பு (19

201. வில்லிபாரதம்: கிருட்டிணன் தூதுச்சருக்கம்: 219, 252. பக். 316, 324. பதினேழாம் போர்ச்சருக்கம்: 20, 248. பக். 570, 610. மர்ரே பதிப்பு (1959)
பெருந்தேவனார்: பாரதவெண்பா: 190. பக். 75. சைவசித்தாந்தக் கழகப்பதிப்பு 1973

202. வில்லிபாரதம்: பதினேழாம் போர்ச்சருக்கம்: 36, 40. பக். 574. நிரைமீட்சிச்சருக்கம்: 78. பக். 313. மர்ரே பதிப்பு (1959)

203. வில்லிபாரதம்: திரௌபதி மாலையிட்ட சருக்கம்: 61. பக். 82. நிரைமீட்சிச்சருக்கம்: 53. பக். 310. 82. பக். 314. பதினேழாம் போர்ச்சருக்கம்: 222, பக். 604. மர்ரேபதிப்பு (1959)
M.V. Subramanian: The Mahabharat Story: Vyasa & Variations. P. 271 (19

204. வில்லிபாரதம்: சூதுபோர்ச்சருக்கம்: 19. பக். 153. மர்ரேபதிப்பு (1959)

205. வில்லிபாரதம்: சூதுபோர்ச்சருக்கம்: 168. பக். 172. மர்ரே பதிப்பு (1959)

206. வில்லிபாரதம்: நச்சுப்பொய்கைச்சருக்கம்: 7. பக். 262. மர்ரேபதிப்பு (1959) நச்சுப்பொய்கைச் சருக்கம்: பக். 418. வை. மு. கோ. விளக்கம்: வை. மு. கோ. பதிப்பு (1964); பதினைந்தாம் போர்ச்சருக்கம்: பக். 350. வை. மு. கோ. பதிப்பு (1968).

பகைவர் வியக்கும் திறம் இருந்தும், இயல்பாக இருந்த படைமைக் கல்வித் திறத்தை அவன் பெருக்கிக் கொள்ளவில்லை; செயற்கைத் திறமையை மிகுத்துக் கொள்ளவில்லை.[207]

கொடைமைப் பண்பால் பெரும் புகழ் பெற்றுள்ள கன்னன், தருமன் நிகழ்த்தும் இராய சூய வேள்வியில், வந்தோர்க்கெல்லாம் வாரி வழங்கும் பொறுப்பினை ஏற்கிறான்.[208] எனினும் அவன்பால் உள்ள அழுக்காற்றியல்பு துரியோதனனுடைய சூழ்ச்சிக்கு வித்தாக அமைதலின் அவனுடைய நற்பண்பு விளங்குவதற்கு வழியில்லாமல் போகின்றது.[209]

இவ்வாறு தன் அழுக்காற்றினை வெளிப்படையாகக் கூறித் துரியோதனன் உள்ளத்தில், தன்னுள்ளத்திற் போல மிகுந்து கிடந்த அழுக்காற்றினை மேலும் பெருக விடுகிறான்.[210]

புற நலன் அக நலன் ஆகிய இரண்டனுள், கன்னன் புறநலனே பெரிதும் கருதுகிறான். அவனுடைய கொடைப் பண்பு, அவனுக்கு அகநலனைப் பெற்றுத் தரவில்லை; அதனால் அவன் அழுக்காற்றினைப் போக்கித் தன் உள்ளத் தூய்மையைப் பெருக்கிக் கொள்ள இயலவில்லை.[211] அவன் உள்ளத் தூய்மையைப் பெருக்கி இருப்பானேல், கொடைப் பண்பால் வள்ளல் எனப் புகழ் பெற்றவன், அப்பண்பைப் பாண்டவர்பாலுங் காட்டி, அவர்க்குரிய நாட்டைத் துரியோதனனிடமிருந்து பெற்றுத் தந்து, பாண்டவரும் நூற்றுவரும் ஒன்றி வாழ வழி செய்திருப்பான். பாண்டவர், தன்னை மூத்தவன் என்று

207. வில்லிபாரதம்: பதினேழாம் போர்ச்சருக்கம்: 233. பக். 606. மர்ரே பதிப்பு (1959)

208. வில்லிபாரதம்: இராயசூயச் சருக்கம்: 102. பக். 140. மர்ரேபதிப்பு (1959) இராயசூயச் சருக்கம்: வை. மு. கோ. விளக்கம்: பக். 105. வை. மு. கோ. பதிப்பு (ஆண்டுக் குறிக்கப்பெறவில்லை)

209. வில்லிபாரதம்: சூதுபோர்ச்சருக்கம்: 4, 5. பக். 151. மர்ரேபதிப்பு (1959) சூதுபோர்ச்சருக்கம்: 5. பக். 7. வை. மு. கோ. பதிப்பு (ஆண்டுக் குறிக்கப்பெறவில்லை)

210. வில்லிபாரதம்: சூதுபோர்ச்சருக்கம்: 6. பக். 151. மர்ரே பதிப்பு (1959)

211. வில்லிபாரதம்: சூதுபோர்ச்சருக்கம்: 5. பக். 7. வை. மு. கோ. பதிப்பு (ஆண்டுக் குறிக்கப்பெறவில்லை) திவ்வியப்பிரபந்தம்: திருமாலை-6.

அறியின் அவர்க்குரிய நாடு முழுதையும் தனக்கே வழங்குவர்[212] என்று தெளிவு பெற்ற கண்ணன், பாண்டவர் நல்கும் நாட்டை மீட்டும் துரியோதனனுக்கே நல்குவன் என்னும் உறுதி உடையவனாக இருக்கிறான். இவ்வாறு தீயோன்பால் கொண்ட நன்றி உணர்வு, நல்லோர்பால் உள்ள நற்பண்பினை அறிந்த பின்னரும் அவனை நடுவு நிலைமை என்னும் அறத்தைப் பேண முடியாமல் தடுக்கிறது. அழுக்காறு அறனல்லாதவைகளையே செய்யத் தூண்டும் என்னும் ஆய்வாளர் கூற்று, கண்ணன் பண்பைப் பொறுத்தவரை மிகவும் பொருந்துகின்றது.[213]

அந்தணர், அரசர் என்னும் இருவகுப்பினர்தம் கல்விகலைத் திறன்கள் இதுவரை ஆராயப்பட்டன. அவற்றால் அவர்தம் பண்பு நலன்களும் விளங்கலாயின. இவ்விரு மரபினரையுஞ் சாராத, வேற்று மரபுக்குரிய ஏகலைவன் முதலியோர் கல்வி பயில்வது மிக அரிதாயிருந்தது என்பது முன் இயலில் எடுத்துரைக்கப்பட்டது.[214] கன்னனும் துரியோதனனால் அரசனாக்கப்படுதற்கு முன்னர், அரச மரபைச் சார்ந்த அருச்சுனனோடு வீரவாதஞ் செய்யலாகாது எனக் கிருபன் இழித்துரைத்தமையும் முன் இயலில் விளக்கப்பட்டது.[215]

இனி, அந்தணரோ, அரசரோ அல்லாத, அரக்கர் முதலியோர் கலைத் திறன்கள் காவிய முழுவதிலும் ஆங்காங்குச் சுட்டப்படுகின்றன. இடிம்பன், பகன், சராசந்தன், புண்டரீகன், சடாசுரன், என்னும் அரக்கர் வீமனிடம் தோற்று உயிர் துறக்கின்றனர் எனினும், அவனுடைய ஆற்றலுக்கும் வீரத்திற்கும் அவர்கள் மிகவும் ஈடுதருகின்றனர்.[216] அவர்தம் படைமைக் கல்விக்குரிய ஆசிரியன்மார் இன்னார் எனக் காவியத்துள் குறிப்பு இல்லை. அரக்கர் போலவே, சங்கோடணன் என்னும் தேவர் (குபேரன்) படைத்தலைவனும் வீமனை எதிர்த்து நிற்கிறான்.[217] அவனுடைய படைமைக் கல்விக்குரிய ஆசிரியர் இன்னார் என்னும் குறிப்பும் காவியத்துள் இல்லை.

---

212. வில்லிபாரதம்: கிருட்டினன் தூது: 258. பக். 374. மர்ரே பதிப்பு (1959)
213. திருக்குறள்: அறத்துப்பால்: அழுக்காறாமை: 4. பரிமேலழகர் உரை.
214. இயல்: 3. வில்லிபுத்தூரார் காட்டும் சமுதாயநிலைகள், நீதிகள், அறங்கள் முதலியன: அடிக்குறிப்பு: 33. பக். 40
215. இயல்: 3. வில்லிபுத்தூரார் காட்டும் சமுதாய நிலைகள், நீதிகள் அறங்கள் முதலியன. அடிக்குறிப்பு: 36. பக். 41
216. வில்லிபாரதம்: குருபோர்ச்சருக்கம்: 21. பக். 153; முண்டகச் சருக்கம்: 74, 116. பக். 246, 251. மர்ரே பதிப்பு (1959)
217. வில்லிபாரதம்: முண்டகச் சருக்கம்: 116. பக். 251. மர்ரேபதிப்பு (1959).

அவ்வாறே அருச்சுனனொடு பொருத, அவனுடைய வீரத்திற்கு இலக்கானவரும், நிவாதகவசர் காலகேயர் முதலியோர் தம் படைமைக் கல்விக்குரிய ஆசிரியர் இன்னார் என்னும் குறிப்பு நூலுள் இல்லை.

படைமைக் கல்வித் திறத்தொடு, யோகம் முதலிய அகமுகக் கல்வியிலும் அரக்கர் வல்லவராகத் திகழ்ந்துள்ளனர்.[218] முன் இயலிற் கூறியது போல், அரக்கரென்பார், ஆரியரல்லாத, பழங்குடி, அல்லது கலப்பினத்து நாகரிகத்தைச் சார்ந்தவர் எனக் கொள்ளப்படின், அந்தணர், அரசர்போல அவர்களும் பற்பல கலைகளில் வல்லவராய் விளங்கினர்[219] என்பதும், தந்தமக்குரிய கலைகளை அவர்கள் துரோணன் முதலிய அந்தணரிடத்தோ அல்லது துரோணனைப் போலும் கலைவல்ல பெருமக்களிடத்தோ கற்றுத் தேர்ந்திருத்தல் வேண்டும் என்பதும் பொருந்துவனவாகும்.[220] வேதகாலத்து ஆரியர் தம் இலக்கிய நூல்களை உருவாக்குங்கால், தம் இனத்தவரல்லாத பழங்குடி மக்களின் துணையையும் நாட வேண்டியிருந்தது என்று ஆய்வாளர் எடுத்துரைக்கின்றனர்.[221] அன்றியும், ஆரியரல்லாத, கலப்பினத்தே, அல்லது பழங்குடியைச் சார்ந்த மக்களிடத்தே, ஆரிய இனத்தவரைப் போலும் நல்லாசிரியர் உருவாயினர் என்றும்,

218. வில்லிபாரதம்: நிவாதகவசர் காலகேயர் வதைச் சருக்கம்: 35. பக். 218 மர்ரே பதிப்பு (1959)

219. வில்லிபாரதம்: நிவாதகவசர் காலகேயர் வதைச் சருக்கம்: 36, 52, 54, 62, 69, 96, 124, 125, 142, 156.
முண்டகச் சருக்கம்: 89, 105. மர்ரே பதிப்பு (1959)

220. ஸ்ரீ மகாபாரதம்: ஆதிபருவம்: பக். 532 (1939)

ஸ்ரீ மகாபாரதம்: துரோணபருவம்: பக். 28 (1922)

221. Radha Kumud Mookerji: Ancient Indian Education. Page:22 (1951).

துரோணரைப் போலும் ஆசிரியர் வேற்றினத்தில் இருந்திருக்கக் கூடும் என்று நம்புதற்கு இடந்தருவது. எனவே அத்தகைய ஆசிரியன்மார், அரக்கரெனப்படும் பழங்குடியினர்க்குத் தக்க படைமைக் கல்வித் திறனும் நூற் கல்வித் திறனும் நல்கியிருத்தல் வேண்டும் என்பது பொருந்துவதேயாகும்.[222]

இதுவரை ஆய்ந்தவற்றால் காவியத்துள் வரும் உடன்பாட்டு, எதிர்மறைப் பண்புகளையுடைய காவிய மாந்தர் ( Positive and Negative characters) தத்தமக்குரிய படைமைக் கல்வியும் நூற்கல்வியும் பெற்றிருந்தனர் என்பதூஉம், அக்கல்விக் கூறுகள் அவரவர் தம் பண்பு நலன்களை விளக்குவனவாக அமைந்துள்ளன என்பதூஉம் நன்கு விளங்கும்.

222. Radha Kumud Mookerji: Ancient Indian Education: Page 209 (1951)

வில்லிபாரதம்: இராயசூயச் சருக்கம்: 7. வை.மு.கோ. விளக்கம்: பக். 11. வை.மு.கோ. பதிப்பு (ஆண்டுக் குறிக்கப்பெறவில்லை).

V.R. Ramachandra Dikshidhar: War in Ancient India: Page 267 (1948).

## இயல் - 5

## வேற்றுப் பொருள் வைப்பு, தற்குறிப்பு, கிளைக்கூற்று ஆகியவற்றால் புலவர் உணர்த்தும் மனித மாண்பியல்புகள்

பெருங்காவியம் படைக்கும் புலவர், தாம் உணர்ந்து தெளிந்த உண்மைகளை விளக்குதற்குப் பற்பல உணர்த்தும் முறைகளை மேற்கொள்வர். கதை விரிவு, பாத்திரப் படைப்பு, வருணனை, விளக்கம் ஆகிய பொதுவான முறைகளோடு, இடையிடையே, உலகியல் நிலைகள் பற்றிய அனுபவங்களைக் கோனர்ந்து காட்டல், இயல்பாக நிகழும் நிகழ்ச்சிகளுள் தம் குறிப்புகளை ஏற்றிக் கூறுதல், இவையெயன்றித் தாமே தம் கூற்றாகத் தம் உணர்வைப் புலப்படுத்துதல் ஆகிய முறைகளையும் கையாண்டு தாம் உணர்த்த விரும்பும் உண்மைகளைத் தெளிவு படுத்துவர்.

உண்மைகள் தெளிவாக விளங்க வேண்டின், உணர்த்துதற்கு உதவும் கருவிகள், வழிவகைகள் ஆகியவற்றைப் பெறுவதை விட, உணர்த்தும் திறத்தில் பெறும் பயிற்சியே மிகவும் இன்றியமையாததாகும். இலக்கிய நலம் வாய்ந்த உள்ளம், தனது விழுமிய நோக்கத்தை உணர்ந்ததும், தனது திறமைகளைத்தையும் ஒருங்கு திரட்டி, ஒருமைப் படுத்தி, தன் நோக்கத்திற்கு வடிவந்தரும் பெரு முயற்சியில் தலைப்படுகிறது. இம்முயற்சியின் வெற்றி, சில தந்திரங்களிலும் வழிவகைகளிலும் வல்லவராகி விடுவதனுல் அமைவது அன்று; அது வாழ்க்கையில் நிகழும் ஆற்றல் மிக்க அநுபவத்தாலும், தனக்குத் தானே பேணி வளர்க்கும் தனது பண்பாட்டினாலும் அமைவது.[1]

தாம் உணர்த்த விழையும் உண்மைகளைத் திறம்படத் தேர்ந்தமை போன்றே, அவற்றை உணர்த்தும் முறைகளையும் மிகத் திறம்படத் தேர்ந்து கையாண்டவர் வில்லி. பெற்ற கலைத்திறத்தை அச்சமும் சோர்வும் (மறதியும்) இன்றி வெளியிட வேண்டும் என்பது அவர் கருத்து.[2] அக்கருத்திற்கேற்ப, விழுமிய உண்மைகளை வெளியிடுதற்கு

---

1. John Franklin Genung: The Working Principles of Rhetoric. Page:396 (1901)

2. வில்லிபாரதம்: பதினேழாம் போர்ச் சருக்கம்: 184. பக். 597. மற்றை பதிப்பு (1959)

அவர் மேற்கொண்ட சிறந்த முறைகள் பலவற்றுள், மேற்குறித்தவாறு, உலகியல் நிலைகள் பற்றிய அனுபவங்களைக் கொணர்ந்து காட்டல், இயல்பாக நிகழும் நிகழ்ச்சிகளுள் தாம் விரும்பும் குறிப்புகளை ஏற்றிக் கூறுதல், தம் கூற்றின் வாயிலாகத் தம் உணர்வைப் புலப்படுத்தல் ஆகியவை குறிப்பிடத்தக்கவை. இம்முறைகளின் வாயிலாகத் தம் உணர்த்தும் திறமைகளைக் கற்பார் மனங் கொள்ளுமாறு செய்தற்கு, செய்யுட்கே உரிய அணிவகைகள் பலவற்றுள், சில முக்கிய அணிகளைக் கையாண்டுள்ளார் அவர். அவை எடுத்துக்காட்டு உவமை, வேற்றுப் பொருள் வைப்பு, தற்குறிப்பேற்றம் ஆகியவையும் அவற்றின் வகைகளும் ஆகும்.

பொருள்களை, ஒன்றோடொன்று தொடர்புபடுத்தும் சிந்தனையில் தெளிவும், புலன்களுக்கெட்டும் நிலையும் அமைதற் பொருட்டும், கற்போர் உள்ளத்தில் ஆழ்ந்து பதிதற்பொருட்டும் அணிகள் பயன்படுத்தப்படுகின்றன என்று ஆய்வாளர் எடுத்துரைக்கின்றனர். இக்கருத்துக்கு அரண் செய்யும் வகையில், பற்பல அணிகளைக் கையாண்டு, தாம் உணர்த்த விழையும் உண்மைகளைத் திறம்பட உணர்த்துகிறார் வில்லிபுத்தூரார்.

கல்வி வளர்ச்சி பற்றித் தம்முடைய கருத்தைப் புலப்படுத்த வரும் புலவர், எடுத்துக் காட்டு உவமை அணியைப் பயன்படுத்தித் தம் கருத்து இன்னது என்பதை மிகத் தெளிவாக எடுத்துரைக்கிறார். கல்வி ஒருவரம்புக்கு உட்பட்டது அன்று; பயிலப்பயில அதன் வரம்பற்ற தன்மை பயில்வார்க்கு விளங்கும். ஒருவரிடம் பயின்று முற்றுவித்துக் கொண்டபின் மேலும் பயிலவேண்டுவனவற்றை அவரினும் மேம்பட்டவரிடத்துச் சென்று பயில வேண்டும் என்னும் அவாவினைக் கல்வி, கலை பற்றிய கருத்துகள் தூண்டிக் கொண்டேயிருக்கும். அத்தூண்டுதலை ஏற்று, வல்லாரை நாடிச் செல்வது கல்வி கலை வேட்கையுடையார்க்கு இயல்பு.

இத்தகைய கருத்துகளை உணர்த்த விழையும் புலவர், இயற்கைப் பொருள்களாகிய மதி, ஞாயிறு இவற்றின் இயல்புகளைக் கொண்டு எடுத்துக்காட்டு உவமையின் வாயிலாகக் கற்பார் உள்ளம் மகிழ்ந்து ஏற்றுக் கொள்ளுமாறு எடுத்துரைக்கிறார்.

3. John F. Genung: The Practical Elements of Rhetoric. Pages 87, 96-97 (1887).

முழுமதி இருள் முழுவதும் நீங்குமாறு இனிய ஒளி நல்கி எறித்தது எனினும், உலகத்தார் அவ்வெள்ளொளியைத் துய்த்து மகிழ்ந்து, அதினும் மேம்பட்ட ஞாயிற்றின் ஒளியைத் தம் வாழ்வு நலங்கருதி நாடிப் பயன் அடைவர். பாண்டவரும், துரியோதனாதியரும் கிருபனிடத்துக் கற்பனவெல்லாம் கற்று நிரம்பி விட, அவர்க்கு மேலும் கல்வித் திறம் மிகுத்தற்பொருட்டு, வீடுமன், வேறொரு ஆசிரியனைத் தேடிய நிலை, நிலவின் பயன் கொண்டு நலமுற்றார், மேலும் பயன் கொள்ளற்பொருட்டு ஞாயிற்றை நயந்தது போல் ஆயிற்று என்று விளக்குகிறார்.

"பரிவுடன் இவன் படை பயிற்ற, பின்னரும், குருபதி வேறு ஒரு குருவைத் தேடினன். இருள் அற மதி நிலவு எறித்ததாயினும் பரிதியை நயக்கும் இப் பரவை ஞாலமே." (வில்லிபாரதம்:வாரணாவதம்:30.பக்.44. மர்ரே பதிப்பு)

மதி, ஞாயிறு, வானம் ஆகிய இயற்கைப் பொருள்கள் மாந்தர்க்குக் கல்வியும் அறிவுரையும் கூறும் கண்ணோட்டத்தில் புலவரால் நோக்கப்பட்டுள்ளன என்பதற்குப் பழந்தமிழ்த் தொகை நூல்களில் சான்றுகள் உள்ளன. திங்களின் தேய்வும் வளர்ச்சியும், தேய்தல், பெருகல், மாய்தல், பிறத்தல் முதலிய மக்கள் வாழ்வுக் கூறுகளை அறிவிக்கின்றன என்று உறையூர் முதுகண்ணன் சாத்தனார் என்னும் புலவர் பாடுகிறார்.[4] வேந்தர்க்கு அமையும் வீரம், ஞாயிறு போலும் கடுந்திறல் உடையது; மென்மை (இரக்கம்) திங்கள் போலும் பெருந்தன்மை உடையது; வண்மை, மேகம் போலும் வரம்பிகந்தது என்று மருதனிளநாகனார் பாடுகிறார்.[5]

இக்கருத்துகளைக் கூர்ந்து நோக்கின், இயற்கைப் பொருள்கள், ஒவ்வொன்றும் ஒவ்வொரு திறன், அறிவு, பண்பு ஆகியவற்றை விளக்குகின்றன என்றும், அவை மக்கள் தொடர்ந்து இடையறாது, மேம்படுவதற்கு உதவுவன என்று மக்களே உணருமாறு அமைந்துள்ளன என்றும் புலவர் கருதிய கருத்துகள் தெளிவாக விளங்கும்.

கல்வி என்பது அனுபவங்களைத் தொடர்ந்து பெருக்கி அமைத்துக் கொள்வதாகும்; சில நம்பிக்கைகளை அப்படியே ஏற்றுக் கொள்வது கல்வியன்று;

4. புறநானூறு:27. வரி:11-14.
5. புறநானூறு:55. வரி:13-16.

வளர்ந்து ஆக்கம் பெறுதற்கு வழிவகை செய்வதே கல்வியாகும். ஒருவர்க்கொருவர் தொடர்பு கொண்டு வாழும் வாழ்வில், அனுபவங்களைப் பரிமாறிக் கொள்ளுதற்கு வழிகோலுவதே கல்வியாகும் என்று, ஒருவரம்பில் நில்லாது தொடர்ந்து ஆக்கம் பெறும் கல்வி முறைமையை அத்துறை அறிஞர் விளக்குகின்றனர்.[6] இக் கருத்திற்கு அரணாகும் வகையில் வில்லியும் தம் கல்விக் கோட்பாட்டினை விளக்குகிறார்.

குருகுலத்து இளைஞர் கிருபனிடம் கற்றுப் பயன் பெற்றதும் தொடர்ந்து கற்று மேம்படுதற்காக, வேறொரு ஆசிரியனை வீடுமன் தேடுகிறான். இதனை, திங்களின் இன்னொளி துய்க்கும் மாந்தர், தொடர்ந்து நலம் பெறுதற்பொருட்டு ஞாயிற்றின் ஒளியை நாடுவர் என்னும் எடுத்துக்காட்டினைத் தந்து புலவர் விளக்குகிறார். எனவே, வல்லார் தொடர்பு கொண்டு, கல்வி, தொடர்ந்து பெருக்கிக் கொள்வது என்னும் கருத்துடையவர் வில்லி என்பது அவர் காட்டும் உவமையால் நன்கு புலப்படும்.

தொடர்ந்து கற்றுப் பெருக்கிக் கொள்வதோடு நெஞ்சம் தோய்ந்து ஆழ்ந்து பயிலுதலும் இன்றியமையாதது என்பது வில்லிபுத்தூராரின் கொள்கை. அவ்வாறு நெஞ்சம் பொருந்தக் கற்கும் ஈடுபாடு, மாணவன் மீது, கற்பிக்கும் ஆசிரியனின் உள்ளத்தில் பேரன்பினைத் தோற்றுவிக்கிறது என்பது அவர் கண்ட உண்மை.

"அம்சொல் முனிதானும், இவன்மேல், எவரினும் பெருக
அன்புடையன் ஆகி, அகலான்..--
நெஞ்சு உற அருங்கலைகள் கற்குமவர்தம் அளவில்
நேயம் நிகழாதவர்கள் யார்?[7]"

உள்ளத்து ஆக்கமே, கல்வியின் இயற்கையான நெறியென்றும், உள்ளம் ஆக்கம் பெறுங்கால் அதனொடு அதன் பிற திறமைகளும் வளர்கின்றன என்றும், உள்ளத்தின் ஆக்கத்திற்குரிய அறிவைத் தெரிந்து தெளிந்து பயன்படுத்த வேண்டும் என்றும் கல்வித் துறை வல்லார் கூறுகின்றனர்.[8] அன்றியும், நூலறிவின் பயனை, உள்ளத் தெளிவின் பயன்கொண்டே தெரிதல் இயலும் என்றும், தளர்வின்றிச் செயலாற்றும் உள்ளம் படைத்தே

6. Harold H.Titus: Living Issues in philosophy. Page 269 (1968)

7. வில்லிபாரதம்:வாரணாவதச் சருக்கம்:48.பக்.47. மர்ரே பதிப்பு (1959)

எந்தக் கருத்தையும் விரைந்து படைத்துப் பயன்படுத்துவான் என்றும் விளக்குகின்றனர்.[9]

நெஞ்சம் பொருந்தி அருங்கலை பயின்றவர்பால் அனைவரும் அன்பு காட்டுவர் என்பதை, அருத்தாபத்தியால், பல கலைகளும் பயின்ற நெஞ்சப்பண்பாடு பெற்றவர், அனைவரிடத்தும் இயைந்து நடந்த தம் பண்பாடு தோன்றப் பழகுதல் வேண்டும் என்னும் கருத்தாக, கல்வித்துறை அறிஞர் எடுத்துரைக்கின்றனர். தத்துவம், கலை, அறிவியல் ஆகிய அனைத்திலும் துறை போயவராயினும், மனிதர்க்கு மனிதர் இயைந்து நடக்கும் பண்பாடே எவற்றிலும் முதன்மையானது; பிறரொடு பழகுந்திறன், தம் போலும் மாந்தரின் உரிமை, உணர்வு முதலியவற்றை மதித்தொழுகலில் மேம்படுதல், ஆகியவை உடையோர்க்கே, கற்றற்கும் பண்படுத்தற்கும், நூலறிவிற்கும் பண்பாட்டிற்கும், பட்டறிவிற்கும் சமுதாய செல்வாக்கிற்கும், இடையே உள்ள வேறுபாடுகள் புலப்படும் என்று கல்வித்துறை ஆய்வாளர் விளக்குகின்றனர்.[10]

வாழ்வில் தாம் கருதியவாறே எய்தும் வெற்றியைப் போல, அதனோடு உடன் வைத்தெண்ணத் தக்கது வேறொன்றும் இல்லை. பகைவனை நண்பனாக்கும் முயற்சியை விடுத்து, தன் நாடி நரம்புகளைத் தன் வயப்படுத்தத் தெரிந்தவனுக்கு வெற்றிமேல் வெற்றிகள் வந்து குவிகின்றன. வாழ்நாள் முழுதுங் கடைப்பிடித்தொழுகும் பழக்கங்களும், எழுச்சி மிக்க ஆற்றல்களும், நம்பிக்கை, உறுதி ஆகிய அனைத்தும் ஒருங்கு திரண்டு அவன் மேற்கொள்ளும் வினைகளனைத்திலும் உடன் நின்று உதவுகின்றன; அவன் உள்ளம் முழுதும் வெற்றி பற்றிய நினைவே நிரம்பி நிற்றலின், அவன் தோல்வியுறுதலே இல்லை; அஃது அவனால் நினைக்க முடியாத ஒன்று[11] என்று கல்வியின் பயனை - அனைவரையும் தம்வயப்படுத்தும் பயனை - ஆய்வாளர் எடுத்துக்காட்டுகின்றனர்.

இக்கருத்துகளை உளங்கொண்டு, துரோணன், அருச்சுனனின் கல்வித் திறம் கருதி அவன்பால் வைத்த தனி அன்பின் பெற்றியை எண்ணினால், துரோணனின் மனநிலைக்குரிய காரணம் தெளிவாக விளங்கும். அவனுடைய மனநிலை கொண்டு வில்லி உணர்த்த முற்படும் கல்விக் கொள்கையின் விழுப்பம் தெளிவாகப் புலப்படும். 'நெஞ்சு உற

---

9. J.C. Hill: The Teacher in Traing: Page 77-78 (1946)
10. Albert Edward Wiggam: The Marks of Educated Man. Page 75 (1930)
11. Albert Edward Wiggam: The Marks of Educated Man. Page 115 (1930)

அருங்கலைகள் கற்றுமவர்தம் அவையில் நேயம் நிகழாதவர் யார்' என அவர் வினவும் வினா, எதிர்மறை விடையளித்தற்கியலாத வினா என்பதும், வேற்றுப்பொருள் வைப்பு அணியின் வாயிலாகப் புலவர், தமக்கே உரிய உணர்த்தும் திறனைப் புலப்படுத்துகிறார் என்பதும் நன்கு விளங்கும்.

கல்வி பற்றிய கொள்கை போன்றே ஊழ் பற்றிய தம் கொள்கையையும் திறம்பட உரைத்துள்ளார் வில்லி. கதைப் போக்கிற்கும் பாத்திரங்களின் இயல்புக்கும் ஏற்ப ஊழ்க் கொள்கையை அவர் பயன்படுத்துவது குறிப்பிடத் தக்கதாக உள்ளது. " ஊழிற் பெருவலி யாவுள "[12] என்னும் திருவள்ளுவர் கருத்தே இவர்க்கும் கருத்தாக உள்ளது. அக்கருத்தினைப் பாத்திரங்களின் இயல்பில் வைத்துக்கதையைச் சுவைபடக் கொண்டு போகும் திறமும், அதற்கேற்பத் தம் ஆற்றல் தோன்றத் தகு உணர்த்தும் திறனைப் புலப்படுத்தும் வல்லமையும் புலவர் கையாளும் வேற்றுப் பொருள் வைப்பு அணியின் வாயிலாக நன்கு விளங்குகின்றன.

"விதியினை யாவரே எதிர்வெல்வார்"[13] என்று தருமன் கூற்றாக, விளம்புவதன் மூலம், திருவள்ளுவர் போல், விதி எவற்றினும் வலிது என்று அறுதியிடுகிறார் வில்லி. அவ்வாறு அறுதியிடுதலின் வாயிலாக, தருமனைச் செயற்படாமல் நிறுத்தவில்லை. அஃது எத்துணை வலிது என்று காட்டுதற்காக, தருமனைச் செயற்பட வைத்துக் காவிய நிகழ்ச்சிகளை வளர்த்துச் செல்லுகிறார்.

திருதராட்டிரன் திருமுகச் செய்தி அறிந்து, சூதின் கொடுமையையெல்லாம் எடுத்துரைக்கிறான் தருமன். அது வர நேர்ந்த விதுரன் முகத்தெதிரே, அதன் கொடுமையை விளக்க எடுத்துரைக்கிறான்.[14] ஆயினும் விதுரனைப் போலவே, திருதராட்டிரன் வலையை மறக்க முடியாமல், சூதாடுதற்பொருட்டு அத்தினபுரம் செல்கிறான்;[15] சூதினை வெறுத்த விதுரன்,[16] மூத்தவன் சொல் தட்ட முடியாமல்,

12. திருக்குறள்:ஊழ்:10.
13. வில்லிபாரதம்:சூதுபோர்ச் சருக்கம்:67.பக்.159. மர்றே பதிப்பு (1959)
14. வில்லிபாரதம்:சூதுபோர்ச் சருக்கம்:62,64-66.பக்.158-159. மர்றே பதிப்பு (1959)
15. வில்லிபாரதம்:சூதுபோர்ச் சருக்கம்:73-74.பக்.160.மர்றேபதிப்பு (1959)
16. வில்லிபாரதம்:சூதுபோர்ச் சருக்கம்:33.பக்.155. மர்றே பதிப்பு (1959).

சூதாடுதற்கு வருக எனப் பாண்டவரை அழைக்கத் தூது வந்தது போல்.[17] சூதின் கொடுமையையெல்லாம் எடுத்துரைத்த தருமன், தந்தையும், வேந்தனும் ஆகிய பெரியோர் சொல்லைத் தட்ட முடியாமல் சூதாடச் செல்கிறான்.[18] இச்சூழ்நிலையிலேயே விதியினை யாவரே எதிர் வெல்வார் என்று தருமன் கூறுக, வேற்றுப் பொருள் வைப்பு அணி கொண்டு தாம் உணரும் உண்மையைத் திறம்பட உணர்த்துகிறார் புலவர்.[19]

தருமனை ஒழிந்த தம்பியர் நால்வரும், பெரியோர் சொல் மறுத்தல் ஆகாது என்று பண்பாடு பேசவில்லை. ஊழில் நம்பிக்கை கொண்டு, அதற்குக் கருவியாய்ச் செயற்பட்டாவது தவிரச் செய்தற் கொல்கிறமில்லை என்று மனச் சோர்வு படவுமில்லை. சூதால் நாடு வர விரும்பும் துரியோதனனின் தந்திரத்தைக் குறிப்பிட்டு, தீயோர் நட்பு வேண்டா என்று வீமன் விலக்குகிறான்.[20] அரச நீதிக்குப் புறம்பாக நடப்பார் இயல்பறியாமல், விழுமிய அறநெறி பேசுவதும் அதைக் கடைப்பிடிக்க முற்படுவதும் பொருந்தாதவை என அருச்சுனன் கூறுகிறான்.[21] மூத்தோர் இருவர் கருத்தினை முற்றும் உடன்படுகின்றனர் இளையோர் இருவரும்.[22] எனினும் தம்பியர் நால்வர் தம் கருத்து எடுபடவில்லை.

"வரதனால் பணிப்புறுதொழில் யாவர் நாம் மறக்க" எனவும்,
"பெற்ற அசைவுஇல் அன்புடைத் தந்தை சொல் மறுப்பதோ" எனவும்,
"காவலன் ஏவல் நாம் மறுப்பது கடன் அன்றே" எனவும்[23]

தருமன் கூறும் கருத்துகளே வெல்கின்றன. தமையன் சொல் கேட்டு, விதுரன் தூது வந்தது போல், தந்தை சொல் கேட்டுத் தருமன் அத்தினபுரம் செல்ல உளங் கொண்டது போல், மூத்தோனாகிய தருமன் சொற்கேட்டுத் தம்பியர் நால்வரும் அவன்

17. வில்லிபாரதம்: சூதுபோர்ச் சருக்கம்: 49, 50. பக். 157. மர்ரே பதிப்பு (1959)
18. வில்லிபாரதம்: சூதுபோர்ச் சருக்கம்: 72. பக். 160. மர்ரே பதிப்பு (1959)
19. வில்லிபாரதம்: சூதுபோர்ச் சருக்கம்: 68. வை.மு.கோ. பதிப்பு. பக். 232. உரை விளக்கம் (ஆண்டுக் குறிக்கப்பெறவில்லை)
20. வில்லிபாரதம்: சூதுபோர்ச் சருக்கம்: 69, 70. பக். 159. மர்ரே பதிப்பு (1959)
21. வில்லிபாரதம்: சூதுபோர்ச் சருக்கம்: 72. பக். 238. வை.மு.கோ. உரை விளக்கம் வை.மு.கோ. பதிப்பு (ஆண்டுக் குறிக்கப்பெறவில்லை)
22. வில்லிபாரதம்: சூதுபோர்ச் சருக்கம்: 72. பக். 160. மர்ரே பதிப்பு (1959)
23. வில்லிபாரதம்: சூதுபோர்ச் சருக்கம்: 62, 72, 73, 76. பக். 160. மர்ரே பதிப்பு (1959).

வழி நடக்க வேண்டியவராகின்றனர். இத்தகைய சூழ்நிலையிலேயே வில்லி சூதும் வலிது என்ற கொள்கையை வலியுறுத்திக் காட்டுகிறார். அறத்தின் வடிவமான தருமன் வாயிலாக, பெரியோர் சொற்படி நடத்தல் வேண்டும் என்னும் அவன்றன் பண்பாட்டின் வாயிலாக, சூதின் ஆற்றலை நிலைநிறுத்திக் காட்டி, "விதியினை யாவரே எதிர் வெல்வார்?" என வினவித் தம் உணர்த்துந் திறமையையும் நிறுவிக் காட்டுகிறார். கல்விக் கொள்கை பற்றிய வினாவைப் போல், சூது பற்றிய இவ்வினாவும் எதிர்மறை விடையிறுத்தற்கியலாத வகையில், புலவர் தம் உணர்த்துந் திறனையும் அவர் உணர்த்த விழையும் உண்மையையும் ஆற்றலோடு விளக்கி நிற்கின்றது.

அறவோனாகிய தருமன் வாழ்வில் வைத்து சூதின் வலிமையை உணர்த்துதல் போல், கயவனாகிய கீசகன் வாழ்வில் வைத்து அதன் வலிமையைப் புலவர் உணர்த்துவதும் குறிப்பிடத்தக்கது.

தன் உடன் பிறந்தான் காமுகன் என்று தெரிந்தும், வண்ணமகள் வடிவில் உள்ள திரௌபதியை, அவன்பால் ஏவுகிறாள் விராடன் மனைவியாகிய சுதேட்டினை. மாலை ஒன்றை நல்கி அவன்பால் தந்து மீளுமாறு அவள் காலில் வீழ்ந்து இறைஞ்சி வேண்டுகிறாள். கீசகனின் வலிமைக்கு அஞ்சி, தன் வாழ்வும் தன் கணவனாகிய விராடனின் அரசவாழ்வும் நிலைபெற வேண்டி, திரௌபதியின் வாழ்வைப் பணயம் வைக்கிறாள், சுதேட்டினை.[24] பிறர்மனை நயக்கும் தீமையின் விளைவை உணர மறுக்கும் காமுகன் கீசகன்.[25] அச்சம் காரணமாகத் தன்போல் ஒருத்தியின் கற்பு நலத்தைப் பொருட்படுத்தாது, தன் வாழ்வும் தன் கணவன் வாழ்வும் காக்க விழையும் தன்னலமுடையவள் அவன் தமக்கையாகிய சுதேட்டினை.[26] இருவர் தம் நெறியற்ற தன்மையை இருவர்க்கும் முறையே எடுத்துரைக்கிறாள் திரௌபதி.[27] தன் கற்பிற்கு ஊறு வாராது என்ற தன்னம்பிக்கையோடு, அதற்கு ஊறு விளைக்க எண்ணும் இருவர்க்கும் அவர்தம் கிளைஞர்க்கும் துன்பமும் அழிவும் வரும் என்று எடுத்துரைத்தும் இருவர்க்கும் அவளுரையின் உண்மை புலப்படவில்லை.[28]

---

24. வில்லிபாரதம்: கீசகன் வதைச் சருக்கம்: 14. பக். 290. மர்რே பதிப்பு (1959)
25. வில்லிபாரதம்: கீசகன் வதைச் சருக்கம்: 5. பக். 288. மர்ரே பதிப்பு (1959)
26. வில்லிபாரதம்: கீசகன் வதைச் சருக்கம்: 16. பக். 290. மர்ரே பதிப்பு (1959)
27. வில்லிபாரதம்: கீசகன் வதைச் சருக்கம்: 6, 17. பக். 288, 291. மர்ரே பதிப்பு (1959)
28. வில்லிபாரதம்: கீசகன் வதைச் சருக்கம்: 5, 17. பக். 288, 291. மர்ரே பதிப்பு (1959).

தானே உரை மறுக்கும் தம்பியிடத்து, அவன் நெறியற்ற தன்மையை உணர்ந்த பின்னரும், அவனிடம் செல்க என்று, தன்போல் ஒருத்தியைத் தன்னலம் உடைய ஒரு பெண் ஏவுவது அவன் உயிருக்கு ஊறு விளைத்தற்காகவே என்று புலவர் உள்ளம் உறுதியாக நம்புகிறது. அந்நம்பிக்கையை வலுவாக்கி, 'விதியை யாவர் விலக்க வல்லார்களே?' என்று ஊழின் வல்லமையை உணர்த்துகிறார் அவர்.[28அ]

நல்லோர்தம் நற்றிறம் பற்றித் தன் ஆற்றலை உணர்த்தும் ஊழ் தீயோர்தம் தீத்திறம் பற்றியும் தன் ஆற்றலை உணர்த்தும் என்பது வில்லியின் கருத்து. ஊழ் செயலாற்றத் துவங்குங்கால், நல்லோர்க்கும் தம் அறிவும் பிறர் உரைக்கும் சொற்களும் பயன்படுவதில்லை. தீயோர் நிலையும் அத்தகையதே. தீயோரிடத்துள்ள ஒன்றிரண்டு நற்பண்புகளும் நீங்கும்; பிறர் உரைப்பன சற்றும் பயன்படா. ஊழ் தன் ஆற்றலை விளக்க முற்படுங்கால், நல்லோர் தீயோர் என்று பாராது, தன் இயல்பைப் புலப்படுத்தியே நிற்கும் என்பது நூலோர் துணிபு.[29] அத்துணிபே வில்லிக்கும் உடன்பாடு ஆதலின், அதனை மிக உயர்ந்த பண்பினரான தருமனிடத்தும், கயவனான கீசகனிடத்தும், ஒரு சேர வைத்துக் காட்டி, வேற்றுப் பொருள் வைப்பின் வாயிலாகத் தமது உயிர்த்தகு திறத்தினையும் உள்ளம் தெளிந்த உண்மையையும் நன்கெடுத்துக் காட்டுகிறார்.

ஊழ் பற்றிய அழுத்தமான கொள்கை இந்தியத் தத்துவ வரலாற்றில் பேரிடம் பெற்றுள்ளது. கடவுளராயினும், மாந்தராயினும், ஓரறிவுயிராயினும் ஊழின் ஆற்றலுக்கு இயைந்து நடந்தாக வேண்டும் என்று தத்துவத்துறை அறிஞர் எடுத்துக் காட்டுகின்றனர்.[30] இந்திய நாகரிகத்தில் மட்டுமேயன்றி, கிரேக்கம் போன்ற மேலை நாட்டுப் பழைய நாகரிகத்திலும் ஊழ் பற்றிய கொள்கை மிக அழுத்தமாக விளங்கி வந்தமையை, மேல் நாட்டுத் தத்துவ வரலாறு இயற்றிய அறிஞர் பெர்ட்ரண்ட் ரஸ்ஸல் எடுத்துக் காட்டுகிறார். "ஊழ் பற்றிய பெருஞ் செல்வாக்கு, எல்லாத் துறையிலும் ஆற்றல் பெற்று விளங்கிற்று.

28அ. வில்லிபாரதம்; கீசகன் வதைச் சருக்கம்; 18. பக். 291. மறுபதிப்பு (1959)

29. சீவகசிந்தாமணி; 1632; திருக்குறள்; 373. பரிமேலழகர் உரை. நாலடியார் பழவினை; 9. கம்பராமாயணம்; அயோத்யா காண்டம்; நகர் நீங்கு படலம்; 158. மறுபதிப்பு (1959)

30. S. Radhakrisnnan: Indian Philosophy. Vol.I. Page 245 (1966)

பெருங் கடவுளரும் அதன் ஆணைக்குத் தப்பியவரல்லர். பின்னர் வளர்ந்த அறிவியல், தத்துவம், படைப்பு பற்றிய கோட்பாடுகள், இயற்கையின் அமைவு, மனித வாழ்வு ஆகியவை பற்றிய விதிகள் யாவும் பெருகி வளர்தற்கு ஊழே மூலாதாரமாக இருந்தது. முனைப் புணர்வோடு அதனை எதிர்க்க முனைந்து, வெறுமை அதனோடு இகலி நிற்பினும் ஊழ், தான் வலிது என்பதைக் காட்டியது. பிளேட்டோவும் ஊழ் பற்றிய கோட்பாடுகள் கொண்டே தமது அறநெறியை வகுத்தமைத்தார். ஹோமரின் பெருங் காவியத்தில் "ஊழிற்கிருந்த சிறப்பு, பிற கடவுளர்க்கும் இல்லை" என்று அவர் விளக்குகிறார்.[31]

ஊழின் ஆற்றல் பற்றிய இக்கருத்துகளை உளங் கொண்டு, "விதியினை யாவரே எதிர் வெல்வார்?" எனவும், "விதியை யாவர் விலக்க வல்லார்களே?" எனவும் வினவாகச் சொற்றொடர் அமைத்துள்ளமையின் காரணத்தைக் கூர்ந்து நோக்கின், காவியம் இயற்றும் புலவர், அதன் வல்லமையை உணர்த்தும் கருத்துடையராய் இருப்பார் என்பதும், அவ்வல்லமை மிக்க ஊழின் திறங் கொண்டு, தம் கதைப் போக்கு, மாந்தர் திறம் (காவிய மாந்தர் திறம்) ஆகியவற்றைச் செம்மை செய்யும் பொறுப்பும் ஆர்வமும் உடையராயிருப்பார் என்பதும் நன்கு விளங்கும்.[32]

ஊழின் ஆற்றலை உணர்த்துதற்கு, வேற்றுப் பொருள் வைப்பு அணியைக் கையாண்டது போல், அறத்தின் வல்லமையை உணர்த்துதற்கும் அவ்வணியைக் கையாண்டு, அறம் ஊழ் போலும் வலிது என்று காட்டுதலோடு, தம் உணர்த்தும் திறனின் சிறப்பையும் நிறுவிக் காட்டுகிறார் வில்லி.

பிறன் மனை நயத்தல் என்னும் தகாத விழைவு கொண்டு திரௌபதியைக் கவர்ந்த சடாசுரன் வீமன் கைப்பட்டுத் தன் இன்னுயிரை இழந்தான். அவன் வாழ்வு முடிவு கொண்டு அறத்தின் சிறப்பினை எடுத்துரைக்கிறார் புலவர்.

31. M. Periasamy thooran & P. Thirikuda Sundaram Pillai (Ed) — Homer Illiatham Page:518 (1961)
Bertrand Russel: History of Western Philosophy. Page 135-36 (1954)

32. அடிக்குறிப்பு:32.பக். 111, 112.
S. Radhakrishnan: Indian Philosophy. Vol.I. Page 508-09(1966)
Dr.Chelnat Achyuta Menon: Ezuttaccan and his age. Page 141(1940

"அறம் அறந்த என்றும் அடாதன செய்தால் ஆர்கொலோ
படாதன படாதார்?"[32அ]

என்று வினவுதலின் வாயிலாக, எதிர்மறையில் வைத்து அறத்தின் விழுப்பத்தைப் புலப்படுத்துகிறார். அறத்தை மேற்கொள்வதால் விளையும் நன்மைகளை விரித்துக் கூறின் அவற்றை ஆழ்ந்து உணர்வார் சிலரே; அறம் திறம்புவதால் விளையும் தீமைகளுள் ஒன்றைக் குறிக்கும் அளவிலேயே அதற்கு அஞ்சி அறத்தின் விழுப்பம் உணர்வார் மிகப்பலர் என்று வில்லியின் உள்ளம் கருதுகிறது. ஆதலின் உடன்பாட்டு நெறியில் உணர்த்துவதை விடுத்து, வேற்றுப் பொருள் வைப்பு அணியை மேற்கொண்டு, தீமையால் விளையும் துன்பத்தை எடுத்துக்காட்டி, அறத்தின் மேன்மையை - அது விளைக்கும் நன்மையை - எடுத்துரைக்கிறார்.

"நன்மை என்பது நேர்மையாகச் செயல் புரிதலோடு தொடர்புடையது. நேர்மையாகச் செயல் புரிதலே இன்பம் பயப்பது. இன்ப நாட்டமே மனிதன் கருதும் உறுதிப் பொருள். இன்பத்திற்கும் நன்மைக்கும் உள்ள தொடர்பு யாது, அவ்வின்பத்தினை அடைதற்குக் கைக்கொள்ள வேண்டிய முறை யாது, அஃது ஏன் நன்மை பயக்கிறது என்று வினவி விடை காண்பதன் மூலமே தெளிவு பிறக்கிறது. எனவே சில இனியன; ஆதலின் அவை நல்லன என்று கூறுதல் அமையாது; ஏன் அவை நல்லனவாக உள்ளன என்பதை நடைமுறை வாயிலாகவும் காட்டுவது அறவோர் கடன்" என அறத்தின் பெற்றி விளக்க முற்படும் ஆய்வாளர் எடுத்துரைக்கின்றனர்.[33]

இத்தகைய ஆய்வையே வில்லி நிகழ்த்தியுள்ளார். இன்பத்திற்கும் நன்மைக்கும் தொடர்பு காட்டி, அறவோர் அதன் பெற்றியை விளக்கினர் எனின், துன்பத்திற்கும் தீமைக்கும் உரிய தொடர்பு காட்டி, எதிர்மறுத்துக் கூறுதலின் வாயிலாக, அறத்தின் விழுப்பத்தை வில்லி உணர்த்துகிறார் எனலாம். இன்ப மேம்பாடு பற்றி உயிர்க்கு வரும் ஊதியமே அன்றித் துன்ப மிகுதியால் உயிர் எய்தும் அழிவினை உணர்த்தலும் அறவோர் நெறியாக உள்ளமையை ஆய்வாளர் விளக்கியுள்ளனர்.[34]

---

32அ. வில்லிபாரதம்: சடாசுரன் வதைப் படலம்: 20. பக். 259. மர்ரே பதிப்பு (1959)

33. C.E.M. Joad: Guide to the Philosophy of Morals and Politics. Page 368 (1948)

34. C.E.M. Joad: Guide to the Philosophy of Morals and Politics. Page 368-69 (1948)

இனி, விழுமிய பண்பாடுகளின் சிறப்பை உணர்த்தற்கும், அப்பண்பாடுகளைத் தம் வாழ்க்கைக் கடைப்பிடியாகக் கொண்ட சான்றோர் பெருமை விளக்குதற்கும், வேற்றுப் பொருள் வைப்பினை வள்ளி கையாண்டுள்ள திறம் ஆராயத் தக்கது. பண்பாடுகள் ஓதி உணர்தற்கோ, பிறர்க்கு விரித்துரைப்பதற்கோ அமைந்தன அல்ல. பெரியோர் அல்லது சான்றோர் என்போரும் அவற்றைத் தம் வாழ்வில் கடைப்பிடித்துக் காட்டுவதன் வாயிலாகவே உண்மையில் அப்பெயருக்கு உரியவராகின்றனர்.[35]

பாரதத்தில் வரும் வீடுமனின் பண்பாட்டைபோ, இராமாயணத்தில் வரும் சீதையின் பண்பு நலனையோ ஆய்ந்து, இந்திய நாட்டுத் தத்துவம் எவ்வளவு விழுமியது என்று காட்டலாம். ஆயினும் அக்காவிய மாந்தர் வாழ்விலின்றும் பெருமை பெற்று உருவாகும் தத்துவம் மக்கள் வாழ்வொடு பொருந்தியது என்று உணர்வதில் தான் அதன் பெருமை உள்ளது என்று சகோதரி நிவேதிதா எடுத்துரைப்பது ஈண்டுக் குறிப்பிடத்தக்கது.[36]

இளைஞர் மேற்கொள்ளும் சமுக, அறிவாராய்ச்சிச் சோதனைகளால் மாறிப் போதல், புதிய இனத்தார்தம் புரட்சிச் சிந்தனைகளால் மாறி அமைதல் ஆகிய இவற்றிற் கெல்லாம் அப்பாற்பட்டது கிழக்கித்திய நாகரிகம்; இதை நன்குணர்வதில் தான் அந்நாகரிகத்தின் பெருமிதம் அடங்கியுள்ளது. தனி மனிதனை நெறிப்படுத்தி விழுப்பமுறச் செய்வதென்னும் தனி நோக்கம் கொண்டே கிழக்கத்திய நாகரிகம் தொடர்ந்து வளர்ந்து வந்திருக்கிறது. இவ்வகையில் மேற்கத்தியப் பண்பாட்டு முறைகளினின்றும் அது முற்றிலும் வேறு படுகிறது என்று மேலும் விளக்குகிறார் அவர்.[37] நிவேதிதாவின் கருத்துகளில், விழுமிய பண்பாடுகள், வாழ்க்கையில் கடைப்பிடிக்கப்படும் போதே உண்மையில் விழுமியனவாகின்றன என்பதும், அவற்றைத் தம் வாழ்வு நெறிகளாகக் கொண்டு வாழ்வாரே உண்மையான பெரியோர் என்பதும் விளங்கக் காணலாம்.

35. திருக்குறள்: மானம், பெருமை, சான்றாண்மை (அதி: 97, 98, 99) ஆகியவற்றின் அவதாரிகைகள். (பரிமேலழகர்)

36. Nivedita: The Web of Indian Life: Page 112 (1918)

37. Nivedita: The Web of Indian Life: Page 114 (1918)

வில்லியும் இத்தகைய கண்ணோட்டத்தில், பண்பாடுகளின் பெருமைகளையும், அவற்றை வழக்க ஒழுக்கங்களாகக் கொண்டு வாழும் பெரியோர் பெருமைகளையும் விளக்கமாக எடுத்துரைக்கிறார். இம்முயற்சியில், வேற்றுப் பொருள் வைப்பினையும், அவர் தக்கவாறு பயன்படுத்தித் தமது உணர்த்தும் திறமையையும் அதனோடு பொருந்த திறனைக் காட்டியுள்ளார்.[38]

அரியன, வழங்குதற்கு ஆகாதன, பெரியன என்று உணர்ந்தவற்றை எடுத்து வழங்குதல் உலகத்தார்க்கு இயலாத பண்பு. பற்றுள்ளம் காரணமாக யாரும் அவற்றை வழங்க முன்வரார். ஆயின் பெரியோர் இயல்பு, உலகத்தார் இயல்புக்கு நேர் எதிர் மாறானது. அரியனவாயினும், வழங்கத் தகாதனவாயினும், தம்மினும் பெரியனவாயினும், விருந்தினர் வேண்டிக் கேட்பராயின் சிறிதும் தயங்காது அவற்றை நல்கித் தம் பெருந் தகைமையை நிலைநிறுத்துவர் பெரியோர். ஆதலின் பெருங் கொடைப் பண்பு, பெரியோர் வாழ்வில் இயல்பாக அமைவதாலேயே விழுமியதாகின்றது. பெரியோர், பெருங் கொடைப் பண்பைத் தம் வாழ்வியல் கோட்பாடாகக் கருதி வாழ்வதாலேயே பெரியோராகின்றனர்.[39]

முனிவன் வடிவில் வந்த அக்கினி தேவன், தனது கடும் பசியைக் கண்ணனிடமும் அருச்சுனனிடமும் எடுத்துரைக்க, அவன் சொற்களைக் கேட்ட அளவிலே, இருவரும் மிகமகிழ்ந்து, அவன் பசிக்குத் தக்கன செய்வதாக உறுதி கூறி, இருவரும் ஒத்த கொடைப் பண்பினராய் விளங்கினர் என்று குறிப்பிட வந்த புலவர், இருவரும் கொடைப் பண்பால் தம்முள் ஒத்த பெரியர் எனக் கூற விரும்புகிறார். இவ்விருப்பத்தைக் காட்டும் வகையில்,

"அரிய ஆயினும் வழங்குதற்கு ஏற்றன அல்ல ஆயினும்
தம்மின்
பெரிய ஆயினும் அதிதிகள் கேட்டன மறப்பரோ
பெரியோரே"[39அ]

38. வில்லிபாரதம்; காண்டவதகனச் சருக்கம்; 22, பக். 437, வை.மு.கோ. உரை விளக்கம்; வை.மு.கோ. பதிப்பு (1963)

39. வில்லிபாரதம்; காண்டவதகனச் சருக்கம்; 22, பக். 437-38, வை.மு.கோ. உரை விளக்கம்; வை.மு.கோ. பதிப்பு (1963)

39அ. வில்லிபாரதம்; காண்டவதகனச் சருக்கம்; 3, பக். 114. மர்ரே பதிப்பு (1959).

என, வேற்றுப் பொருள் வைப்பு அணியைத் தம் வல்லமை தோன்றப் பயன் படுத்துகிறார். இவ்விருவிற்கு எதிர்மறையாக விடையிறுத்தல் இயலாது என்று உணர்த்துவதன் வாயிலாகக் கன்னனும் அருச்சுனனும், கொடைப் பண்பிலும் தம்முள் ஒத்த பெரியவர் ஆகின்றனர் என்பதை மிக நுணுக்கமாக விளக்குகிறார்.[40]

இனி, கொடைப் பண்பிலன்றி, அருட் பண்பிலும் அருச்சுனனும் கன்னனும் தம்முள் ஒருவரை ஒருவர் ஒத்தவர் என்பதனை வில்லி காட்ட முற்படுகிறார். அம் முயற்சியிலும், வேற்றுப் பொருள் வைப்பு அணியைப் பயன்படுத்தி வெற்றி கண்டுள்ளார்.

நின்ற உயிர் காக்கும் அருட் பண்பின் பெருமை விளக்க முன்வந்து, அதனைக் கன்னன் அருச்சுனன் ஆகிய இருவர் மேலிட்டு, அப்பண்பைக் கைக்கொண்டொழுகி உயிர் காத்தலைத் தம் இயல்பான பண்பாகக் கொண்டமையின் இவ்விருவரும் பேசுதற்கு அரிய பெரியவர் ஆயினர் என்று கூறி அவ்விருவரையும் தம்முள் ஒத்தாராகக் காட்டுகிறார்.

காண்டவம் எரிந்தபோது, தீயிலகப்பட்ட மயன் அருச்சுனனிடம் அடைக்கலம் புகுகின்றான். கண்ணனே அவனுக்கு அடைக்கலந்தரலாகாது என்னும் கருத்துடையவன்; ஆயினும் அருச்சுனன் அவன்பால் இரக்கம் காட்டுவதை அறிந்ததும், தன் கருத்தை மாற்றிக் கொண்டு, அருச்சுனன் போல் அவனும் அவனுக்கு அடைக்கலம் நல்க முற்படுகிறான்.[41]

மயன் தன் தீவினைக் கேற்பத்[42] தீயினுக்கு இரையாதற்கே உரியவனே. எனினும் அபயம் வேண்டி, அடைக்கலம் புகுங்கால், ஒருவனுடைய தீவினை, அவனுக்கு இடர் செய்யாமற் காத்து, அவனுயிரைப் பேணி நலஞ் செய்தல் பெரியோர் பொறுப்பாகின்றது. அப்பொறுப்பினைச் செயல்படுத்தி, அருச்சுனன் மயனின் உயிர் காத்தலிலே, அவன் பெரியோன் ஆகின்றான்.[43] விரைந்து கொல்ல விழைந்த கண்ணன், அருச்சுனன் செயல்கண்டு - அருட்பண்பால் அவன் செய்யும் செயற்கரிய செயல் அறிந்து தானும் தன் அருட் பண்பைக் காட்டி, அருச்சுனன் போல் பெரியோன் ஆகின்றான்.[44]

---

40. இவ்வாறு, கொடைப்பண்பு கொண்டு, இருவரும் தம்முள் ஒத்த பெரியவர் எனக் கூறும் இக்கருத்தாலும், தெய்வ-மானுட ஒருங்கிணைப்புத் தத்துவத்தை வில்லி விளக்குகிறார் என்பதை நன்கு உணரலாம்.
41. வில்லிபாரதம்: காண்டவதகனச் சருக்கம்:74. பக்.475. வை.மு.கோ. உரை விளக்கம்: வை.மு.கோ. பதிப்பு (1963)
42. மயனின் தீவினை இன்னதென்று சுட்டப்பட்டிலது. கிருஷ்ணார்ச்சுனர்கட்குப் பகைவராயினார்க்குத் துணைபோயினமையே அவன் செய்த தீவினையாகும்.
43. வில்லிபாரதம்: இராசசூயச் சருக்கம்:3. பக்.126. மர்ரே பதிப்பு (1959)
44. வில்லிபாரதம்: காண்டவதகனச் சருக்கம்: வை.மு.கோ. விளக்கம்: பக்.7.

இவ்வாறு அருட்பண்பால், இருவரும் தம்முள் ஒத்த பெரியவர் ஆகின்றனர் என்னும் கருத்தை உணர்த்த முற்படும் வில்லி,

"அருச்சுன, அபயம் என்று அரற்ற.....செங்கண்
மால் இருவினை செய்தவன்; தீவினை உறினும்
பேசுதற்கு அரிய பெரியவர் நிலைக்கின் யார் கொலோ
பிழைத்திடாதவரே"[44அ]

என்று கண்ணனின் அருட்பண்பை எடுத்துக் கூறி, அவனும் அருச்சுனனும் ஒரு நிலையினராய்ப் பேசுதற்கு அரிய பெரியவராயினர் என்பதைப் புலப்படுத்துகின்றார். எனவே, உயிர் காக்கும் அருட்பண்பின் விழுப்பம் உணர்த்தி, அதனைத் தமது பண்பாகக் கொண்டொழுகும் இருவரும் பெரியோராயினமையை, வேற்றுப் பொருள் வைப்பு அணிகொண்டு, வில்லி, தமது உணர்த்தும் திறம் தோன்ற எடுத்துரைத்துள்ளார் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

ஒரு பொருளையோ, நிகழ்ச்சியையோ, விளக்குங்கால், பிறிதொன்றினிடத்தில் இல்லாத, அதற்கே உரிய, அரிய இயல்புகளைச் சிறப்புற எடுத்துக் கூறுகிறோம். ஆயின் பொதுமைப்படுத்தி விளக்குங்கால், அப்பொருளும் நிகழ்ச்சியும் சார்ந்த இனம் அல்லது தொகுதிக்குரிய எல்லாப் பொருள்களின் இயல்புகளையும் குறித்துக் கூறி அவை யாவும் ஒன்றுபோல் உள்ளமையை எடுத்துரைக்கிறோம். படைப்பில் உள்ள பொருள்கள் யாவும் தத்தமக்கே உரிய இயல்புடையவாய்த் தனித்தனியாக அமைந்தவை. பல்வகைப் பொருள்களின் பொதுவியல்புகளைக் கண்டறிந்து அவற்றை ஒரு பெயர் கொண்டு அழைக்கும் வகையில் பொதுமைப்படுத்தும் ஆற்றல், மனித உள்ளத்திற்கமைந்த படைக்கும் திறமாகும். பொருள்களைக் கூர்ந்தறிவாரின் நுண்ணுணர்வைப் பொறுத்தே இவ்வாற்றல் வளர்ந்து நிரம்புவதாகும். பொதுமைப்படுத்துதல் என்பது, நிலையற்ற அல்லது மனம் போன போக்கில் அமைந்ததொரு முறை என்பது இதற்குப் பொருளன்று. பொருள்களின் பண்புகளையும் அடையாளங்களையும் உள்ளபடி ஆய்ந்து, இயற்கையில் அமைந்துள்ள அவற்றின் உண்மையியல்புகளை விளக்குதலே பொதுமைப்படுத்தலின் நோக்கம். பொருள் புலப்பாடு என்பது, இடத்தொடும் காலத்தொடும் இயைந்து நிற்கும் பொருளையோ, நிகழ்ச்சியையோ விளக்குவது அன்று. மனித உள்ளத்தில் தோன்றி, சிந்தனை விதிகட்கு ஏற்றவையாய் ஒன்றுக்கொன்று தொடர்புடையவாய் உள்ள கருத்துக்களின் வகைகளையும் பிரிவுகளையும் எடுத்துரைத்தலேயாம் என்பது கருத்திற் கொள்ள வேண்டியதாகும்"

44அ. வில்லிபாரதம்; காண்டவதகனச் சருக்கம்;55.பக்.125. மர்ரே பதிப்பு (1959).

என்று கருத்தொப்புமை பற்றிய இலக்கணங்களையும் அவற்றிடையே பொதுமை காண்பது பற்றிய விதிகளையும் ஆய்வாளர் எடுத்துரைக்கின்றனர்.[45]

கருத்தொப்புமை, பொதுமைப்படுத்தல் ஆகிய இவை பற்றிய விளக்கங்கள், காவிய மாந்தர்கட்கிடையே காணும் ஒப்புமைக் கூறுகளையும், பொதுமைத் தன்மைகளையும் காணும் புலவர் முயற்சிக்குப் பொருந்துவதாகும். வேற்றுப் பொருள் வைப்பு அணியைக் கையாண்டு, கொடைப்பண்பு, அருட்பண்பு ஆகியவை கன்னன் அருச்சுனன் ஆகிய இருவர்பாலும் பொதுமைப்பட அமைந்திருப்பதைக் காட்டி, இருவரும் இப் பொதுமைப்பாட்டு வகையால் தம்முள் ஒத்தவர் என்று புலவர் நிறுவும் திறன் இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும்.

தனியொருவர்க்கு அரியன நல்கலிலும்,[46] தனியொருவர் உயிரைப் பேணிக் காத்தலிலும்[47] பெரியோர் எனப் பெயர் பெற்ற அருச்சுனன், சமுதாய நோக்கில் மிகப் பலர் நலனில், தன் கொடைப் பண்பையும் அருட் பண்பையும் புலப்படுத்தித் தன் ஆற்றல் வெறும் உடல் வல்லமை அளவில், படைமைக் கல்வி அளவில் நிற்பதன்று; அது, நல்லோரையும், அறவோரையும் காத்துப் பொல்லாரையும், மறவோரை (தீயோரை) யும் வீழ்த்தும் பெருந்தகைமையை அடிப்படையாகக் கொண்டது என்பதை எடுத்துக்காட்டுகிறான்.

நிவாதகவசர் தனக்கும், தன் இனத்தார்க்கும் பகைவராயிருந்து அல்லல் பல விளைத்து வந்தமையின் அவரை வலி தொலைத்துத் தன் இனங்காக்க வேண்டும் என்று இந்திரன் வேண்டியபோது, இந்திரனின் பகை ஒழிக்கும் பெரும் பொறுப்பினை ஏற்பதில் அருச்சுனன் பெரு மகிழ்ச்சி கொள்ளுகிறான். போர் என்ற சொல் கேட்டதும், சிந்தையில் உவகை பொங்க, தோள்கள் பூரிக்க உடன் ஒருப்படுகிறான்.[48]

---

45. John F. Genung: The Practical elements of Rhetoric. Page 385-86 (1887)

46. வில்லிபாரதம்; காண்டவதகனச் சருக்கம்; 3. பக். 114. மர்ரே பதிப்பு (1959)

47. வில்லிபாரதம்; காண்டவதகனச் சருக்கம்; 56. பக். 125. மர்ரே பதிப்பு (1959)

48. வில்லிபாரதம்; நிவாதகவசர் காலகேயர் வதைச் சருக்கம்; 17. பக். 216. மர்ரே பதிப்பு (1959).

இவ்வாறு மகிழ்ச்சியுறுவது வீரர்க்கு இயல்பே.[49] இதனினும் பெரிதாக அவனுடைய பெருமையை விளக்கும் பண்பு வேறு ஒன்று உள்ளது. அதுவே, தன்னினும் உயர்ந்தோர் கேட்க, அதனைத் தயங்காது அவர்க்கு ஈயும் கொடைப் பண்பு. தனது இன நலங் கருதி இந்திரன் வேண்டியதும், அது குறித்துத் தன் போர்ச் செருக்கைப் பெரிதெனக் கருதாது, அது கருவியாக உயர்ந்தோர் வேண்டும் இன நலத்திற்காகத் தன் பேராற்றலை வழங்க முற்படும் அவனுடைய வீரக் கொடைத்திறன் அவனை மேலும் விளக்குகிறது.[50] இக்கருத்தை உணர்த்த விழையும் புலவர் தொடர் நிலைச் செய்யுட் பொறியணி என்னும் அணியைக் கையாண்டு, அருச்சுனனுடைய இயல்பான வீரம், அஃது அவனுடைய பெருந்தகைமையால் பொலிவு பெறல், அவ்விரண்டையும் சமுதாயப் பெருநலன் கருதிப் பயன்படுத்த முன்வரும்[51] அவனுடைய சமுதாய உணர்வு ஆகியவற்றையெல்லாம் வகைபெற உணர்த்தும்

"திருவொன்றும் வண்மை வீரன் மறக்குமோ
தேவர் கேட்டால்?"[51அ]

என்னும் வினவை முன்வைத்துத் தன் உணர்த்தும் திறமையை நிறுவிக் காட்டுகிறார். திருவொன்றும் வண்மை வீரன், என்னும் தொடரால், அவனுடைய படைமைக் கல்வித் திறன், பண்பாட்டுக் கல்வித் திறன் ஆகிய இரண்டினையும் ஒருசேர உணர்த்துகிறார். மறக்குமோ தேவர் கேட்டால் என்னும் தொடரால், தன்னினும் பெரியோர், தன்னிடம் வேண்டியவிடத்துத் தன் கொடைப் பண்பை - வீரக் கொடைப் பண்பை - அப்பெரியோர் மகிழுமாறு, செயற்படுத்த முன்வரும் பெருந்தகைமையையும் அதற்குரிய நோக்கத்தையும் (தீயோர் திறலழிய, நல்லோர் வாழத் தன்னை ஈந்து கொள்ளும் சமுதாய உணர்வையும்) அறுதியிடுகிறார். இவ்வாறு, பெருமகன் ஒருவனின் பற்பல பண்புகள் ஒன்றுக்கொன்று தொடர்புடையவையாய் அமைந்து, அவை விழுமிய குறிக்கோள்களை நிறைவேற்றுதற்கு ஒன்று திரண்டு நிற்கும் முறைமையினைத் தொடர் நிலைச்

---

49. புறநானூறு:31. வரி:9.
50. வில்லிபாரதம்:நிவாதகவசர் காலகேயர் வதைச் சருக்கம்:13.பக்.215.
மர்ரே பதிப்பு (1959)
சிந்தாமணி:464.உ.வே.சாமிநாதையர் பதிப்பு (1949)
நச்சினார்க்கினியர் உரை.
51. வில்லிபாரதம்:நிவாதகவசர் காலகேயர் வதைச் சருக்கம்:21,22,25.பக்.16.
மர்ரே பதிப்பு (1959)
Bala Gangadhara Tilak: Gita Rahasya. P:557-58 (1935)
Surma Das Gupta: Development of moral philosephy in India
Page 26 (1961)
51அ. வில்லிபாரதம்:நிவாதகவசர் காலகேயர் வதைச் சருக்கம்:17.பக்.216.
மர்ரே பதிப்பு (1959).

செய்யுட் குறியனையப் பயன்படுத்தித் தமக்கே உரிய முறையில் தெளிவு படுத்து-

போர் வீரனுக்குரிய இலக்கணங்களையும், அவ்விலக்கணங்களமைந்த போர் வீரன் போர் செய்வதற்கெனக் கடைப்பிடித்தற்குரிய நல்லற மாண்புகளையும் ஆய்வாளர் தனித்தனியே விளக்கியுள்ளனர்.

"போர் வேண்டிப் பகைவர் அறைகூவல் விடுத்ததும் அதனைப் போர்வீரன் உடன் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பது வீரர்க்குரிய இலக்கணம்; அறைகூவலுக்கு ஈடு கொடாவிடின், அவன் கடமை தவறியவனாவான்; போர் பற்றிய அறைகூவல் கேட்டதும் வேந்தன் மணிமுடி நீக்கித் தன் தலை முடியைச் சரி செய்து போர் புரிதற்கெனத் தன்னை விரைந்து ஆயத்தம் செய்து கொள்வான். இவ்வாறு, வழியின்றும் கடமை புறக்கணித்த பழியின்றும் தன்னை விடுவித்துக் கொள்கிறான்"[53] என்று ஆய்வாளர் போர் வீரர்தம் இலக்கணத்தை எடுத்துரைக்கின்றனர்.

போர் வீரனின் இலக்கணம் கூறிய ஆய்வாளர் அவன் போர் புரிதற்குரிய நோக்கங்கள் பற்றிய அறமாண்புகளையும் விரிவாக எடுத்துரைத்துள்ளனர். "குடிப்பெருமை, நாட்டு நலன் ஆகிய இவ்விருப் பெருஞ் செல்வங்களைக் காத்தற் பொருட்டுச் சாகும் வரை வீரன் போரிடல் வேண்டும்; அவற்றிற்காகச் சாதலே பெருமை எனவும் அவற்றைப் புறக்கணித்துப் பின்னிடல் இழிவு எனவும் உணர்தல் வேண்டும்; அவை கருதி இன்பத்தையும் மறக்க வேண்டும்; அவற்றிற்காகப் படைவீரர் ஒருவரும் அஞ்சாது போரிட வேண்டும். அப்போரே, அறமும், உண்மையும், நேர்மையும் உடைய போராகும். இத்தகைய போர் பற்றிய சிந்தனையும் விழைவும் நாட்டையும் நாட்டு மக்கள் அனைவரையும் இரும்பூதும் விருப்பமும் கொள்ளச் செய்கின்றன.

52. வில்லிபாரதம்: நிவாதகவசர் காலகேயர் வதைச் சருக்கம் அவதாரிகை. பக்.125. வை.மு.கோ.உரை விளக்கம்: வை.மு.கோ.பதிப்பு (1964)

வில்லிபாரதம்: நிவாதகவசர் காலகேயர் வதைச் சருக்கம்:17.பக்.140. வை.மு.கோ.பதிப்பு (1964)

53. V.R. Ramachandra Dikshitar: War in Ancient India. Page 56(1948)

54. ~~V.R. Ramachandra Dikshitar: War in Ancient India. Page 58(1948)~~

குடிப்பெருமை, நாட்டு நலன் ஆகிய இரண்டினையும் போற்றிப் பேணும் பொறுப்பு வழிவழியாகத் தொடர்ந்து வந்த, மக்கள் நிலையில் நின்று அவர்களுக்கு எழுச்சி ஊட்டி, அறிவுரையாய்ப் பயன்பட்டு அவர்களை மேம்படுத்துகிறது."[54]

போர் வீரனுக்குரிய இலக்கணம், போர் மேற்கொள்ளுதற்குரிய நோக்கங்கள் ஆகிய இவை பற்றி ஆய்வாளர் கூறும் இக்கருத்துகளைக்கொண்டு நோக்கின், அருச்சுனனின் போர்த் திறமும், அதனை அவன் பயன்படுத்த முன்வந்த நோக்கமும் நன்கு புலனாகும். இன நலம் பேண வேண்டிப் பெரியோர் விழைந்த விழைவினைப் புரிந்து, அதற்கேற்பச் செயற்பட முன்வரும் அவனுடைய நோக்கத்தின் அடிப்படையாக விளங்கும் விழுப்பம் புலனாகும்.[55] அருச்சுனனின் போர்த் திறன், அவனுடைய பெருநோக்கு ஆகியவற்றை உணர்த்துதற்குப் புலவர் மேற்கொண்ட தொடர்நிலைச் செய்யுட் கூறியமைப்பின் இன்றியமையாமையும் தெளிவாகப் புலனாகும்.

போர் பற்றிய நூல்களில், நீதி, வீரம், அறவியற் கொள்கைகள் ஆகிய யாவும் பெரியனவாகப் போற்றப்பட்டுள்ளன. நீதி, சாத்திரம் என்னும் பெயரில் இயற்றப்பட்டுள்ள மிகப் பழைய அரசியல் நூல்களில் பற்பல செய்திகள் சமயச் சார்பற்ற நோக்கோடு ஆயப்பட்டுள்ளன எனினும், அவற்றின் அடிப்படை சமயச் சார்பு கொண்டே விளங்குகிறது. சமயம் ஒவ்வொரு மனிதனின் வாழ்விலும், பிறப்பிலிருந்து சாதல் வரை, ஆட்சி செலுத்துகின்றது. எனவே, ஒழுக்க நெறிகளைப் புறக்கணித்துச் செய்யப் பெறும் எந்தப் போரும், விலங்குகளைக் கொல்லும் கொலை நெறிபோல் தாழ்ந்தது என்று கருதப்பட்டது. ஆதலின் போரறன் பற்றிய நீதிகளும், நூல்களும் தோன்றவே, அவற்றை விளக்கி உரைக்கும் ஆசிரியரும் பல்கினர். ஆதலின், அறநெறி பற்றிப் போர் புரிய விரும்பும் வேந்தன் போர் வீரர்க்குரிய அறநெறிகளைக் கடைப்பிடிக்க வேண்டியவனாகின்றான் என்று போர்க்கலை, விழுமிய நோக்கொடு

---

54. V.R. Ramachandra Dikshitar: War in Ancient India. Page 58 (1948)

55. வில்லிபாரதம்: ஒன்பதாம் போர்ச் சருக்கம்: 11. பக். 431.
பதினான்காம் போர்ச் சருக்கம்: 188. பக். 534.
பதினேழாம் போர்ச் சருக்கம்: 102. பக். 585.
மர்றே பதிப்பு (1959)

ஒன்பதாம் போர்ச் சருக்கம்: 11. பக். 206.
பதினான்காம் போர்ச் சருக்கம்: 188. பக். 372.
பதினேழாம் போர்ச் சருக்கம்: 102. பக். 105.
வை. மு. கோ. பதிப்பு (1957).

உருவாக்கப்பட்டதை ஆய்வாளர் எடுத்துரைக்கின்றனர்.[56] அருச்சுனனின் போர்த்திறத்தையும் அவனுடைய விழுமிய நோக்கையும் எடுத்துரைக்கும் புலவரும் இத்தகைய அறப்பண்பாடுகளை அடிப்படையாகக் கொண்டே உணர்த்துகிறார். தொடர்நிலைச் செய்யுட் குறிப்புகள் மூலம் அவர் உணர்த்துவன யாவும், போர்க்கலை பற்றிய ஆய்வாளர் உணர்த்துவனவற்றோடு பொருந்தி நிற்றல் குறிப்பிடத்தக்கதாகும்.

இனி, புராண நிகழ்ச்சிகளை[57] உண்மை உணர்த்தற்குப் பயன்படுத்தும் வில்லியின் திறன் ஆராயத் தக்கது. வேற்றுப் பொருள் வைப்பின் துணை கொண்டு, புராண நிகழ்ச்சிகள், (வரலாறு போல உடன் ஏற்கத் தக்கன அல்ல ஆயினும்) வாழ்க்கை உண்மைகளை விளக்குவன என்று திறம்பட நிறுவுகிறார்.[58] பெண் வழிச் சேறல் என்னும் குற்றத்தால் தவறு இழைக்கிறான் அருச்சுனன்; திரௌபதியின் சொற் கேட்டு, முனிவர் ஒருவர்க்குரிய கனியை அம்பெய்து வீழ்த்துகிறான்.[59] அம்முனிவன் அறியவரின், அவன் சாபத்திற்கு இலக்காக நேருமே என அஞ்சுகிறான். அவ்வச்சத்தைப் பிற நால்வர்க்கும் உணர்த்துகிறான்.[60] ஐவரும், திரௌபதியும் கண்ணன் முன்னிலையில் தம் மனம் திறந்து தம் உள்ளக் கிடக்கையைக் கூறுகின்றனர். அதனால் கனி முன்னைய நிலையை அடைகிறது.[61]

இப்புராணச் செய்தியுள், உள்ளதை உள்ளவாறு ஒத்துக் கொள்ளின், ஏற்றத்திற்குச் சுவாமி தேடலாம்; குற்றம் தானே நீங்கும் என்ற இரு கருத்துகளை வலியுறுத்த விரும்புகிறார் புலவர். அதன் பொருட்டு வேற்றுப் பொருள் வைப்பு அணியைக் கையாளுகிறார். அருச்சுனன் வீழ்த்திய கனி, அதன் முன்னைய நிலையை அடைந்தது எனப் புராண வரலாறு கூறி, தொடர்ந்து,

---

56. V.R. Ramachandra Dikshitar: War In Ancient India. Page 58 (1948)

57. அடிக்குறிப்பு: 57. பக்.

58. S. Radhakrishnan: Indian Philosophy. Vol.I. Page 25 (1966)

59. வில்லிபாரதம்: பழம்பொருந்து சருக்கம்: 4. பக். 273. மற்றோர் பதிப்பு (1959)

60. வில்லிபாரதம்: பழம்பொருந்து சருக்கம்: 8. பக். 273. மற்றோர் பதிப்பு (1959)

61. வில்லிபாரதம்: பழம்பொருந்து சருக்கம்: 22. பக். 276. மற்றோர் பதிப்பு (1959)

"என்றும்

பெருமை பெறுமே உள்ளவாறு உரைத்தால்

பெரியவர் பேசும் வாசகமே"[61அ]

என்றும் கூறி உண்மை உரைத்தலால் செய்த பிழை நீங்கும் என்னும் தமது கருத்தை எடுத்துரைக்கின்றார். அதனை முதற்கண் கண்ணன் வாய்மொழியாக உணர்த்துகின்றார்.

"நீவிர் ஐவரும்.....சேயிழையும்,

உண்மையா நெஞ்சில் நிகழ்ந்த பட்டாங்கு என்று

உரைத்திட, கோட்டில் மீண்டு ஒன்றும்"[61ஆ]

உள்ளதை உள்ளவாறு உரைத்தல் உலகத்தார் இயல்பு அன்று; போலி நாகரிகம் கருதி நெஞ்சிற் பட்டதைப் பட்டவாறு கூறாமல், திருத்தியும் மறைத்தும் கூறுவது உலகியற்கை.[62] ஆயினும் பெரியோர் உற்றபொழுது, பெரியோர் எவரும், பட்டாங்கு உரைத்தலின் பெருமை கூறி, அதனால் இடரின்றி உய்யலாம் என எடுத்துரைப்பர்.[63] உடனே மக்கள் உள்ளவாறு உரைக்கத் தலைப்படுவர். பாண்டவரும் திரௌபதியும் அந்நிலையிலேயே இருந்தனர். கண்ணன் முற்றிலும் பாண்டவர் நலம் கருதும் இயல்புடையவன் என்பது அவர் நம்பிக்கை யாதலின், அவன் கூற்றை ஒப்புக் கொண்டு தமது உள்ளக்கிடக்கையை உள்ளவாறு வெளியிட்டனர். அதன் விளைவாய், கனி தன் இருப்பிடம் சேர்ந்தது; பாண்டவர் இடர் தீர்ந்தவராயினர்.

பெரியோர் சொல்லின் பெருமையைப் பாண்டவர் கண்கூடாகக் கண்டனர். அதனால் அதனைப் போற்றிக் கடைப்பிடித்துப் பயன் கண்டனர். கண்ணன் வாசகம் - அவன் உரைத்த உண்மை - பாண்டவரால் பாராட்டுதற்குரியதாயிற்று. கண்ணன் வாசகம் கேட்டுப் பாண்டவர் தம் நெஞ்சக் கிடக்கையை வெளியிட்டமையால்,

---

61அ. வில்லிபாரதம்: பழம்பொருந்து சருக்கம்: 15. பக். 274. மர்ரே பதிப்பு (195

61ஆ. வில்லிபாரதம்: பழம்பொருந்து சருக்கம்: 15. பக். 274. மர்ரே பதிப்பு (1959)

62. வில்லிபாரதம்: உத்தியோக பருவம்: கிருட்டிணன் தூது: 141. பக். 357. மர்ரே பதிப்பு (1959)

M.K. Gandhi: An Autobiography: Introduction: Page XIII-XV (1958)

63. M.K. Gandhi: An Autobiography: Introduction: Page XV(1958)

அவருடைய வாசகங்களும் பாராட்டுக்குரியவாயின. இவ்விருவர் தம் உரைகளைக் கொண்டு, உள்ளவாறு உரைக்கப்படும் பெரியோர் வாசகம் என்றும் பெருமைக் குரியதாகும் என்று புலவர் பொதுமைப்படுத்திக் கூறுகிறார். அவ்வாறு பொதுமைப் படுத்தற்கு, வேற்றுப் பொருள் வைப்பு அணி இடந்தருகிறது. புலவர் கூறி வருமாறு:

அறவரும் இவ்வாறு உண்மையே உரைத்தார்;
    ஆதலால், நிரைநிரைப்படியே -
மறு அறு துளப மார்பனும் கேட்டான்; -
    மாமுனிக்கு ஓதனம் ஆக
நிறை சுவை அமுத நெல்லியின் கனியும்
    நின்ற கொம்பு அணைந்ததால், என்றும்
பெறுமுறை பெறுமே, உள்ளவாறு உரைத்தால்
    பெரியவர் பேசும் வாசகமே.[63அ]

உள்ளதை உள்ளவாறு உரைத்தால் பயன் உண்டு என்று கன்னன் உரைத்த உண்மையும், உள்ளதை உள்ளவாறு உரைத்துப் பயன் கண்ட பாண்டவர் கூற்றும், பெரியவர் பேசும் வாசகம் என்னும் தொடரால் குறிக்கப் பெறுகின்றன. இருவர் கூற்றும் பெருமை உறுதலை[64] "பெறுமுறை பெறுமே" என்னுந் தொடர் குறித்து நிற்கிறது. வழிகாட்டும் சான்றோனும், கடைப்பிடித்தொழுகும் மாந்தரும் தம்முள் ஒத்தவராயினர் என்பதைப் புலவர் உணர்த்தியுள்ள திறம் குறிப்பிடத்தக்கது. அதற்குப் பயன்படும் வேற்றுப் பொருள் வைப்பு அணியின் நயங்களும் உடன் குறிப்பிடத்தக்கது.

இவ்வாறே, வேற்றுப் பொருள் வைப்பு அணியைப் பயன்படுத்தி, இன்னொரு புராணச் செய்தி வாயிலாக, தம் உள்ளம் உணர்ந்த உண்மையைத் திறம்பட உணர்த்துகிறார் புலவர். நன்மை தீமை விளைவுகளை வென்று அவற்றிற்கு அப்பாற்பட்டு நிற்கும் பெரியோர் உள்ளங்களும், நன்மை தீமைகளின் விளைவுகள் வரம்பு கடந்து சென்று உலகத்தலைவரைத் தாக்குமாயின் - குறிப்பாகத் தீமையின் ஆற்றல் வரம்பு கடந்து நல்லோர் வாழ்வில் பெருங் கொடுமை விளைக்குமாயின் - தம் நடுநிலைத் தன்மை விடுத்து, வெறு உலகியல் நிகழ்ச்சிகளின் எல்லைக்குட்பட்டுச் செயல் புரிகின்றன;

---

63அ. வில்லிபாரதம்: பழம்பொருந்து சருக்கம்: 22 பக். 276. மறுபதிப்பு (1959)

64. Joseph L. Blau: Men and Movements in American Philosophy Page 93-94 (1954)

உலகத்துப் பொருள்களும், நிகழ்ச்சிகளும், அப்பெரியோர் செயலாண்மைக்குக் கட்டுப்பட்டு நடக்கின்றன[65] என்று வில்லி உணர்கிறார். தாம் உணர்ந்த அவ்வுண்மையைப் புராண நிகழ்ச்சிகளுள் வைத்து, வேற்றுப் பொருள் வைப்பின் வாயிலாகத் திறம்பட எடுத்துரைக்கிறார்.

அபிமன்யுவைக் கொன்ற ஜயத்திரதனைக் கதிரவன் படு முன்னர்க் கொல்வேன் என அருச்சுனன் கூறிய வஞ்சினத்தை அறிந்திருந்தும், கண்ணன் தன் கைத்திகிரியால் கதிரவனை மறைத்து இருளுண்டாக்குகிறான்; அவ்விருளிலேயே, ஜயத்திரதனைக் கொல்க என்று அருச்சுனனை ஏவுகிறான். வஞ்சினம் பொய்க்குமே என்று தயங்கிய அருச்சுனனைச் சினந்து மொழிந்து, ஜயத்திரதனைக் கொல்லச் செய்கிறான். ஜயத்திரதன் மாய்ந்த பின்னர், கைத்திகிரியை விலக்கிப் பகல் உண்டாக்குகிறான். வஞ்சினக் கூற்றுக்கு எதிராக நடந்தமையின் அருச்சுனன் எரிபுகுவான் என்று எண்ணி மகிழ்ந்த துரியோதனாதியர் ஏமாற்றமுற்று வருந்துமாறு செய்கிறான்.

பகைவர் செய்யும் கொடுமைகளும் பொல்லாங்குகளும், பகை, நட்புகட்கு அப்பாற்பட்ட பெரியோரைப் பகைவர்போல் செயற்பட வைக்கின்றன[66] என்பது வில்லி உணர்ந்த உணர்வு. அவ்வுணர்வை நேரடியாகத் தம் கூற்றாகக் கூறாமல், படை வீரர் வாயிலாக, பற்பல நிகழ்ச்சிகளின் மேல் அவர்தம் எண்ணங்களை ஏற்றிச் சொல்லி, இறுதியில் அவர்கள் கூற்றாக விளக்குகிறார்.

"கடலில் விழுதற்கு முன்னர்க் கதிரவனை ராகுவும் கேதுவும் தாம் விழுங்க வேண்டும் என்று விரைந்து விழுங்கினரோ? மகன் இறந்த துயர் காரணமாகத் தன் மகன் எரிபுகுவான் என்றஞ்சி இந்திரன் முகிலிட்டு மறைத்தனனோ? சூரியோனுடைய திருமால் காரணம் ஏதாவது கொண்டு தன் கைத்திகிரியால் மறைத்தானோ? இருள் திடீரென்று பரந்தமைக்குரிய காரணந்தான் எனவோ?" எனப் போர் வீரர் பலவாறு காரணம் காணத் தலைப்படுகின்றனர்.

இத்தகைய இறந்த நிகழ்ச்சிகட்குக் காரண காரியங்காட்ட இயலாது;

65. S. Radhankrishnan: Indian Philosophy. Vol.I. Page 545-46 (1966)

66. வில்லிபாரதம்; இராசசூயச் சருக்கம்; 146-47. பக். 148. மர்ரேபதிப்பு (1959).

உலகத்தார், தம் அறிவிற்கும் அனுபவத்திற்கும் ஏற்பப் பலவற்றை ஏற்றிக் கூறுவர். எவற்றும் நிறைவு வரவில்லையேல் - அல்லது வரினும் - மொத்தமாகப் பெரியோர் உள்ளத்து மாறுதலே, புற உலக மாறுதல்களுக்கெல்லாம் காரணம் என அமைவர்.[67] பாரதப் போரில், அனைவரும் வியக்கத் திடீரென்று இருள் வந்தமைக்கும், ஒளி வந்தமைக்கும், தத்தமக்குரிய அறிவிற்கும் அனுபவத்திற்கும் ஏற்பப் பலவற்றைக் கூறி இறுதியில் பெரியோர் உள்ளத்து மாறுதலே உண்மையான காரணம் ஆதல் கூடும் எனப் படை வீரர் கூறும் கூற்று உலகியலார் கூறுங் கூற்றை ஒத்துள்ளது.[67அ]

புற உலக நிகழ்ச்சிகளை, அவரவர் அறிவிற்கும் அனுபவத்திற்கும் இயைய, ஆராய்வதைப் பொறுத்தே உண்மைகள் விளங்கி வரும். உண்மைகட்குரிய காரண காரியங்களும் அவரவர் அறிவையும் அனுபவத்தையும் கொண்டே விளக்கப்படும்.[68] காரணகாரியம் எட்டாத நிலையில், அனைத்து நிகழ்ச்சிகட்கும், அவை உணர்த்தும் உண்மைகட்கும் காரணம் பெரியோர் உள்ளத்து நிகழும் உணர்வு மாற்றங்களே என்பது தொன்றுதொட்ட புலவர் உலகத்து முடிபு.[69] அம்முடிபு வில்லிக்கும் உடன்பாடு ஆதலின், தமது முடிவைத் தாமே கூறுவதினும், உலகத்தார் மொழியாகக் கூறின், அது நன்கு புலப்படும் என்று கருதுகிறார். அந்நிலையில் வேற்றுப் பொருள் வைப்பணி உணர்த்துத் தக்கவாறு பயன்படுகிறது. புராண நிகழ்ச்சி கொண்டு, தாம் உணர்த்த விரும்பும் உண்மையைப் பொதுமைப்படுத்தி உலகத்தார் வாய்மொழியாக ஆற்றலொடு வெளிப்படுத்தற்கு ஏற்ற வகையில் பயன்படுகிறது.

"வேதம் உபநிடதம் முதலிய உயர்ந்த நூல்களில் உள்ள அறவியல் ஆன்மிகவியல் பற்றிய நுண்ணிய உண்மைகளை மக்களிடையே பரப்புதற்பொருட்டே புராணங்கள் எழுந்தன. அவதார புருடர், முனிவர், வேந்தர், அடியார் ஆகிய பெருமக்களின் வாழ்க்கையை விளக்கி எடுத்துக் காட்டுதல் மூலம் அவ்வுண்மைகள் விளங்கலாயின. அவற்றொடு தொடர்புடையாரும், அவற்றில் பயிற்சி இலாதாரும் அவற்றைக் கற்பனைக் கதைகள், உருவக விளக்கங்கள், யோக முதலிய துறை பற்றிய செய்திகளைக் கொண்டு அவை புற உலகத்தோடு எவ்வகைத் தொடர்புமில்லாதவை என விலக்குதல் கூடும்.

---

67. Sri Aurobindo: The Life Divine. Vol.19. Page 874-75 (1972)

67அ. வில்லிபாரதம்: பதினெட்டாம் போர்ச் சருக்கம்: 170. பக். 532. மர்ரே பதிப்பு (1959)

68. Bertrand Russel: History of Western Philosophy. P-667-68 (1954).

எனினும், அவற்றுள் பெரும்பாலானவை, ஆழ்ந்த மதிப்பிடுதற்குரிய விழுப்பங்களையும், உணர்ந்து தெளிதற்குரிய உண்மைகளையும், தமக்குரிய உள்ளீடாகக் கொண்டவை என்பது மரபு தொட்டு வரும் கருத்தாகும். பொது வாழ்வு, நம்பிக்கை, நடத்தை, ஆகியவற்றைச் சீர் செய்து, ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக அவை பயன்பட்டு வருதலின், விழுமிய உண்மைகளை உணர்தற்கு அவற்றை முற்றிலும் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்" என்று ஆய்வாளர் புராணச் செய்திகளின் பயன்பாடு பற்றி விளக்கியுள்ளனர்.[7]

இக்கருத்துகளை உளங்கொண்டு, வில்லி எடுத்துரைத்துள்ள புராண நிகழ்ச்சிகளை ஆராயின் அவர் உணர்த்த முற்படும் உண்மைகள் தெளிவாக விளங்கும். வேற்றுப் பொருள் வைப்பு முதலிய அணிகளைக் கையாண்டு, அவற்றை உணர்த்துதற்கு அவர் மேற்கொண்ட முறையும் நன்கு விளங்கும்.

இவ்வாறு, காவியத்தின் சுவை முதிர்ச்சி, காவிய ஆசிரியர் தாம் உணர்த்த விரும்பும் உண்மைகளைத் திறம்பட உணர்த்தல் ஆகிய இப்பொது நோக்கங்கட்கேயன்றி, காவிய மாந்தர் தம் பல்வகைப் பண்பு நலன்களை விளக்குதற்கும், அணிகள் பலவற்றைக் காவிய ஆசிரியர் கையாண்டுள்ள திறம் ஆராயத்தக்கது.

காவிய ஆசிரியர், தாம் படைக்கும் உடன்பாடான பாத்திரங்களின் பால் எல்லையற்ற அன்பும் பரிவும், எதிர்மறைப் பாத்திரங்களின்பால் வெறுப்பும் காழ்ப்பும் காட்டுவது, அவர்க்கு இயல்பாகும். பாண்டவரைத் துரியோதனன், அபிசார ஓமத்தின் வாயிலாகக் கொல்ல முயலும் கொலை முயற்சியின்று அவரைத் தாம் காப்பதற்காக, அறக்கடவுள் வாயிலாக அவ்வைவரையும் [வில்லி] உயிரிழக்கச் செய்கின்றார். அறக்கடவுள் வாயிலாகப் பாண்டவர் கொலையுண்டது, பகைவர் அவரை உண்மையாகவே கொல்லும் கொலை முயற்சியின்று காத்தல் பற்றிய நன்னோக்கத்தை அடிப்படையாகக் கொண்டது எனினும் பாண்டவர் உயிரிழந்தார் என்னும் கற்பனையைப் புலவரால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. சகதேவன் முதல் வீமன் ஈறாக நால்வரும் நச்சு நீர் பருகி மாய்ந்தனர். பிறதம்பியரோடு வீமன் முடிந்த நிலையை உணர்ந்தும் புலவர், 'சொல்லுதி, நெருப்புப் பட்டது போல்,

---

70. Swami Prabhavananda: Spiritual Heritage of India. Page 136 (1962).

நாவேகும், நினைப்பவையிலேயே நெஞ்சம் வேகும்" என்று வருந்தி உரைக்கிறார்.[71]

காடுறை காலமும் கரந்துறை காலமும் கழிந்து பாண்டவர் திரும்பி வந்து உயிரோடிருப்பின் தமது உரிமை வேண்டுவர் என்று எண்ணிய துரியோதனனும், அவனுடைய துணைவராகிய, துச்சாதனன், சகுனி, கர்ணன் ஆகிய மூவரும், அவரை உயிரோடு இருக்கவிடாமை கருதிக் கொன்றொழிக்கத் திட்டமிடுகின்றனர். அவர் செய்கைக்கு வருந்தி அந்நால்வர் தம் இரக்கமற்ற தன்மையை வெறுப்பும் காழ்ப்பும் தோன்ற எடுத்துரைக்கிறார் புலவர். அந்நால்வரும் தீவினை செய்யத் துணிந்த பாவியர் என்று உள்ளம் நொந்து கூறுகிறார்.[71அ]

இவ்வாறு, உடன்பாட்டு எதிர்மறைப் பண்புகளுடைய காவிய மாந்தர் மீது, தம் உணர்வுகளை, மிக்க ஆற்றலோடு, தம் கூற்றாக, நேரடியாகத் தோய விடும் புலவர், தாம் கையாளும் அணிகளின் வாயிலாக அவற்றை மேலும் ஆற்றல் உடையனவாகவும் தன்மை உடையனவாகவும் புலப்படுத்துகிறார்; அதனோடு, காவிய மாந்தர்தம் பல்வகைப் பண்பு நலன்களை அவ்வணிகளின் வாயிலாக வகைப்படுத்திக் காட்டுகிறார்.

தன்னொடு உடன்பயின்ற நண்பன் என்னும் உரிமை பற்றி உதவி வேண்டி வந்த துரோணனை, அவன் உள்ளம் நோகுமாறு, எள்ளுகின்றான் யாகசேனன். "மன்னன் யான்; நீ முனிவன்; மரபால் எனக்கும் உனக்கும் என்ன நட்பு உண்டு?" என்று ஏசி நகைசெய்து இகழ்கிறான்.[72] அவன் செய்கையை, தகுதி இது, தகாதது இது என்று ஆயும் மனிதநீர்மை போன்றல்லாத விலங்கு நீர்மை என்று கூற விரும்புகிறார் ஆசிரியர். யாகசேனனுக்கும், குருகுலத்து இளைஞர்க்கும் நடந்த போரில், தோல்வியுற்ற யாகசேனனை, வலை வீசி வேடன் விலங்கை அகப்படுத்தல் போல் அருச்சனன் தன் கையம்புக்கு ஆட்படுத்தி அவனைப் பிணித்தான் என்று கூறுகிறார். ஆதலின், அருச்சனன், பகைவனாகிய யாகசேனனைப் போரில் வென்று பிணித்தான் என்பதை, உருவக அணியைப் பயன்படுத்தி, அருச்சனனை வலை வீசும் வேடனாகவும், யாகசேனனை

---

71. வில்லிபாரதம்; நச்சுப் பொய்கைச் சருக்கம்; 31. பக். 265. மர்றே பதிப்பு (1959

71அ. வில்லிபாரதம்; நச்சுப்பொய்கைச் சருக்கம்; 3. பக். 261. மர்றே பதிப்பு (1959)

72. வில்லிபாரதம்; வாரணாவதச் சருக்கம்; 43. பக். 46. மர்றே பதிப்பு (1959)

அதில் அகப்பட்ட விலங்காவும் காட்டி,[73] யாகசேனனின் இழிதகைமையை எடுத்துக் காட்டுகிறார்.

யாகசேனனிடம் விலங்கு நீர்மை காட்டிய புலவர், துரியோதனனும் அத்தகைய இயல்புடையவன் என்று காட்டுகிறார். உடன் பயின்ற நண்பனை இழித்துத் தாழ்த்தினான் யாகசேனன் எனின், உடன் பிறப்பினராகக் கருதி உரிமை எய்துதற்கமைந்த பாண்டவரை, இழித்துத் தாழ்த்துதலோடு, அவரைக் கொன்றொழிக்கவும் முயலுகிறான் துரியோதனன். பிறிதுமொழிதல் எடுத்துக் காட்டு உவமை ஆகிய இரண்டு அணிகளின் வாயிலாகத் துரியோதனனின் விலங்கு நீர்மையைத் திறம்பட விளக்குகிறார் புலவர். பாண்டவர்பால் துரியோதனன் எத்தகைய மனப்பான்மை கொண்டவன் என்பதை நன்கறிந்தவன் சகுனி. தருமன் நிகழ்த்திய இராயசூய யாகத்திற்குச் சென்று வந்ததும், துரியோதனனின் பொறாமை உணர்ச்சியை மிகுவித்தற்பொருட்டு, துரியோதனன் வல்லமை மிக்கவனாயினும் அவ்வல்லமை தோன்றச் செயற்படாவிடின், அவனினும் வல்லமை குறைந்தவனாகிய தருமன் செயற்படல் மூலம் அவன் மேம்பட்டு விளங்குவான் என்று கூற முற்படுபவன்,

"புதை நகமடங்கல் நாளும் புறம் செலாது
ஒடுங்குமானால் மதகரி விடுமோ"[73அ]

என, விலங்குகளின் இயல்புகளைச் சுட்டித் தன் கருத்தை வெளியிடுகிறான். இவ்விடத்துப் பிறிது மொழிதல் அணி தக்கவாறு பயன்படுகிறது. தருமனை மதகரி எனத் தாழ்த்தியும் துரியோதனனை மடங்கல் என உணர்த்தியும் கூறி, அவன் இயல்பு புலப்படுமாறு சகுனி தந்திரமாக உரைப்பதற்குப் பிறிதுமொழிதல் ஏற்ற கருவியாக அமைகின்றது.[74]

பிறிதுமொழிதல் வாயிலாகச் சகுனி சொன்ன கருத்தையே எடுத்துக்காட்டு உவமை வாயிலாக, துரியோதனன் சொல்கிறான். பாண்டவர் தம்பகைமையை வெளிப்படக் காட்டிப் போர் புரிய முன் வந்தால், அவர் தம் பகைமையை ஏற்றுத் தான் போர் புரிதற்கு அஞ்சான் எனக் கூற முற்படும் துரியோதனன்,

---

73. வில்லிபாரதம்:வாரணாவதச் சருக்கம்:76.பக்.52.மர்ரே பதிப்பு (1959)
வாரணாவதச் சருக்கம்:79.வை.மு.கோ.விளக்கம்:பக்.191.
வை.மு.கோ.பதிப்பு (1963)

73அ.வில்லிபாரதம்:சூதுபோர்ச் சருக்கம்:6.பக்.151.மர்ரே பதிப்பு (1959)

74. வில்லிபாரதம்:சூதுபோர்ச் சருக்கம்:7.வை.மு.கோ.விளக்கம்:பக்.176.
வை.மு.கோ.பதிப்பு (ஆண்டுக் குறிக்கப்பெறவில்லை).

"வலிந்த சிலை ஐவர் வந்த ஆயுதின் பால்
அயர்ந்திருப்பரே
கோ விலங்கு பொர அஞ்சுமோ, கரட குஞ்சரங்கள்
பகைகொண்டகால்"[74அ]

எனத் தன்னைச் சிங்கமாகவும், பாண்டவரை யானையாகவும் கூறித் தன் மனநிலையைப் புலப்படுத்துகிறான்.

பிறிது மொழிதல், எடுத்துக் காட்டுவமை ஆகிய அணிகளால், துரியோதனனின் மனநிலையைப் பொதுவாக விளக்குகிறார் எனினும், குறித்து நோக்குங்கால், அவனுடைய விலங்கு நீர்மையைச் சுட்டுவதே ஆசிரியரின் உட்கிடக்கை, என்பது நன்கு விளங்கும்.[75]

இவை, பாண்டவர்தம் ஒற்றுமையும், துரியோதனனுடையார்தம் ஒற்றுமையும் அவரவர்தம் இயல்புக்கு ஏற்ப அமைந்தவை; நேர் முரணானவை என்பதை, அணிகளைப் பயன்படுத்தத் தெளிவாக விளக்குகிறார்.

பாரதப் போருக்கு ஆயத்தமாக அணிவகுத்து நிற்கும் பாண்டவர் சேனை, உயிர்க்கேற்ற உடலும், உடலுக்கேற்ற உயிரும் பொருந்தி அமைந்த ஒப்பற்ற பெரியோன் ஒருவனின் வடிவத்தை ஒத்துள்ளது. அவ்வடிவத்தின் உயிர் திருமால்; மார்பு தருமன்; சிவேதன் முகம்; வீமனும் விசயனும் இரு புயங்கள்; நகுலனும் சகதேவனும் இருகால்கள்; பாண்டவர் நலன் கருதிய வேந்தரெல்லாம், பல்வேறு அவயவங்கள். திருமால், பாண்டவர், வேந்தர் ஆகிய முத்திறத்தாரும் போர் பற்றிக் கொண்டிருந்த ஒற்றுமை உணர்வு, புறத்தில் ஒரு வடிவம் போல்-புலன்களுக்கு எட்டும் வடிவம் போல்- ஒருமை தோற்றி நிற்றது.[75அ] உயிருடையதாயினும், இலதாயினும் எதனையும் மாந்தர்போல் உருவகப் படுத்திக் காட்டுவதில் நன்மைகள் உள்ளன. மனித வாழ்வின் கூறுகளையும் உணர்வுகளையும் விளக்குவது அதனால் எளிதாகின்றது. பரிவும் அன்பும் கொண்டு, மாந்தரை நோக்குவதைப் போல் அதனை நோக்குவதால் மனித நலப் பண்புகளைக் கொண்டு அதனை அளவிடல் எளிதாகின்றது. அதனைக் காண்பார், விருப்பு, வெறுப்பு நோக்கொடு அதனைக்

---

74அ. வில்லிபாரதம்: கிருட்டினன் தூதுச் சருக்கம்: 120. பக். 354. மர்ரே பதிப்பு (195
75. வில்லிபாரதம்: நிரைமீட்சிச் சருக்கம்: 68. பக். 312. மர்ரே பதிப்பு (1959)
நிரைமீட்சிச் சருக்கம்: 69. பக். 151. வை. மு. கோ. பதிப்பு (196
குறிஞ்சிக் கலி: 16. வரி: 1-4.
75அ. வில்லிபாரதம்: படையெழுச்சிச் சருக்கம்: 51. பக். 382. மர்ரே பதிப்பு (1959).

காண்பதால் அதில் அமைந்துள்ள மனித நல இயல்புக்கேற்ப அப்பொருள் உயிருடையதாய்த் திகழ்கின்றது. பொருள்களைப்பற்றிக் கருத்துகட்கும் இவ்வாறு மாந்தர் வடிவந்தருவதால், அவை மதிப்புடையவாதலோடு, மனிதர்களோடு தொடர்பு கொள்வது போல் அவற்றொடு நெருங்கிய தொடர்பு கொண்டு பயனளவும் முடிகிறது என்று ஆய்வாளர் எடுத்துரைப்பது இங்குக் குறிப்பிடத் தக்கதாகும்.[76]

உருவகம், தற்குறிப்பு ஏற்றம், உறப்பு உறப்பிக் கலவை ஆகிய மூன்று அணிகளைப் பயன்படுத்தி ஆசிரியர் திருமால், பாண்டவர், அவர் கருத்தறிந்து நடக்கும் வேந்தர் ஆகியவர்க்கு ஒருமை வடிவம் தந்து அவர்தம் விழுமிய நோக்கத்தையும், வீரம், ஆற்றல் ஆகியவற்றையும் எடுத்துரைக்கிறார்.[77]

துரியோதனாதியர் படையை இவ்வாறு புலவர் ஒற்றுமைப்படுத்திக் காட்டவில்லை. ஆயினும், துரியோதனாதியர்தம் ஒற்றுமையை, அவர்தம் கொடிய இயல்பு தோன்ற வேறொன்றொடுத்து விளக்குகின்றார். அந்தணர் வடிவங்கொண்டு துருபதன் அவைக்கு வந்து, அருச்சுனன் வில்லாற்றலால் திரௌபதியை மனைவியாகப் பாண்டவர் பெற்றபொழுது, அவர்மீது பொறாமை கொண்டு, ஒன்று திரண்டு அவரை எதிர்த்த துரியோதனாதியர்தம் ஒற்றுமை, படமெடுத்தாடும் கொடிய பாம்பு ஒன்றின் வடிவத்தை ஒத்திருந்தது.

சகுனி, கர்ணன், துரியோதனன், துச்சாதனன் ஆகிய நால்வரும் அப்பாம்பின் நச்சுப் பற்கள்; வரிசையான பிறதம்பியர் யாவரும் அப்பாம்பின் நீண்ட உடம்பும் வாலும் ஆயினர். பாண்டவரை எதிர்த்து அப்பகைவர் ஆரவாரஞ் செய்தது, படமெடுத்தாடும் நாகப் பாம்பின் சீறலை ஒத்ததாயிற்று. அந்நாகம் சிந்திய அழல் போலும் விடமும், அதன் தோற்றம், சீற்றம் யாவும், அருச்சுனனின் அம்புகளாகிய இடிபேறுகளால் சிதைந்து போயின.[77அ]

76. John Franklin Genung: The Working Principles of Rhetoric. Page 499-500 (1901)
IBID Page 84 (1901)

77. வில்லிபாரதம்: அணிவகுப்புச் சருக்கம்: 16. பக். 340-41. (1966)

77அ. வில்லிபாரதம்: திரௌபதி மாலையிட்ட சருக்கம்: 100-101. பக். 87. மர்ரே பதிப்பு (1959).

பாண்டவர் சேனைக்கு வடிவந் தருமிடத்தும் உருவக அணியைப் பயன் படுத்துகிறார் புலவர்; துரியோதனாதியர் சேனைக்கு வடிவந் தருமிடத்தும் உருவக அணியைப் பயன்படுத்துகிறார் புலவர்.[78] அணி ஒன்று எனினும் அதன் மூலம் அவர் உணர்த்தும் உண்மைகள் வேறு. நல்லோர்தம் ஒற்றுமை தமக்கும் பிறர்க்கும் பயன்படுவது என்பது, பாண்டவர் பற்றிய உருவகம் காட்டும் உண்மை.[79] தீயோர்தம் ஒற்றுமை தமக்கும் பிறர்க்கும் தீமையும் அழிவுமே பயப்பது என்பது துரியோதனாதியர் பற்றிய உருவகம் காட்டும் உண்மை.[80]

துரியோதனனும், வீமனும், ஒருவர் மீது ஒருவர் கொண்டுள்ள பகைமை, இருவர் உள்ளத்திலும் ஒன்றாகவே இருந்தது[81] என்று கூற விரும்பும் புலவர், பிறிது மொழிதல் அணியைப் பயன்படுத்தித் தெளிவாக விளக்குகிறார். முள் நிரம்பிய வேலஞ் செடியை முளையில் கிள்ளாமல், வளர்ந்த நிலையில் வெட்ட முயன்றால், வெட்டும் கருவியாகிய நகமே கூர்மழுங்கி வாய் மடிந்து போகும் என்று கூறித் துரியோதனன் தன் காழ்ப்பைப் புலப்படுத்துகிறான். முளையிலேயே கிள்ளியெறிந்து, அழித்துவிட வேண்டிய நச்சுமரம் ஒன்றை நெடுநாள் வளர்த்து முதிரவிட்டால் அஃது என்ன கொடுமையைத் தான் செய்யாது என்று வீமன், தன் உள்ளத்து நிகழும் செற்றத்தை எடுத்துரைக்கிறான். பகைவர், ஆற்றல் பெருக்கி உரம் பெறுவதற்கு முன், தொடக்கத்திலேயே அவரைத் தீர்த்தொழிக்க வேண்டும் என்பது இருவர்தம் நோக்கமாகும். அந்நோக்கத்தினை, ஒரே வகையான கருத்தைக் கொண்டு இருவரும் விளக்குகின்றனர்.

78. வில்லிபாரதம்: திரௌபதி மாலையிட்ட சருக்கம்: 101. பக். 322. வை.மு.கோ பதிப்பு (1959)
திருமுருகாற்றுப்படை: 148-50. நச்சினார்க்கினியர் உரை. உ.வே.சா. பதிப்பு (1956) அடிக்குறிப்பு பக். 55.
சிந்தாமணி: பதுமையார் இலம்பகம்: 123. நச்சினார்க்கினியர் உரை. உ.வே.சா. பதிப்பு (1948) அடிக்குறிப்பு பக். 656
மூவருலா: குலோத்துங்க சோழனுலா: கண்ணி: 144. உ.வே.சா. பதிப்பு (1946) அடிக்குறிப்பு: பக். 103.

79. வில்லிபாரதம்: அணிவகுப்புச் சருக்கம்: 16. பக். 341. வை.மு.கோ. உரை விளக்கம்: வை.மு.கோ. பதிப்பு (1966)

80. வில்லிபாரதம்: திரௌபதி மாலையிட்ட சருக்கம்: 101. வை.மு.கோ. உரை விளக்கம்: பக். 322. வை.மு.கோ. பதிப்பு (1963)

81. வில்லிபாரதம்: வாரணவதச் சருக்கம்: 57. பக். 49. மர்ரே பதிப்பு (1959).

"முளைவரு கூர்முள் வேலை முளையிலே களையின் அல்லால்
நனைவர வளர்ந்தபோது நவியமும் மடியும் அன்றே"[81அ]

என்பது துரியோதனன் கூற்று.

"முளையிலே உயிர்கொல் வதோர் கருவிடம் முற்றி வன் காழ் ஏறி
விளையின் எது செய்யாது?"[81ஆ]

என்பது வீமனின் கூற்று.

இருவர் பகைமையும் ஒரு தன்மையது என்பதை, ஒரு கருத்தையே இருவர் கூற்றுக அமைத்து, அக்கூற்றுகளில் பிறிதுமொழிதலாகிய ஓரணியை அமைத்துத் திறம்பட விளக்குகின்றார் புலவர்.

எந்நிலையிலும், பாண்டவரே வெற்றிக்கும் மேம்பாட்டிற்கும் உரியர் என்பதும் துரியோதனனாதியரே தோல்விக்கும் அழிவுக்கும் உரியர் என்பதும் ஆசிரியர் உட்கிடக்கை; அதற்குக் காரணம் அவரவர் பண்புகளே என்பது அவருடைய கருத்தாகும்.[82]

பாண்டவரைத் தீக்கிரையாக்குதற்கென்றே பகைவர் எழுப்பிய அரக்கு மாளிகை, பாண்டவர் இன்றியே தீக்கிரையாகின்றது. பாண்டவரை அரக்கு மாளிகையில் இருத்தித் தீமூட்டுதற்கென வந்த புரோசனனே, அம்மாளிகையில் இருத்தப் பெற்றுத் தீக்கிரையாகின்றன். பாண்டவர் உள்ளிருக்கப் புரோசனன் வைத்திருந்த தீயை, புரோசனன் உள்ளிருக்க வீமன் வைக்கின்றன். பாண்டவர்பால் பரிவு காட்டும் புலவர், அவர், தப்பியமைக்குரிய காரணம் கூறுகின்றார். வாயுவும், அக்கினியும் நண்பர்கள் ஆதலின், நண்பனின் மகன் என்பது பற்றிச் சுட்டொழித்தற்சமைந்த அக்கினி மறந்தும் கேடு செய்யான் என்கிறார். இவ்வுறவு அறியாத துரியோதனனின் ஆண்மை என்னே ஆண்மையோ என வியக்கிறார். தம் கருத்தை உணர்த்துதற்கு ஏதுத்தற்குறிப்பைத் தக்கவாறு பயன்படுத்துகின்றார். அக்கினி வாயு இருவர் தம் நட்பே, வீமனும், பிறரும்

---

81அ. வில்லிபாரதம்; சூதுபோர்ச் சருக்கம்; 10. பக். 152. மர்ரே பதிப்பு (1959)

81ஆ. வில்லிபாரதம்; சூதுபோர்ச் சருக்கம்; 70. பக். 159. மர்ரே பதிப்பு (1959)

82. வில்லிபாரதம்; சூதுபோர்ச் சருக்கம்; 111, பக். 269, வை.மு.கோ. பதிப்பு (ஆண்டுக் குறிக்கப் பெறவில்லை)
சூதுபோர்ச் சருக்கம்; 112, 115. பக். 270, 272.
வை.மு.கோ. பதிப்பு (ஆண்டுக் குறிக்கப் பெறவில்லை)

தப்புதற்குக் காரணம் என்கிறார்.

மெழுகிநல் ஆலயம் புனைந்து
....... மருச் சுதனையே அழுவான்
என்ன ஆண்மைகொல் என்னிலும்?
என்னிலும் சுடுமோ?
வன்னி தம் பெயர் மருச்சுதன் என்பது மறந்தே.[83]

அருச்சுனன் பாசுபதம் வேண்டிக் கடுந்தவம் மேற்கொண்டபோது, அவன் வெம்மையால் தாக்குறாமல் தண்மை நலம் பெற்றுத் தன் தவத்தைத் தொடர்ந்து செய்தான் என்று கூறயிட்டு, அக்கினி அருச்சுனனுக்குத் தங்கு செய்யாமல், தண்மை செய்த உதவினுன் என்று கூறி, அதற்குரிய காரணத்தைக் கூறுங்கால், மேற்குறித்த கருத்தையே புலப்படுத்துகிறார். காண்டவ வனத்தைத் தனக்குரிய உணவாக்கிய உதவியால், தன்க்கும் அருச்சுனனுக்கும் ஏற்பட்ட நட்புக் கருதியும், தான் விரைந்து உண்ணுதற்கு உடன் உதவிய காற்றின் நட்புக் கருதியும், அக்கினி வெம்மை விளைவியாது, மாறாகத் தண்மை விளைவித்து நலஞ் செய்தான் என்று கூறுகிறார். ஏதுத்தற்குறிப் பேற்றமும், உவமை அணியும் அவர் கருத்தை விளக்குதற்குத் தக்கவாறு பயன்படுகின்றன.[8]

திரௌபதி, நல்லோராகிய பாண்டவர்க்கே உரியவளாதல் வேண்டும் எனவும், தீயோராகிய துரியோதனனேயோ, வேறு பிறரோ அவளை அடைதல் ஆகாது எனவும் புலவர் எண்ணுகிறார். பிற வேந்தரெல்லாம், திரௌபதியின் அழகு காண்பதற்கு மட்டும் வந்தார்[85] எனவும் நீங்கள் அவளை மணத்தற்கு விரைந்து வருக எனவும், பாண்டவர் செல்லும் வழியில் கூவிய குயில்கள் உரைத்தனவாகத் தற்குறிப்பு ஏற்ற அணி கொண்டு கற்பனை செய்கிறார்.

83. வில்லிபாரதம்:வாரணாவதச் சருக்கம்:135.பக்.59.மர்ரேபதிப்பு (1959)
வாரணாவதச் சருக்கம்:136.பக்.219.வை.மு.கோ.உரை விளக்கம்:வை.மு.கோ.பதிப்பு ( )

84. வில்லிபாரதம்:அருச்சுனன் தவநிலைச் சருக்கம்:39.பக்.192.மர்ரேபதிப்பு (1959)
அருச்சுனன் தவநிலைச் சருக்கம்:39.பக்.29.வை.மு.கோ. உரை விளக்கம். வை.மு.கோ.பதிப்பு (1964)

85. வில்லிபாரதம்:திரௌபதி மாலையிட்ட சருக்கம்:14.பக்.268.வை.மு.கோ. உரை விளக்கம். வை.மு.கோ.பதிப்பு (1963).

"மாக்குரல் அளகவின்னி வதுவையின் அமுது காணத்
தாக்குரல் அடிகொள் யானைத் தரணியர் எவரும் வந்தார்
விக்குதல் மின்னார் பொன்பூண்! விரைவுடன் வம்மின்"! என்று
கூக்குரல் விளிப்பபோலும் கோகிலக் குரலும் கேட்டார்[85அ]

பாரதப் போரில், நல்லோராகிய பாண்டவரே வெற்றி எய்துதல் வேண்டும் எனவும், தீயோராகிய துரியோதனுதியர் தோல்வியுறுதல் வேண்டும் எனவும் அவை நிகழ்தற்கு முன்னரே பலர்க்கும் உணர்த்த விரும்புகிறது புலவரின் உள்ளம். துரியோதனனின் தேர் மீது கட்டிய பாம்புக் கொடி, காற்றின் எதிர்த்திசையில் தேர் விரைந்து சென்றபோது, பின்விட்டுத் தயங்கியது எனவும், தருமனுக்கு உதவும் கண்ணனின் கொடியில் உள்ள கருடனைக் கண்டு அஃது அஞ்சினமையும், காண்டவம் எரித்தபோது, பல பாம்புகளை அருச்சுனன் தீக்கிரையாக்கியது போல், பாரதப் போரில் தன்னைக் கொன்றெழித்தல் கூடும் என்று எண்ணி அஃது அஞ்சினமையும், அத்தயக்கத்திற்குக் காரணங்கள் எனவும் கற்பனை செய்து பாடுகிறார்.[86]

பாண்டவர் படையில் முழங்கிய முரசுகள், பிற இசைக் கருவிகளை விட மிக அதிகமாக முழங்குகின்றன. அதற்குக் காரணம், தருமனுடைய கொடியில் தம் போலும் முரசுகள் அமைந்திருந்தமையே. முரசுகளைப் போலவே சங்குகளின் ஒலியும், இயல்புக்கு மேற்பட்டு மிக்கு ஒலிக்கின்றன; அதற்குக் காரணம், கண்ணன் கையில் உள்ள சங்கு, தம் இனத்தைச் சார்ந்தது என்று அவை நினைப்பது தான். போரின் துவக்கத்திலேயே பாண்டவர் வெற்றிக்குரிய தகுதியுடையர் என்று தாம் கருதும் கருத்தை, இவ்வாறு கற்பனை செய்து, தற்குறிப்பு ஏற்ற அணிகளைப் பயன்படுத்திப் பாடுகிறார் புலவர்.[87]

85அ. வில்லிபாரதம்: திரௌபதி மாலையிட்ட சருக்கம்: 14. பக். 75. மர்ரே பதிப்பு (1959)

86. வில்லிபாரதம்: படையெழுச்சிச் சருக்கம்: 63. பக். 385. மர்ரேபதிப்பு(1959)
அணி வகுப்புச் சருக்கம்: 28. பக். 351. வை. மு. கோ. உரை விளக்கம்: வை. மு. கோ. பதிப்பு (1966).

87. வில்லிபாரதம்: முதற்போர்ச் சருக்கம்: 18-19. பக். 389. மர்ரே பதிப்பு (1959)
முதற்போர்ச் சருக்கம்: 18-19. பக். 24-25. வை. மு. கோ. உரை விளக்கம். வை. மு. கோ. பதிப்பு (1957).

பாரதப் போரில், பாண்டவர் உறவும் இழப்புக்கும், துன்பத்திற்கும் இரங்குதல் போல், துரியோதனனுயிர் உறவும் இழப்புக்கும், துன்பத்திற்கும் புலவர் இரங்கவில்லை. அருச்சுனன் புதல்வனான அபிமன்யு பெருவீரம் விளைத்துப் போரில் மாண்டபோது, புலவர் தம் கூற்றாகத் தமது துயரத்தைப் புலப்படுத்துகிறார்.

திருமாலும், அருச்சுனனுமே பாரதப் போரின் வெற்றிக்குப் பெருங்காரணர் ஆவர்.[89] அவர்களை முறையே மாமனாகவும், தந்தையாகவும் பெறும் வாய்ப்பிருந்தும் அபிமன் உயிரிழக்க நேர்ந்ததே எனப் புலவர் கலங்குகிறார். தந்தைக்குத் தந்தையாகிய இந்திரனைப் பாட்டனாகப் பெற்றிருந்தும், பாண்டவர் வெற்றிக்காகத் தம்மையே ஈய முன்வந்த எண்ணற்ற வேந்தர்தம் நட்பு வாய்த்திருந்தும் அபிமன்யு வெற்றி கொள்ள முடியவில்லையே என்று பெரிதும் கலங்குகிறார். காரணகாரியம் காணமுடியாத புலவர் உள்ளம், விதியின் ஆற்றல் மீது தன் எண்ணத்தைப் பதிய வைக்கின்றது. ஊழின் செய்கை வெவ்வேறாக அமையும் போது, அதன் ஆற்றலை அடக்கும் ஆற்றல் உடையார் யாரோ என வினவித் தம் ஆற்றொணாத் துயரை ஆற்றுதற்கு வழி தேடுகிறார்.[90] வேற்றுப் பொருள் வைப்பு, அவர் துயர் புலப்படுத்தும் கருவியாய் அமைந்து, அவருடைய உள்ளத்தை விளக்குகின்றது.

மாயனும் திருமாமன்; தனஞ்சயனும் திருத்தந்தை
வானோர்க்கு எல்லாம்
நாயகனும் பிதாமகன்; மற்று ஒருகோடி நராதிபராம்
நண்பாய் வந்தோர்
சேயனும் அபிமனுவாம், செயத்திரதன் கைப்படுவான்
செயற்கை வெவ்வேறு
ஆயநாள்அவனிதலத்து அவ்விதியை வெல்லும் விரகு
ஆர் வல்லாரே?[90அ]

---

88. வில்லிபாரதம்: பதினான்காம் போர்ச் சருக்கம்: 144. பக். 45. மர்ரே பதிப்பு (195

89. வில்லிபாரதம்: பதினெட்டாம் போர்ச் சருக்கம்: 52 பக். 625.
வாசுதேவனைப் படைத்துணை அழைத்தசருக்கம்: 14. பக். 331.
மர்ரே பதிப்பு (1959)

90. J. Jolly: Fate (Hindu) Encyclopaedia of religion and Ethics.
Vol.5. page 790 (1913)

90அ. வில்லிபாரதம்: பதின்மூன்றாம் போர்ச் சருக்கம்: 131. பக். 487. மர்ரே பதிப்பு (1959)

துரியோதனனின் தம்பியர் தொண்ணூற்றொன்பதின்மரும் வீமன் கைப்பட்டு மாய்ந்த பொழுது, அவர் பொருட்டுப் புலவர் வருந்தவில்லை. அவருள் நல்லோனும் இருந்த விகர்ணன் மாய்ந்தபொழுதும், தம் கூற்றாக அவர் எதுவும் கூறவில்லை. நல்லோராயினும் தீயோர்க்குத் துணைபோவரெனின், அவருந்தீயோர் உறும் நிலையையே உறுவர் என்பது புலவர் கருத்து.[91]

இனி, வெவ்வேறு காவிய மாந்தர் தம் பண்புகளை விளக்கும் புலவர் வெவ்வேறு அணிகளை ஆளும் திறம் ஆராயத்தக்கது.

அறநெறியைக் கடைப்பிடித்து அதனை எடுத்துரைத்தலே தொழிலாக உடைய தருமன் செயலாண்மையும் உடையன் என்பதனை மிகை உயர்வு நவிற்சி அணி கொண்டு விளக்குகின்றார். மண்டபம் கட்டுதற்கு வேண்டிய இரத்தினங்களைப் பெறுதற்கான நெறிகளை மயன் உரைத்து முடிக்கும் முன்னரே, அவற்றைக் கொணருமாறு வீரர் பலரைத் தருமன் ஏவ, அவர் விரைந்து அவைகளைக் கொணர்கின்றனர். சஞ்சயன் தூது சென்று கொணர்ந்த செய்தியைக் கேட்பதற்கு முன்னமேயே, தனக்குற்ற வேந்தர்கட்குத் தான் போர் புரிய முடிவு செய்ததை, அவன் ஓலை போக்கித் தெரிவிக்கின்றான்.[92]

அறம் மறம் என்னும் இரண்டின் எல்லைகளில் நிற்பாரால் உலகுக்கு விளையும் நன்மை தீமைகளை ஆய்ந்து பயன் காணும் ஆய்வுத் திறன் உடையது வீமன் உள்ளம். அறத்தின் வடிவமாகத் திகழ்பவன் தருமன்; தீமையே ஒருவடிவமெடுத்தாற் போல விளங்குபவன் துரியோதனன்.[93] வீமன் இவ்விருவர் இயல்பையும் நன்கு ஆய்கின்றான். துரியோதனனின் கொடுமை, காரண காரிய ஆராய்ச்சியின்றியே, வெளிப்படையாக அவனுக்கு விளங்குகிறது.[94] அத்தகைய தீயோனைத் திருத்த முயலும் தருமனின் அறப்பண்பு, கொடுமையின் இருப்பிடமாக விளங்கும் துரியோதனன்பால் செல்லாது

---

91. அடிக்குறிப்பு 89ல் செய்திகள் கண்டுக் கருதத்தக்கன. பக்125

92. வில்லிபாரதம்:இராசசூயச் சருக்கம்:5.பக்.126.ம
படையெழுச்சிச் சருக்கம்:2.பக்.375. மர்ரே பதிப்பு (1959)

93. வில்லிபாரதம்:பதினாறாம்போர்ச் சருக்கம்:83.பக்.564.
வாரணாவதச் சருக்கம்:1.பக்.41. மர்ரே பதிப்பு (1959)

94. வில்லிபாரதம்:சூதுபோர்ச் சருக்கம்:293.பக்.159.
பதினெட்டாம் போர்ச் சருக்கம்:132.பக்.639.
மர்ரே பதிப்பு (1959).

என்பது அவன் கொள்ளும் முடிவு. நேரடியாகத் தீமை விளைக்கும் கொடியோனது கொடுமையிலும், பயன்படாத நின்று, தன் இயல்புக்கு மாறாகத் தீமை விளைக்கும் தருமனது அருட் பண்பு அஞ்சத்தக்கது என்று கருதுகிறான் அவன்.

வீமனின் இத்தகைய உள்ள நிலையைப் புலப்படுத்தற்கு, அகமலர்ச்சி அணி புலவர்க்குத் தக்க வகையில் பயன்படுகிறது.[95]

வில்லாண்மையால் செயல் திறம் மிக்க அருச்சுனன், தருமனைப் போலப் பற்பல அறங்களையும் பேணும் அறநெறியாளன் என்று காட்ட விழைகின்றது புலவர் உள்ளம். ஒப்புமைக் கூட்ட அணியைப் பயன்படுத்தித் தம் விழைவுக்கு வடிவம் தருகிறார் புலவர். சூதின் தீமை கூற வந்த தருமன், உள்ளத்தில் வஞ்சனையோடு சினம் கொள்ளல், பிறர் குற்றங்களைத் தூற்றுதல், நட்புச் செய்தபின் ஐயுறல், வஞ்சனம் பிழைத்தல், ஆகிய பிற தீமைகளையும் உடன் சேர்த்துச் சகுனி முதலிய தீயோர் முன் எடுத்துரைக்கிறான். நிரை கவர வந்த தனக்குத் தோற்ற துரியோதனன் போரிற் பிற்பட்ட நிலையின் இழிவை எடுத்துரைக்கும் அருச்சுனன், இரவலர், இளையவர், வேந்தர் புகழ் பாடுவோர், தூதுவர், முதியவர், வேதியர், மகளிர், போர் அஞ்சுவார், ஐம்பெருங்குரவர் ஆகியோரைக் கொல்லலின் இழிவையும் பாவத்தையும் எடுத்துரைக்கிறான். பற்பல அறங்களையும் தருமன் போல் தேர்ந்து கடைப்பிடிப்பவன் அருச்சுனன் என்பதை ஒப்புமைக் கூட்ட அணியால் புலவர் விளக்குவது அவர்தம் விழைவுக்குத் தக்க எடுத்துக் காட்டாகின்றது.[96]

குலமும், எழிலும், செல்வமும், அரச் செயல் நலமும் உடையவராயினும், கல்வியும், அதனாலாய அறிவும் இலாதவர், மணமற்ற முருக்க மலர் போல், தாம் பெற்ற அனைத்தாலும் பயன் கொள்ளாதவர் என்பது நகுலனின் கருத்து. கல்வியும் அறிவுமே பிற நலங்கள் அனைத்தையும் ஆய்ந்து பயன் கொள்ள உதவுவன என்பது அவன் ~~கொண்ட தெளிவு. அதனைக் கொள்கையாகவும் கொண்டவன் அவன்.~~[97]

---

95. வில்லிபாரதம்; திருட்டினன் தூதுச் சருக்கம்; 13. பக். 90-91. வை. மு. கோ. உரை விளக்கம்; வை. மு. கோ. பதிப்பு (1966)

96. வில்லிபாரதம்; சூதுபோர்ச் சருக்கம்; 161. பக். 171. மர்ரே பதிப்பு (1959)
சூதுபோர்ச் சருக்கம்; 162. பக். 303. வை. மு. கோ. உரை விளக்கம் வை. மு. கோ. பதிப்பு (ஆண்டுக் குறிக்கப் பெறவில்லை)
நிரைமீட்சிச்சருக்கம்; 73. பக். 313. மர்ரே பதிப்பு (1959)

கொண்ட தெளிவு. அதனைக் கொள்கையாகவும் கொண்டவன் அவன்.[97]

துரியோதனன், திருந்தமாட்டான் என்ற தன் முடிவினைத் தன் உள்ளத்தில் திண்மையாய் அறுதியிட்டுக் கொண்டு, புறத்தில் பிற உடன் பிறந்தார்க்கும் கண்ணனுக்கும் துரியோதனன் பற்றிய தன் கருத்தை, நகுலன், வினவின் மூலமாக வெளியிடுகிறான். தன்னறிவில்லாதவன், பிறர் சென்று கற்பிக்க அதனால் அறிவுத் தெளிவு பெறுவானோ என்று வினவுகிறான். துரியோதனனின் நிலையைவெளியிடுவதன் மூலம் கல்வியும் அறிவுமே எவரையும் தெளிவு செய்யும் என்னும் கொள்கையை நிறுவுகிறான். நகுலனின் இத்தகைய மனப்பான்மையைப் புலவர் பிறிதுமொழிதலைக் கொண்டு நன்கு விளக்குகிறார்.[98]

வரம்பற்ற ஞானத்தை எவற்றினும் தலையாயதாகக் கருத வேண்டும் என்ற கோட்பாடு உடையவன் சகதேவன்.[99] அக்கொள்கை பற்றியே அவன் தத்துவஞானம் உடையவனாகவும் விளங்கிறான். ஆயினும், ஞானம் போலவே பக்தியும் உயர்ந்தது என்ற கருத்தும் உடையவன் அவன். பாரதப் போர் நிகழாமல் தடுத்தற்குரிய செயல்களுள் கண்ணனின் கால்களைத் தளைபூட்டிப் பிணித்தலும் ஒன்று என அவன் கண்ணனிடம் கூறிய போது, அது யாங்ஙனம் இயலும் எனக் கண்ணன் அவனை வினவுகிறான். சகதேவன், கண்ணனைக் கட்டுதற்குத் தன் தத்துவஞானத் திறத்தினைப் பயன்படுத்தி ஆராய்ச்சி மேற்கொள்ளவில்லை. அறிவால் அறிந்த ஞானத்தால் செயற்படுவதினும், அன்பால் உணர்ந்த உள்ளத்தால் செயற்படுவதே கருதியது முடிக்கும் என்று தெளிந்த சகதேவன், கண்ணனைத் தன் கருத்தால் பிணித்தான் என்று புலவர் எடுத்துரைக்கிறார். சகதேவனின் அன்பு நெறியை - பக்தி உணர்வை - புலப்படுத்தற்குப் புலவர், ஏகதேச உருவகத்தைப் பயன்படுத்துகிறார்.[100]

சகதேவனைப் போலவே, விதுரன் கண்ணனிடம் எல்லையற்ற அன்பு உடையவன்.

97. வில்லிபாரதம்: பழம்பொருந்த சருக்கம்: 19. பக். 275. மர்ரே பதிப்பு (1959)
திருக்குறள்: 409, 407, 408.

98. வில்லிபாரதம்: கிருட்டிணன் தூதுச் சருக்கம்: 29. பக். 110. வை. மு. கோ. உரை விளக்கம்: வை. மு. கோ. பதிப்பு (1966)

99. வில்லிபாரதம்: பழம்பொருந்த சருக்கம்: 20. பக். 27. மர்ரேபதிப்பு (1959)

100. வில்லிபாரதம்: கிருட்டிணன் தூதுச் சருக்கம்: 37. பக். 119. வை. மு. கோ. உரை விளக்கம்: வை. மு. கோ. பதிப்பு (1966).

கண்ணனை இறைவனாகப் பேணி அவனை மிக உயர்த்தியும் தன்னை மிகத் தாழ்த்தியும் தன் அன்பைப் புலப்படுத்துகிறான். கண்ணன் அறிதுயில் புரிந்த திருப்பாற்கடல், ஆதிசேடன், ஆலிலை, அவனுருவிய சுருதி ஆகியவை போலத் தன் குடில் மாதவஞ் செய்திருந்தாலன்றித் தாமரையும் அவ்விடத்திற்குக் கண்ணன் எழுந்தருளான் என்றும், கண்ணன் விரும்பியுறைவனவாகிய அவை போல் உயர்ந்ததுவும் ஆகாது; தவப்பேறும் கொள்ளாது. வறிதே தான் வாழும் இருப்பிடமாக அமைந்த அதன்பால் அவன் வந்துறைகிறான் எனின், அஃது அவன் கருணை பற்றியதே என்றும் தன் அன்பினை அவனிடத்திலேயே புலப்படுத்துகிறான். விதுரனின் தாழ்ந்து நிற்கும் நிலை-அன்பில் ஆழ்ந்து நின்று தன்னைப் புலப்படுத்தும் நிலை- ஐய உவமை, உலக நவிற்சி ஆகிய அணிகள் கொண்டு அணி செய்கின்றார் புலவர்.[101]

நல்லோர் பண்புகளை இவ்வாறு பற்பல அணிகளைக் கொண்டு விளக்கும் புலவர், தீயோர் இயல்புகளையும், பல அணிகளைக் கொண்டு விளக்கிக் காவியத்தின் நோக்கத்தினை நன்கு நிறுவுகிறார்.

சூதில் ஐவரையும் தோற்ற பிறகு, திரௌபதியைப் பணயம் வைக்கலாம் என்ற சகுனி ஆலோசனை கூறியபோது, விதுரன் மனம் வெதும்புகிறான். சூதாட்டத்தையும் அதன் வாயிலாகப் பாண்டவர், அவருடைய உடைமைகள் ஆகியவை துரியோதனாதியர்க்கு ஆகியமையையும் தாங்கிக் கொண்ட விதுரன், திரௌபதி பணயப் பொருளாகப் படுவதைத் தாங்கிக் கொள்ள மாட்டாதவனாகின்றான். துரியோதனாதியர் வரம்பு கடந்து செல்வதற்குக் காரணம், தீமை என்று தெரிந்தும், அதை எடுத்துரைத்துக் கண்டிக்காத திருதராட்டிரனது போக்கே காரணம் ஆகும் என்று அவன் உணருகிறான். கண்ணிலனாயினும், அவன் கேட்டு உணருமாறு - தான் உணர்ந்ததை அவன் செவிப்படுமாறு - நேரே எடுத்துரைக்கிறான்.

"மாறுபாடு கொண்ட உள்ளத்தில் வஞ்சனைக் கருத்து உடையவர்களாம் நின் புதல்வர் பாண்டு புதல்வர்க்குத் தீமை செய்தால், பாண்டவர்க்கு உருகுபவன் போல் பாவனை காட்டுகின்ற நீ, திரௌபதியைப் பணயப் பொருளாக்குவதைக் கேள்வியுற்று

101. வில்லிபாரதம்: கிருட்டினன் தூதுச் சருக்கம்: 80. பக். 156-57. வை.மு.கோ உரை விளக்கம்: வை.மு.கோ. பதிப்பு (1966).

வாளா இருப்பதும் அதற்கு உடன் படுவதும் தகுதியோ? மிருகமும் பறவையும் போல மாந்தரை நடத்தும் இரக்கமற்ற மனம் உடைய உன்னிடம் நாங்கள் வாழ வந்தது எங்கள் அறிவின்மையே" என்று கடிந்துரைக்கிறாள்.[102] திருதராட்டிரனின் வஞ்சத்தைப் பழிப்பதற்கு வஞ்சப் பழிப்பணி தக்கவாறு பயன்படுகிறது.[103]

நல்லன தீயன ஆய்ந்து, கொள்ளுவன கொள்ளவும், தள்ளுவன தள்ளவும் துரியோதனன்பால் இல்லை. தான் நினைப்பதையே தக்கது என்று முடிவு செய்து அதனைச் செயற்படுத்தும் இயல்புடைய அவனிடம் வழக்கு ஆராய்ச்சி அறிவு சிறிதும் இல்லை.[104] அவன் கொடியில் உள்ள பாம்பின் இயல்பே அவனுடைய இயல்பாக உள்ளது. அவன் இயல்பினை மாற்றுவது, பாம்பின் இயல்பினை மாற்ற முயல்வது போலும் வறிய முயற்சியாகும். இதனைக் கண்ணன் வாயிலாகப் புலவர் எடுத்துரைக்கிறார். கருத்துடை அடைகொளி அணி அதற்குத் தக்கவாறு பயன்படுகின்றது.[105]

இருள் மிகுந்த இராக்காலத்திலேயே முழுமதியின் எழில் நன்கு விளங்கும். அதனையே உலகத்தார் போற்றிப் பயன்பெறுவர். ஒளி மிகுந்த பகற்காலத்தில் அம்மதி எழில் குன்றி நிற்கும். கதிரவன் ஒளியிற் படிந்து பயன் காணுவோர், அதன் முன் நிற்கும் மதியின் தன்மை கண்டு இரக்கமே கொள்வர். இஃது உலகியல்பு.[106] துச்சாதனனின் இயல்பு, உலகியல்புக்கு மாறுவது. இராக்காலத்தில் எழிலொடு திகழும் நிலை - எல்லோரும் போற்றிப் பயன்பெறும் நிலை - அவன் எளிதெனத் தாழ்த்தி

102. வில்லிபாரதம்: சூதுபோர்ச் சருக்கம்: 183. பக்.174. மர்ரே பதிப்பு (1959)

103. வில்லிபாரதம்: சூதுபோர்ச் சருக்கம்: 184. வை.மு.கோ. உரை விளக்கம்: வை.மு.கோ. பதிப்பு (ஆண்டுக் குறிக்கப் பெறவில்லை).

104. வில்லிபாரதம்: வாரணாவதச் சருக்கம்: 100. பக்.55.
சூதுபோர்ச் சருக்கம்: 39. பக்.155. மர்ரே பதிப்பு (1959)

105. வில்லிபாரதம்: கிருட்டிணன் தூதுச் சருக்கம்: 93. வை.மு.கோ. உரை விளக்கம் பக்.166. வை.மு.கோ. பதிப்பு (1966)
கிருட்டிணன் தூதுச் சருக்கம்: பக்.167. வை.மு.கோ. உரை விளக்கம்: வை.மு.கோ. பதிப்பு (1966)

106. நெய்தற் கலி: 2. வரி: 3-4; 4: வரி 16-17.

மதிக்கிறான். கதிரவன் தோன்றுங்காலையில், ஒளி குன்றி நிற்கும் அதன் இயல்பிற் கிரங்காது, அதனைப் பின்னும் தாழ்ந்ததாகக் கருதுகிறான்.[107] பிறிதுமொழிதல் அணி அவன் இவ்வாறு படைப்பின் பொருள்களை மாறுகக் காணும் இயல்புடையவன், அதனுள் தீமையே இயல்பாக அமைந்தவன் என்பதைக் காட்டுதற்குப் பயன்படுகிறது. தன் உணர்வு மூலம், பாண்டவரை மிக இழித்துத் தாழ்த்தித் தன் தீய தன்மையை மேலும் விளங்க அறிவிக்கிறான்.[108]

தீயோர் மிகுந்த பொதுஅறிவினராதல் உண்டு. ஆயினும் அப்பொது அறிவினைத் தாம் திருந்துவதற்கு அவர்கள் பயன்படுத்துவது இல்லை. தமக்கியல்பான தீமையைக் காட்டுவதற்கே அதனைப் பெரிதும் பயன்படுத்துவர். தீயோர் இயல்பு அது என்று விளக்க முற்படுகிறார் புலவர். சகுனியின் இயல்பில் வைத்துத் தம் கருத்தை நன்கு விளக்குகிறார் அவர். படை வல்லமையால் போர்க்களத்தில் பாண்டவரை வெல்லுதல் என்றைக்கும் இயலாத செயல் என்பதை நன்குணர்ந்தவன் சகுனி.[109] ஒரு பிறவியில் அல்லாமல் ஏழு பிறவியிலும் எக்காலும் பாண்டவரை வீரத்தால் வெல்லுவது இயலாதது என்பது அவன் கண்ட முடிவு. அம் முடிவு கொண்டு அவன் துரியோதனனை நெறிப் படுத்த முயலவில்லை. தானும் திருந்துவது பற்றி நினைக்கவில்லை. போர்நெறி விடுத்துச் சூதுநெறி கொண்டு வெல்லாம் எனத் தன் தீய இயல்பைச் செயற்படுத்துதற்கே தன் பொதுஅறிவினைப் பயன்படுத்துகிறான். சகுனியின் இயல்பு கொண்டு உலக வழக்கு நவிற்சி அணியால், தீயோர் தம் பொதுஅறிவு, தீமைக்கே துணை போகிறது என்பதைப் புலவர் எடுத்துரைக்கிறார்.[110]

துரியோதனனும் சகுனியும் போலக் கன்னன் இயல்பில் தீயவன் அல்லன் ஆயினும் இனத்தியல்பால் தீயவன் ஆயினன் என்பதைப் புலப்படுத்த விரும்புகிறார் புலவர்.[111]

---

107. வில்லிபாரதம்;சூதுபோர்ச் சருக்கம்;7.பக்.151. மர்ரே பதிப்பு (1959)

108. வில்லிபாரதம்;சூதுபோர்ச் சருக்கம்;பக்.11. வை.மு.கோ.பதிப்பு (ஆண்டுக் குறிக்கப் பெறவில்லை)

109. வில்லிபாரதம்;சூதுபோர்ச் சருக்கம்;21-22.பக்.154. மர்ரே பதிப்பு (1959)

110. வில்லிபாரதம்;சூதுபோர்ச் சருக்கம்;24.வை.மு.கோ. உரை விளக்கம். பக்.26-27. வை.மு.கோ.பதிப்பு(ஆண்டுக் குறிக்கப்பெறவில்லை

111. வில்லிபாரதம்;பதினேழாம் போர்ச் சருக்கம்;152. பக்.359. வை.மு.கோ பதிப்பு (1957).

கொடைப் பண்பால் அவன் பெற்றிருந்த புகழ், அவனை நல்லோனாக்க உதவவில்லை. பழுதுபட்ட சுவரைப் புறத்தில் கோலம் செய்வதுபோல், அழுக்காறு செருக்கு முதலிய இயல்புகளால், திருந்தாமற் கிடந்த மனத் தீமையைப் புறத்தில் புலப்படாதவாறு மறைத்தற்கே அவனுடைய கொடைப் புகழ் பயன்பட்டது. சேர்ந்த இனத்தால் தீயோனாகிய அவன் இயல்பை ஒட்டியே கொண்டு விளக்குகிறார் புலவர்.[112]

தீயோர் தம் சொற்கேட்டு நல்லோர்க்குத் தீமை புரியச் செல்லும் நல்லோர், அந்நல்லோர் தம்போல்பவர் என்று அறிந்ததும் தீயோர் சொல் விட்டு, நல்லோர்க்கு நல்லனவே புரிவர் என்பதும், தீயோர் விளைக்கும் தீமை எத்துணைக் கொடிது என்பதை, அவர் தீமைக்கு இலக்காகும் நல்லோரே அவர்க்கு உணர்த்திக் காட்டுவர் என்பதும், தகுதியிலாராயினும், தகுதியுடையார் இடத்தைக் கொள்ளின், அத்தகுதியுடையார் போல் தகுதியுடையாரால் மதிக்கப் பெறுவர் என்பதும் புலவர் தம் காவியத்திற் காட்ட விரும்பிய பல கோட்பாடுகளில் ஒரு சிலவாகும். தம் கோட்பாடுகளை நிறுவிக்காட்டுதற்குப் பிறிதின் நவிற்சி அணியைப் பயன்படுத்துகிறார் அவர்.

துரியோதனன் வேண்டுகோளை ஏற்று, அவன் போல் பாண்டவரும் தனக்குப் பெரு விருந்தளிக்க வேண்டும் என்று விழைந்து அவரைச் சோதிக்க வந்த துருவாச முனிவன் பாண்டவர்க்கு உதவிய கண்ணனருளால், பசி தீர்ந்த பின்னர், தன் மனம் விட்டுப் பாண்டவர் பண்பைப் பாராட்டுகிறான். குறிப்பாகத் தருமனை, "பேர் அறத்தின் மகனே! உன்னை அரசு என்று கொண்டோர் அல்லால் எதிர்ந்தோரில் யாரே வாழ்வார் ஞாலயத்தில்?"[113] என்று பாராட்டி, தீமை விளைக்க முயன்ற துரியதேனே அதற்கிலக்காவான் என்று குறிப்பிடுகிறான்.[114]

பாண்டவர் ஐவரையும் துரியோதனன் காட்டுக்கு அனுப்பினான். பாரதப் போரில் துரியோதனன் தம்பியர் ஐவரை வீமன் விண்ணுலகுக்கு அனுப்பினான்.

112. வில்லிபாரதம்: சூதுபோர்ச் சருக்கம்: 6. பக். 7-8. வை.மு.கோ. உரை விளக்கம். வை.மு.கோ. பதிப்பு (ஆண்டுக் குறிக்கப்பெறவில்லை)

113. வில்லிபாரதம்; துருவாசமுனிச் சருக்கம்: 13. பக். 271. மர்ரே பதிப்பு (1959)

114. வில்லிபாரதம்: பழம்பொருந்து சருக்கம்: 13. வை.மு.கோ. உரை விளக்கம். பக். 395. வை.மு.கோ. பதிப்பு (1964).

இவ்வகையில் அவன் துரியோதனனை ஒத்தவன் ஆகிறான்.[115]

இயல்பில் பேடியாகிய உத்தரன், பேடி வடிவில் இருந்த அருச்சுனனுக்குத் தேர் செலுத்த முனைந்து அமையாட்டாமையால் அஞ்சிப் பின்வாங்குகிறான். பிறகு அருச்சுனன் தன்னை இன்னான் என்று உணர்த்தியதும், அருச்சுனனின் ஆண்மையும் வீரமும், உத்தரனை அவனுக்குரிய தேர்ப்பாகன் ஆக்குகின்றன. பாரதப் போரில் தேர் செலுத்திய கண்ணனின் நிலையை, நிரைமீட்சிப் போரில் தேர் செலுத்திய உத்தரன் அடைகிறான். அருச்சுனனின் உண்மைத் தோற்றமும் ஆற்றலும், உத்தரனின் இயல்பான பேடிமையை மாற்றி, தான் போற்றிப் பயன்பெறும் கண்ணனின் தகுதியை உத்தரனுக்கு அளிக்கிறான் அருச்சுனன். சொல்வதைச் சுற்றுவழியாக இன்னமைபடச் சொல்வதைத் தனக்கு இலக்கணமாக உடைய பிறிதின் நவிற்சி அணி புலவர்க்குத் தக்கவாறு உதவுகின்றது. பேடிவடிவு கொண்ட வீரன், பேடியை வீரனாகக் காண்பதற்கு - புலவர் காட்டுதற்குச் - சிறப்புறப் பயன்படுகிறது.[116]

காவியத்துள் வரும் நல்லோர் தீயோராகிய காவிய மாந்தர்தம் இயல்புகளைக் காவிய ஆசிரியராகிய தாம் நேரே உணர்த்துவதோடு உலக மாந்தர் பலர் வாயிலாகவும் உணர்த்துவது காவிய மாந்தர் தம் இயல்புகளை மேலும் நன்கெடுத்துக் காட்டியதாக அமையும் என்று கருதுகிறார். ஆதலின் காவியத்துள் வரும் முக்கிய நிகழ்ச்சிகள் பற்றி உலகியலார் தம் கருத்தைப் புலப்படுத்தும் வகையில், அவர் வாயிலாகத் தம் காவிய மாந்தர்தம் பண்புகளை மேலும் தெளிவுபெற விளக்குகிறார்.

துகிலுரிதற்காளாகி அவையில் கண்ணீர் விட்டுத் திரௌபதி அலறியதைக் கேட்டும் உருகாமலிருந்த திருதராட்டிரன் நெஞ்சம் இரும்பு நெஞ்சம் என்று ஊரார் கருதுகின்றனர். அவன் நெஞ்சம் பாண்டவர் நலம் கருதி உண்மையில் உருகும் நெஞ்சமாக இருந்திருப்பின் சூதாட்டமும் திரௌபதி துகிலுரிதலும் ஆகிய கொடுஞ்செயல்கள் நிகழ்ந்திரா என்பது

---

115. வில்லிபாரதம்; நான்காம் போர்ச்சருக்கம்; 28. பக். 412. மர்ரே பதிப்பு (1959)
நான்காம் போர்ச்சருக்கம்; 28. வை.மு.கோ. உரை விளக்கம். பக். 124-25. வை.மு.கோ. பதிப்பு (1957)

116. வில்லிபாரதம்; நிரைமீட்சிச் சருக்கம்; 45. பக். 309. மர்ரே பதிப்பு (1959)
நிரைமீட்சிச் சருக்கம்; 46. பக். 131. வை.மு.கோ. உரை விளக்கம்; வை.மு.கோ. பதிப்பு (1960).

அவர்தம் கருத்து. சூதுக்கிரையாகிய பாண்டவரும், சூதால் வென்ற நூற்றுவரும் ஆகிய இவ்விரு திறத்தார் செயல்களைக் கண்ணுற்ற அரும்பெரும் வேந்தர், சூது தகாது என்று தடுத்திருத்தல் வேண்டும் எனவும், பெண்ணொரு உடன் பிறந்திருந்தும், பெண் உற்ற இழிவைப் பார்க்க நேர்ந்த தீச்செயல் கண்டு சினமுறாமற் போயித் தம் கடமை வழுவினர் எனவும், தம் உள்ளத்திற் பட்டதைப் பட்டவாறு தமக்குள் எடுத்து மொழிகின்றனர் உலகியலார். அவர் கூற்றால், பாண்டவர், துரியோதனனுதியர், அவைக்களத்திருந்த பிற பெருவேந்தர் ஆகியவர்தம் இயல்புகள் யாவற்றையும் உலகியலார் வாயிலாக ஒருசேர உணர்த்தி நல்லோர் தீயோர், அயலோர் ஆகியவர்தம் இயல்புகள் இத்தகையன என்பதைப் புலவர் திறம்பட விளக்குகிறார். உலகவழக்கு நவிற்சி அணி, உலகியலின் பரந்த அடிப்படையில் காவிய மாந்தர்தம் இயல்புகளை விளக்குதற்கு மிகப் பொருந்தி அமைகின்றது.[117]

இதுவரை ஆய்ந்தவற்றால், புலவர் தாம் உணர்ந்த உண்மைகளைத் தம் தேர்ந்த உணர்த்தும் முறைகளால் - பற்பல அணிகளைத் திறம்படக் கையாளும் முறைகளால் - கற்போர் மனங்கொள்ளும் வகையில் உணர்த்திக் காவிய நோக்கத்தை நிறைவேற்றியுள்ளார் என்பதை நன்கு உணரலாம்.

எண்ணங்களின் செழுமையை விளக்குதற்பொருட்டுப் பற்பல கற்பனைக் கூறுகளையும் வடிவங்களையும், புலவர் தம் பாடல்களில் அமைத்துக் காட்டுவர். கற்பனையின் துணையின்றிச் சிந்தனை வாழ்வதற்கு வழியில்லை. பாட்டில் பற்பல கருத்துக்களைப் புகுத்தி வைப்பினும், ஓவியம் போல் புலன்களுக்கெட்டும் வகையில் கற்பனை வடிவந்தோன்ற அமைக்கப் பெறவில்லையேல், அவை இலக்கியத்தில் அமைவதாற் பயனில்லை. பாட்டில் அமைந்துள்ள கற்பனை வடிவத்தில் நோக்கத்தினைத் தழுவிக் காண்டலும் எளிதன்று. காரணகாரியத் தேவையை விலக்கி இது இவ்வாறுதல் வேண்டும், இவ்வாறிருப்பின் இது நன்று என்னும் விளக்கங்களையும் விடுத்துப் புலவர்தம் கட்டற்ற படைப்பாற்றல் பற்றிய உணர்வு கொண்டே அவருடைய நோக்கத்திலைப் புரிந்து கொள்ள வேண்டும்.[118]

---

117. வில்லிபாரதம்; சூதுபோர்ச்சருக்கம்; 222. பக். 179. மர்ரே பதிப்பு (1959)
சூதுபோர்ச் சருக்கம்; 223. பக். 182. வை. மு. கோ. பதிப்பு
(ஆண்டுக் குறிக்கப் பெறவில்லை)

118. John. F. Genung: The Practical Elements of Rhetoric. Page 56 (1887)

உவமைகள், ஒப்புமை வகை பற்றிய பற்பல அணிகள் ஆகியவற்றைத் தம் விருப்பம் போல், பயன்படுத்துவதில் பெரும் மகிழ்ச்சிக்காகவே, புலவர் கையாளலாம். நேரான குறிப்பிட்ட தொடர்களை விடுத்து அணி நயந் தோன்ற விளங்கும் சொற்களை அவர் கையாளுதற்குக் காரணம், தாம் உணர்த்த விரும்பும் உண்மைகளை மேன்மேலும் அழகும் ஆற்றலும் தோன்ற உணர்த்தலாம் என்னும் எண்ணமே என்று ஆய்வாளர், அணிகளையும், சுவைமிக்க சொல், சொற்றொடர் ஆகியவற்றையும் புலவர் அமைத்தற்குரிய காரணங்களை ஆய்ந்து உணர்த்துகின்றனர்.[119]

இக்கருத்துக்களை உளங்கொண்டு, புலவர் பயன்படுத்தியுள்ள அணிகளையும் அவற்றின் வாயிலாக அவர் உணர்த்தியுள்ள உண்மைகளையும் கூர்ந்து நோக்கின், ஆற்றல் மிக்க உண்மைகளைத் தம் சிறந்த உணர்த்துந் திறத்தால், கற்பார் உள்ளம் கொள்ளுமாறு உணர்த்தியுள்ளார் என்பதனை நன்கு உணரலாம்.

புலவர் எத்தனைச் சொற்களை, எத்தனை அணிகளைப் பயன்படுத்துகிறார் என்பது கருத்தன்று. அவற்றை அவர் எவ்வாறு பயன்படுத்தியுள்ளார் என்பதைப் பொறுத்தே அவர்தம் உயர்வு விளங்கும். புலவர் தம்மையும் அறியாது, தம் அநுபவத்திற்கேற்ப, தாம் உணர்த்த விரும்பும் உண்மைகட்கேற்ப, அவற்றைப் பயன்படுத்துவர். இன்ன சொல்லையோ அணியையோ இவ்வாறு தாம் எடுத்தாண்டதாகப் பின்னர் அவர் விளக்கினும், அது அறிவு நிலையில் நின்று அவர் உரைக்கும் காரணம் எனவும் உண்மைக் காரணம் புலவர்க்கு இயல்பாக அமைந்த உணர்த்தும் திறமே[120] எனவும் ஆய்வாளர் கருதுகின்றனர். அவ்வகையில், செயற்கை எனவுமின்றித் தம் உணர்த்துந்திறத்திற்கேற்ப, அணிகளையும் சுவைமிக்க தொடர்களையும் வில்லி மிகப் பொருந்துமாறு பயன்படுத்தியுள்ளார் என்பது [illegible] இன்புறத்தக்கது.

119. John F. Genung: The Practical Elements of Rhetoric. Page 55 (1887)

120. I.A. Richards: Science and Poetry. Page 38
Quoted by M. Varadharajan in Illakkiya Thiran
Page 270 (1965).

## இயல் - 6

## வில்லிபாரதப் பெருமாந்தர் காட்டும் மனித மாண்புகள்

பாரதம், பாத்திரப் படைப்பில் தன்னிகரற்றது என்பது முன்னும் இயலில் குறிப்பிடப்பட்டது.[1] மூல நூலாகிய வியாச பாரதத்தில் நூற்றுக்கணக்கான மாந்தர் படைக்கப்பட்டுள்ளனர்.[2] சுருங்கிய நூலாகிய வில்லிபாரதத்துள், ஏறத்தாழ முந்நூறு பேர் படைக்கப்பட்டுள்ளனர்.[3] மூல நூலையோ, வழி நூலாகிய வில்லிபாரதத்தையோ, பயிலுங்கால், நூலைக் கையில் ஏந்தித் தனித்ததொரு சூழ்நிலையில் அதனைப் பயில்கிறோம் என்ற உணர்வு ஏற்படுவதில்லை. பல்வகைக் காவிய மாந்தரும் நம் கண்ணெதிரே நின்று நம்மொடு உரையாடுவதாக உணர்கிறோம். காவிய நிகழ்ச்சிகள் பெருகப் பெருக, அவற்றின் சூழ்நிலைக்கேற்ப, நாமும் அவற்றில் பங்கு கொண்டு, அந்நிகழ்ச்சிகளோடு ஒன்றி நிற்பதாக உணர்கிறோம்.[4] அன்பு, காழ்ப்பு, நேர்மை, கொடுமை, மேன்மை, இழிவு, வியப்பு, வெறுப்பு ஆகிய பண்புகளில் உள்ள நுண்ணிய வேறுபாடுகளுக்கேற்பப் பற்பல காவிய மாந்தர் அமைந்த பாரதம் இந்திய நாட்டு வீர மரபினையும் படைப்பாற்றல் திறனையும் விளக்கும் பெரு நூலாகத் திகழ்கின்றது.[5]

பாரதம் போர்நிகழ்ச்சிகள் நிரம்பிய காவியம்; பிற காவியங்களுக்கில்லாத, பாரதத்திற்கென்றே அமைந்த சிறப்பு இது. பிற காவியங்களிலும், போர் நிகழ்ச்சிகள் உண்டு எனினும், பாரதத்திற் போல, அத்துணை விரிந்த போர் நிகழ்ச்சிகளும், போராட்டங்களும் அவற்றுள் இல்லை. பாரதம், தொடக்க காலத்தில்

---

1. இயல்-3; அடிக்குறிப்பு-2. பக். 31.
2. A.D. Pusalkar: Studies in Epics and Puranas of India page:130, 141 & 42 (1955).
3. தா. வே. வீராசாமி: தமிழ் இலக்கியக் கொள்கை: 3. பக். 99 (1978)
4. C. Kunhan Raja; Survey of Sanskrit Literature. P-67-68 (1962)
5. Swami Renganathanandha: Eternal values for a changing society. Page 105 (1971)

போர்க்காப்பியமாகவே கருதப்பட்டது என்றும், பிற்காலத்தார் அதனைச் சமய நூலாக்கி விட்டனர் என்றும் குன்ஹன் ராஜா, மேக்ஸ் முல்லர் முதலிய ஆய்வாளர் குறிப்பிடுகின்றனர்.[6]

போரின் கொடுமைகளை எண்ணிப் பார்த்து, அது வேண்டத்தகாதது என்று அறவோர்[6அ] கடிந்துள்ளனர். உலகம் தோன்றிய நாள் முதல் உடற் கூற்றமைப்பி-னாலும், ஒழுக்கியல் விதிகளாலும் போர் ஆகாத ஒன்று என்று தெரிந்த பின்னும், மக்கள் கோடிக்கணக்காகத் தமக்குள் போரிட்டு மாண்டு போகின்றனர்; மக்களியல்பி-லுள்ள விலங்கு நீர்மையை நிறைவு செய்ய வேண்டுமென்னும் தன்மை, மக்களிடத்தே அமைந்து கிடப்பதே இதற்குக் காரணம்; படைப்பில் உள்ள, வண்டுகள் விலங்குகள் ஆகியவையும் போரியல்பு மிக்கவையாய் இக்கருத்துக்கு அரண் செய்து நிற்கின்றன. ஆதலின் போர் எவ்வாற்றானும் விலக்கத்தக்கது என்று அதனைக் கடிகின்றனர். எனினும், பிறநாட்டார் படையெடுப்பு முதலிய கொடுமைகள் நிகழுங்கால், நாட்டுப் பற்று முதலிய காரணங்களால் போர் தவிர்க்க முடியாதது என்று அவரே ஒத்துக் கொண்டுள்ளனர்.[7]

ஆன்மிகம், அறம், சமுதாயம் முதலிய துறைகளில், பேரமைதி ஆட்சி புரியும் நிலைமையை மக்கள் அடையும் நாள் ஒன்று வரக்கூடும்; அத்தகைய நாள் ஒன்று வருதலும் வேண்டும். அந்த நாள் வருதற்கு முன்னர், மனிதன் எந்தத் தத்துவம் பேசினும், எச்சமயத்தைக் கடைப்பிடிப்பினும், அவன் தன் இயல்பாலும் கடமையாலும் போர் விளைத்து நிகழ்ந்தே தீர வேண்டும், போரும் அவன் வாழ்வின் ஒரு கூறாய் இருந்தே வரும்.

6. C. Kunhan Raja: Survey of Sanskrit Literature. Page 60 (1962)
Max Muller: A History of Sanskrit Literature. P:9 (1912)
வில்லிபாரதம்:முதலாம்:பக்.1. வை.மு.கோ.பதிப்பு (1963)
Chelnat Achutha Menon: Ezuttachan and his age. P:129 (1940)

6அ. Shamsur Rahman: A world called freedom: Indian Literature. Vol.XIV. No.4. Page 89 (1971)

7. Alymer Maude (Ed): Tales of Army Life by Leo Tolstoy. Editor's note: Page X & XI (1946)

பெருஞ் சக்திகள் இரண்டு ஒன்றை ஒன்று முட்டி மோதுவதனால் விளையும் அழிவையும் ஆக்கத்தையும் பொறுத்தே, அறிவுமேம்பாடு, சமுதாயம், சமயம், அரசியல் போன்ற துறைகளில் முறையான பயன்கள் விளைகின்றன. மனிதனை விலங்கு நிலைக்குத் தாழ்த்தாமல் உயர்த்தி மேம்படுத்தி அறம் முதலிய விழுமிய குறிக்கோள்களை நல்குமெனின், போர் வேண்டப் படுவதே என்று சமயச் சான்றோரே விளக்கியுள்ளனர்.[8]

போர் இன்றி மன்பதை வரலாறு அமைவதில்லை. போர்க்குரிய அடிப்படை உண்மையைத் தெளிவாக விளக்குவமாயின் போரை வரலாற்றிற் பெரிதுபடுத்த வேண்டுவதில்லை. அரசியலாளர் போல், வரலாற்றாளரும் அமைதியில் நாட்டமுடையோரே; எனினும், போர் என்பது மன்பதை நிலைபெற்றிருப்பதற்குரிய விதி. அது முற்றிலும் ஒழிக்க ஒண்ணாதது; அதை மேம்படுத்திப் பயன்படுத்தலாமேயன்றி, முற்றிலும் ஒழித்தல் என்பது நடைமுறை அரசியலுக்கு ஏற்புடையதாகாது என்று வரலாற்றாசிரியர் ராமச்சந்திர தீட்சிதர் விளக்குகின்றனர்.[9]

வாழ்வில் அறமும் (Justice) சமன்பாடும் (equilibrium ) பொருந்தி அமைய வேண்டும். அறம் பேணுதல் ஒன்று பற்றியே போர் மேற்கொள்ளத்தக்கது. அதனையும் ஒரு நெறி கொண்டே நிகழ்த்த வேண்டும். ஒன்றுக்கொன்று இகல் கொண்ட இருபெரும் சக்திகளுக்கிடையே, ஒன்று வல்லமை மிகுந்து தன் ஆற்றலைப் பெருக்கி, அண்டை அயலாருக்கு ஊறு விளைக்குமென உணர்ந்தால் போர் மேற்கொள்ளல் முறைமையின்பாற்பட்டதே என அரசியல் நுண்ணறிவு (Diplomacy ) பற்றி ஆயும் அறிஞர் டேவிட் ஜேயன்ஹில் குறிப்பிடுகின்றனர்.[10]

கழிந்ததை நினைந்து வருந்துமளவில் போர் பேரழிவை உண்டாக்குவதெனினும், போரின்றி, நாகரிகந் தோன்றி வளர்ச்சி பெற்றிராது என்பது பெரிதும் புலப்படுவதாதலின் அவ்வக் கால நிலைகளுக்கேற்பப் போரின் நோக்கங்களையும் விளைவுகளையும்

---

8. Sri Aurobindo: Essays on the Gita: Page:43-46 (1972)
9. V.R. Ramachandra Dikshitar: War in Ancient India. P:364 (1948)
   திரு.வி.க.முன்னுரை: திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம் (மு.வ) பக்.14 (1955)
   மு.வரதராசன்: திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம்: பக்.114,118 (1955)
10. David Jayne Hill: A History of Diplomacy in the International Development of Europe. Vol.II. Page:570. (1906)

அறநிமிடல் வேண்டும். போர் மேற்செல்லலும், போரொழிந்திருத்தலும் ஆகிய இரண்டுமே தீமை பயப்பனவாகலாம். எனினும் போர் மேற் செல்லலினும், போரொழிந்திருத்தல், பெருந் தீங்கு பயக்குமெனின் - போர் புரிவோரேயன்றிச் சமுதாயம் முழுதும் அவ்வாறே உணரின் - போர் மேற் செல்லல் அறத்தொடு பொருந்தியதே என வரலாற்றாசிரியர் ஆர்னல்டு.ஜே.டாயன்பி விளக்க எடுத்துரைக்கின்றனர்.[11]

இக்கருத்துகளை உளங்கொண்டு நோக்கின் அறநோக்கொடு போர்செயலை ஆய்தல், அல்லது போர்ச் செயற்கண் அறம் பேணல் ஆகிய இருவகைச் சிந்தனை[11அ] கொண்டு போர்க்காப்பியமாகிய பாரதத்தை அணுகுதலும், பாரதக் காவிய மாந்தர் தம் மனிதநல இயல்புகளை அளவிடலும் பொருந்திய ஆய்வுகளாக அமையும் என்பது தெளிவாகும். காவியங்களில் மட்டுமின்றிப் புராண நூல்களில் வரும் போர்களையும் ஆய்வாளர் இக்கண் கொண்டே நோக்குகின்றனர்.

விலங்குணர்வுக்கு இடந்தராமல், நல்லமின்றி நிகழ்த்தப்பெறும் எவ்வகைப் போரும், நன்மையையும் நன்மையெனக் கொள்ளப்படுவதையும் நிலை நிறுத்தற் பொருட்டே மேற்கொள்ளப்படுவதாகும். தீமையை ஒழித்து நன்மையை நிலைநிறுத்தற் பொருட்டுப் போர் தேவைப்படுகின்றது. தீமையே தலையாயதெனின் அஃது ஒன்றே இறுதியில் வெற்றி பெறுவதாக இருக்க வேண்டும். நன்மையும் தீமையும் நிலை பிறழ, நன்மையை நிறுவுவது அருமையாகி விடும். தீமையின் வல்லமை கருதி அதன் பொருட்டே போரிடுவோர் யாரோ கோடியில் ஒருவராக இருத்தல் கூடும். ஆயின், சாதாரண மனிதன், தான் மேற்கொள்ளும் போர்க்குரிய காரணம் நியாயமானது, அதனால் அறம் நிலை பெறுதற்கு வழி உண்டு எனத் தெரிந்து கொண்டதும், தொடர்ந்து போரிடுகிறான். தீமை என்பது உண்மையெனினும், அது தலையாய உண்மையன்று. அது நன்மை கொண்டு ஒழித்தற்குரியது; அறிவு கொண்டு அறியாமையை ஒழித்தல் போன்றது அது; தீமையை எதிர்த்துத் தொடுக்கப்பெறும் போர், அறியாமையை எதிர்த்துத் தொடுக்கப்பெறும் போரேயாகும். மண்டாசுரனை எதிர்த்துத் துர்க்கை பொரும் போரும், இவ்வாறே

11. Arnold J. Toynbee: A study of History. VolXII. Page:610+11 (1961)

11அ. M.V. Krishna Rao: Studies in Kautilya: Page: 140 (1958).

வராக புராணம் முதலிய புராணங்களில் வரும் போரும் அறிவு அறியாமைப் போராட்டமாகக் கருதப்பட வேண்டுமென்று சீனிவாச சாஸ்திரியார் விளக்குகின்றனர்.[12]

பாண்டவர்க்கும், கௌரவர்க்கும் நிகழும் போரையும் அறிவு அறியாமைப் போராட்டமாக, நன்மை தீமைப் போராட்டமாகக்[12அ] கருதி ஆராயின், காவிய மாந்தர்தம் மனிதநல மாண்புகளைக் கண்டறிதல் எளிதாகும். மேலும் போர்க்குரிய சூழ்நிலை, மனநிலைகளிலேயே, மாந்தர்தம் பற்பல இயல்புகள் நன்கு வெளிப்படுகின்றன.[13] கிரேக்கப் பேரரசில், நாடுகள் ஒன்றுக்கொன்று போட்டி பொறாமைகளால் பூசலிட்டுப் பொருது, பேரரசு முழுவதும் அழிதற்கு வழி வகுத்தன. எனினும், இரங்கத் தக்க அவ்வழிவுக்கிடையே, பல்வகை (காவிய) மாந்தரும், அவர்தம் அரசியல் திறன், நாவன்மை, வீரம், ஆகியவையும் நமக்கு, வியத்தகு முறையில் அறிமுகப் படுத்தப்படுகின்றன என்று மேக்ஸ்முல்லர் எடுத்துரைக்கின்றார்.[14]

பாரதத்தைப் பொறுத்தவரை, போர் நிகழ்ச்சி என்பது, துரியோதனன் பாண்டவர்க்குரிய நாடு தர மறுத்ததன் பின், இருவரும் போரிடுவதென முடிவு செய்து போர்க்களம் புகுந்து பதினெட்டு நாள் பொருது முடிவு கண்ட பாரதப்போர் ஒன்றனோடு அமைவது அன்று. பாண்டவரும், துரியோதனாதியரும் இளையராயிருந்த பொழுதிருந்தே அவர்க்குள் உட்பகையும் பூசலுணர்வும் இருந்து வருகின்றன.

பாண்டவரும் துரியோதனாதியரும், பிறவியிலேயே முரண்பட்ட இயல்பினராக விளங்கினர் என்பது வில்லியின் கருத்து. வீமன், திருதராட்டிரன், விதுரன் முதலிய மூத்தோர் பார்வையில் ஓரிடத்திலேயே அவர்கள் வளரினும், ஒரு குளத்தில் வளரும் தாமரையும், ஆம்பலும் போல் வெவ்வேறு இயல்பினராய் வளர்ந்தனர்,[15] என்று புலவர் உணர்த்துகின்றார்.

12. S.S. Surya Narayana Sastry: Collected Papers. Page:100. (Ed) T.M.P. Mahadevan (1961)

12அ. Chelant. Achyuta Menon: Ezuttaccan and his age: Page:139(1940)

13. வில்லிபாரதம்: பதினெட்டாம் போர்ச் சருக்கம்: 27. பக். 546. மறுபதிப்பு (1959)
ஸ்ரீ மகாபாரதம்: சௌப்திக பர்வம்: பக். 41. (1933)

14. Max Muller: A History of Ancient Sanskrit Literature. P-9(1912)

15. வில்லிபாரதம்: ஆதிபருவம்: சம்பவச் சருக்கம்; 110. பக். 140. வை. மு. கோ. விளக்கம்; வை. மு. கோ. பதிப்பு (1963).

"கருங்கயம் நெருங்கும்

வளை மலரும் குமுத மலரும் என வளர்வார்"[15அ]

வேறொரு உவமை கொண்டும் இவ்விருவர்தம் அடிப்படையான வேறுபாடுகளை விளக்குவார் வில்லி. இளமையிலேயே, பாண்டவருள், வன்மை மிக்க வீமன் கருடனை ஒத்த விளங்கினன் எனவும், துரியோதனாதியர் பாம்புகளை ஒத்து விளங்கினர் எனவும் குறிப்பிடுவர்.[16]

"பவன மைந்தனும் ஒத்தான் வயினதேயனை
காத்திரவேயரை, மன்னன் மைந்தரும் ஒத்தார்"[16அ]

இவ்வுவமைகளால், பாண்டவ துரியோதனாதியரிடையே அடிப்படையிலேயே இகல் உணர்வு இருந்ததென்பதனோடு, நன்மை தீமை இயல்புகளால் இருவரும் அடிப்படையிலேயே வேறுபட்டவர் என்பதனையும் அறியலாகும்.

தீய இயல்பினராய் துரியோதனாதியர், இளமையிலேயே பாண்டவர்க்குத் தீங்கிழைக்க முற்படுதலையும், பாண்டவர் அவர் செய்யும் தீங்குகளின்றும் (அவர்க்குத் திரும்பத் தீங்கு புரியவில்லை எனினும்) தொடர்ந்து தப்பி வருதலையும் ஆராய்ந்தால் போர் உணர்ச்சி இருசாராரிடத்தும் இளமையிலேயே கால்கொண்டு விட்டது என்று கொள்வது பொருந்துவதேயாகும்.[18]

இரு வேறு இயல்புடைய பாண்டவர்க்கும் துரியோதனாதியர்க்குமிடையே பகை முற்றி முதிர முதிர, அதன் விளைவால் நிகழும் போர்மனப்பான்மை அல்லது போர்ச்

---

15அ. வில்லிபாரதம்: சம்பவச் சருக்கம்: 119. பக். 39. மர்றே பதிப்பு (1959)
16. வில்லிபாரதம்: ஆதிபருவம்: சம்பவச் சருக்கம்: 119. பக். 144. வை. மு. கோ. விளக்கம்: வை. மு. கோ. பதிப்பு (1963)
16அ. வில்லிபாரதம்: சம்பவச் சருக்கம்: 118. பக். 40. மர்றே பதிப்பு (1959)
18. வில்லிபாரதம்: சம்பவச் சருக்கம்: 73. பக். 35.
79. பக். 36. மர்றே பதிப்பு (1959)
பதினெட்டாம் போர்ச் சருக்கம்: 240. பக். 662. மர்றே பதிப்பு (1959)
18. வில்லிபாரதம்: வாரணவதச் சருக்கம்: 4-11. பக். 41-42. மர்றேபதிப்பு (1959)
இயல்: 4. அடிக்குறிப்பு: 174. பக். 96.
வில்லிபாரதம்: பதின்மூன்றும் போர்ச் சருக்கம்: 243-44. பக். 503. " "
பதினேழும் போர்ச் சருக்கம்: 7-11. பக். 567-68. " "
Chelnat Achyudha Menon: Ezuttacean and his age: P-139 (1940).

செயல் அவரவர்தம் பண்பு நலனை (Character) நன்கு புரிந்து கொள்வதற்குத் துணை புரிகின்றது.

நெறியைப் பொருட்படுத்தாமல், தன் அடைவு ஒன்றையே எப்பொழுதும் கருதி நிற்கும் துரியோதனன்,[19] சூது போரால் பாண்டவர் பகை முற்றும் ஒழிந்து போகும் என்று நம்பி, சூதில் வல்ல சகுனியின் அறிவுரையை ஏற்பதில் பெருமகிழ்ச்சி கொள்கின்றான்.[20] சாதனையைப் பெரிதும் பொருட்படுத்தாமல் நெறி ஒன்றினையே பெரிதெனப் போற்றும் தருமன்[21] தூது வந்த விதுரன் வாயாற் சூதுபோர் பற்றிக் கேள்வியுற்றதும் பெரிதும் கலங்குகின்றான்.[22] சூதினால் வென்று பகை முடித்தோம் என்று நிறைவு கொண்ட துரியோதனனுக்கும்,[23] அவ்வாறே சகுனிக்கும் சூதுபோர் பற்றிய தந்திரம் வேறு, மோதுபோர்பற்றிய வன்மை வேறு, இவ்விரண்டன் கொடுமை பற்றிய தெளிவு அவர்கட்கு இல்லை என்று போர்க்களத்தில் விளங்க எடுத்துரைக்கின்றான்.[2]

"சோரத்துடன் நீ (சகுனி) பொருது அடர்த்த சூது அன்று;
இவை மெய்த்துளைத்து உருவும்
வீரப் பகழி; உனை வெற்றுரல் வெல்வேன்.[24அ]

19. வில்லிபாரதம்: சூதுபோர்ச் சருக்கம்: 220. பக். 178.
கிருட்டிணன் தூதுச் சருக்கம்: 118. பக். 354.
பதினெட்டாம் போர்ச் சருக்கம்: 175. பக். 647. மர்ரே பதிப்பு (1959)
கிருட்டிணன் தூதுச் சருக்கம்: 120. பக். 188. வை. மு. கோ. விளக்கம்: வை. மு. கோ. பதிப்பு (1966)
பதினெட்டாம் போர்ச் சருக்கம்: 175. பக். 130. வை. மு. கோ. விளக்கம்: வை. மு. கோ. பதிப்பு (1966)
ஸ்ரீ மகாபாகவதம்: உத்தியோகப்படலம்: 29. பக். 384 (சுருக்குறிக்கப்பெறவில் ...

20. வில்லிபாரதம்: சூதுபோர்ச் சருக்கம்: 25, 29. பக். 154. மர்ரே பதிப்பு (1959)

21. வில்லிபாரதம்: பதினைந்தாம் போர்ச் சருக்கம்: 21. பக். 545.
பதினாறாம் போர்ச் சருக்கம்: 87. பக். 565. மர்ரே பதிப்பு (1959)

22. வில்லிபாரதம்: சூதுபோர்ச் சருக்கம்: 63-66. பக். 158-59. மர்ரே பதிப்பு (1959)

23. வில்லிபாரதம்: சூதுபோர்ச் சருக்கம்: 194, 196-97. பக். 175. மர்ரே பதிப்பு (1959)

24. வில்லிபாரதம்: பதினேழாம் போர்ச் சருக்கம்: 81. வை. மு. கோ. விளக்கம்: பக். 46. வை. மு. கோ. பதிப்பு (1968)

24அ வில்லிபாரதம்: பன்னிரண்டாம் போர்ச் சருக்கம்: 72. பக். 463. மர்ரே பதிப்பு (1959).

"அவையில் உள் அறிஞ்ச மாமன் அவன்
வார் வுர் எவிந்த சூதபொருத
விரகு அறிவு; எவிது இன்று புசல் எவ
முன் விரவிலே.....
தெளிவு இன்பது ஆகும் இவது உண்மையும்"[24அ]

தீயது என்று உணர்ந்தும் பெரியோர் சொல் மறுத்தல் ஆகாது[25] என்னும் விழுமிய குறிக்கோளுக்கு அஞ்சி, தருமன் சூதாடலை ஏற்றுப் பிழை செய்கிறான்.[26] தீயது என்று பெரியோர் உணர்த்தியும்[27] அவர் சொல்லைப் பொருட்படுத்தாது, ஆசைக்கு இடந்தந்து, சூதினை ஏற்றுத் துரியோதனன் பிழை செய்கிறான்.[28]

தான் மேற்கொள்ளும் நெறியே பொருந்தியது என்று நினைந்து நல்லோனாகிய தருமன் பிழை செய்யும் நிலை விளைதற்கு இடந்தருகிறான். தான் கொண்டதே உறுதியானது என்ற வன்மையுற்று துரியோதனன் தவறு செய்கிறான். இருவர் செயல்களும் அவற்றின் பிழைகளும் அவரவர் இயல்பினை விளக்குவனவாக உள்ளன.

நம் அறிவில் நேரும் பிழைகளினும், நாம் கற்ற கலையால் நமக்குக் கை வந்த ஆற்றல்கள் என்று நாம் கருதியிருப்பவற்றால் நேரும் பிழைகள் மிக்க அழிவு தருவனவாக உள்ளன. அவற்றின் வாயிலாக நாம் புலப்படுத்தும் வெறுப்பும் வேட்கையும் நம் அழிவுக்கே வழிகோலுகின்றன. இக்காரணம் பற்றியே, குறிப்பிட்ட தனி மனிதனின் அல்லது ஒரு கூட்டத்தாரின் நிலை பிறழ்ச்சி, சமுதாயம், சமயம் என்னும் பெயர்களால் மனிதன் தீங்கு புரிதற்குத் தூண்டுகின்றது என்று ஆய்வாளர் எடுத்துரைக்கும் கருத்து, எண்ணிக் கருதத்தக்கது.[29] அறநெறியிற் பற்றுடைய

24அ. வில்லிபாரதம்: பதினாறாம் போர்ச் சருக்கம்: 81. பக். 564. மர்ரே பதிப்பு (1959

25. வில்லிபாரதம்: சூதுபோர்ச் சருக்கம்: 62, 72. பக். 159-60. மர்ரே பதிப்பு (1959)

26. வில்லிபாரதம்: சூதுபோர்ச் சருக்கம்: 190, 224. பக். 174, 79. மர்ரே பதிப்பு (1959)

27. வில்லிபாரதம்: சூதுபோர்ச் சருக்கம்: 31, 33. பக். 154-55. மர்ரே பதிப்பு (1959)

28. வில்லிபாரதம்: சூதுபோர்ச் சருக்கம்: 190. பக். 174. மர்ரே பதிப்பு (1959)

29. Rabindranath Tagore: Supreme Man: The Modern Review: Vol. LVI, No. 2. whole No. 382. August 1934.

தருமன், அளவு கடந்த தன் நிலை பிறழ்ந்தது நிகழ்தற்குக் காரணமாகிறான். உரிமை உண்மை என்னும் பெயர்களால், தீய இயல்பினையுடைய துரியோதனன், மேலும் தீய இயல்பு மிக்குப் பிழை செய்கிறான்.[30]

போரின் போக்கு, இருவர்தம் இயல்பினையும் நன்கெடுத்துக் காட்டுவதாக உள்ளது. வாய்மையே வாழ்வாக உடைய தருமன்,[31] போர் வெற்றி கருதி- துரோணனைக் கொல்ல வேண்டி- பொய் கூற வேண்டும் என்று கண்ணன் உரைக்கும் அறிவுரைக்கும் ஆட்படுகிறான். முதலில் கண்ணன் உரையை மறுத்து வாய்மையின் சிறப்பெல்லாம் கூறிய பிறகு அவனுடைய அறிவுரைக்கு ஆட்படுகிறான்.[32] உண்மைக்கு உண்மை போலவும், பொய்ம்மைக்குப் பொய்யாகவும் அமையும்படி, கவர் பொருள் படப் பொய்யையே கூறுகிறான்.[33] தருமன் கூறும் பொய், துரியோதனனுக்கும் வியப்பை நல்குகிறது. தருமன் பொய் உரைத்திலனேல் துரோணன் மாண்டிரான் என்று சஞ்சயனுக்கு எடுத்துரைக்கிறான்.[34] அத்தகைய கருத்தினை அசுவத்தாமனும் கொண்டுள்ளான்.[34அ]

தருமன் பொய் உரைத்து நிலை மாறியது போலவே, 'பொய் வளர்ந்த மொழி மன்ன' ஆகிய துரியோதனன், தன் இறுதி வேளையில் மெய் உரைத்து நிலை மாறியவனாகக் காண்கிறான். துரியோதனனின் உயிர் நிலையைக் குறிப்பினால் உணருமாறு அருச்சுனன் மூலம் வீமனுக்குக் கண்ணன் தெரிவித்த வேளையில், கண்ணன் செய்கையைக் கடிந்து, அவன் கூறும் சொற்களில், நன்னெறி பற்றிய கருத்து விளங்குகின்றது. அறத்தொடு பொரும் வீரப்போரின் இயல்பினை அம்மரபுக்குரிய வீரரே அறிவார். கண்ணன் போலும் இடையர் குலத்தவர் அறியார். வஞ்சனை கொண்டு, வினை புரிவார் முடி தரித்து நாடாளும் வேந்தர்தம் நேர்மையை உணரார், என்று கண்ணனை இகழ்வதன் மூலம், தான் அறநெறிப்பட்டவன் போல் தன்னை மேம்படுத்திக் கொள்கிறான்.

---

30. வில்லிபாரதம்: பதினாறாம் போர்ச் சருக்கம்: 42. பக். 558. மர்ரே பதிப்பு (1959)
31. வில்லிபாரதம்: [illegible] சருக்கம்: 135. பக். 254. மர்ரே பதிப்பு (1959)
32. வில்லிபாரதம்: பதினைந்தாம் போர்ச் சருக்கம்: 22, 26. பக். 545-46. மர்ரே பதிப்பு (1959)
33. வில்லிபாரதம்: பதினைந்தாம் போர்ச் சருக்கம்: 26, 27. வை.மு.கோ. விளக்கம்: பக். 408-09. வை.மு.கோ. பதிப்பு (1968)
34. வில்லிபாரதம்: பதினைந்தாம் போர்ச் சருக்கம்: 47. பக். 550.
34அ. வில்லிபாரதம்: பதினைந்தாம் போர்ச் சருக்கம்: 4. பக். 547. மர்ரே பதிப்பு (1959).

"அறத்தினுல் அடல் மறத்தின் நீர்மையை
அவித்தை ஆயரும் அளப்பரோ?"
"சலத்தினுல் வினை இயற்றுவார் முடிதரித்த
காவலரோடு ஒப்பரோ?"[34ஆ]

இவை கொண்டு, தருமனும், துரியோதனனும் முற்றும் நிலை மாறினர் என்று கொள்ளல் இயலாது. கண்ணனின் அறிவுரைப்படி, போரில் பொய் கூறிய நாள்தொட்டு தருமன் பொய்யும் மெய்யும் கூறி வாழ்ந்தான் என்றோ, துரியோதனன், உயிர் விடுந்தருவாயில் அறநெறியின் விழுப்பந் தெரிந்து, வன்ம மனம் மாறிப் பகைவரோடு ஒன்றி நிற்க விழைந்து உயிர் நீக்கினுன் என்றோ கொள்வதற்கு இடம் இல்லை.

பொய் கூறித் துரோணனை மாய்க்க இடமளித்து வென்ற தருமனே போர் முடியுந் தறுவாயில் நாடு முழுவதையும் துரியோதனனுக்குத் தந்து அவன் வழி நிற்க முற்படுவதாகக் கூறுகிறான்.[35] பகைவராகிய பாண்டவர் நாட்டை எவ்வாறாயினும் கவர வேண்டும் என்று முயன்று வந்த துரியோதனன் அவ்வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ள முன்வரவில்லை. தன் கிளைஞரும், துணைவரும் தன் பொருட்டு மாயப் பகைவர் அருளால் வாழும் வாழ்விலும், போரில் அங்கம் சிதைந்து குருதி பொங்க, கழுகும் காகமும் தன்னுடம்புக்களைக் கொத்தித் தின்னுமாறு மாய்வதே தனக்கு இன்பந்தரும் என்று கூறித் தருமன் வேண்டுகோளை மறுக்கிறான்.[35அ]

துரோணனை மாய்க்க வேண்டிக் கண்ணன் அறிவுரையை ஏற்று ஒரு சந்தர்ப்பத்திலன்றி வேறு சந்தர்ப்பங்களில் தருமன் பொய் கூறவில்லை.[36] அதனுல் அவன் முற்றிலும் நிலை மாறியதாகக் கொள்ளல் ஆகாது.

துரியோதனனுடைய வாழ்விலும் நற்பண்புகள் இல்லாமற் போகவில்லை. அவனுடைய மனைவி கண்ணனோடு சொக்கட்டான் ஆடுகிறாள். அவ்வேளையில் துரியோதனன்

34ஆ. வில்லிபாரதம்: பதினெட்டாம் போர்ச் சருக்கம்: 188-89. பக். 650. மர்ரே பதிப்பு (1959)

35. வில்லிபாரதம்: பதினெட்டாம் போர்ச் சருக்கம்: 158-59. பக். 634. மர்ரே பதிப்பு (1959)

35அ. வில்லிபாரதம்: பதினெட்டாம் போர்ச் சருக்கம்: 160. பக். 644. மர்ரே பதிப்பு (1959)

36. ஸ்ரீ மகாபாரதம்: துரோணபருவம்: பக். 753 (1922)

மகாத்மா காந்தி நூல்கள்: தொகுதி: 7. பக். 200, 201. (1966)

உடையவனுகச் செய்யவில்லை. துரியோதனன், அறநெறி பற்றிக் கூறிய கூற்றும், பகைவர் மக்கள் மீது காட்டிய பரிவும் அவனை நிலை மாற்றம் உடையவனுகச் செய்யவில்லை.

"யாரும் அவரவர் இயல்புக்கு எதிராகச் செல்வது இயலாத ஒன்று. அவரவர்தம் வாழ்க்கைக் கூறுகளே அவரவர்தம் உள்ளத்திட்பத்தை ஆட்படுத்தி நிற்கின்றன. முன்னும் பின்னும் குறுக்கும் நெடுக்குமாகப் பயின்றாலும் ஒரே பொருளைத் தந்து நிற்கும் கவிதையைப் போன்றது ஒருவர்தம் பண்பு நலன் (Character). உள்ளத்திட்பத்தினும், பண்பு நலனே உண்மை புலப்படுத்துவது. புறத்தில் நிகழும் அப்பட்டமான செயல்களாலேயே மாந்தர்தம் நற்பண்புகளும் குற்றங் குறைகளும் விளங்குமெனக் கருதுவர் பலர். அவை அகத்தினின்று புலப்படுவன என்பதை அவர் உணர்வதில்லை" என்று ஞானி எமர்சன், பண்பு நலன் பற்றி எடுத்துரைக்கும் கருத்து ஈண்டுக் கருதத்தக்கது.[41]

குறிப்பிட்டதொரு மனநிலை ஒன்று மட்டுமே ஒருவருடைய பண்பு நலனை உருவாக்குவதில்லை. மனநிலை என்பது பண்பு நலனை உருவாக்குதற்குரிய அடிப்படைக் கருவியளவில் நிற்பது. சூழ்நிலைகளின் செல்வாக்கு, சமுதாயச் சூழல்களில் மேற்கொள்ளப்பெறும் கல்வி முயற்சிகள், நாமே வேண்டி அமைத்துக் கொள்ளும் சொந்தக் கட்டுப்பாடு ஆகிய பல காரணங்களால் ஒருவன் வாழ்நாளை எல்லையாகக் கொண்டு உருப் பெறுவதாகும் அது என்று ஏ.ஈ.டெய்லர் என்னும் தத்துவப் பேராசிரியர் உளவியற் கண்ணோட்டத்தில் விளக்கும் உண்மையும் ஈண்டுக் கருதத்தக்கது.[42]

இக்கருத்துகளைக் கொண்டு நோக்கின், அடிப்படையில் நல்லவர் தீயவராகிய தருமனுந் துரியோதனனும், போர் முதலிய நெருக்கடிகளால் புலப்படுத்தும் நெகிழ்ச்சிகள் (deviations) வேறு; அவர்தம் அடிப்படையான பண்பு நலன் வேறு என்பது நன்கு புலப்படும்.

வீமன் உடல் வன்மையால், மறலியும் மடியுமாறு மற்போர் புரியும் வன்மை மிகுந்தவனாயினும்,[43] உயர்ந்த மனநலன்களும் வாய்க்கப் பெற்றவன்;

---

41. Ralph W.Emerson: Eessays: Page: 34 (1965)

42. A.E. Taylor: Elements of Metaphysics. Page 374 (1961)

43. வில்லிபாரதம்: பழம்பொருந்து சருக்கம்: 17 பக்.275. மர்ரேபதிப்பு(1959

அறிவு, வாய்மை, அன்பு, அருள், பொறை, ஞானம், கல்வி, தவமுயற்சி உயர் நெறி பேணல், மானம், வீரம் ஆகிய பண்புகள் அவன்பால் இயல்பாகவே அமைந்துள்ளன.[44] ஆயினும் அவ்வுடன்பாட்டுப் பண்புகள் உடன்பாட்டு வகையிலேயே பயன்படவில்லை. அவனொடு தொடர்பு கொள்வார் தம் இயல்புக்கு ஏற்ப, எதிர் மறையிலேயே பயன்படுகின்றன.[45]

பொறாமை முதலிய விரும்பா பண்புகளைத் தன் பண்பு நலனுக்கு (Character) உகந்தமைந்த அணி எனக் கருதி அவற்றைக் கடைப்பிடிக்க வேண்டும் என்ற கருத்துடையவன் வீமன். அதனொடு, பிறர் தீமை சொல்லாத சான்றாண்மை, பிறர் துயரைத் தன் துயர் போல் கருதும் பேராண்மை ஆகியவற்றைத் தன் வாழ்நாள் கடைப்பிடிகளாகக் கொண்டவன் அவன். தனக்கு இறுதி நேரினும் அவற்றை நெகிழ விடலாகாது என்னும் உறுதியும் உடையவன் அவன்.

"பிறர் மனையவரைப் பெற்றதாய் எனவும்
பிறர் பொருள் எட்டியே எனவும்
பிறர் வசை உரைத்தல் பெருமை அன்று எனவும்
பிறர் துயர் என்துயர் எனவும்
இறுதியே வரினும் என் மனக் கிடக்கை
எம்பிரான்! இவை என உரைத்தான்"[45அ]

கண்ணன் முன்னிலையில் தன் இயல்புகளைத் தானே உரைக்கிறான் வீமன். ஆதலின், கண்ணன் போலும் உயர்ந்தோரே அவனுடைய உடன்பாட்டுப் பண்புகளை அறிதல் கூடும் என்பது கருத்தாகின்றது.[46] தருமன், கண்ணன், அசுவத்தாமன் முதலிய பெரியோர் அவ்வப்போது வேண்டும் வேண்டுகோட்கிணங்க, அவர் கருத்துக்கு இயைந்து நின்று தன் உயரிய பண்பாடுகளை அவன் புலப்படுத்துகின்றான்.[47]

44. வில்லிபாரதம்: [illegible] சருக்கம்: 44. பக். 242. மர்ரே பதிப்பு (1959)
45. விளக்கம்: [illegible]: 45. பக். 140
45அ. வில்லிபாரதம்: [illegible] சருக்கம்: 17. பக். 375. மர்ரே பதிப்பு (1959)
வில்லிபாரதம்: [illegible] சருக்கம்: 44. பக். 242. மர்ரே பதிப்பு (1959)
வில்லிபாரதம்: [illegible] சருக்கம்: 136. பக். 303.
[illegible] சருக்கம்: 94. பக். 375. [illegible] பதிப்பு (1964)
[illegible] சருக்கம்: பக். 339. மர்ரே பதிப்பு (1959)
சருக்கம்: 58. பக். 549. மர்ரே பதிப்பு (1959).

அறிவு, வாய்மை, அன்பு, அருள், பொறை, ஞானம், கல்வி, தலைமுயற்சி உயர் நெறி பேணல், மானம், வீரம் ஆகிய பண்புகள் அவன்பால் இயல்பாகவே அமைந்துள்ளன.[44] ஆயினும் அவ்வுடன்பாட்டுப் பண்புகள் உடன்பாட்டு வகையிலேயே பயன்படவில்லை. அவனொடு தொடர்பு கொள்வார் தம் இயல்புக்கு ஏற்ப, எதிர் மறையிலேயே பயன்படுகின்றன.[45]

பொறுமை முதலிய விழுமிய பண்புகளைத் தன் பண்பு நலனுக்கு (Character) உகந்தமைந்த அணி எனக் கருதி அவற்றைக் கடைப்பிடிக்க வேண்டும் என்று கருத்துடையவன் வீமன். அதனொடு, பிறர் தீமை சொல்லாத சான்றாண்மை, பிறர் துயரைத் தன் துயர் போல் கருதும் பேராண்மை ஆகியவற்றைத் தன் வாழ்நாள் கடைப்பிடிகளாகக் கொண்டவன் அவன். தனக்கு இறுதி நேரினும் அவற்றை நெகிழ விடலாகாது என்னும் உறுதியும் உடையவன் அவன்.

"பிறர் மனையவரைப் பெற்றதாய் எனவும்
பிறர் பொருள் எட்டியே எனவும்
பிறர் வசை உரைத்தல் பெருமை அன்று எனவும்
பிறர் துயர் என்துயர் எனவும்
இறுதியே வரினும் என் மனக் கிடக்கை
எம்பிரான்! இவை என உரைத்தான்"[45அ]

கண்ணன் முன்னிலையில் தன் இயல்புகளைத் தானே உரைக்கிறான் வீமன். ஆதலின், கண்ணன் போலும் உயர்ந்தோரே அவனுடைய உடன்பாட்டுப் பண்புகளை அறிதல் கூடும் என்பது கருத்தாகின்றது.[46] தருமன், கண்ணன், அசுவத்தாமன் முதலிய பெரியோர் அவ்வப்போது வேண்டும் வேண்டுகோட்கிணங்க, அவர் கருத்துக்கு இயைந்து நின்று தன் உரிய பண்பாடுகளை அவன் புலப்படுத்துகின்றான்.[47]

---

44. வில்லிபாரதம்: முண்டகச் சருக்கம்: 44. பக். 242. மர்ரே பதிப்பு (1959)
45. விளக்கம்: அடிக்குறிப்பு எண்: 45 பக். 140
45அ. வில்லிபாரதம்: பழம்பொருந்து சருக்கம்: 17 பக். 275. மர்ரே பதிப்பு (1959)
46. வில்லிபாரதம்: முண்டகச் சருக்கம்: 44. பக். 242. மர்ரே பதிப்பு (1959)
47. வில்லிபாரதம்: புட்பயாத்திரைச் சருக்கம்: 136. பக். 303.
மணிமான் வதைச் சருக்கம்: 94. பக். 375. வை.மு.கோ. பதிப்பு (1964)
கிருட்டிணன் தூதுச் சருக்கம்: பக். 339. மர்ரே பதிப்பு (1959)
வாரணாவதச் சருக்கம்: 58. பக். 149. மர்ரே பதிப்பு (1959).

இத்தகைய விழுமிய பண்புகள் உடைய வீமனை, துரியோதனனும் துச்சாதனனுமே பெருஞ் சோதனைக்கு ஆளாக்குகின்றனர். இளமை தொட்டு அவர் புரிந்த தீங்குகளையெல்லாம் பொறுத்து வருகிறான் அவன். சூதால் உடைமையெல்லாம் கவர்ந்து, உரிமை மானம் எல்லாம் இழக்கச் செய்து, இறுதியில் திரௌபதியை அவமானப் படுத்திய நிலையில் வெகுண்டு போர்க்கு எழ, அப்பொழுதும், தருமன் கூறிய அறிவுரைக்கேற்ப அடங்கி நிற்கிறான்.[48]

இறுதியில், துரியோதனன், துச்சாதனன் ஆகிய இருவர்தம் இழிதகைமைகளே, அவர்தம் உயிர்க்கு வீமன் ஊறு விளைக்குமாறு, அவனைச் செயற்பட வைக்கின்றன. வீமனின் உடன்பாட்டுப் பண்புகளை உணர்ந்த கண்ணனே, வீமன் எதிர்மறையாகச் செயற்படவேண்டிய நிலையை, துரியோதனனிடமே விளக்குகிறான். படைஎல்லாம் இழந்து தன்னந் தனியாகத் தன் கதையுடன் நிற்கின்ற துரியோதனன், பாண்டவருள் யாரிடம் பொருவது எனக் கேட்கின்றான். வீமனுடன் பொருதலே முறையெனக் கண்ணன் விடை கூறி அதற்குக் காரணமும் கூறுகிறான்.

"இளம் பருவம் முதல் உனக்கும் அவனுக்கும் ஏற்பட்ட பகையைப் பிற வேறு பகைவரிடம் காண இயலாது. அதனொடு, வேந்தரவையில் அவன் பற்பல வஞ்சினமும் உரைத்து நின்றான்; போர்க்களம் புகுந்து, உன் தம்பியர் அனைவரையும் ஒழித்துத் தன் வஞ்சினம் முடித்தான். அதனால் அவனொடு பொருதலே முறை" என்று கூறித் துரியோதனன் இயல்புக்கு ஏற்ப வீமன் செயற்பட வேண்டிய நிலையைக் கண்ணன் விளக்குகிறான்.[48அ]

போர்க்களத்தில், வீமனின் கதைக்கு இலக்காகித் துரியோதனன் குற்றுயிராய்க் கிடக்கும் வேளையில் அவன் மீது பரிவு கொண்டு வீமனைக் கொன்றொழிப்-பேன் என்றெழுந்த பலராமனுக்கும், வீமன் எதிர்மறையாகச் செயற்பட வேண்டிய நிலையை விளக்கி அவனுடைய சினத்தைத் தணிக்கிறான். இளம் பருவம் முதல் இருவர் பகையும் காழ்த்து, முற்றி நின்றதே காரணம் என்று எடுத்துரைக்கிறான். அரசவையில் வீமன் வஞ்சினம் கூறுமாறும், திரௌபதி சாபம் நல்குமாறும் துரியோதனன் நடந்து

48. வில்லிபாரதம்; சூதுபோர்ச் சருக்கம்; 244. பக். 101. மறுபதிப்பு (1959)
48அ. வில்லிபாரதம்; பதினெட்டாம் போர்ச் சருக்கம்; 142. பக்.641 மறுபதிப்பு (1959)

கொண்டதையும் நினைவுபடுத்தி, அதனொடு, ஆசிரியர் போல் அறிவுரை கூறிய மைத்திரேய முனிவரின் அறிவுரையைப் புறக்கணித்து, அவரை இகழ்ந்து, அவருடைய வெறுப்பைத் தேடிக் கொண்ட துரியோதனனின் அடிப்படையான தீய பண்பையும்[49] விளக்கி, பலராமனின் உள்ளத்தை மாற்றுகிறான்.[49அ]

இவ்வாறு, வீமனின் நற்பண்புகள் விளங்க இடந்தராமல், தன் தீய பண்பால் அவனை எதிர்மறையாகச் செயற்பட வைத்த துரியோதனன் மீது, அவன் இரக்கம் காட்டித் தன் உடன்பாட்டுப் பண்பினைத் தானே செயற்பட வைக்கிறான் வீமன். இருவரும் போரிட்டு வரும் வேளையில், துரியோதனன், வீமனின் உயிர்நிலை உள்ள இடம் எதுவெனக் கேட்க, அவன் சூழ்ச்சியின்றி உண்மை கூறுகிறான். என் உயிர் நிலை என் தலையில் உள்ளது என்று விரைந்து உண்மை கூறுகிறான். அந்நிலையில், அவன் தருமனுக்குப் பொருந்திய தம்பியானவன் எனவும், பிரமனுக்கு ஒத்த வாய்மையாளன் எனவும் கவிக் கூற்றாக வில்லியே அவனைப் புகழ்கிறார்.[50]

துரியோதனன், துரியோதனன், வினவியதுபோல், வீமனும் அவனுடைய உயிர்நிலை எதுவென வினவுகிறான். ஆயின், துரியோதனனோ, வீமன் போல் உண்மை கூறாது, தன் உயிர் நிலை தலையில் உள்ளது எனப் பொய் கூறுகிறான். அதனை உண்மையாகக் கொண்டு வீமன் துரியோதனனின் தலையில் தாக்க, அவன் நிலை குலைந்து வீழ்கிறான். அந்நிலையில் அவன் மீது இரக்கம் காட்டி, அவன் இளைப்பாறுதற்கு நேரம் தந்து, தன் உடன்பாட்டுப் பண்பைப் புலப்படுத்துகிறான்.[51]

இவ்வாறே துச்சாதனனைப் போர்க்களத்தில் கொன்று வஞ்சினம் முடிக்கும் வேளையில், கண்ணனின் அறிவுரை கேட்டுத் தன் உடன்பாட்டுப் பண்பைப் புலப்படுத்துகிறான். வீமன் துச்சாதனனின் மார்பைப் பிளந்து அவனுடைய விரல்கள் பத்தையும் துணித்து, அவன் உடம்பினின்றும் பெருகும் குருதியைப் பருகித் தன் வேட்கையை முற்றுவிக்க முயலும் வேளையில் கண்ணன் அவனைத் தடுக்கிறான்.[52] கண்ணனின் சொற்களுக்கு இசைந்து நின்று,

---

49. வில்லி பாரதம்: பதினெட்டாம் போர்ச் சருக்கம் 194. வை.மு.கோ.உரைநூல். பக்.148. வை.மு.கோ. பதிப்பு (1966)

49அ. வில்லிபாரதம்: பதினெட்டாம் போர்ச் சருக்கம்: 194. பக்.652. மர்ரே பதிப்பு (1959)

50. வில்லிபாரதம்: பதினெட்டாம் போர்ச் சருக்கம்: 174. பக்.647. மர்ரே பதிப்பு (1959)

51. திருக்குறள்: பொருட்பால்: படைச் செருக்கு: 3.
வில்லிபாரதம்: பதினெட்டாம் போர்ச் சருக்கம்: 176. பக்.647. மர்ரே பதிப்பு (1959)

52. வில்லிபாரதம்: பதினேழாம் போர்ச் சருக்கம்: 160. பக்.594. மர்ரே பதிப்பு (1959)

துச்சாதனனின் குருதியைக் குடிப்பதை விடுத்துக் கொப்பளிப்பதோடு நிறுத்தி, வாகை முடித்து, "என் வஞ்சம் முற்றினன்"[53] என்று அமைகின்றான்.

வெறுப்பைப் புலப்படுத்தலே யாவர்க்கும் எளிய செயல்; இரக்கம் புலப்படுத்தல் அரியதொரு செயலே.[54] அறியும் கடும் பகை உடையாரிடத்து இரக்கம் காட்டுதல் அரியதொரு பண்பாகும்.[55] அவ்வரிய பண்பைத் தன் பகைவனிடம் காட்டித் தன் விரிந்த உள்ளத்தின் உயரிய பண்பாட்டைத் தோற்றுவிக்கிறான் வீமன். உடல் உள்ளம் என்னும் இரண்டையும் கடந்து நின்று விளங்குவது பண்பாடு. சோர்ந்து தளர்ந்த உள்ளத்தின் ஒரு பகுதியாய் நின்று அதனை வலுப்படுத்தி அதன் மேன்மையைப் புலப்படுத்துவது அது" எனப் பண்பாடு பற்றி ஜூல்ஸ் ஹென்றி என்னும் அறிஞர் விளக்கும் கருத்துக்கு இலக்கணமாக நிற்கிறான் அவன்.[56]

வீமனுக்கும் துச்சாதனனுக்குமிடையே விளைந்த இகலுணர்வும், அவ்வாறே வீமனுக்கும் துரியோதனனுக்குமிடையே விளைந்த இகலுணர்வும், வெகுளிச் சுவைக்கு எடுத்துக்காட்டுகளாகத் திகழ்கின்றன.[57] இவ்விகலுணர்வுகள், சேர நாட்டாரின் தொன்றுதொட்ட போர் வேட்கைக்குச் சான்றுகோலாய் அமைந்தனவென்றும் ஒருவரை ஒருவர் போரிட்டு வென்று தம் வல்லமையைப் புலப்படுத்தும் பண்பு மக்களிலக்கியங்களில் ஏற்றம் பெறுதற்கு வாய்ப்பாயின என்றும் செல்நட் அச்சுதமேனன் எடுத்துக்காட்டுவது இங்குக் குறிக்கத்தக்கது.[58] இத்தகைய இகலுணர்ச்சிக்கிடையே, வீமன் இதயப் பண்பாடும் மிக்கவனாயிருந்தான் என்பதுவே என்றும் மறவாது தெரிந்துணரத் தக்கதாகும்.

வீமனுக்கும், துரியோதன துச்சாதனர்க்குமிடையே இருந்த இகல் போன்றதுவே,

53. வில்லிபாரதம்: பதினேழாம் போர்ச்சருக்கம்: 161. பக். 594. மர்ரே பதிப்பு (1959)

54. Jules Henry: Culture against man: Page 473 (1965)

55. S. Radhakrishnan: An Idealist view of Life. Page 52 (1967)

56. Jules Henry: Culture against man: Page 473 (1965)

57. வில்லிபாரதம்: பதினேழாம் போர்ச் சருக்கம்: 157-59. பக். 590. மர்ரே பதிப்பு (1959)

58. Dr. Chelnat Achyuta Menon: Ezuttaccan and his age. Page 150 (1940)

அருச்சுனனுக்கும் கன்னனுக்குமிடையே இருந்த இகலுணர்வு. இருவரும் தத்தம் கலைத்திறனை அவையோர்க்குக் காட்டிய நாள் முதல், போர்க்களத்தில் ஒருவரை ஒருவர் எதிர்த்து நின்று, ஒருவரை ஒருவர் வீழ்த்த முயலும் இறுதி முயற்சி வரை, அவர்க்கிடையே இருந்த இகலுணர்வு உரம் பெற்று நிற்கிறது. ஒரே துறையில் – விற்பயிற்சிக் கலையில் – இருவரும் கொண்டிருந்தது பெருந்திறமையே, இருவர்க்கு-மிடையே காழ்ப்பினைப் பெருக்குகிறது. அருச்சுனன் காட்டும் திறமைகளையெல்லாம் கன்னனும் காட்டி அருச்சுனனையும் விஞ்சி நிற்கிறான். அவனுடைய திறமைகளைக் கண்டு அருச்சுனன் நாணுகின்றான்.[59]

அநுபவம் செயல் ஆகிய இரண்டன் வடிவில் உள்ள தரத்தினைக் கொண்டு, ஒன்றனோடு, உறழ்ந்தோ, உறழாமலோ ஒப்புமைப் படுத்துதல் மூலமே, எல்லா வகையான தரங்கள் பற்றிய மதிப்பீடுகளும் அளவிடப்படுகின்றன. பெருந்திறலாளர், பல்வகைத் துறைகளில் விளைக்கும் சாதனைகளால், முன்னிருந்த தரங்களுக்கு மேம்பட்டு நிற்கும் உயரிய, பல்வகைப்பட்ட தரங்கள் அமைகின்றன. முன்னுள்ள தரங்களையும் எடுத்துக்காட்டுகளையும் இப்புதிய தரங்களோடு ஒப்பிட்டு அவற்றின் திறன் அறிந்து ஏற்றுக்கொள்ளல் என்பது, பிறர் நிலையை உய்த்துணரும் கற்பனைத் திறமும், முறையான வளர்ச்சியும் ஏற்ற பயிற்சியும் வாய்க்கப் பெற்றோர்க்கே இயலும் என்று ஆய்வாளர் குறிப்பிடும் கருத்துகள் ஈண்டுக் கருதத்தக்கன.[60]

இக்கருத்துகளை உளங்கொண்டு நோக்கின், கன்னனின் திறத்தை அளவிடுவதற்குக் காரணமான அருச்சுனனின் திறமும், அவ்வாறே அருச்சுனனின் திறத்தை அளவிடுவதற்குக் காரணமான கன்னனின் திறமும் புலப்படும். கன்னனின் திறங் கண்டு, அருச்சுனன் நாணிய நாணத்திற்குரிய காரணமும், இணையிலா வில் வீரன் என்று அவையோர் பாராட்டு,[61] அதனுடன் தனக்கு இயல்பாக அமைந்த அளவு கடந்த தன்னம்பிக்கை – (செருக்கு!)

59. வில்லிபாரதம்: வாரணாவதச் சருக்கம்: 61-62. பக்.50. மர்ரே பதிப்பு (1959)

60. N.K.Devaraj: "The nature and validity of value statements" page 137-38 an article in "Trends in Current Indian philosophy (Ed) by K.Satchidananda Murthi & K.Ramakrishna(1972)

61. வில்லிபாரதம்: வாரணாவதச் சருக்கம்: 62. பக்.50. மர்ரே பதிப்பு (1959).

பாலும்[62] கர்ணன் அருச்சுனனை எதிர்த்துக் கூறிய வீரவாதத்திற்குரிய காரணமும் புலப்படும். தாம் பெற்ற விற்பயிற்சிக் கலைத்திறத்தின் மீது இருவரும் கொண்டிருந்த அளவிறந்த பற்றே - அக்கலையில் தம்மை விஞ்சுவார் எவருமிருத்தலாகாது என்னும் கடும் பற்றுணர்வே - இருவரும் ஒருவரை ஒருவர் எதிர்த்து வாழ்நாள் முழுதும் இகல் கொள்வதற்குக் காரணமாயிற்று என்பது பொருந்துவதேயாகும்.[63] விற்கலைத் திறத்தில் பேராற்றல் பெற்றிருந்தும், வாழ்நாள் முழுதும் பணிவும் அடக்கமும்[64] புலப்படுத்தி வந்த அருச்சுனன், தன் நிலை மாறிச் செருக்கும் சினமும் புலப்படுத்திய திறமும், விற்கலைத் திறத்தால் யாரும் வெல்வதற்கு அரியவன் என்ற பெயர் பெற்று அதனால் செருக்கு[65] வளர்த்த கர்ணன், தன் இயல்புக்கு மாறாகப் பணிவும் தன்னடக்கமும் புலப்படுத்திய திறமும் இனி ஆராயத்தக்கன. இருவரிடத்தும் தோன்றும் இம்மாற்றங்கள் போர்ச்சூழலிலேயே விளங்குகின்றன என்பது குறிப்பிடத்தக்கது.

அருச்சுனன் தன் வாழ்வில் மான உணர்வைப் பெரிதெனப் போற்றியவன்.[66] விற்பயிற்சிக் கலையால் அது மேலும் பெருகி நிற்கிறது. தன் விற்பயிற்சித் திறத்தினைத் தானே தன் மூத்தோனுக்கு எடுத்துரைக்க வேண்டிய நிலை வந்தபொழுது அருச்சுனனின் மான உணர்வு, அவனுடைய வீர உணர்வின் மூலம் வெளிப்படுகிறது.[67] இத்தகைய மான உணர்வே, அவன் தன்னுடைய மூத்தோனாகிய தருமனிடம் இகல் நின்று, அவனைக் கடுஞ் சொல் சொல்லி இகழுமாறு, வல்லுணர்வைத் தூண்டி விடுகின்றது.

---

62. வில்லிபாரதம்: கிருட்டிணன் தூதுச் சருக்கம்: 134-35. பக். 356. மர்றே பதிப்பு (1959)

C. Kunhan Raja: Survey of Sanskrit Literature. Page 181 (1962)

C. Rajagopalachari: Mahabharata: Preface to his second Edition (1955) page X

ஸ்ரீ மகாபாரதம்: உத்யோக பருவம்: பக். 250-51. (1928)

Mahadev Desai: The Gospel of Selfless action or The Gita according to Gandhi Page: 111 (1951)

63. வில்லிபாரதம்: அருச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கம்: 78. பக். 110; முதற்போ சருக்கம்: 11. பக். 388; கிருட்டிணன் தூதுச் சருக்கம்: 135. பக். 356, 256 பக். 374. மர்றே பதிப்பு (1959)

64. வில்லிபாரதம்: நிரைமீட்சிச் சருக்கம்: 87-88. பக். 315; பதினான்காம் போர்ச் சருக்கம்: 19. பக். 570. மர்றே பதிப்பு (1959)

65. வில்லிபாரதம்: கிருட்டிணன் தூதுச் சருக்கம்: 137. பக். 356; பதினேழாம் போர் சருக்கம்: 19. பக். 570. மர்றே பதிப்பு (1959)

66. வில்லிபாரதம்: பழம்பொருந்து சருக்கம்: 18. பக். 408. வை. மு. கோ. பதிப்பு (1964)

67. வில்லிபாரதம்: கிருட்டிணன் தூதுச் சருக்கம்: 21. பக். 340. மர்றேபதிப்பு (1959

குறித்த நாளில் கன்னனை வீழ்த்தாமல் அருச்சுனன் காலந் தாழ்த்தியமையின், தருமன் பொறுமை இழக்கிறான். "நின் கையில் வில்? இது என்ன வில்?"[68] என்று அவனுடைய வில்லை இகழ்கிறான். தன் வில்லுக்கு ஏற்பட்ட இகழ்ச்சி தன்னுடைய மான உணர்வுக்கு ஏற்பட்ட இகழ்ச்சி என அருச்சுனன் உணர்கிறான். தன் எதிரே தன் வில்லைக் குறை கூறுவோர் யாவராயினும், அவ்வில் அவருடைய உயிரைப் போக்கிவிடும். அத்தகைய வஞ்சினங் கொண்டு வில் தாங்கியவன் அருச்சுனன். அவ் வஞ்சினத்திற்கேற்பத் தன் முன்னோனையே, தன் வில்லின் இகழ்ச்சி நீக்கக் கொன்றொழிப்பேன் என்று தன் நிலை மறந்து, தன் செருக்கையும் சினத்தையும் புலப்படுத்துகிறான் அவன்.[68அ]

மான உணர்வு மிகுதியால், வஞ்சினம் முடிப்பேன் எனக் கூறிக் கொல்ல முன்வரும் கொடுமை வேறு. அம்மான உணர்வு மிகுதியால் சான்றோரைப் புன்மொழி கூறி இகழுங் கொடுமை வேறு. முன்னதனை விடப் பின்னது, பெரிதுங் கொடிது. கொலையால் விளையுங் கொடுமையினும் பெருங் கொடுமையாகும் அது. கண்ணன் அருச்சுனனுக்கு அதனை எடுத்துரைப்பதன் மூலம், நன்கு விளக்குகிறான். கேள்விச் செல்வம் வாய்ந்த சான்றோர் பண்பாட்டின் மேல் வைத்துத்[69] தெளிவாக விளக்குகிறான்.

தருமன் சொல் கேட்டு மனந்துன்புற்று மான உணர்வு பெருகிச் சினமும் செருக்கும் கொண்டு அவனைக் கொலை புரிவதாக வஞ்சினம் கூறிய அருச்சுனனே, கண்ணன் சொல் கேட்டு மனந்தெளிவு பெற்று, மான உணர்வெல்லாம் குன்றித் தருமனின் கால்களில் வீழ்ந்து வணங்கிப் பிழை பொறுக்குமாறு வேண்டுகிறான்.[70]

அருச்சுனன் மான உணர்வு மிகுந்து, தருமனைப் புன்சொல் கூறி இகழ்ந்து சினமும் செருக்கும் பெருகியதற்குரிய போர்ப் பின்னணி இன்றியமையாது ஆராயப்படவேண்டுவது.

அருச்சுனன் கன்னனைக் கொல்லத் தயங்கிய தயக்கமே தருமன் பொறுமையிழந்து

---

68. வில்லிபாரதம்: பதினேழாம் போர்ச் சருக்கம்: 205. பக். 600. மர்ரே பதிப்பு (1959)

68அ வில்லிபாரதம்: பதினேழாம் போர்ச் சருக்கம்: 206. பக். 600. மர்ரே பதிப்பு (1959)
தொல்காப்பியம்: சொல்லதிகாரம்: கிளவியாக்கம்: 43. சேனாவரையர் உரை

69. வில்லிபாரதம்: பதினேழாம் போர்ச் சருக்கம்: 207. வை.மு.கோ. உரை விளக்கம்: பக். 153. வை.மு.கோ. பதிப்பு (1968)

70. வில்லிபாரதம்: பதினேழாம் போர்ச் சருக்கம்: 209. பக். 601. மர்ரே பதிப்பு (1959).

அருச்சுனனுடைய வில்லைப் பறிக்கத் தூண்டியது. அருச்சுனனுடைய தயக்கத்திற்கு உண்மையான காரணம், கன்னன் தருமனைப் போலவே தோன்றியதுதான். கன்னன் ஆற்றல் தருமனுடைய ஆற்றலைப் போலவே இருந்தது. கன்னனை எதிர்ப்பது தருமனை எதிர்ப்பது போல் ஆயிற்று. உண்மையில் தருமனை எதிர்க்க நேரின் அவன் வில்லும் அம்பும் எவ்வாறு தளருமோ, அவ்வாறு தளர்ந்து அவை கன்னனை எதிர்க்கத் தயங்கின. தருமனிடத்து எப்பொழுதும் செல்லும் அன்புள்ளம் கன்னனிடமும் சென்றது. அன்புடைய தருமனிடத்துப் போர் செய்தல் எத்துணை அருமையோ, அத்துணை அருமை கன்னனை எதிர்த்துப் போரிடல். தருமனை எதிர்க்க நேர்ந்தால் தான் அவனை எதிர்க்காது எவ்வாறு அவனுக்கு முதுகு காட்டுவானோ, அதுபோல் கன்னனை எதிர்க்காமல் அவனுக்கு முதுகு காட்ட வேண்டுமென்று அவன் விரும்புகிறான். போர் செய்யத் தயங்கி, ஓவியம் போல் நின்று விட்டமைக்குரிய காரணம் என்ன என வினவிய கண்ணனுக்குத் தன் நிலை கூறுகிறான் அருச்சுனன்.[70அ]

தன்னை எதிர்க்கும் அருச்சுனன், தான் பிறந்த வயிற்றில் பிறந்தவன் என்பதைக் கன்னன் அறிவான். தன்னை எதிர்க்கும் கன்னன் தான் பிறந்த வயிற்றில் பிறந்தவன் என்பதை அருச்சுனன் அறியான். பகைவன் உடன் பிறந்தான் என அறிந்தும் கன்னன் தயங்காது போரிடுகிறான். பகைவன் உடன் பிறந்தான் போல் தோன்றச் செய்யும் உள்ளுணர்வுக்கு இலக்காகிப் போரிடத் தயங்குகிறான் அருச்சுனன். பகைவன் உண்மையில் உடன் பிறந்தான் என அறியின், எவ்வாறு தயங்குவானோ அவ்வாறு தயங்குகிறான் அருச்சுனன்.

அருச்சுனன் பெற்ற உள்ளுணர்வு அவனை நிலை மாற்றிக் காட்டுகிறது. உள்ளுணர்வுடையார் நிலை வேறு உலகியலார் நிலை வேறு. "உள்ளுணர்வுடையார் தம் உள்ளுணர்வைப் பெரிதென மதித்து, உள்ள நிறைவோடு அதனைக் குறிக்கோளாகக் கொண்டு அதை நோக்கி நடக்கின்றனர். தம் உள்ளொளிக் கியைந்து நடக்கும் அவர் போக்கு, அறிவற்றது, ஒழுங்கற்றது என உலகத்தார் இகழ்தல் கூடும்; ஆயின் தம் ஆன்மா உணர்த்தும் உண்மையே அவர்க்குக் கட்டுப்பாடாகின்றது. சமுதாயம் பின்பற்றும்

70அ. வில்லிபாரதம்: பதினேழாம் போர்ச் சருக்கம்: 204. பக். 600.
மர்ரே பதிப்பு (1959).

மரபை அவர் பொருட்படுத்துவதில்லை. புற உலகம் விதிக்கும் சட்டங்களை விட, உள்ளுணர்வு நல்கும் உண்மையே அவர்க்கு முக்கியமாகின்றது. தொன்றுதொட்டு வரும் வழக்கங்களை விடுத்து, உள்ளார்ந்த உண்மை, தெய்வ நேர்மை ஆகியவற்றைக் கண்டறிவதில் அவர் துடிப்புடையோராய்க் காண்கின்றனர் [71] எனத் தத்துவ நூலார் இருசாராரையும் வேறுபடுத்திக் காட்டும் கருத்துகள் ஈண்டுக் குறிப்பிடத் தக்கவை.

உடன் பிறந்தான் எனப் பின்னர் அறியப் போகும் உண்மையை உடன் பிறந்தானே என்று எண்ணித் தயங்குமாறு செய்கிறது அருச்சுனன் பெற்ற உள்ளுணர்வு. ஆதலின் உடன் பிறந்தான் என அறிந்தபின் அவன் நிலை என்னாகுமோ அந்நிலையை உறுகின்றான் அவன்.

பின்னர்த் தெரிந்து கொள்ளப் போகும் உண்மையை, முன்னரே உய்த்து உணரும் அளவில், உள்ளுணர்வு வாய்க்கப் பெற்ற உயர்ந்த அருச்சுனன், புறத்தில், மிகுந்த மான உணர்வு காரணமாகத் தன் முன்னவனையே எதிர்க்கத் துணிந்தான் எனக் கூறல் பொருந்துமோ என வினவலாம்.

தன்போல் உள்ளுணர்வு பெற்றுல் அன்றி, ஏனையோர்க்குத் தன்நிலை உணர்த்துதல் அரிது. "காரண காரிய ஆய்வியல் (Logic) உள்ளுணர்வைப் புலப்படுத்துவதற்குத் துணைபுரியாது. உள்ளுணர்வுக்குரிய துலக்கங்கள் அமைய அவற்றால் அவ்வுணர்வு நிலை பெற்றுர்க்கன்றி, ஏனையோர் அது பெற்று நிற்பார் நிலையை எட்டுதல் அரிதென்றும், காரண காரியநிலையில் நின்று தான் கொண்டது விடாத இயல்புடையாரிடத்து அது நிலைத்து நில்லாது விரைந்து மறைகின்றது" என்றும் ஆய்வாளர் எடுத்துரைக்கும் கருத்து ஈண்டுச் சிந்திக்கத்தக்கது.[72]

இக்கருத்தினை உட்கொண்டு நோக்கின் அருச்சுனன், தன் உள்ளுணர்வின் அனுபவத்திற்கேற்பத் தருமனிடம் நடந்து கொள்ளாமைக்குரிய - அவனிடத்துத் தன் உள்ளுணர்வு பற்றிய தெளிவை விரித்துரையாமைக்குரிய - காரணம் புலப்படும்.

---

71. S. Radhakrishnan: An Idealist view of life. Page 155 (1967)

72. Charles F. Wall Raff: Karl Jaspers: An Introduction to his philosophy: page 26

அன்றியும், போர்ச் சூழலில், பெரிதும் புறையப்பட்டு, பிற போர் வீரரைப் போலவே நிற்குந்தனில், தன் மான உணர்வுக் கேற்பச் செயற்பட்டான் என்பது பொருந்துவதேயாகும்.[73]

இனி, போரில் அருச்சுனனுக்குப் பெரிதும் ஈடு தந்து தன் வீரம் புலப்படுத்தும்[74] கன்னன், தன் செருக்கையும் சினத்தையும் விடுத்து நிலை மாறி நின்ற தன்மை ஆராய்தற்குரியது. கண்ணன் தன் பிறப்புணர்த்திய பின்னரும், அவனைப் பொருட்படுத்ாது, தேர் செலுத்தும் அவனையும், தேர்ந்து போர் புரியும் அருச்சுனனையும் வெல்வேன் என்ற வஞ்சினம் கூறியவன் கன்னன்.[75] பாண்டவர்பால் அறம் உண்டெனக் கண்ணனிடமே ஒத்துக் கொண்ட பின்னரும் துரியோதனன்பால் கொண்ட நன்றி உணர்வு காரணமாகப் போரில் பாண்டவரை எதிர்த்து நிற்க வேண்டிய நிலையைக் கண்ணனிடமே உணர்த்திப்[76] போரில் முனைந்து நின்றவன் அவன்.

கன்னனின் கொடைப் பண்பு, அவன் வாழ்வின் துவக்கத்தில் அவனுடைய அகமுகப் பண்புகளை வளர்க்கத் துணை புரியவில்லை. புறத்தில் புகழ் நிலை-நாட்டுதற்கே அவன் அதனைப் பயன்படுத்துகிறான். "அறம் செறி தானம், வண்மை, அளவிலாது அளித்த நாளும் புறம் கவர் கோலம் செய்வான்" எனவும், "கொடுத்து புன்னிசை வளர்க்கும் அக் கொடிய பாவி"[77] எனவும், புறத்தில் புகழ் வளர்க்கப் பயன்படுத்தும் அவனுடைய இயல்பினைப் புலவர் எடுத்துரைக்கிறார்.

அத்தகைய நிலை, அவன் வாழ்வின் இறுதிப் பகுதியில் - போரில் உயிர் விடப் போகுந்தறுவாயில் - மாற்றம் எய்துகின்றது.

அருச்சுனனின் அம்புக்கு இலக்காகிக் குற்றுயிராய்க் கிடக்கும் வேளையில், அவன் கண்ணனின் தோற்றம் கண்டு, மிக்க அடக்கமும், பணிவும் புலப்படுத்துகிறான்.

73. வில்லிபாரதம்; பதினேழாம் போர்ச் சருக்கம்;204-205. பக்.600. மர்ரே பதிப்பு (1959)

74. வில்லிபாரதம்; பதினேழாம் போர்ச் சருக்கம்;199.பக்.599 மர்ரே பதிப்பு (1959)

75. வில்லிபாரதம்; பதினேழாம் போர்ச் சருக்கம்;19 .பக்.570. மர்ரே பதிப்பு (1959)

76. வில்லிபாரதம்; கிருட்டினன் தூதுச் சருக்கம்;218-19. பக்.36. மர்ரே பதிப்பு (1959)

77. வில்லிபாரதம்; சூதுபோர்ச் சருக்கம்;4.பக்.151; நச்சுப்பொய்கைச் சருக்கம்;7.பக்.262. மர்ரே பதிப்பு (1959).

"பெறுதற்கு எட்டாப் பெரும் பயன்
நின் திருவருளால் பெறப் பெற்றேனே"

"வான் பெற்ற நதிகமழ்தாள் வணங்கப் பெற்றேன்
மறைபெற்ற திருவாக்கால் துதிக்கப் பெற்றேன்
ஊன் பெற்ற பகழியினால் அழிந்தும் வீழ்ந்தும்
உணர்வுடன் நின் திருநாமம் உரைக்கப் பெற்றேன்
யான் பெற்ற பெரும் பேறு என்னை அன்றி
இருநிலத்தில் பிறந்தோரில் யார் பெற்றாரே"[77அ]

கர்ணனின் உண்மையான அடியவன் போல் கண்ணன் விளங்குவதை இச் சொற்கள் உணர்த்துகின்றன.

கர்ணனின் கொடைப் பண்பே அவன் அழிவதற்குக் காரணம் ஆகின்றது. அந்தணன் வடிவில் வந்த இந்திரன் பகைவன் தந்தை என்று அறிந்தும் தன்னுடைய கவச குண்டலங்களை மகிழ்ச்சியோடு அவனுக்கு ஈகின்றான். பகைவனுக்குத் தேரோட்டு-பவன் என்று அறிந்தும் கண்ணனுக்கு, அவன் வேண்டியவாறு, தன் புண்ணியம் அனைத்தையும் நல்குகிறான்.

உயிர் விடும் வேளையில், அவன் கண்ணனிடம் வேண்டியதெல்லாம், பிறவிதோறும் தன் கொடைச் சிறப்பு விளங்க வேண்டும் என்பதுவே.

"எழ் எழு பிறப்பும்,
இல்லை என்று இரப்போர்க்கு
இல்லை என்று உரையா இதயம்
நீ அளித்தருள்"[77ஆ]

என்னும் சொற்களில், கொடைப் பண்பால் தன் அழகுப் பண்பு தெளிந்து நிற்கும் வகையில் உள்ள வளர்ச்சி பெற்றவனைக் காண்கிறோம். புலவரும் அவன் மீது இரக்கம்

77அ. வில்லிபாரதம்; பதினேழாம் போர்ச் சருக்கம்: 246, 249. பக். 607-08.
மர்ரே பதிப்பு (1959)

77ஆ. வில்லிபாரதம்; பதினேழாம் போர்ச் சருக்கம்: 242. பக். 608.
மர்ரே பதிப்பு (1959).

காட்டி, "குற்றமிலுடன் கூடத்தான் கொடையால் மிக்கோன்"77இ என்று அவன் கொடைப் பண்பினுல் உள்ளத்தின் ஆக்கம் பெற்றமையை எடுத்துரைக்கிறார்.

உள்ளத்தால் தீங்கற்ற ஒருவன், தன் சமுதாயப் பின்னணியாலும், சேர்ந்த இனத்தின் தீய தன்மையாலும் தீங்குடையவனுகின்றான்; இனத்தால் தீயவனுக்கிருந்த ஒருவன், தன் வாழ்வின் இறுதியில் தன் நிலை உணர்ந்து நல்லவனும் மாறுவான்; மாற வேண்டும் என்று புலவர் உள்ளம் விரும்புகிறது. அதனுலேயே, கன்னனை - வாழ்நாள் முழுதும் செருக்கும் சினமும் வளர்த்த கன்னனை - பணிவும் அடக்கமும் உடையவனுகக் காட்டுகிறார். இதனையன்றிக் கன்னனின் மனநிலை மாறியதற்கு வேறு காரணம் கூறல் இயலாது.78

புலவர் தம் மன வளத்திற்கேற்பவே அவர் படைக்கும் கலையும். பாத்திரங்களும் அமைவன. ஆழ்ந்து உணரும் தன் ஆற்றலைக் கொண்டே, பிறர் உள்ளத்தின் ஆழத்தை அவரவர் உணருமாறு செய்கின்றனர் புலவர். அனுபவ முதிர்ச்சி, உள்ளத்தின் பெருந்தகைமை, புறத்தில் படிந்து நிற்கும் வாழ்வை அகமுகமாகத் திருப்பி ஆழ்ந்துணருமாறு செய்யும் திறம் ஆகியவையே உண்மைக் கவிதையின் இலக்கணங்களாகும்,79 என்று ராதாகிருஷ்ணன், புலவர் தம் திறத்தையும் அவர் படைக்கும் விழுமிய கவிதையின் திறத்தையும் விளக்குகின்றார்.

கருத்துகளை உளங்கொண்டு நோக்கின், கண்ணன் பெருமையையும் அவன் பெருமையை உள்ளவாறு உணர்ந்து மனந் தெளியும் கன்னன் பெருமையையும் ஒருங்கிணைத்துக் காணும் வில்லிபுத்தூரரின் மனவளம் - மனிதநல மாண்பியல்பு -

77இ. வில்லிபாரதம்; பதினேழாம் போர்ச் சருக்கம்; 253. பக். 611. மர்றே பதிப்பு (1959)

78. H.H. Sri Sankaracharya of Sringeri "Saidy of the Purana I: Indian Express dated 2.6.1980
C. Jagannathachari: "Sri Krishna and Villi" a Lecture: Indian Express dated 29th Aug. 1979
C. Jagannathachari: "Sri Krishna and Karna" a lecture: Indian Express dated 30th Aug. 1979.

மகாபாரதம்; கர்ணபர்வம்; பக். 445. (1923)
மகாபாரதம்; கர்ணபர்வம்; பக். 460. (1923)

79. S. Radhakrishnan: An Idalist view of Life. Page 146-49 (1967).

நன்கு விளங்கும். கண்ணனை மேம்படுத்தி உயர்த்துதற் பொருட்டே, அந்தண வடிவில் இந்திரனை அமைப்பிக் கவச குண்டலங்களை வாங்கியதாகவும், பாம்புக் கணையை ஒரு முறைக்கு மேல் அருச்சுனன் மீது விடலாகாது என்று குந்தியின் வாயிலாக வரம் பெற்றதாகவும், அவனுடைய பிறப்பை அவனுக்கு உணர்த்தியதாகவும், அரவவாளி அருச்சுனனைக் கொல்லாமல் தந்திரம் செய்ததாகவும், உயிர் விடும் நிலையில் இருந்த கர்ணனுடைய முகத்தெதிரே கண்ணன் கூறிய சொற்களில்[80] மெய்ம்மை புலனாகும். அச்சொற்களை மகிழ்வுடன் ஏற்றுக்கொண்ட கர்ணனுடைய மனத் தெளிவுக்குரிய[81] நிலை மாற்றத்தின் தன்மையும் நன்கு விளங்கும்.

புறத்தில் நிகழும் நிகழ்ச்சிகளை விளக்குமளவில் தேங்கி நிற்பது கவிதையின் எதிர்காலத்திற்குகந்ததாகாது. புறத்தில் நிகழ்வனவற்றையே வாழ்வின் முழு நிகழ்ச்சிகள் என நாம் அடிக்கடித் தவறாக மதிப்பிட்டுவிடுகிறோம். கவிதை என்பது உள்ளத்தின் குரல். பொருள்களின் உள்ளார்ந்த இயல்பினை அகழ்ந்து வெளிப் படுத்தலையே அது வலியுறுத்துகின்றது; பொறிபுலன்களால் வாழும் பெருமை வாழ்வின் இயல்புகளைக் கண்டறிந்து, மனிதனின் ஆன்மாவை உயிர்ப்புடைய ஆற்றலாகச் செய்து, ஒருமைப்பாடு, அனைத்துமாய் நிறைந்து நிற்றல் ஆகியவற்றை விளைவிப்பதே அதன் திறன் என்று அரவிந்தர் கவிதையின் விழுமிய நோக்கத்தை எடுத்துரைத்துள்ளார்.[82]

இக்கருத்துகளை உளங் கொண்டு, வில்லியின் கவிதை உள்ளத்தினை ஆராயின், அவர் கண்ணனுடைய உள்ளத்தையும், கர்ணனுடைய உள்ளத்தையும் ஒருங்கிணைத்துக் காட்டிய திறன் நன்கு விளங்கும். தாம் பெறும் அனுபவங்களுக்கு ஏற்பத் தம் உள்ளம் மேம்பட்டு நிற்கும் நிலையைப் புலவர் எய்துவர் என்னும் உண்மையும் தெளிவாக விளங்கும்.[83]

80. வில்லிபாரதம்: பதினேழாம் போர்ச் சருக்கம்:250-51. பக்.610. மர்ரே பதிப்பு (1959)

81. வில்லிபாரதம்: பதினேழாம் போர்ச் சருக்கம் 249. பக்.610. மர்ரே பதிப்பு (1959).

82, Sri Aurobindo: The future poetry and letters on poetry, Lecture and Art. Page 231 (1972)

83. S. Radhakrishnan: An Idealist view of life. Page 148 (1967)

போர்ச் சூழலில் - போரில் உயிர் துறக்கும் வேளையில் - கர்ணன் உள்ளத்தில் நிகழ்ந்த மாற்றம், அவனுடைய பண்பு நலனை மாற்றியதாகக் கொள்ளல் பொருந்தாது. வேறு சொற்களில் கூறினால், புலவர் கர்ணனுடைய உள்ளத்தில் நிகழ்த்திக் காட்டும் மாற்றம், அவனுடைய பண்பு நலனில் அவர் நிகழ்த்த விரும்பும் மாற்றம் எனக் கொள்ளல் பொருந்தாது. கண்ணனிடம் அவன் காட்டிய அன்பு துரியோதனனிடம் அவன் கொண்டிருந்த நன்றி உணர்வை மாற்றவில்லை. கண்ணனிடம் தாழ்ந்து நிற்கும் வேளையிலேயே, துரியோதனன்பால் தான் கொண்டிருந்த நன்றி உணர்வையும், தருமன் முதலியோர், தம்பியர் எனத் தெரிந்தும் அவரோடு போரிட வேண்டிய கடப்பாட்டையும் கண்ணனின் முகத்தெதிரே எடுத்து மொழிகிறான்.[83அ]

அரிய காதல் தம்பியர் என்னும் சொற்கள், அவன் பாண்டவர்பால் கொண்ட அன்பைப் புலப்படுத்துவன. எனது உயிரனைய தோழன் என்னும் சொற்கள் துரியோதனன்பால் அவன் கொண்ட நன்றி உணர்வைப் புலப்படுத்துவன. குந்தியின் வாயிலாகத் தன் பிறப்புணர்ந்த நாள் முதல், போர்க்களத்து இறுதி வேளை வரை, தம்பியர் மீது கொண்ட காதலாலும், துரியோதனனிடம் கொண்ட நன்றி உணர்விலும், அவன் உள்ளம் பெரும் போராட்டம் உடையதாக இருந்திருக்க வேண்டும். போராட்டத்தின் விளைவாக, நன்றி உணர்வே பெரிதென மதித்துப் போர் புரிந்து அவன் உயிர் துறக்கிறான். போரில் உயிர் துறப்பது என்ற முடிவு - தம்பியர்பால் காட்டும் அன்பினும், வாழ்வு தந்த துரியோதனனுக்காகக் காட்டும் நன்றி உணர்வே பெரிதென அவன் கொண்ட முடிவு - குந்தியிடத்து அவன் நிகழ்த்திய உரையாடலிலேயே தெளிவாக விளங்குகிறது.[84]

பாசத்திற்குரிய தம்பியரைக் கொன்று தன் நன்றி உணர்வை நிறுவுவது, அல்லது பாசத்திற்குரிய அருச்சுனன் போன்ற தம்பியர் கைப்பட்டு உயிர் தந்து தன் நன்றி உணர்வை நிறுவுவது என்ற கர்ணனின் முடிவைக் கூர்ந்து நோக்கினால், போரில் உயிர் விடும் வேளையில், கர்ணன் உள்ளத்தில் நிகழ்ந்த நிலைமாற்றம் - புலவர் நிகழ்த்திக் காட்டும் நிலை மாற்றம் - அவனுடைய பண்பு நலனில் எத்தகைய மாற்றத்தையும் நிகழ்த்தவில்லை என்று உறுதியாகக் கூறலாம்.

---

83அ. வில்லிபாரதம்: பதினேழாம் போர்: 248. பக். 618. மர்ரே பதிப்பு (1959)
84. வில்லிபாரதம்: கிருட்டினன் தூது: 258. பக். 374. மர்ரே பதிப்பு (1959).

கன்னனின் உள்ளத்தில் பாண்டவர்பால் அன்பு நிகழ்ந்ததும் உண்மை. துரியோதனன்பால் மாறாத நன்றி உணர்வு நிகழ்ந்ததும் உண்மை. இவை இரண்டையும் சீர்தூக்கிக் கன்னன் தனக்குரிய ஒழுக்கம் இதுவெனத் தெளிந்து, நன்றி உணர்வே பெரிதென மதித்துத் தன் பண்புநலனை அமைத்துக் கொள்ளுகிறான்.

நிகழ்வியல் (Factualism) ஒழுக்கியல் (Moralism) இவை இரண்டுமே மனிதனுடைய பண்பு நலனை உருவாக்குவதற்குத் துணைபுரிவன. "இத்துறைகள் இரண்டும், மனிதனுடைய சிந்தனை, உணர்வு, செயல் ஆகியவற்றைப் பொதுப்படப் பற்றி நிற்பன. தனி மனித வாழ்வை உளவியல் அடிப்படையில் கொண்டு காணல், சமுதாயக் கடமையை வரையறுத்தல், மொழியியல் நோக்கில் அச்சொற்களின் பொருள் வரம்பை ஆய்தல், பரந்த தத்துவச் சூழலை விளக்குதல் ஆகிய பலவற்றை இச்சொற்களால் வகுத்தமைக்கலாம். இவை இரண்டும் வெவ்வேறு துறையின; ஆயினும் நெருங்கிய தொடர்புடையன; ஏதேனும் ஒருவிதி கொண்டு இவற்றைப் பரந்த பொதுமை அடிப்படையில் ஒன்றெனக் காட்ட முற்படுவது, தவறான முடிவையே நல்கும். மிகச் சாதாரணமாகக் கருதி முடிவெடுப்பதை நிறுத்தி வைத்து, இவை இரண்டையும் தெளிவாக வேறுபடுத்திக் காட்டும் நிகழ்ச்சிகள் சிலவற்றைத் தெரிந்தெடுத்தே, அவை பற்றிய ஆய்வினை நிகழ்த்த வேண்டும்"[85] என்று ஜான் வில்சன் கூறும் கருத்துகள் ஈண்டு நினைவு கூரத்தக்கன.

இவற்றை உளங்கொண்டு நோக்கின், கன்னன், தன் வாழ்வில் நடந்த நிகழ்ச்சிகளை எண்ணிப் பார்த்துத் தெளிந்த தெளிவின் பெருமை விளங்கும். அவன் கன்னன்பால் காட்டிய அன்பும், கன்னன் அவன்பால் காட்டிய அன்பும் ஒருங்கிணைந்து, கன்னனின் பண்புநலனை அவை விளக்கி நிற்கும் நுட்பம் அத் தெளிவின் உள்ளடாக அமைந்து கிடத்தல் நன்கு புலப்படும். இறுதி வேளையில் நிகழ்ந்த உள்ள மாற்றம்- புலவர் காட்டும் மாற்றம்- அவன் பண்- பண்புநலனை மாற்றி அமைக்கவில்லை என்ற கருத்தும் உறுதி பெறும்.

துரியோதனனுக்காகப் போரிட்டுப் பாண்டவரை வென்று அவன் கருதியதை முடித்துத் தருதற் பொருட்டு, மிக்க முனைப்புடன் போர் முனையில் தன் வீரம்

85. John Wilson: Reason and Morals. Page 38 (1961)

புலப்படுத்திய வீடுமனும் துரோணனும் கண்ணனுடைய நிலையிலேயே இருக்கின்றனர்.[85அ] பாண்டவர்பால் அன்பும், அதே சமயத்தில் துரியோதனனுடைய நலனில் பெரிதும் ஈடுபாடும் கொண்டவராய் இருக்கின்றனர்.

வீடுமனைப் பொறுத்த வரை, அவன் துரியோதனனுக்கு நன்றிக் கடன் பட்டவன் அல்லன். துரியோதனனே அவனுக்கு நன்றிக் கடன் பட்டவன் ஆவான். அதனைத் துரியோதனனே எடுத்துரைக்கின்றான்.

"எங்களுக்கு அரசும் வாழ்வும் இருநிலம் முழுவதும் தந்து
வெங்களத்து உதயன் போல வீடுமன்[86] . . . .

நன்றிக் கடன் இன்றேனும், வளர்த்து ஆளாக்கிப் பலகாலம் உடனிருந்து வாழ்ந்த பாசம் பற்றி வீடுமன் துரியோதனனின் நலன் கருதிப் போரிட முற்படுகின்றான்.[87]

துரோணனின் நிலை, நன்றிக் கடன் பட்ட நிலையே. போர்ச் சூழலில், அதனைத் தானே எடுத்து மொழிகின்றான்.

"வல் வில் ஐம் முனிவனும்,
செஞ்சோற்றுக் கடன் கழித்திடுதல் வேண்டும்
வெம்முனை காணுமாறு"[87அ] . . . .

இவ்வாறு, பாசம் பற்றியும், நன்றிக் கடன் பற்றியும் வீடுமனும், துரோணனும் துரியோதனன் பொருட்டு உயிர்தர முன்வருகின்றனர் எனினும், பாண்டவர் வெற்றி குறித்துத் தம்மை வெல்லும் வகையை அவ்விருவரும் தாமே எடுத்தும், பாண்டவரிடத்துத் தெரிவிக்கின்றனர். அதுவும் போர் தொடங்கிய நிலையிலேயே அவ்வாறு செய்கின்றனர்.[88]

85அ. ஸ்ரீமத் ஸ்வாமி சித்பவானந்தர்: ஸ்ரீமத் பகவத்கீதை: விச்வரூபதரிசனயோகம்: 34 பக். 436. (1951)

86. வில்லிபாரதம்: பதினேழாம் போர்: 47. பக். 575. மர்ரே பதிப்பு (1959)
கிருட்டினன் தூது: 115. பக். 353. மர்ரே பதிப்பு (1959)

87. வில்லிபாரதம்: முதல் போர்: 9,10. பக். 404. மர்ரே பதிப்பு (1959)
எட்டாம் போர்: 10,16. பக். 425-26 "
பத்தாம் போர்: 48. பக். 445. மர்ரே பதிப்பு (1959)

87அ. வில்லிபாரதம்: நிரைமீட்சி: 89. பக். 315. மர்ரே பதிப்பு (1959)

88. வில்லிபாரதம்: முதற்போர்: 11,10. பக். 388. மர்ரே பதிப்பு (1959),

பத்தாம் நாள் போரில், "யாகசேனன் மைந்தனாகிய சிகண்டியை என் முன் நிறுத்தினால், அவன் தலைக்கடாக, அருச்சுனன் கையால் – அதுவும் கண்ணனைக் கொல்ல வந்த அருச்சுனன் கையால் – வீழ்வேன்" என்று, வீடுமன் தன்னை வெல்லும் முறைமையை வெளியிடுகிறான். அன்றியும் பாண்டவரே இறுதியில் வெற்றி பெறுவர் என்ற தன் உறுதியையும் தெரிவிக்கிறான்.[89]

"போரில் எனக்கு முன்னே என் மகன் இறந்தான் என்று தக்கவர் ஒருவர் கூற, அச்சொல் என் செவிப்படின் நான் வில்லைத் தொடமாட்டேன்; போரில் திட்டத்துய்ம்மன் எனக்குக் கூற்றாக வந்து போரிடுவான்" என்று தன்னை வெல்லும் நெறியைத் துரோணன் தெரிவிக்கிறான். அன்றியும், வீடுமன் கூறியவாறே, பாண்டவர் தலைவனான தருமனே வென்று நாடு கொள்வான் என்ற தன் உறுதியையும் தெரிவிக்கிறான்.[90]

பாண்டவர் பற்றிய பெருமையும், பாண்டவர் வெற்றி குறித்த உறுதியும், அதற்குரிய தெளிந்த காரணங்களும் போரில் இருவரும் உயிர்விடும் வரை அவரை விட்டு அகலாது நிற்கின்றன. யாருடைய நலம் கருதி அவர்கள் இருவரும் போரிட முன் வருகின்றனரோ, அந்தத் துரியோதனனிடமே, பாண்டவர் வெற்றிக்குரிய காரணங்களைத் தயக்கமின்றி வெளியிடுகின்றனர்.

பகைவர் பக்கம், அறம் வளர்க்கும் தருமன் உள்ளான்; அவர்க்குத் துணையாக அவர் நலம் கருதும் கண்ணன் உள்ளான். ஆதலின் பகைவர் பக்கம் மாள்வார் குறைவு. தம் பக்கம் மாள்வார் பலர் என்று வீடுமன் துரியோதனனிடம் எடுத்து மொழிகிறான். இஃது எட்டாம் போர் அன்று நடந்த நிகழ்ச்சி.[91]

வீடுமன் கூறிய கருத்தையே துரோணனும் கூறுகிறான். கடல் வண்ணனாகிய கண்ணன் தேர் நன்றாக ஊர்கிறான். அவன் ஊரும்தேர் ஏறிப் பொரும், அருச்சுனனையும் அவனையும் நன்கறிந்தவர்கள், அவ்விருவரையும் வெல்லுதல் அரிது என்று கண்டவர்கள்.

---

89. வில்லிபாரதம்: [illegible] முதற்போர்: 11, 10. பக். 388. மர்ரே பதிப்பு (1959)
90. வில்லிபாரதம்: முதற்போர்: 13. 14. பக். 388. மர்ரே பதிப்பு (1959)
91. வில்லிபாரதம்: எட்டாம் போர்ச் சருக்கம்: 15. பக். 425. மர்ரே பதிப்பு (1959)
படையெழுச்சிச் சருக்கம்: 67. பக். 386. மர்ரே பதிப்பு (1959).

ஆதலின், பலரும் அறிந்த இவ்வுண்மையைத் தெரியாத துரியோதனன் மதித்திறன் அற்றவன் என்று, வீடுமன் போலவே, துரியோதனன் முகத்தெதிரே எடுத்து மொழிகின்றான். இது பதினான்காம் போர் நிகழ்ந்த அன்று நிகழ்ந்த நிகழ்ச்சி.[92]

போர் துவங்குதற்கு முன்னமேயே, பாண்டவரோடு பொருதலும், அவரை வெல்லுதலும் ஆகாதென்னும் கருத்துடைய அவ்விருவரும்,[93] போர்ச் சூழலில், தம் மனநிலையை நன்கு புலப்படுத்துகின்றனர். வெற்றி வேண்டித் தம்மை நம்பி நிற்கும் துரியோதனனிடத்தே நேரே தம் கருத்தை வெளியிடுகின்றனர்.

துரியோதனனுக்குப் போர் வெற்றி வேண்டிப் படை நடத்தும் அவ்விருவரும், பாண்டவர் பெருமை கூறலும், அவர் வெற்றி குறித்துத் துரியோதனனிடமே கூறலும், ஆகிய இவையும் துரியோதனனும் அறியாத வகையில்,[94] தம்மை வெல்லும் உபாயத்தைப் பகைவர்க்கு அறிவித்த அவர்தம் இயல்பும் அவர்தம் நிலை மாற்றத்தைத் தெரிவிக்கின்றன.

போர் துவங்கும் வேளையில், கண்ணனும் பாண்டவரும் சென்று, அவ்விருவரையும் வெல்லும் வழி வகைகளை வினவியபொழுது அவ்விருவரும் மறுத்திருப்பரேல், அவர்களையும் துரியோதனனுழியரையும் வெல்லுதல் பாண்டவர்க்கு அரிதாயிருந்திருக்கும். அவ்வுண்மையைக் கண்ணனே அவர்களிடத்தில் கூறுகிறான்.[95]

இவ்வாறு வெல்லுதற்கரிய வல்லமையைப் பகைவர் பயன்படுத்திக் கொள்ளுமாறு, அவரிடமே தம்மை வெல்லும் வழிகளை எடுத்துக் கூறுகின்றனர் எனின், அஃது அவர்தம் நிலை மாற்றத்தினை வெள்ளென எடுத்துக் காட்டுதல் தெளிவு:

வீடுமனும், துரோணனும், துரியோதனனுயிர் பொருட்டுப் போரிட்டு உயிர் துறக்க முனைந்து நின்றதும் உண்மையே. பாண்டவர்பால் மிகுந்த பரிவுடையராய் அவர் வெற்றி குறித்துத் தம் உயிரை இலக்காக்கியதும் உண்மையே.

92. வில்லிபாரதம்: பதினான்காம் போர்: 62, 63, 64. பக். 515. மர்ரே பதிப்பு (1959)
93. வில்லிபாரதம்: உலூகன் தூது: 16. பக். 328. மர்ரே பதிப்பு (1959)
94. ஸ்ரீ மகாபாரதம்: துரோண பர்வம்: பக். 312. (1922)
95. வில்லிபாரதம்: முதற்போர்: 9, 13. பக். 388. மர்ரே பதிப்பு (1959).

உண்மையில் பாதிப்பட்டு நின்ற ஆயின், இருமை நிலை உடையவராயினர் என்பது பொருந்துமா என்பது ஆராயத்தக்கது. அவர்தம் இருமை நிலை, அவர்தம் பண்பு நலனில் மாற்றம் விளைத்ததோ என்னும் ஐயுறவும் ஆராயத்தக்கது.

வீடுமன் இளமை தொட்டுத் தற் பற்றின்றித் தன்னை உருவாக்கிக் கொண்டவன். போரில் அவன் காட்டிய முனைப்பிலும், தன் உள்ளத்தில் நிகழ்ந்த - நிகழ்ந்திருக்கக் கூடிய - உணர்ச்சிப் போராட்டங்களை ஒருவழிப்படுத்தித் தன்னை ஆக்கிக் கொண்டவன். அதனால் ஆண்டு முதிர்தற்கு முன்னமேயே அக நலத்தாற் பெரியோன் எனப் புகழ் பெற்றவன்.[96] போகம், தருமம், தவம் ஆகியவற்றை ஒன்றாகக் கொண்டவன்.[97]

அரசாணையின் மீது பற்றுக் கொள்ளாது அரசியற் கடமைகளைப் பொறுப்போடு ஆற்றியவன். தந்தை இன்பம் கெடாது, அவன் பெயரில் அரசியற் கடமைகளைச் செய்தவன்.[98] அத்தகைய மனநிலையோடு தன் தம்பியர்க்கும் உதவிப் பெயர் பெற்றவன்.[99] அத்தகைய மனநிலை, திருதராட்டிரனுக்கு முடிசூடும் வேளையில் அவனுக்கிருந்தது.[100] திருதராட்டிரன் விழியற்றவனாதலின், அவன் கடமையைச் செய்யப் புகுந்த பாண்டுவினிடத்திலும் அவன் அன்புடையவனாகவே இருந்தான்.[101]

திருதராட்டிரன் மைந்தரும், பாண்டுவின் மைந்தரும், வளர்ந்து முற்றி வளம் பெறக் கல்வி நலமெல்லாம் நல்கி, கிருபன், துரோணன் ஆகியவர் உதவி கொண்டு வளர்த்தவன்.[102] இருவரும் ஒற்றுமை உடையவராய்ப் பகைவென்று வாழ வேண்டும் என்னும் கருத்தில் மிக்க ஆர்வஞ் செலுத்தியவன்.[103] மனவேறுபாட்டால்,

96. புறத்திரட்டு: அறிவுடைமை: 15. பக். 119. கழகப்பதிப்பு (1972)
தொல்காப்பியம்: புறத்திணையியல்: நச்சினார்க்கினியருரை. பக். 234. கழகப்பதிப்பு (1974)

97. வில்லிபாரதம்: ஆறாம் போர்: 4. பக். 418.
பத்தாம் போர்: 41. பக். 443. மர்ரே பதிப்பு (1959)

98. வில்லிபாரதம்: குருகுலச் சருக்கம்: 116. பக். 19. மர்ரேபதிப்பு (1959)

99. வில்லிபாரதம்: குருகுலச் சருக்கம்: 119-122. பக். 20. மர்ரேபதிப்பு (1959)

100. வில்லிபாரதம்: சம்பவச் சருக்கம்: 21. பக். 28. மர்ரேபதிப்பு (1959)

101. வில்லிபாரதம்: குருகுலச் சருக்கம்: 21, 108. பக். 28, 39. மர்ரே பதிப்பு (1959)

102. வில்லிபாரதம்: வாரணவதச் சருக்கம்: 29, 45. பக். 44-46. மர்ரேபதிப்பு (1959)

103. வில்லிபாரதம்: குருகுலச் சருக்கம்: 116. பக். 40. மர்ரே பதிப்பு (1959).

பாண்டவரும் துரியோதனாதியரும் வேறுபட்டமை தெரிந்து மனம் மிகக் கவல்கிறான்.[104] இவ்வாறு, இளமை தொட்டுத் தன்னலம் கருதாது, தன் மரபு நலன் ஒன்றே கருதி வாழ்ந்தவன் வீடுமன். அதனால் மரபுக்கே முதல்வன் என்னும் பெயரும் பெற்றவன் அவன்.[105]

இவ்வாறு தற்பற்றின்றித் தூய வாழ்வு வாழ்ந்த வீடுமனின் வாழ்வில் சில குறைபாடுகள் உண்டு. தம் தம்பிக்கு மணம் முடிக்குங்கால், வன்முறை கொண்டு காசி மன்னன் மகளிரை மணம் முடிக்கிறான்.[106] திரௌபதி துகிலுரியப்பட்ட வேளையில், அவள் நீதி வேண்டி அலறியபோது, அவள் மனம் நிரம்புமாறு தக்க விடையளித்து அவட்குப் பாதுகாப்புத் தருங்கடமையில் தவறுகிறான்.[107] போரில், விராடன் மகன் சிவேதனை நேரிய முறையால் வெல்வது அரிது என்று தெரிந்து, அவனை வஞ்சனையாற் கொல்கிறான்.[108]

இக்குறைபாடுகளில் திரௌபதிக்கு அறமும் ஆறுதலும் வழங்கும் கடமை தவறியது ஒன்று நீங்கலாக,[109] ஏனைய இரண்டும் பெருங் குற்றங்கள் எனக் கொள்ளப்படுவன அல்ல. தம்பி மணங்கருதி வன்முறை மேற்கொண்டமையும், சிவேதனைக் கொல்வதில் வஞ்சனை நெறி மேற்கொண்டமையும் போர் வீரனுடைய நோக்கில் நின்று காணுங்கால்[110] பெருங் குற்றங்கள் எனப்படமாட்டா. அவையும் தம்பியின்பாலும், பெயரர்களாகிய துரியோதனன்பாலும் கொண்ட பாசம் பற்றியவை என்று அமைதி கொள்ளலாம்.

---

104. வில்லிபாரதம்: வாரணாவதச் சருக்கம்: 105. பக்.56. மர்ரே பதிப்பு(1959)
105. வில்லிபாரதம்: பத்தாம் போர்ச் சருக்கம்: 41. பக்.443. மர்ரே பதிப்பு (1959)
106. வில்லிபாரதம்: குருகுலச் சருக்கம்: 124. பக்.20. மர்ரே பதிப்பு (1959)
107. வில்லிபாரதம்: சூதுபோர்ச் சருக்கம்: 233. பக்.180. மர்ரே பதிப்பு(1959)
Pandit Swaminatha Atreya: Idealism and Pragmatism Indian Express, dated March 29, 1979
108. வில்லிபாரதம்: முதற்போர்ச் சருக்கம்: 68. பக்.395. மர்ரேபதிப்பு(1959) முதற்போர்ச் சருக்கம்: 68. வை.மு.கோ. உரை விளக்கம்: பக்.56. வை.மு.கோ. பதிப்பு (1968).
109. Pandit Swaminathan Atreya: Idealism and Pragmatism: Indian Express dated March 29, 1979
110. V.R. Ramachandra Dikshitar: War in Ancient India. Page 305-06 (1948)

இக்குறைபாடுகளை ஏற்றுக்கொண்டு நோக்கினும், வீடுமனுடைய வாழ்வு, தக்க முதல் இறுதி வரை உயர்ந்த வாழ்வாக இருந்தது என்பது பொருந்துவதேயாகும். தன் வாழ்வில் தந்தையின் இன்பம் கருதித் தன் இன்பத்தைத் தியாகம் செய்தது முதல் (துரியோதனாதியர் - பாண்டவர் பால் நலம் கருதி) பொது வாழ்வில் போர்க் களத்தில் தன் உயிரைத் தியாகம் செய்தது வரை அவன் வாழ்வு தூய வாழ்வாக அமைந்தது குறிப்பிடத்தக்கதாகும்.[111]

இத்தகைய பெருமைகளை உளம் கொண்டு நோக்கின், வீடுமன், போர்க் களத்தில் காட்டிய நிலைமாற்றம் அவனுடைய பண்புநலனை ஒன்றும் செய்திடவில்லை என்று தெளியலாகும். பாண்டவர் துரியோதனர் பால் அவன் மேற்கொண்ட இருமை நிலை அவன் பண்புநலனை மாற்றியதோ என்னும் ஐயுறவிற்குச் சிறிதும் இடமில்லை என்பதும் விளங்கும்.

போர்க்களத்தில், உயிர் விடும் நிலையில், அவன் துரியோதனாதியர்க்குக் கூறிய செய்தி, அவன் பண்புநலன் பற்றிக் கொள்வதற்குரிய ஐயுறவுக்குச் சிறிதும் இடமில்லாமல் செய்து விடுகின்றது. "போர்க்குரிய திறம் அறிந்து பொருக. உங்கட்கே உரிய ஆண்மை குன்ற வேண்டா" என்று, அவரை ஊக்கப்படுத்துகிறான்.

"உறுபோர் அறிந்து கொண்டு பொருவீர்
தனி ஆண்மை பொன்றல்"[111அ]

தன்னைப் பொறுத்தவரை, தன் தனி ஆண்மையை நிலை நிறுத்தி விட்டே தலை சாய்கிறான். தேர் ஊரும் கண்ணன் மேனியும் சிவக்குமாறு அம்பெய்கிறான். தம் மேனியில் வந்து தைப்பன அருச்சுனன் அம்புகள் எனத் தெரிந்து பெரு மகிழ்ச்சி அடைகிறான். இறுதி நிலையில், அருச்சுனனை வேண்டித் தன் தலையின் தாழ்வு தீர்க்குமாறு வேண்டி நின்று அவன் கைப்பட்டு அம்புப்படுக்கையில் வீழ்கிறான்.

111. Pandit Swaminatha Atreya: Idealism and Pragmatism.
Indian Express: dated, March 29, 1979
Anna: N. Subramanian: The last glorious phase.
Indian Express, dated, November 27, 1979.

111அ. வில்லிபாரதம்: பத்தாம் போர்ச் சருக்கம்: 35. பக். 442.
மர்ரே பதிப்பு (1959).

பகைவன் கைப்படுதல் வாயிலாகத் தான் பரிவு காட்டும் பாண்டவர்பால் உள்ளத்தனையும் சார்ந்து நிற்கிறான் என்று துரியோதனனுடையர் ஐயுறலாகாது, அவர் பொருட்டுத் தன் உயிரைப் பணயம் வைக்கிறான். வீடுமனின் இறுதி நிலை, அருச்சுனன், கன்னன் ஆகிய இருவர் கண்ணீரையும் பெருக்குகின்றது. அவர் விடும் கண்ணீர், கண்ணில் அம்பு பட்டாலெனத் துன்புறுத்தும் கொடுமை புலப்படுத்துவதாக உள்ளது. அருச்சுனனும் கன்னனுமே யன்றி, வீடுமன் செய்தி கேட்டு இருதிறத்துச் சேனையும் அச் செய்தி தாங்காது அலறுகின்றன. யாரும் நெஞ்சு தாங்காது வருந்துகின்றனர். நொந்து நைகின்றனர். இரங்கிக் கலங்குகின்றனர்.[112]

"புருகூதன் மைந்தனும், புனைதுழாய் வீரனும்,
... இருவர் வீழும் அம்பினில் மூழ்கினர்
சேரவந்து இரண்டு வகை ஆகிவெங்களம் முறு
சேனையும் திரண்டு அலறவே
யாரும் நெஞ்சு அழிந்தனர்கள்; யாரும் நெஞ்சு நைந்தனர்கள்
யாரும் நின்று இரங்கினர்களே.[112அ]

தன்பொருட்டு இரங்கி வருந்தும், பாண்டவரையும், துரியோதனனையும், அஞ்சவேண்டா என்று ஆறுதல் கூறுகிறான். அஞ்சாமை கொண்டு தொடர்ந்து போர் புரிந்து, தத்தம் திறத்திறகேற்ற பயன் பெறுக என்னும் கருத்தில் அவன் அவ்வாறு கூறுகிறான்.[113]

தன்பொருட்டு இரங்கி வருந்தும் இருவரும் தான் வேண்டியும், போரைக் கைவிடார் என்பது வீடுமனுக்கு நன்கு தெரியும். ஆதலின், இருசாராருக்கும் அவன் அஞ்சாமை நல்கிக் கடமை புரியுமாறு[114] அறிவுரை கூறுகிறான். உயிர் விடும் நிலையில், இருசாராருக்கும், தன் அன்மை தோன்ற, அஞ்சற்க என்று அவன் கூறும் அறிவுரை, அவன் இருமை நிலை உடையன் அல்லன் என்பதைக் காட்டும். பாண்டவர்பால் கொண்ட மதிப்பும், துரியோதனனிடத்துக் கொண்ட பாசமும், ஒன்றைக் கொன்று முரணி நின்று அவனுடைய பண்புநலனை மாற்றவில்லை என்பதும் புலப்படும்.

---

112. வில்லிபாரதம்: பதினோராம் போர்: 5. பக். 446. மர்ரே பதிப்பு (1959)
112அ. வில்லிபாரதம்: பத்தாம் போர்: 37. பக். 443. மர்ரே பதிப்பு (1959)
113. வில்லிபாரதம்: பத்தாம் போர்: 42. பக். 444. மர்ரே பதிப்பு (1959)
114. ஸ்ரீ மகாபாரதம்: பீஷ்ம பர்வம்: பக். 489. (1919).

அன்றாட வாழ்வில், ஒழுக்கவியலும் ( Moralism , நிகழ்ச்சியமும் (Factualism) பலர்க்கும் ஒன்றை ஒன்று முரணுவ போலத் தோன்றும். நமக்கு நாமே எண்ணிப் பார்த்தாலும், பிறரொடு கலந்தாய்ந்தாலும் அவை முரண் நிற்பனவாகக் காணும். ஒன்றுக்கொன்று வேறுவன என்றும் வெவ்வேறு பயன் விளைப்பன என்றும் கருதி எதனைச் சார்வது என்றறியாமல் தடுமாறுவோம். சமயத் துறையில் தோன்றும், விவாதமும் ஐயமும் போல, நம்பிக்கைக்கும் (Faith) காரணகாரிய உணர்வு ( Reason) க்கும் முரணிருப்பது போலத் தோன்றும் சூழ்நிலை அமைதல் உண்டு. மனச் சான்றும், அவ்வப் பொழுதைய அமையவும் ( Expediency ) நீதியும், கருணையும், சட்டமும், ஆசையும், ஒன்றுக்கொன்று முரண் நின்று, நம்மிடத்தே இருகுரல் கொடுப்பன போலத் தோன்றும். இத்தகைய கட்டம், அப்பட்டமாகத் தோன்றியும், ஒழுக்கியற் சிக்கல்களுக்குரிய சூழ்நிலைகளை மக்கள் எதிர்ப்படுதலையும் அந்நிரல் அவர்க்கு விளையும் பயன்களையும் ஆய்ந்து, உள அளவியலாளர் (Psychoanalysists ) இவற்றிற் காணும் முரண்களுக்குப் பரிகாரம் காண்கின்றனர் ....... காரணகாரிய முறை கொண்டு நோக்கின், இத்தகைய முரண் தேவையற்றது எனப் புலப்படுவதால் அது நடைமுறையில் கொள்ளத்தக்கது அன்று என்று தத்துவ நூலாரும் விளக்கம் நல்குகின்றனர்.[115]

இக்கருத்துகளை உளம் கொண்டு நோக்கின், பாண்டவர்பால் பரிவும், துரியோதனன்பால் பாசமும் கொண்டு, வீடுமன் இருமை நிலை புலப்படுத்தினன் என்பதாகத் தோன்றும் கருத்து வலுவற்றது என்பது தெளிவாகும். போர்ச்சூழலில் தன்னை வெல்ல உபாயம் கூறியதனால் எய்திய நிலைமாற்றம், துரியோதனன் பொருட்டு உயிர் விடும் உறுதியை மாற்றவில்லையாதலின், வீடுமனுடைய பண்புநலனில் மாற்றம் நிகழவில்லை என்பதும் நன்கு விளங்கும். போர்ச்சூழலில் பகைவரிடத்துத் தன்னை வெல்வதற்குரிய உபாயம் கூறிய நிகழ்ச்சியில் பற்றிய உண்மையும் பகைவரை எதிர்த்து நின்று உயிர்விடுவதாக உறுதி கொண்டிருந்து அவ்வாறே பகைவர் கையில் உயிர் நீத்த ஒழுக்கியல் பற்றிய உண்மையும் ஒன்றுக்கொன்று முரணாது நின்று, இரண்டும் அவனுடைய பண்புநலனை விளக்கிக் காட்டுவதில் இயைந்து நின்று பயன்படும் நுட்பமும் மிக நன்கு விளங்கும்.

---

115. John Wilson: Reason and Morals. Page 42-43 (1961)

வீடுமனுடைய நிலையிலேயே துரோணனும் உள்ளான். வீடுமனைப் போல் தன்னை வெல்வதற்குரிய வழிவகைகளைப் பாண்டவர்க்கும் கண்ணனுக்கும் எடுத்துக் கூறுகிறான். வீடுமனுடைய நிலைமாற்றம் அவனுடைய பண்புநலனில் மாற்றம் நிகழ்த்தாதது போலவே, துரோணனுடைய நிலைமாற்றமும் அவனுடைய பண்புநலனில் எத்தகைய மாற்றமும் நிகழ்த்தவில்லை.

துரோணன் போர்க்கலைத் திறங்களால் (குறிப்பாக விற்கலைத் திறத்தால்) பேராற்றலும் பெரும் புகழும் பெற்றவன்.[116] வீடுமன் பயின்ற பரசுராமனிடத்திலேயே இவனும் பயின்றவன். வீடுமனும் மதித்துத் தன் இளையோர்க்குக் கல்வி நலம் பெருக்குமாறு வேண்டி விரும்பி அவனால் அழைக்கப் பெற்றவன்.[117]

போர்க்கலைத் திறங்களைப் போலவே வாய்மை முதலிய அகமுகப் பண்புகளையும் உரந் தோன்ற வளர்த்துக் கொண்டவன்.[118] தன்னொடு பயின்ற நண்பன் (யாசசேனன்) தானே முன்வந்து மொழிந்த வாக்கினைக் காவாமையோடு, அவன் வாக்கினை நம்பியிருந்து உற்ற வேளையில் நினைவுபடுத்திய போது இகழ்தலும் செய்தமையின், தன் போர்க்கலைத் திறத்தினைப் பயன்படுத்தி, (தான் பயிற்றிய மாணவர் மூலம்) தன் நண்பனுக்குத் தன் போர் வல்லமையையும், வாய்மையின் மாண்பையும் புலப்படுத்தியவன்.[119]

தான் வளர்த்துப் போற்றிய போர்த் திறத்தின் மீது பெருமதிப்புக் கொண்டவன் துரோணன். அம்மதிப்பே, தன்னிடம் பயின்ற அருச்சுனன் தன்னினும் விஞ்சி நிற்பதைக் கண்டு அவனைப் பாராட்டும் பெருமனத்தை அவனுக்கு நல்குகின்றது.[120]

116. வில்லிபாரதம்: வாரணாவதச் சருக்கம்: 32. பக். 45. மர்ரே பதிப்பு (1959)
Dr. Chelnat Achyuta Menon: Ezuttaccan and his age: Page 146 (1940)

117. வில்லிபாரதம்: வாரணாவதச் சருக்கம்: 34. பக். 45; 45, 46. பக். 46. மர்ரே பதிப்பு (1959)

118. வில்லிபாரதம்: வாரணாவதம்: 35, 43. பக். 45, 46; பதினைந்தாம்போர்ச் சருக்கம்: 3; பக். 551. மர்ரே பதிப்பு (1959)

119. வில்லிபாரதம்: வாரணாவதச் சருக்கம்: 35, 43. பக். 45, 46; பதினைந்தாம் போர்ச் சருக்கம்: 3. பக். 551. மர்ரே பதிப்பு (1959)

120. வில்லிபாரதம்: வாரணாவதச் சருக்கம்: 48. பக். 47; நிரைமீட்சி: 92. பக். 315. மர்ரே பதிப்பு (1959)
நிரைமீட்சிச் சருக்கம்: 93. வை.மு.கோ. உரை விளக்கம்: பக். 168. வை.மு.கோ. பதிப்பு (1960).

போர்த்திறத்தைப் போலவே, அவனுக்குப் பண்பாகிய வாய்மையின் மீது 'அவன் கொண்டிருந்த மதிப்பு, பகைவனாகிய தருமனிடத்து அதைக் கண்டபோது, அவனை மதித்துப் போற்றும் விரிந்த உள்ளத்தை அவனுக்கு நல்குகின்றது.[121]

இவ்வாறு, புறத்தாலும் அகத்தாலும் பேராற்றல் வளர்த்து நின்ற துரோணன் தான் போற்றிய விழுமிய பண்புகளுள் ஒன்றாகிய நன்றிக் கடன் பொருட்டு, தன் வாழ்வுக் கொள்கைக்கு எதிராகத் தீயோராகிய துரியோதனாதியரைச் சார்ந்து நிற்க வேண்டியவனாகின்றான். அவ்வாறு, நின்றும், அறமும் நேர்மையும் உடையாரிடத்துக் கொள்ளும் பரிவும் பற்றும் அவனை விட்டு நீங்கவில்லை. தம் போர்த் திறம் போலவே, தான் பேணிய வாய்மை முதலிய அறங்களைத் தன்னிடத்திருந்து விலக்குதலோ அவற்றினின்று தான் விலகுதலோ செய்தல் அவனுக்கு இயலாமையின், பாண்டவர்பால் அவன் கொண்டிருந்த பற்றினை விலக்கிக் கொள்ள இயலவில்லை.[122]

இத்தகைய பண்பினாலேயே உற்ற வேளையில் பாண்டவர்க்குத் தக்க அறிவுரை கூறி அவர்களை நெறிப்படுத்துகின்றான். சூதில் இழந்த உடைமைகளைத் திருதராட்டிரன் பாண்டவர்க்கு மீண்டும் நல்க, அவன் சொற்கு இணங்காமல் துச்சாதனன் மறுத்துரைத்த பொழுது, துரியோதனன் முதலிய நால்வரையும் திருத்த முடியாத தன் நிலையைத் திருதராட்டிரனிடம் எடுத்துரைக்கின்றான்.[123]

பன்னிரண்டாண்டுக் கானகவாழ்வும் ஓராண்டுக் கரந்துறை வாழ்வும் மேற்கொண்டு திரும்பி வந்து இழந்த அரசும் வாழ்வும் திரும்பப் பெறலாம் என்றும், கானகவாழ்வு, பாண்டவர்க்கே புதியதன்று, இராமன் வாழ்வில் முன்னும் நிகழ்ந்தது, ஆதலின் அவன் போல் கானகம் சென்று திரும்புக என அவன் வரலாற்றையும் கூறிப் பாண்டவர்க்கு நம்பிக்கையும் ஊட்டி அனுப்புகின்றான்.[124]

---

121. வில்லிபாரதம்: பன்னிரண்டாம் போர்ச் சருக்கம்: 90. பக். 466. மர்ரே பதிப்பு (1959); வை.மு.கோ. உரை விளக்கம்: பக். 94. வை.மு.கோ. பதிப்பு (1968)

நல்லாப்பிள்ளை பாரதம்: உத்திரநிரைமீட்சிச் சருக்கம்: 146, 185. பக். 680-84 (1911)

வில்லிபாரதம்: பன்னிரண்டாம் போர்: 85. பக். 465. மர்ரே பதிப்பு (1959)

122. வில்லிபாரதம்: பன்னிரண்டாம் போர்: 62, 64. பக். 515. மர்ரேபதிப்பு (1959)

123. வில்லிபாரதம்: சூதுபோர்: 271. பக். 185. மர்ரே பதிப்பு (1959)

124. வில்லிபாரதம்: நிரைமீட்சிச் சருக்கம்: 86. பக். 314. மர்ரேபதிப்பு (1959).

"அந்தணர் உயர்ந்த செல்வ முரசு அதிர் அயோத்தி முனர் மன்னவன் கதையும் கூறி உரை செய்த படியே உங்கள் உலகினை இழந்து சில நாள் வரை செறி கானில் வைகி வருவதே வழக்கும்" என்றான். "அரிவையோடு அகன்று நீவிர் ஐவரும் அடவி எய்தி சுரர்திசை ஈர்-ஆறு அங்கண் ஒன்றுதிர்; மன்றும் நாடல் ஒருவரும் அறியா வண்ணம் ஒருதிறம் இறைதிர்; உங்கள் பெருவிறல் அரசும் வாழ்வும் பின்னுறப் பெறுதிர்" என்றான்.[124அ]

இடர்மிக்க வேளையில் நம்பிக்கையும் உறுதியும் தந்த நல்லோராகிய பாண்டவர்க்கு நெறி உணர்த்திய அவனுடைய பண்பாடு அவனிடம் தொடர்ந்து நிற்கிறது. அதனாலேயே பகைவராகிய தருமன் முதலியோர் பண்பாட்டையும், தன் பக்கல் உள்ள துரியோதனன் முதலியோர் பண்பின்மையையும், வெற்றி வேண்டித் தன்னை நம்பியிருக்கும் அரியோதனனிடத்திலேயே எடுத்து மொழிகிறான்.[125]

எனவே, போர்ச்சூழலில் மட்டுமல்லாது, அதற்கு முன்னமேயே, துரோணன், பாண்டவர்பால் பரிவும் மதிப்பும் கொண்டவனாக உள்ளான் என்பது இதுவரை ஆய்ந்தவற்றால் புலனாகின்றது.

அவ்வாறு துரோணன், பாண்டவர்பால் கொண்டிருந்த பரிவும் மதிப்பும் அவனுடைய பண்புநலனை மாற்றவில்லை. தன்னை வெல்லும் வழியைப் பாண்டவர்க்குக் கூறியும், துரியோதனன் பால் அவன் கொண்டிருந்த நன்றி உணர்வில் எந்த மாற்றமும் நிகழவில்லை. நிரைமீட்சியின் போது, தன்னை எதிர்க்கத் தயங்கிய அருச்சுனனிடம், "செஞ்சோற்றுக்கடன் கழித்திடுதல் வேண்டும்"[126] என்று எடுத்துக் கூறிய, நன்றி உணர்வுக்குரிய காரணம், போர்ச் சூழலிலும், அவனுடைய நெஞ்சில் தொடர்ந்து இருந்து கொண்டிருந்தது. அது பற்றியே அவன் போரில் இறப்பதைப் பொருட்படுத்தாது, துரியோதனன் பொருட்டுப் போரிடுகிறான். தன்னிடம் கற்க வருவோனாலேயே தன்னுயிருக்கு ஊறுவரும் என்று தெரிந்த பின்னரும், சாவுக்கு அஞ்சாமல், தன்

124அ. வில்லிபாரதம்: சூதுபோர்ச் சருக்கம்: 274-75. பக்.185. மர்ரே பதிப்பு (1959)

125. வில்லிபாரதம்: பன்னிரண்டாம் போர்: 84, 91. பக்.465. மர்ரே பதிப்பு (1959)
பதினொராம் போர்: 38. பக்.451. மர்ரே பதிப்பு (1959)

126. வில்லிபாரதம்: நிரைமீட்சிச் சருக்கம்: 89. பக்.315. மர்ரே பதிப்பு (1959).

மாணவன் கையம்புக்கு இலக்கானன் மாய்கிறன். துரியோதனன், தன் வாழ்வு வலி, வெற்றி, தேச உறுதி ஆகிய யாவும் துரோண முனிவனே[127] என்று நம்பிய நம்பிக்கைக்குப் பழுது ஏற்படாமல் தன் உயிரைப் பணயம் வைக்கிறன். கல்வி நலத்தால், அயன்; போர்த்திறத்தால் அரன்; உயிர்க்கு நலம் செய்யும் அருட் பண்பால் அரி; தன் மரபு இனி இவ்வுலகில் இலங்குமாறு தன்னைப் போலும், விரஞ்சிய அசுவத்தாமனின் தந்தையாக விளங்கித் தன் கடமை முடித்து, வீர மரணத்தால், வீடு பேறு எய்தினன் என்று துரியோதனன் அவன் பெருமையை மறவாது போற்றுமளவில், தன் நன்றிக் கடனுக்கு ஈடுதந்த தன் பண்புநலனின் மாற்றம் இலாது, உயிர் விடும் வேளையில் தன்னைக் காத்துக் கொண்டவன் துரோணன்.

"கரிமுகக் கடவுள் அன்ன கரும் பரித் தாமா என்னும்
குறைகழல் துணைத்தாள் சிங்கக் குருளையைப் பயந்த தாதை
அருமறைக்கு அயனை ஒப்பான் அடல் சிலைக்கு அரனை ஒப்பான்
திருவருட்கு அரியை ஒப்பான் திருத்தகு வீடு சேர்ந்தான்"[127அ]

பாண்டவரும், துரியோதனனும் இறுதி வரை மதிக்கும் வகையில் நல்வாழ்வு வாழ்ந்த துரோணனின் உள்ளத்தில், நடுவு நிலைமைக்கும், நன்றி உணர்வுக்குமிடையே போராட்டம் நிகழ்ந்திருத்தல் வேண்டும். விழுமிய பண்புகளுக்கு மதிப்புத் தரவேண்டும் என்னும் எண்ணத்தைப் பொறுத்தவரை, அவன் உள்ளம் பாண்டவர்பால் சென்றிருத்தல் வேண்டும். வாழ்வுக்குரிய வளங்கள் நல்கி, வைத்துப் பேணிக் காத்தமையின், தீயோராயினும், துரியோதனனை விட்டு அகலக் கூடாது என்ற உறுதி அவனைத் துரியோதனனிடத்து ஈர்த்து வைத்திருத்தல் வேண்டும்.[128]

விழுமிய கொள்கைகளுள் எச்சூழலில், எக்காரணத்திற்காக எதனைக் கடைப்பிடிப்பது என்ற போராட்டம் அறவோர் வாழ்வில் நிகழ்தலை ஆய்வாளர் எடுத்துக் காட்டுகின்றனர். தற்சார்புடைய கடப்பாடு (Subjective Obligation) தற்சார்பிலாத கடப்பாடு ( Objective obligation ) ஆகியவை எத்தகையன என்று முடிவெடுப்பதில் குழப்பம் நிகழ்தல் உண்டு. அறவியல் பற்றிய நூலறிவும்

---

127. வில்லிபாரதம்: பதினைந்தாம் போர்: 47. பக். 550. மர்ரே பதிப்பு (1959)
127அ. வில்லிபாரதம்: பதினேழாம் போர்: 48. பக். 575. மர்ரே பதிப்பு (1959)
128. திருக்குறள்: அறத்துப்பால்: நடுவு நிலைமை: பரிமேலழகர் அவதாரிகை.

அநுபவ அறிவும் தக்கவாறு அமைந்தாலன்றி இரண்டையும் மாறி உணர்தல் நிகழக் கூடும் என்று அவர் விளக்குகின்றனர்.[129]

முதற் கண் ஒன்றைப் பொருந்தியது என்று முடிவு கட்டலாம்: அப் பொருள் பற்றிய வேறு சில கூறுகளைக் கண்டறிந்த பின், உள்ளத்தில் நிகழும் மாறுதலுக்கேற்ப, அதனையே பொருந்தாதது என்று பின்னர் முடிவுக்கு வரலாம். எனவே அநுபவத்திற்கும் உணர்வுக்கும் ஏற்ப, பொருந்தியது என்று முன்னர்க் கருதியதனையே பொருந்தாதது என்ற முடிவுக்கு வந்து அது பற்றிய வேறான கருத்தும் கொள்ளலாம்[130] என்று தொடர்ந்து விளக்குகின்றனர்.

இக்கருத்துகளை நீர் உளம் கொண்டு நோக்கின், பாண்டவர் தம் பெருமைக்-கேற்ப அவன்பால் கொண்டிருந்த மதிப்பையும் பரிவையும் பெரியனவெனக் கருதியும், துரியோதனன் (நயவஞ்சமினும்) தனக்குச் செய்த வாழ்நாள் உதவிகளை[131] அவற்றினும் பெரியனவாகக் கருதி அவன் பொருட்டுப் போரில் உயிர்தலே முறை என்ற முடிவுக்கு அவன் வந்திருத்தல் பொருந்தியதே ஆகும் என்பது புலப்படும்.[132]

துரோணன் இத்தகைய முடிவுக்கு வருவதற்கு இன்னொரு முக்கிய காரணத்தையும் கருதியிருத்தல் வேண்டும். குருகுலத்து இளையோர் வளர்ச்சியும் நலமும் கருதித் தன்னை வரவழைத்து எல்லாச் சிறப்பும் அளித்து மேம்படுத்திய[133] வீடுமன்
ஒருபுறம்-பாண்டவர்பால்-பரிவும்-மதிப்பும்-கொண்டு
வாழ்வையும் அவன் செயலையும் கூர்ந்து நோக்கியிருத்தல் வேண்டும். வீடுமன் ஒருபுறம் பாண்டவர்பால் பரிவும் மதிப்பும் கொண்டு, இன்னொரு புறம் துரியோதனாதியர் பால் பாசமும் பற்றும் கொண்டொழுகி, இறுதியில், பாரதப் பெரும் போரில் துரியோதனாதியர் பொருட்டு உயிர்விட முன்வந்ததை நோக்கித் தானும் அத்தகைய முடிவுக்கு வந்திருத்தல் வேண்டும். அதிலும் உறவினருள்ள வீடுமனே பாசம்

---

129. Sidney Zink: The Concept of Ethics. Page 136 (1962)

130. Sidney Zink: The concept of Ethics. Page 33 (1962)

131. வில்லிபாரதம்: பதினெட்டாம் போர்: 200. பக். 653. மர்ரே பதிப்பு (1959)

132. வில்லிபாரதம்: பதினைந்தாம் போர்: 44. பக். 549. நிரைமீட்சிச் சருக்கம்: 89 பக். 315; மர்ரேபதிப்பு (1959)
கம்பராமாயணம்: யுத்தகாண்டம்: கும்பகருணன் வதைப்படலம்: 150. பக். 175. மர்ரே பதிப்பு (1958)

133. வில்லிபாரதம்: வாரணவதச் சருக்கம்: 46, பக். 46. மர்ரே பதிப்பு (1959)
பதினைந்தாம் போர்: 32. பக். 547. மர்ரேபதிப்பு (1959).

காரணமாக உயிர் விட முன் வருகிறன் எனின், உறவல்லாத தான், நன்றியுணர்வு என்னும் பண்பு, காரணமாக அவர் பொருட்டு உயிர் விடுதலை பெரியதொரு பொறுப்பாகக் கருதியிருத்தல் வேண்டும்.

"அறிவியற் கருத்துகள், புறநலன்களோடு அமைந்து நிற்பன; தத்துவம் பற்றிய கல்விக் கூறுகள் நம்பிக்கைகளோடு தொடர்புடையவையாம், உள்ளம் உறப் பேணிக் காப்பார் தம் இயல்பில் அமைந்து விளங்குபவை. ஆதலின், தமக்குத் தக்க உதவி புரிந்து நெறிப்படுத்துவாரைத் தெரிந்தெடுப்பதில் மிகுந்த கவலை காட்டுவது அறிவோடு எண்ணிப் பார்க்கும் ஒவ்வொரு மனிதனுடைய கடமையாகும். தத்துவஞானிகளையும் அவர் நம் நூல்களையும் தெரிந்தெடுத்தல், அவற்றோடு தம் வாழ்வில் தானே தன்மேலிட்டுக் கொள்ளும் தத்துவம், ஆகியவை மனிதனுடைய பொறுப்புகளில் குறிப்பிடத் தக்கவை. ஒருவனுடைய பண்புநலன் என்பது பெரும்பாலும் அவன் தன் வாழ்வில் கடைப்பிடிக்கும்தத்துவத்தைப் பொறுத்தது. அத்தகைய தத்துவமும் அவனுடைய பண்புநலனைப் பொறுத்து அமைவது என்பதும் மிகையன்று. இவை ஒன்றைக்கொன்று ஈடுதந்து ஒன்றை ஒன்று மேம்படுத்துவன. அவ்வப்போது பயன்படும் அன்பின் ஆற்றல், எதனையும் தெளிவுறுத்தும் காரண காரியத்திறன் ஆகியவற்றை விட, வேட்கை, பயனற்ற அறிவு ஆகியவற்றின் செல்வாக்கிற்கு ஆட்படுதல் மக்களியல்பு ஆதலின், தனித் திறமை, விரிந்த கல்வி ஆகிய இவற்றினும், தனி மனிதனின் அற நெறிப்பட்ட தன்மையைப் பொறுத்துத் தத்துவ நூல் தெளிவு வேண்டுமென்பதை அத்துறையினர் காலங் காலமாகப் பொருந்திய வகையில் தெளிவு படுத்தியுள்ளனர். பண்பு நலன் (Character) ஆளுமை (Personality) உலகோர் நோக்கு, ஆகியவற்றை, உடனுக்குடன் வகைப்படுத்திக் காட்டுதல் வேண்டும். எனினும், அவை உண்மையில் தனித்-தனியாகப் பாகுபடுத்தித் தக்கன அல்ல. தான் உணர்ந்து கூறுவது, தன்னுடைய உள்ளார்ந்த இயல்பொடு பொருந்தியது; தான் நம்புவது எதுவோ அதுவே தன்னை உருவாக்குவது; தன்னுடைய அக நலனைப் பொறுத்தித தான் மேற் கொள்ளும் கடவுட் கொள்கை அமையும்; தான் புலப்படுத்தும் அன்பு நெறியைப் பொறுத்தே தன் வாழ்வும் அமையும்" என்று வாழ்க்கை சான்றோர் தொடர்பு

வாழ்வு நெறி, ஒழுக்கத்திறன், தன்னை ஆக்கல் ஆகியவைப் பற்றி சார்லஸ் வால்ராப் கூறும் கருத்துகள் ஈண்டுக் குறிப்பிடத்தக்கவை.[134]

இக்கருத்துகளை உளங் கொண்டு நோக்கின், துரோணன், விழுமமுடைய வாழ்வினைத் தக்கவாறு ஆய்ந்து, அவனைத் தனக்கு நெறியுணர்த்துவோனைக் கொண்டொழுகி அவன் வழி நின்று வாழ்ந்து, பாசம் காரணமாக அவன் தன் உற்றார்க்காக உயிர் நீத்தது போல், தன்னைப் பேணியார் பொருட்டு நன்றிக் கடன் காரணமாக உயிர் நீத்தான் என்பது பொருந்துவதேயாகும்.[135]

துரோணன், பிறப்பால் அந்தண மரபினன்; ஆயினும் பெற்ற கலைத் திறத்தாலும் அது கொண்டு வாழும் வாழ்வாலும் அரச மரபினன் போல் ஒழுகுகின்றான். ஆயின் வாழ்வின் இறுதி நிலையில் - உயிர் விடும் நிலையில் - விழுமிய அந்தணனும் உயர்ந்து நிற்கிறான். தன் மகன் மாய்ந்தான் என்னுஞ் செய்தியும் வாய்மையாளன் ஒருவன் (தருமன் போலும் ஒருவன்) வாய்மை தவறினன் என்னும் செய்தியும் அவனுக்குக் கலக்கமும் வியப்பும் தாராது, மாறாக அமைதி, விருப்பு வெறுப்பற்ற சமன்பாடு ஆகியவற்றையே தருகின்றன.[136] இந்நிலையில் அவன் அந்தணனுக்குரிய இலக்கணமெல்லாம் அமையப் பெற்றவனாகின்றான்.

அரச மரபினர் பெருமையும் அந்தண மரபினர் பெருமையும் பற்றி ஆய்வாளர் எடுத்துரைக்கும் கருத்துகள் ஈண்டுக் கருதத்தக்கவை.

"அரச மரபினனாகிய போர் வீரன் எதனையும் எதிர்த்து வீழ்த்துவதே குறியாக உள்ளான். அந்தணனோ வாழ்வின் முழுமை பற்றிய தெளிவுடையவனும், எக்கட்சியினுஞ் சாராது, அவற்றைக் கடந்து நிற்கிறான். அவன் எதனையுஞ் சார்ந்து நிற்பின், தனக்குத் தானே நேர்மையற்றவனாகின்றான். அவன் போரிடுவதில்லை என்பது போர்கள் யாவும் பயனற்றன என்று கருதுகிறான் என்பதாகாது. அவன் தனக்குரிய போர்களெல்லாம் புரிந்து முடித்தவனாக விளங்குகிறான். தனக்கும்

134. Charles F. Wallraff: Karl Jaspers: An Introduction to his philosophy. Page 131-32 (1970)

135. வில்லிபாரதம்: பதினைந்தாம் போர்ச் சருக்கம்: 16. பக். 545, 28. பக். 546 மர்ரே பதிப்பு (1959)

136. வில்லிபாரதம்: பதினைந்தாம் போர்ச் சருக்கம்: 16. பக். 545. மர்ரே பதிப்பு (1959).

உலகத்திற்குமிடையே உள்ள கருத்து வேறுபாடுகளையெல்லாம் கடந்து அமைதி நிலையை அடைந்து நிற்கிறன். யாவர்க்கும் இனியனும் ஒழுகுதல் அந்தணனின் தலையாய பண்பு. நன்கு போர் புரியக் கற்றேன், விழுமிய ஞானியாதற்கு வழி வகை செய்கிறன். திறலுடன் போர் புரிந்து, போர்க்களத்தில் வழிப் பெறும் நடைமுறைக்கொத்த அகநலன், ஞானத்திற்குரிய தெய்வீக அமைதி நிலை பெறுதற்குரிய தகுதி நல்குகிறது. போர்க்களத்தில் அஞ்சாமை புலப்படுத்தி விழுப்புண் நல்கியும் பெற்றும் சாவோடு போராடி அதனை எதிர்த்து நிற்கும் திறத்தை அரிஸ்டாடில் போற்றேர் புகழ்ந்துள்ளனர். தன் வாழ்வைத் தியாகம் செய்வதைக் கொள்ளும் உறுதியே அவன் உயர்ந்தோனெனப் படுதற்குரிய அறிகுறியாகும். அஞ்சாமையே போர் வீரனுக்குரிய தலையாய பண்பு ஆயினும், அதுவே தலையாய நிலை அன்று.

துயரும் சினமும் பெருகி ஆன்மா பெரும் பிழை ஒன்றை எதிர் காணும் அல்லல் மிக்க வேளையில் போர் வீரன், 'நீ இப்பொழுது இதனைச் செய்யலாகாது உன்னைக் கொல்வேன் என்று அச்சுறுத்துகிறன். உண்மையான அந்தணனே, அதனைச் செய்யற்க, அதன் பொருட்டு நான் உயிர் நீப்பேன்' என்று கூறுவான்.....[137]

போர் வீரனுக்கும் அந்தணனுக்கும் உரிய மேற்குறித்த வேறுபாடுகளும் ஒப்புமைகளும் துரோணனுடைய இருவகை வாழ்க்கைக்கும் பொருந்தி அமைகின்றன. தன்னை இகழ்ந்த யாகசேனனை வஞ்சினங் கூறித் தன் மாணவன் மூலம் வென்று பெருமிதங் கொண்டு போர் வீரனும் வாழ்வைத் துவக்கி, பாண்டவர்-துரியோதனனுடியர் பால் காட்டும் நடுவு நிலைமை[138] நன்றி உணர்வு ஆகிய இரண்டு உணர்வுகளுக்கும் இடந்தந்து உள்ளப் போராட்டம் எய்தி, இறுதியில், மகனை இழந்த செய்தியும், வாய்மையாளன் நிலைகுலைந்த செய்தியும் செவிபடுப்ப, அவற்றால் கலக்கமெய்தாது, விருப்பு வெறுப்பற்ற நிலை அடைந்து தன் வாழ்வை நிறைவுடையச் செய்கிறன்.[139]

---

137. S. Radhakrishnan: The Hindu view of life. Page 84 (1964)

138. பாண்டவர் பெருமைக்கேற்ப, அவர்க்குரிய மதிப்பினை மனக்கோட்டமின்றித் தெரிவித்தான் என்னும் கருத்துப்பட இச்சொல் ஈண்டுக் கையாளப்பட்டது.

139. S. Radhakrishnan: The Hindu View of Life. Page 84 (1964)

வில்லிபாரதம்: பதினேந்தாம் போர்:33.பக்.547.
பதினேந்தாம் போர்:33.பக்.412. வை.மு.கோ. உரை
விளக்கம்: வை.மு.கோ.பதிப்பு (1968).

பாரதப் பெரும் போரைப் பொறுத்தவரை, பாண்டவர் பக்கல், தருமன், வீமன், அருச்சுனன் ஆகியோரும், கௌரவர் பக்கல், துரியோதனன், கன்னன், வீடுமன், துரோணன் ஆகியோரும் பெரிதுங் குறிப்பிடத் தக்கவராவர். வீமன், அருச்சுனன் ஆகிய பெரு வீரரை எதிர்த்து வெல்லுதல் அரிது என்றும், போர் வெற்றி, வீமன், அருச்சுனன் ஆகிய இருவரையே சாரும் என்றும் முறையே உலூகன், வீடுமன்[140] முதலிய பெரியோரும், கண்ணனும்[141] தெளிவாக எடுத்துரைக்கின்றனர். துரியோதனனின் வெற்றி குறித்துத் தம்மை ஈந்து கொள்ளும் வீடுமனையும் துரோணனையும் வெல்லுதல் அரிது என்று அவர் முன்னிலையில் கண்ணனே எடுத்துரைத்தது முன்னர்க் கூறப்பட்டது.[142]

இரு சாராரும் போர்ச் சூழலில் மேற்கொண்ட நிலைமாற்றங்கள் அவர் தம் பண்புநலனோடு முரணவில்லை. அவை, அவர்தம் வாழ்நாள் குறிக்கோளை மாற்றி அமைக்கவில்லை. தத்தம் பண்புநலனுக்கேற்ப அவ்வீரர் அனைவரும் தாம் கருதியதை முடித்து நிற்கின்றனர் என்பது இதுவரை ஆய்ந்தவற்றால் நன்கு விளங்கும்.

140. வில்லிபாரதம்: உலூகன் தூதுச் சருக்கம்: 12, 16. பக். 328. மர்ரே பதிப்பு (1959)

141. வில்லிபாரதம்: கிருட்டிணன் தூதுச் சருக்கம்: 92. பக். 350. மர்ரே பதிப்பு (1959).

142. இவ்வியல், பக். அடிக்குறிப்பு 95

[illegible]

மனிதநல மாண்பியல் (humanistic point of view) கண்ணோட்டத்தில், வில்லிபாரதத்தில் வரும் முக்கிய நிகழ்ச்சிகளும் பாத்திரங்களும் இதுவரை ஆராயப்பட்டன. இக் கண்ணோட்டம் தக்கவாறு பயன்படும் வகையில் மனிதநல மாண்பியல் (Humanism ) பற்றிக் கீழை நாட்டாரும், மேலை நாட்டாரும், கொண்டுள்ள கருத்துகள் விரிவாக ஆராயப்பட்டன.[1]

மனிதன் தன் ஆற்றல் ஒன்றினாலேயே தான் கருதும் பெருநிலையை அடைந்து விடுதல் இயலாது. தன் ஆற்றலுக்கு அப்பாற்பட்டுத் தன்னையும் இயக்கி வரும் படைப்பாற்றல் மேற்கொள்ளும் அவதாரத்தின் மூலம் - தன்போலும் மனித உருக் கொண்டு தனக்கு உதவுவதன் மூலம் - தன் குறிக்கோள் நிறைவு பெறும் என்பது கீழை நாட்டு மனித மாண்பியலாளர் கருத்து.

To Aurobindo, the Avatar is a dual concept a phenomenon of divinity and humanity, On the one hand, the descent of the God-head into human form and, on the other hand, the ascent of man into the God-head, man rising into the divine nature and divine consciousness.

The Avatar descends to reveal the divine nature in man and to show what are the divine works, free, unegoistic, disinterested, impersonal, universal, full of the divine light, the divine power and divine love.

"He comes as the divine personality which shall fill the consciousness of the human being and replace the limited egoistic personality, so that it shall be liberated out of ego into infinity and universality, out of birth into immortality".

E.S. Nayar: Commentary on Aurobindo's Gita: Indian Express, dated July 29, 1979.

என்னும் அன்னாரின் விளக்கம் மிகவும் குறிப்பிடத்தக்கதாகும்.

---

1. மனிதநல மாண்பியல் பற்றி, அவ்வக் காலங்களில் பற்பல வேறுபட்ட கருத்துக்களை அறிஞர் தெரிவித்து வந்தனர். வில்லியின் உள்ளம் அறிந்து அவற்றைத் தொகுத்தாய்வதே இவ்வியலமைப்பாதாதலின், மனித மாண்பியல் பற்றித் தனியோர் இயல் அமைக்கப்பட்டது.

இயற்கை இறப்பியல் (Supernaturalism) இயற்பியல் (Naturalism) முழுமை இயல் (Absolutism) ஆகியவை மனிதனுக்கு - அவனுடைய ஆக்கத்திற்கு - உடன்பாடாகவே பயன்பட்டு வருகின்றன என்பதும் அவர் கருத்தாகும்.

மனிதனைக் கருவி ஆக்காது, அவனை வினை முதலாகக் கொண்டு, அவனுடைய விருப்பு வெறுப்புகளுக்குப் பெரிதும் முக்கியத்துவம் தந்து, கல்வி, கலை, பிற அறிவியற் கூறுகள் ஆகியவற்றின் துணை கொண்டு, அவன் தன்னைத் தானே உருவாக்கி வருமாறு அமைவதே - அமைக்கப்படுவதே - மனித மாண்பியற் கோட்பாடு என்பது மேலை நாட்டார் கருத்து.[2] அவ்வகையில், இயற்கை இறப்பியல், இயற்பியல், முழுமை இயல் ஆகியவை அவனோடு முரண் நிற்பனவாம், அவனுடைய ஆற்றலுக்கு அறைகூவல்களாய் உள்ளன; ஆதலின் அவற்றோடு போராடி, அவற்றிற்கு ஆட்படாது, அவற்றைக் கருவி ஆக்கித் தன் வினை முதல் நிலையை விடாது நின்று அவற்றின் பயன் காண வேண்டும் என்பதும் அவர் கருத்தாகும்.

இவ்விரு சாராரும், படைப்பில், தீமை நன்மை, துன்பம் இன்பம், குறை நிறை, குற்றம் குணம், என்னும் இருமை நிலை உள்ளதை ஏற்றுக் கொண்டுள்ளனர். படைப்பில் உள்ள அவ்விருமை நிலை படைக்கப்பட்டுள்ள - அல்லது தற்செயலாகத் தோன்றியுள்ள - மனிதனிடத்தும் உள்ளது என்பதை ஏற்றுக் கொள்ளுகின்றனர்.

குற்றமே நிரம்பியவனாகாமல், குணமே நிரம்பியவனாகாமல், குற்றம் குணம் ஆகிய இரண்டுக்குமிடையே சமன் செய்ய முயன்று, தன்னை உருவாக்கி வருகிறவன் மனிதன். மனித மாண்பியலின் அடிப்படையான இலக்கணம் இதுவேயாகும்.

மனித மாண்பியல் நிலையினின்றும் உயர்ந்து, அதிமனித மாண்பியல் (Humanitarianism) என்னும் ஒரு வளர்ச்சி நிலையை மனிதன் அடைந்துள்ளான். "படைப்பில் இருமை நிலை இல்லை, ஒருமை நிலையே உள்ளது; வெற்றியும் எதிரும் உடன்பாட்டுப் பண்புகளே உள்ளன. ஆதலின் மனிதனிடத்தும் உயர்ந்த உடன்பாட்டுப் பண்புகளே உள்ளன என்பது அவ்வியலார் கருத்து.

---

2. மேலை நாட்டாருள், கீழை நாட்டார் போல், சமயம், தத்துவம் ஆகியவற்றின் அடிப்படையில் மனித மாண்பியலை ஆராய்ந்தோர் உளர்.

அஃது அரசியல், பிற உலகியல் வாழ்வு நிலைகட்கு ஒத்து வருவதன்று என்பது மனித மாண்பியலார் பெரும்பாலோரின் கருத்து.

தீயோராகிய துரியோதனாதியரைத் தீயோர் எனக் கருதாமல் நல்லோராகவே கருதி அதிமனிதமாண்பியலைக் கடைப்பிடிக்க முயலும் தருமன், அக்கடைப்பிடியால் பயன்கொள்ள இயலாமல் அதனைவிடுத்து மனிதநல மாண்பியக் கோட்பாட்டினைக் கடைப்பிடித்து அவரோடு போரிட்டே தன் உரிமைகளைப் பெறுகிறான்.[3]

இருமை நிலைத்தத்துவத்தைக் கடைப்பிடித்து, மனித மாண்பியக் காப்பியமாகத் தம் நூலை அமைப்பதில் வெற்றி கண்டுள்ளார் வில்லி. கண்ணனின் புகழ் பாடுதலே தன் முதன்மை நோக்கமெனக் கூறும் ஆசிரியர், அதனையே பெரிதும் போற்றிக் கண்ணன் புகழ் பாடித் தம் நூலைத் தோத்திர நூலாக்கவில்லை. கண்ணனின் புகழ் விளக்குதற்குப் பாண்டவர் வரலாறு ஒரு கருவி என விளக்கும் ஆசிரியர், அக்கருவியினை மிக எளியதொன்றாக்கி அதனையும் தம் நூலைத் தோத்திர நூலாக்கி விடவில்லை. கண்ணனின் புகழ், பாண்டவர் வரலாறு இரண்டும் ஒன்றை ஒன்று சமன் செய்யும் வகையில் தம் காவியத்தை அமைத்துள்ளார்.

மாறுட தெய்வ ஒருங்கிணைப்புத் தத்துவத்தைச் சமன் செய்து காட்டுவதில் பெரு வெற்றி கண்டுள்ளார் வில்லி. இராவான், சகதேவன் ஆகியோர் கண்ணனை ஒத்தவர் என்னும் புலவர் கருத்து, இவ்வெற்றிக்குத் தக்கதோர் ஆதாரமாய்த் திகழ்கின்றது.

சமய, ஆன்மிகத் தத்துவ அடிப்படையோடு மனித மாண்பியலை அணுகுவோர் நோக்கில் கண்ணனைத் தெய்வமாகக் காட்டுவதிலும், அவ்வடிப்படையை விலக்கி, மனிதனையும் அவனுடைய விருப்பு வெறுப்புகளையும் மையமாகக் கொண்டு மனித

---

3. மனித சமுதாயத்தின், மொத்தமான முன்னேற்றத்திற்கு அதிமனித மாண்பியலே துணை செய்யும் என அரவிந்தர் முதலிய அறவோர் கூறினும், அரசியல் போலும் உலகியல் வாழ்வில் மனித மாண்பியலே வெற்றிக்குத் துணை போவது என்பதை அவரும் மறுக்கவில்லை. அறத்தின் வெற்றி கருதிச் செய்யப் பெறும் போர் தவிர்க்க முடியாதது என்ற அரவிந்தர் முதலியோர் குறிப்பினைத் தழுவ இவண் விளக்கப்பட்டது.

மாண்பியலை அணுகுவோர் நோக்கில் அவ்வலை மனிதருக்குக் காட்டுவதிலும் வில்லி வெற்றி பெற்றுள்ளார். அவ்வகையிலும், தெய்வ மானுட ஒருங்கிணைப்புத் தத்துவத்தை அவர் நுட்பமாக விளக்குந்திறம் குறிப்பிடத்தக்கது.

தெய்வ-மானுட ஒருங்கிணைப்புத் தத்துவத்தில் வெற்றி கண்டுள்ளது போல், புராண வரலாறுகள், இயற்கை இறப்பு நிகழ்ச்சிகள் (Mythological and Supernatural episodes ) ஆகியவற்றையும், மனித மாண்பியலையும் இணைத்து வெற்றி கண்டுள்ளார் அவர். புராண, இயற்கை இறப்பு நிகழ்ச்சிகளுள்ளும் மனிதநல விருப்பு வெறுப்புகளே உள்ளுறைகளாக உள்ளன என்பதை நன்கு விளக்குகிறார்.[4]

தாம் போற்றும் முதல் நூல் மரபுகள், தாம் புகுத்த விழையும் தமிழ் நூல் மரபுகள் ஆகியவற்றைச் சமனுற அமைப்பதிலும் வில்லி வெற்றி கண்டு தம்மைச் சிறந்த மனித மாண்பியல் கவிஞர் என நிறுவிக் காட்டியுள்ளார்.[5]

காவியப் பின்னணிகளாக உள்ள சமுதாய நிலைகள், நீதிகள், அறங்கள் ஆகியவற்றை விளக்குங்காலும், மனித மாண்பியலுக்குரிய இருமை நிலை தோன்றுமாறு விளக்குகிறார் வில்லி. சாதி உயர்வு தாழ்வுகள் இழிந்தன எனத் துரியோதனன் மூலம் அவற்றை விலக்க முற்படும் புலவர், அவன் வாயிலாகவும், துரோணர் முதலிய பெரியோர் வாயிலாகவும் அவை தொடர்ந்து இருந்து வருவதையும் எடுத்துரைக்கிறார்.[6]

தீயோர்க்கு, அவர் கருதியது முடித்தற்குப் பெருந்திறமையாகவும் அரணாகவும் சூது போர் விளங்குவதைக் காட்டும் புலவர், தருமம் முதலிய நல்லோரிடத்தில் அஃது ஒரு குறைபாடாக விளங்குவதைக் காட்டி, ஒரே குடியிற் பிறந்த இருசாரார் இகலி நின்று மோது போர் புரியும் அளவிற்கு அது சமுதாயச் சீர்கேடு செய்வதையும் விளக்குகிறார். தருமன், கண்ணன் ஆகிய உயர்ந்தோர் மனப்பண்பிற்கேற்ப, அரசியல் நீதிகள், அறங்கள் ஆகியவை அமைதி நெறியில் நிலைநாட்டப்பட வேண்டியவை என உணர்த்தும் புலவர், துரியோதனன் முதலிய தீயோர் இயல்புக்கு ஏற்ப, போர்மேற்

---

4. இரண்டாம் இயலில் இவைபற்றி விரிந்து விளக்கப்பட்டது.

5. இரண்டாம் இயலின் இறுதிப் பகுதிகளில் இம்முடிபுக்குரிய விளக்கம் காணலாம்.

6. மூன்றும் இயலில், சமுதாய ஏற்றத் தாழ்வுகளைக் காவிய மாந்தர் வாயிலாகக் கண்டிக்கும் ஆசிரியர், அவர் வாயிலாக, அவை நலவி வருவதையும் தொடர்ந்து விளக்குகிறார்.

சென்று அதில் வெல்வார் வல்லமைக்கேற்ப வன்னெறியில் நிலை நாட்டப்பட வேண்டியவை அவை என்பதையும் ஒருசேர உணர்த்துகிறார்.[7]

காவிய மாந்தர்தம் கல்வி, கலைத்திறன்களை எடுத்துரைக்குங்காலும் இருமை நிலைத் தத்துவத்தை நன்கு விளக்குகிறார் புலவர். வேதம், கீதம், கேள்வி வேள்வி, முதலிய கலைகளில் உயர்ந்தோராய் விளங்குதற்குரிய அந்தணர், அரச மரபினர் போல், வில், வாள், வேல் முதலிய படைக்கலப் பயிற்சியில் வல்லராய் விளங்கியமையை எடுத்துரைக்கிறார். படைமைக் கல்வியைத் தம் மரபுக்குரிய இயல்பான கல்வியாகக் கொள்ளுதற்குரிய அரச மரபினர், அந்தணர் போல், கேள்வி, வேள்வி முதலிய கலைகளில் வல்லராய் விளங்குதலை விரிவாக விளக்குகிறார்.

அந்தணர் அரசர் முதலாய காவிய மாந்தர்தம் கல்வி கலைத் திறன்களை விளக்கும் புலவர், அவரொடு முரண் இகல் கொள்ளும் அரக்கர் எனப்படும் பழங்குடி மக்கள்தம் படைமைக் கல்வித் திறன்களையும், யோகம், தவம் முதலிய அகமுகக் கல்வித் திறன்களையும் எடுத்துரைப்பது குறிப்பிடத்தக்கது. எனினும், அந்தணர், அரசர் முதலிய காவிய மாந்தர்க்குப் பயிற்றிய ஆசிரியன்மார் பற்றி விரிவும் விளக்கமும் தரும் செய்திகள் போல், அரக்கர் முதலாய பழங்குடி மக்கட்குப் பயிற்றிய ஆசிரியர் இன்னார், அவர் திறன்கள் இன்னவை என்பன போலும் செய்திகள் காவியத்துள் இல்லை. நல்லோர்தம் நற்பண்புகளின் மேன்மையையும், தீயோர்தம் தீய பண்புகளின் வன்கண்மையையும் முரண்படுத்திக் காட்டித்தம் இருமை நிலைத் தத்துவத்தை நிறுவுதற்காக, இவ்வாறு அரக்கர் முதலியோர்தம் முறையான கல்வி வளர்ச்சி, அவர்தம் ஆசிரியர் திறன் ஆகியவற்றை விளக்காது விட்டு விட்டார் போலும்.[8]

கல்வியும் கலைகளும் மனிதனை விலங்கு நிலையினின்று மனித நிலைக்கு மேம்படுத்தி உயர்த்திச் செல்வன என எல்லார்க்கும் உடன்பாடாக உள்ள கருத்தினைக் காவிய மாந்தர் வாயிலாக விளக்கும் புலவர், அவரவர்க்கு இயல்பாக அமைந்துள்ள பண்புகள், அவரவர் நிலைகள் ஆகியவற்றிற்கேற்பவே அவைகள் பயன்படுகின்றன என்பதையும் மறவாது எடுத்துரைக்கிறார்.

---

7. மூன்றாம் இயலின் இறுதிப் பகுதியில் இக்கருத்து விளக்கப்பட்டது.
8. நான்காம் இயலின் இறுதிப் பகுதியில் இம்முடிபுகட்குரிய கருத்துகள் விளக்கப்பட்டன.

அதிமனித மாண்பியல் நிலைக்குத் தன்னை உயர்த்தி, அறம் முதலிய பண்புகளால் அந்தணர் போல் வாழ முற்படும் தருமன், தன் அரச மரபு நிலைக்கேற்ற கடமைகளையும், அந்தணரின் மனநிலையினின்றே நோக்குகிறான். கல்வியால் அந்தணரை ஒத்த உயர்நிலை பெற்றுள்ளான் அவன். வீமன், தன் உடல் வன்மைக்கேற்பப் படைமைக் கல்வித் திறத்தில் சிறந்து விளங்குவதோடு, வாய்மை, அடக்கம், கேள்வித் திறன், அட்டில் தொழில் வன்மை முதலியவற்றிலும் புகழ் பெற்றுத் திகழ்கிறான். அருச்சுனன் விற்பயிற்சிக் கலையில் ஆசிரியனும் வியக்கும் திறமை பெற்றுள்ளான். அதனோடு, நாற் கல்வி, வழிபாட்டுணர்வு, சமயம், அரசியல் ஆகிய துறைகள் பற்றிய வெவ்வேறு நடைமுறை அறிவு, இரக்கம், உள்ளும் புறமும் ஒன்றுபட்டு இருத்தல் ஆகிய அகமுகப் பண்பு வளர்ச்சிகளிலும் மேம்பட்டுத் திகழ்கிறான். இவ்வாறே, நகுலனும், சகதேவனும் வேல் முதலிய படைமைக் கல்வித் திறத்தோடு, கல்வித் தெளிவு, தத்துவ ஞான உணர்வு ஆகியவற்றில் சிறந்து விளங்குகின்றனர்.

இயல்பில் நற்பண்புடைய பாண்டவர்தம் இயல்பினை, மேலும் உயர்த்தி நிலை நிறுத்துதற்குப் பயன்படும் கல்வி, கலைத் திறன்கள், தீப்பண்புகள் மிக்க துரியோதனாதியர்பால் அவர்தம் எதிர்மறை இயல்புகளுக்கேற்பவே பயன்படுகின்றன. துரியோதனன், படைமைக் கல்வியோடு, யோகம் முதலிய அகமுகக் கலைகளைப் பயின்றுளனாயினும், அவையெல்லாம் அவனுடைய தீய பண்புகள் செயற்படுவதற்கே துணை போகின்றன. கன்னன், அருச்சுனன் நாணும் வகையில் விற்கலை பயின்றும், தனக்கே உரிய கொடைப் பண்புகளை வளர்த்தும், அளவிலடங்காத தற்செருக்குப் பண்புக்கு இரையாகித் தன் நிலை இழந்து போகிறான்.

இவ்வாறு, கல்வி கலைத் திறன்கள், மாந்தர்தம் இயல்புகளைப் பண்படுத்த உதவுவன என்னும் கருத்தினை உடன்படும் வில்லி, அவை மாந்தர்தம் இயல்புக்கு ஏற்பவே பயன்படுகின்றன என்பதையும் எடுத்துக்காட்டி, மாந்தர்தம் இயல்பில் இருமை நிலைத் தத்துவம் நிலை பெற நின்று செயற்படுவதை விளக்குகிறார்.[9]

9. மேலும், பரசுராமர் தன் மாணவனாகிய வீடுமனையே எதிர்த்தல், துரோணன்-யாகசேனன் காழ்ப்பு, வீடுமன் போரில் சிகண்டியை வஞ்சனை நெறியாற் கோறல் முதலிய நிகழ்ச்சிகளை ஆயுமிடத்து, கல்வி, கலைத் திறன்கள், அவரவர் அடிப்படைப் பண்புகளுக்குத் துணைபோகின்றன என்பதையும் அவற்றை அவை முற்றிலும் மாற்றி விடுவதில்லை என்பதையும் நன்கு உணரலாம்.

காவியத்தின் வாயிலாகப் புலவர் உணர்த்தும் உண்மைகள் நுவலர்க்கும் எளிதில் விளங்குவன அல்ல; புலவரின் உணர்த்தும் திறமைக்கேற்ப, அவர் வளர்த்துப் பேணிப் பயன்படுத்தும் அணி முதலிய உணர்த்தும் முறைமைகளாலேயே காவிய உண்மைகள் தெளிவாக விளங்கும்.

உண்மைகளையும் உணர்த்தும் முறைமைகளையும் இணைத்தாலன்றிக் காவிய மாந்தர்தம் இருமை நிலைப் பண்புகளை உணர்த்துதல் அரிது என்பது வில்லியின் கருத்து. அறத்தின் வடிவாய தருமனிடத்தமைந்த போர் வேட்கை, போரில் நடுவுநிலை வகிப்பதாகக் கூறும் கண்ணன், அருச்சுனன் வெற்றிக்கேற்பச் செய்யும் தந்திரங்கள், ஆகிய காவிய மாந்தர்தம் இயல்புகளை விளக்குதற்குப் புலவர் மேற்கொள்ளும் அணிவகைகள் தக்கவாறு பயன்படுகின்றன. எனவே புலவர் உணர்த்தும் காவிய நியதிகளிலும்[10] இருமைநிலைத் தத்துவம் உள்ளது என்பதும் அது கொண்டு காவிய மாந்தரிடத்துள்ள இருமை நிலையைப் புலவர் நன்கெடுத்துக் காட்டுகிறார் என்பதும் எளிதில் விளங்குகின்றன.

போர்ச் சூழலிலும், போர் நெருக்கடியிலும் அதன் விளைவுகளிலும், இருமை நிலைத் தத்துவம் மிகத் தெளிவாக விளங்குகிறது.

போரில் வெற்றி பெற வேண்டி, கண்ணன் அறிவுரை கொண்டு, வாய்மையே வடிவாக உடைய தருமன் பொய் கூறுகிறான். வஞ்சனையே உருவான துரியோதனன், போர் நெருக்கடியில், கண்ணனுடைய செயல்களைக் கடிந்து, வாய்மை தவறிப் போரிடல் தகாது என்று கூறித் தானொரு அறநெறியாளன் போல் காட்டுகிறான்.

பண்புநலனுக்கும் மனநிலையில் ஏற்படும் மாறுதலுக்கும் உள்ள வேறுபாட்டை இவ்விரு மாந்தர்தம் இயல்பின் வைத்து விளக்கி இருமை நிலைத் தத்துவத்தைப் புலப்படுத்துகிறார் புலவர்.[11]

போர்ச்சூழலில், வீடுமனும் துரோணனும், இருவேறுபட்ட மனநிலைகளுக்கு ஆளாகி மனப்போராட்டம் உடையராகக் காண்கின்றனர். துரியோதனனுடையபால் கொண்ட பாசத்தினும், பாண்டவர்தம் விழுமிய பண்புகள் காரணமாக அவரிடத்துக்

---

10. காவிய நியதிகள் என்பன, காவிய உண்மைகள், அவற்றை விளக்குதற்குப் புலவர் கையாளும் அணிகளை ஆகிய இரண்டையும் சுட்டுவன.
11. மேலும் இயலின் மற்பகுதியில் இதற்குரிய விளக்கம் காணலாம்.

கொண்ட இரக்கங்கலந்த மதிப்பிற்குமிடையே வீடுமன் தடுமாற்றமுடையவனாகக் காண்கிறான்.

துரியோதனன்பால் கொண்ட நன்றி உணர்வுக்கும், பாண்டவரிடத்துக் கண்ட நற்பண்புகள் காரணமாக அவர்பால் வைத்தபரிவிற்குமிடையே துரோணன் தடுமாற்றமுடையவனாகக் காண்கிறான்.

அருச்சுனன் கணைக்கு இலக்காகப் போரில் உயிர்துறக்கும் வேளையில் - கண்ணன் தன் திருவுருவங்காட்டி அருள் செய்த வேளையில் - கன்னன், துரியோதனனிடத்துக் கொண்ட செஞ்சோற்றுக்கடனுக்கும், கண்ணனிடத்துக் கொண்ட அன்பிற்குமிடையே தடுமாற்றம் உடையவனாகக் காண்கிறான்.

பொறுமைக்கு இருப்பிடமான தருமன் போர்ச்சூழலில் அருச்சுனன் கன்னனைக் கொல்வதில் காலந்தாழ்த்தியமை பொருட்டுப் பொறுமை இழந்து, அவனுடைய வில்லை இகழ்கிறான்.

பெரியோரிடத்துப் பணிவும் அடக்கமும் காட்டியொழுகுவதில் பெயர்பெற்ற அருச்சுனன், தருமனின் இகழ்ச்சி தாங்காது, மான உணர்வு மிக்கு முன்னோன் என்றும் பாராது, அவனைக் கொல்வேன் என்று சீறியெழுகிறான்.

வாழ்நாள் முழுதும், படைமைக் கல்வித்திறத்தையே காட்டிவரும் வீமன், போர்ச்சூழலில் தன் அகமுகப் பண்பாகிய இரக்க உணர்வைப் புலப்படுத்தும் வாய்ப்பினைப் பெறுகிறான். போரில் துச்சாதனனைக் கொன்று வஞ்சினம் முடிக்கும் வேளையில், கண்ணன், இடை புகுந்து, தீயோனெனினும், அவன்பால் இரக்கம் காட்டுக என வேண்ட, அதற்கிணங்கி துச்சாதனனின் மார்பைப் பிளத்தல், விரல்கள் பத்தையும் முறித்தல், அவன் உடம்பினின்று பெருகும் குருதியைக் குடித்தல் ஆகிய வன்கண்மைச் செயல்களை விடுத்து, துச்சாதனனின் குருதியைக் கொப்பளித்து அமைதி பெறுகிறான்.

தத்துவஞானி என்று புகழ்பெற்ற சகதேவன், போர் தொடங்குதற்குரிய நன்னாளை வகுத்துத் தரவேண்டும் என்று தன்னை நாடி வந்த துரியோதனனுக்கு, அவன் வேண்டியவாறே நன்னாள் வகுத்துத் தந்து அனுப்புகிறான். அந்நிலையில், தன் மூத்தோர்கட்கு ஆட்பட்டுக் கடமை செய்ய வேண்டிய பொறுப்புணர்ச்சிக்கும்,

பகைவனாயினும், அவனிடத்தும் பாராட்ட வேண்டிய பண்பாட்டிற்குமிடையே அவன் உள்ளம் தடுமாற்றம் எய்திருத்தல் வேண்டும்.

இவ்வாறு, போர்ச்சூழலில், சாலிய மாந்தரிடையே, காணும் இரு வேறுவகை உணர்வுகளை விளக்குதலின் வாயிலாக — அவை ஒன்றற்கொன்று முரணுதலைக் காட்டுதலின் வாயிலாக — இருமை நிலைத்தத்துவத்தை மிக எளிதில் விளக்குகிறார் புலவர்.

இதுவரை, காட்டிய பற்பல விரிந்த முடிபுகளின் வாயிலாகப் பின்வரும் சில தேர்ந்த முடிவுகள் கொள்ளக்கிடக்கின்றன:

1. வில்லிபாரதத்தில், துவக்க முதல் இறுதிவரை, இருமை நிலைத்தத்துவம் ஊடாடி நிற்கிறது. ஆதலின் அதனைச் சிறந்ததொரு மனித மாண்பியற் காப்பியம் எனலாம்.

2. தெய்வ மாண்ட ஒருமைநிலைப்புத்தத்துவத்தைத் திறம்பட அமைத்துக் காட்டிக் காப்பியத்தில் இருமை நிலைத்தத்துவம் நன்கு விளங்குமாறு நூல் செய்த வில்லி, சிறந்த மனித மாண்பியற் புலவர் (Humanistic Poet) என்பது முற்றிலும் பொருந்துவதாகும்.

3. மனித மாண்பியற்காப்பியமாகிய வில்லிபாரதம்; அதிமனித மாண்பியலின் (Humanitarianism) வளர்ச்சிக்கு வித்திட்டுள்ளது.
இக்கருத்திற்குரிய ஆதாரங்கள் வருமாறு:-

   1. தருமன், அதிமனித மாண்பியலாளன் என்று முன்னர்க் கூறப்பட்டது.

   2. வீடுமன், துரோணன், கர்ணன், ஆகிய மூவரும், துரியோதனனின் இயல்பும் செய்கைகளும் தீயனவே எனத் தெரிந்தும், அவற்றைப் புறக்கணித்து, அவன் மீது கொண்ட பாசம், நன்றி உணர்வு ஆகியவை கருதி, அவனுக்காக உயிர் விடுகின்றனர்.
   துரியோதனன் பகைவன் எனத் தெரிந்தும், அப்பகைமையைப் பொருட்படுத்தாது, அவன் வேண்டியவாறு போர்த்தொடக்கத்திற்குரிய நல்வேளைச் சகதேவன் குறித்துரைத்தான் என்பதும் முன்னர்க் கூறப்பட்டது. இவர்கள் ஐவரும் இருமை நிலைத் தத்துவத்தினின்று உயர்ந்து சென்று, படைப்பில் உள்ள தீமையைப் பொருட்படுத்தாது, எதனையும் நன்மையாகக் கருதும் ஒருமை நிலைக்கு — அதிமனித மாண்பியல் நிலைக்கு —ச் செல்கின்றனர். தருமன் முயற்சி போல், இவர் முயற்சியும் பயன்படாமற் போயினும், இந்நால்வரும், தருமனைப் போலவே அதிமனித மாண்பியலாளர் (Humanitarians) என்று கூறத்தக்கவகையில் நடக்கின்றனர். எனவே, மனித மாண்பியற் காப்பியமாகிய வில்லிபாரதம் அதிமனித மாண்பியலின் வளர்ச்சிக்கு வழி வகுத்துள்ளது என்பது நன்கு விளங்குகின்றது.

பரிந்துரை :-

தற்கால இலக்கியங்களின் அடிப்படைத் தத்துவங்களாக நடப்பியல் (Realism ) நடைமுறை இயலும் (Pragmatism) அமைய வேண்டும் என்று ஆய்வாளர்கள் எடுத்துரைத்து வருகின்றனர். உண்மையியலும், நடைமுறையியலும், மனித மாண்பியலோடு தொடர்புடையனவே. கூர்ந்து நோக்கினால், அவ்விரண்டும், மனித மாண்பியலை ஆதாரமாகவும் கொண்டு வளர்பவை. எனவே, இம்மூன்றற்கும் முறையான தொடர்பு உள்ளமையால், பழங்கால இலக்கியங்கட்கும், இன்றைய இலக்கியங்கட்கும், இலக்கியத் தத்துவ அடிப்படையில் தொடர்பு காண முடிகிறது. அதன் வாயிலாகப் பழங்கால இலக்கியங்கள், இன்றைய இலக்கியங்களின் வளர்ச்சிக்கு வழிகோல உதவுகின்றன என்னும் உண்மையும் புலப்படுகின்றது.

எனவே, மனித மாண்பியல் நோக்கில் தமிழில் உள்ள பிற காவியங்களையும் ஆராய்தல் ஒருவகையில் இன்றைய இலக்கியங்களின் ஆக்கத்திற்கு ஊக்கம் தரும் பெரு முயற்சியாகும். ஆதலின், தமிழில் உள்ள பிற இலக்கியங்களை - குறிப்பாகப் பெருங் காவியங்களை - மனித மாண்பியற் கண்ணோட்டத்தில் ஆராயும் பொறுப்பினைப் பெரியதொரு பொறுப்பாக இனிவரும் ஆய்வாளர்கள் கருதுதல் தக்கது.

இனி, மனித மாண்பியல், அதிமனித மாண்பியலோடு தொடர்புடையது எனத் தெரிவதால் - வில்லிபாரதம் அதற்கு வழிவகுத்துள்ளது என இவ்வாய்வின் வாயிலாகப் புலப்படுவதால் - நடப்பியல், நடைமுறையியல், மனித மாண்பியல், அதிமனித மாண்பியல் ஆகியவற்றை இணைத்துக் காணும் வாய்ப்பு ஏற்படுகிறது. எனவே, மனித மாண்பியல் நிலையினின்று அதிமனித மாண்பியலை நோக்கி முன்னேறுவது[12] மனிதனின் பொறுப்பு என்பது புலப்படுகிறது.

---

12. இருமை நிலைத்தத்துவத்தை நிலைக்களனாகக் கொண்ட மனித மாண்பியல், தொன்றுதொட்டுப் பல நாகரிகங்களிலும் இருந்து வந்ததை காந்தியடிகளும், விநோபாவும் எடுத்துரைக்கின்றனர். அவ்விருமை நிலையினின்று உயர்ந்து ஒருமை நிலையான அதிமனித மாண்பியலை நோக்கி மனிதன் முன்னேறுவது பற்றியும் தம் விளக்கங்களில் அவர்கள் குறிப்பிட்டுள்ளனர். அவை வருமாறு:-

"The fight is there, but the fight as it is going on within. The Pandavas and Gowravas are the forces of good and evil within. The war is the war between Jeykyll and Hyde God and Satan going on the human brest. The internal evidence in support of this interpretation is there in the work itself and the Mahabharata of which Gita is a minute Part.

அப்பொதுப்பிலே இலக்கிய உலகில் செயற்படுத்தி, அதிமனித மாண்பிலே மையமாக வைத்து, மனிதன் படைப்பில் உள்ள யாவையுமே நல்லவை எனக் காணும் வகையில் இலக்கியங்களைப் படைக்க முடியுமா? அதற்குரிய முயற்சிகள், யாவை என என்னுவதை படைப்பிலக்கிய ஆசிரியரும், ஆய்வாளரும் சிந்திக்க வேண்டியவை.

மேலும், அதிமனித மாண்பிலேத் தெய்வ மாண்பியலோடு (Divinism) தொடர்பு படுத்துதற்கும் வாய்ப்பு உள்ளது. தருமன், சகதேவன் முதலியோர்தம் உயரிய பண்புகள், கண்ணால் போற்றி மதிக்கப்பட்டுள்ளதை வில்லிபாரதம் நன்கு காட்டியுள்ளது. எனவே, நடப்பியல், நடைமுறையியல், தெய்வ மாண்பியல் ஆகிய இவற்றை முறையாக இணைத்துக் காண்பதற்கும் வழி உள்ளது என்பது புலனாகின்றது. நாம்--இம்முயற்சியின்-வாயிலாக--சமய-ஆன்மிக-அடிப்படை இவ்விணைப்பு முயற்சியில் தலைப்பட்டு இன்னும் ஆய்வாளர் ஆய்வுப் பயன் காணுதல் நலம்.

இம்முயற்சியின் வாயிலாக, சமய ஆன்மிக அடிப்படையில் மனித மாண்பிலே நோக்குவார்க்கும், அவ்வடிப்படையை விலக்கி, மனிதனை வினை முதலாகக் கொண்டு மனித மாண்பிலே நோக்குவார்க்குமிடையே உள்ள முரண் தீர்வதற்கும் அவர்க்கிடையே ஒற்றுமை வளர்வதற்கும் வழி புலப்படும். ஆய்வாளர் தொடர்ந்து முயல்வாராக.

---

12 Contd.
It is not a history of War between two families, but the history of man - the history of the spiritual struggle of man. I have sound reasons for my interpretation.

Mahatma Gandhi: The Collected Works of Mahatma Gandhi. Vol.LXVIII. P:297.

"மிகவும் பழைய காலந்தொட்டே மாந்தர் மனத்தில் நற்குணங்களுக்கும் தீக்குணங்களுக்குமிடையே நிகழும் போரை உருவகப்படுத்தி வருணிக்கும்முறை இருந்து வந்திருக்கிறது. வேதத்தில் இந்திரன்-விருத்திரன், புராணங்களில் தேவர்-அசுரர், இராமன்-இராவணன், பார்சிகளுடைய மத நூல்களில் அஹூர்மஜ்த்-அஹ்ரிமான், கிறிஸ்தவ மதத்தில் பரமபிதா-சைத்தான், இஸ்லாம் மதத்தில் அல்லாஹ்-இப்லீஸ் என்ற இவர்களுடைய போர்கள் வருகின்றன. காவியங்களில் ஸ்தூல விஷயங்கள் சூக்குமமான பொருள்களின் உவமைகளின் மூலம் வருணிக்கப்பட, சமய நூல்களில் சூக்குமமான மனோபாவனைகளுக்குக் கவர்ச்சியான ஸ்தூல உருவங்கள் அளித்து வருணிக்கப்படும்.... அகத்தில் நடக்கும் போருக்கும் புறத்தே நடப்பதற்கும் வேற்றுமை எதுவுமில்லை. ... நம் அந்தக் கரணத்தில் ஒருபுறம் நற்குணங்கள் இருந்தால் மறுபுறம் தீக்குணங்கள் இருக்கின்றன. அவை தம் தளங்களைச் சரியாய் அமைத்து வைத்திருக்கின்றன. சேனைக்குச் சேனாபதி இன்றியமையாதவனாதலால் அங்கு நற்குணங்களும் தமக்கு ஒரு சேனாபதியை நியமித்துள்ளன. அதன் பெயர் அபயம் (அஞ்சாமை). இவ்வத்தியாயத்தில் அபயத்திற்கு முதலிடம் அளிக்கப்பட்டிருக்கிறது. இது ஏதோ தற்செயலாக நிகழ்ந்த விஷயமல்ல; நிரயோசித்து வேண்டுமென்றேதான் இவ்வபயம் என்றதற்கு முதலிடம் கொடுக்கப்பட்டிருக்கும். அபயமின்றி, அஞ்சாமை இல்லாதவிடத்து எந்தக் குணமும் வளர்வதற்கில்லை. உண்மையின்றேல் பிற நற்குணங்களுக்கும் மதிப்பெதுவும் இல்லாமற் போகின்றது. ... தெய்விக குணங்கள் ஆதி காலந்தொட்டு வளர்க்கப்பட்டு வந்திருக்கின்றன. இடையில் கழிந்த காலத்திலும் பெரிய வளர்ச்சி ஏற்பட்டிருக்கிறது. ஆனால் இன்னும் எவ்வளவோ வளர்ந்தாக வேண்டும்".

- வினோபா: கீதைப்பேருரைகள்: பக்.291-295. (1970)

## இயல் - 1

## [illegible] மாண்பியல் விளக்கம்

1. திருவாசகம்; குழைத்த பத்து - 5.
2. திருஞானசம்பந்தர் தேவாரம் "விடலாலை" - 3
3. திருநாவுக்கரசர் தேவாரம்: பதிகம் 295 - 1.
4. தாயுமானவர் பாடல் : ஆனந்தமானபரம் : 2.
5. திருக்குறள்: அறத்துப்பால்: நீத்தார் பெருமை - 3.
6. திருக்குறள்: பொருட்பால்: தெரிந்து தெளிதல் - 4.
7. திருக்குறள்: பொருட்பால்: தெரிந்து தெளிதல் - 3.
8. திருக்குறள்: பொருட்பால்: நட்பாராய்தல் - 4. பரிமேலழகர் உரை.
9. திருக்குறள்: பொருட்பால்: தெரிந்து தெளிதல் - 4. பரிமேலழகர் உரை.
10. சிறுபஞ்சமூலம்: (பதினெண்கீழ்க்கணக்கு) - 29.
11. தாயுமானவர் பாடல்: தேசோமயானந்தம் - 9.
12. தாயுமானவர் பாடல்: சித்தர்கணம் - 9.
13. மு. வரதராசன்: திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம்: பக்.52 (1955).
14. To Aurobindo, the Avatar is a dual concept, a phenomenon of divinity and humanity. On the one hand, the descent of the God-head into human form and, on the other hand, the ascent of man into the God-head, man rising into the divine nature and divine conciousness.

    The Avatar descends to reveal the divine nature in man and to show what are the divine works, free, unegoistic, disinterested, impersonal, universal, full of the divine light, the divine power and divine love.

    He comes as the divine personality which shall fill the conciousness of the human being and replace the limited egoistic personality, so that it shall be liberated out of ego into infinity and universality, out of birth into immortality.

    C.S.Nayar: Commentary on Aurobindo's Gita: Indian Express, dated July 29, 1979.

